உ
சிவமயம்

ஓம் தத் ஸத் பரப் பிரஹ்மணே நம:
ஸ்ரீ சேஷாத்திரிசிவனார் அருளிச் செய்த

# நாநா சீவ வாதக் கட்டளை

மூலமும்,

கோவிலூர்
ஸ்ரீ கருணாநிதி சுவாமிகள் என வழங்கும்
ஸ்ரீ சிதம்பர சுவாமிகளின் மாணாக்கரும்,
திருவாரூர்
ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயம்,
நான்காம் மடாதிபதியும் ஆன மதுரை
ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் இயற்றிய

## வியாக்கியானமும் (விரிவுரையும்).

இவை
கோவிலூர்,
ஸ்ரீ. சித. பொன்னம்பல சுவாமிகளின்
மாணாக்கரான
ஸ்ரீ. பொ. சுப்பராய சுவாமிகளால்
பார்வையிடப் பெற்றன.

மூன்றும் பதிப்பு
ஸ்ரீ மகா. கோவிந்த சுவாமிகளால்
பார்வையிடப் பெற்றன.

திருவாரூர்,
ஸ்ரீ. குரு தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் மடாலயத்தின்
ஒன்பதாம் மடாதிபதியான
ஸ்ரீ. இராம. சதானந்த சுவாமிகளால்
பதிப்பித்து வெளியீடு செய்யப் பெற்றன.

மூன்றும் பதிப்பு 1982

 [விலை ரூ. 30—00





முதல் பதிப்பு 1905
இரண்டாம் பதிப்பு 1961
மூன்றும் பதிப்பு 1982

வெளியீடு :
ஸ்ரீ. குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
மடாலயம்,

வன்மீகபுரம் என்னும் மடப்புரம்,
திருவாரூர். Pin. 610 002.
தஞ்சாவூர் மாவட்டம். தமிழ் நாடு.

அச்சிட்டோர் :
மதராஸ் ரிப்பன் பிரஸ்,
புதுக்கோட்டை.



ஸ்ரீ சித. சிவானந்த சுவாமிகள்

திருவாரூர் மடம்.



ஸ்ரீ வீர. சு. சண்முகானந்த சுவாமிகள்
திருவாரூர் மடம்.



ஸ்ரீ இராம. சதானந்த சுவாமிகள்

திருவாரூர் மடம்.

# நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியானம்.

## மூன்றும் பதிப்பின் முகவுரை

சகல சீவர்களும் விரும்புவது துக்க நிவிர்த்தியும், சுகப் பிராப்தியுமே யாகும். என்பது யாவரும் உணர்ந்த விஷயமேயாகும்.

இத்தகைய நிலையையே சர்வ துக்க நிவிர்த்தி, பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அதாவது பேரின்ப வீடு என்று அறிவிற்சிறந்த ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனர்.

புருஷர்களால் (சீவர்களால்) அர்த்திக்க (விரும்ப)ப் படுவது புருஷார்த்தமாம். இவ்வாறு புருஷார்த்தம் என்னும் பெயரால் வழங்கப் படுகின்ற அறம், பொருள், இன்பம், பேரின்ப வீடு என்னும் நான்கு பயன்களுள் ''பேரின்ப வீடு'' மரணாதி சர்வ துக்கங்களுமின்றியதாயும், நித்தியமாயும், நிரதிசய மாயும் (தன்னின் மிக்கது ஒன்று இல்லாததாயும்) உள்ள பரமானந்த ரூபம் ஆதலால் சிறந்த பயனாக உள்ளது. ஆதலால் ''பேரின்ப வீடு'' முக்கிய புருஷார்த்தம் என்றும், மற்ற அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றும் மரணாதி துக்கங்களுடன் கூடியதாதலால் கௌண (முக்கியமல்லாத) புருஷார்த்தங்கள் என்றும் அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் அருளிய சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன.

புருஷன் என்பதற்குப் பொருள், பரமாத்மாவாகிய பிரம்மம், ஈசுவரன், ஆத்மா, சீவன், ஆண்மகன், மனிதன் முதலியவைகளாம்.

இவ்வாறு புருஷன் என்பதற்குப் பல பொருள்கள் உள்ளனவாயினும், சொல்லும் இடத்தை முன்னிட்டுப் பொருள் கொள்ளும் முறையில், இங்கு கூறும் "புருஷார்த்தம்" என்னும் பிரசங்கத்தில் (சொன்ன முறையில்), புருஷர்கள் என்பதற்குப் பொருள், ஆண்கள் பெண்கள் முதலிய சீவர்களாம்.

இங்கு கூறிய நால்வகைப் புருஷார்த்தங்களைக் குறித்து ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் தாம் இயற்றிய "அவிரோத வுந்தியார்" என்னும் நூலின் 4ஆம் கவியில் கூறியுள்ள விஷயங்கள் வருமாறு.

[அவதாரிகை (முன்னுரை)– இந்நூலில் வீட்டு நெறி கூறுவான் தொடங்கி முதற்கண் அவ்வீட்டினது சிறப்புக் கூறுகின்றார்.]

கவி 4. அறம்பொருள் இன்பம்வீ(டு) ஆயவோர் நான்கில்
சிறந்தபயன் வீடுஎன்(று) உந்தீபற
தேரின்வீ டேஎலாம் உந்தீபற,

(இதன் பொருள்) தருமம், அருத்தம், காமம், மோக்ஷம் என்று அறிவுடையோர் அடையும் பயன்களாய் எல்லா நூல்களாலும் சொல்லப்படும் அவையாகிய நான்கனுள்ளும், வீடு நிரதிசயம் (தன்னின் மிக்கது ஒன்று இல்லாதது) ஆதலால் சிறந்த பயனை உடையது. அஃது அன்றியும் தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் அவ்வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடேயாகும். (என்றவாறு). (உந்தீபற என்பது ஒரு விளையாட்டு).

இவ்வாறு ''தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் அவ்வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடேயாகும்'' என்று கூறியிருப்பது எவ்வாறு பொருந்தும் என்பது பற்றிய சிறந்த அறிவுரைகளைப் பின் கவிகளில் கூறியுள்ளார். அவற்றை அந்நூலில் காண்க.

இவ்வாருன சிறப்பினையுடைய சர்வ புருஷார்த்த வடிவமான, சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷமாகிய பேரின்ப வீட்டிற்குச் சாதனமாக உள்ளது, பிரம்ம ஆத்ம ஐக்கிய ஞானமாம்.

இத்தகைய பிரம்ம ஆத்ம ஐக்கிய ஞானத்திற்குச் சாதனமாக உள்ளது, சற்குருவின் ஞான உபதேச மகாவாக்கியமாகிய தத்துவமசி மகா வாக்கியத்தின் விசாரமாம்,

இத்தகைய தத்துவமசி மகாவாக்கிய விசார அர்த்தத்தை, அத்தியாரோப அபவாதக் கிரமம் (கற்பனை, கற்பனு நிவிர்த்தி முறைமை) கூறுதல் வாயிலாகக் கூறுவது நாநா சீவ வாதக் கட்டளையாம்.

இத்தகைய நாநா சீவ வாதக் கட்டளை என்னும் இந்நூலில், மோக்ஷ சாதனமான பிரம்ம ஆத்ம ஐக்கிய ஞானத்தைச் சர்வ வேதாந்த உபநிஷதங்களும் அதிகாரிகளின் தகுதிகளுக்கு ஏற்ப, சாதன சாத்தியங்களான வெவ்வேறு பிரகாரங்களில் (விதங்களில்) கூறுகின்றவற்றில்,

எசுர் வேதத்தின் முடிபாகிய தைத்திரீய உப நிஷதம் கூறுகின்ற * பஞ்ச பூத உற்பத்திக் கிரம மான, உலகத் தோற்ற ஒடுக்கமாகிய அத்தியாரோப அபவாதக் கிரமம் கூறுதல் வாயிலாக,

சாம வேதத்தின் முடிபாகிய சாந்தோக்கிய உப நிஷதம் கூறுகின்ற ''தத் துவம் அசி = அது நீயாக இருக்கிருய் (அந்தப் பிரம்மம் ஆன்மாவாகிய நீயாக இருக்கிருய்)'' என்னும் உபதேச மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய மேற்படி பிரம்ம ஆத்ம ஐக்கிய

---

* பஞ்ச பூத உற்பத்திக் கிரமம் கூறுவதன் விளக்கம்.

தைத்திரீய உபநிஷதம், இரண்டாம் பிரச்னம், ஆனந்த வல்லீ 1-ஆம் சுலோகத்தில் — பிரம்மமாகிற இந்த ஆத்மா விடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று என ஆரம்பித்து. ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம். பிருதிவி என்னும் ஐந்து பூத உற்பத்திக் கிரமமான உலகத்தோற்றம் கூறப்படுகிறது.

சாந்தோக்கிய உபநிஷதம், ஆரும் அத்தியாயம், இரண்டாம் கண்டம், 3-ஆம் சுலோகம், 4ஆம் சுலோகங்களில் (சுருக்கமான முறையில்) அக்கினி, ஜலம், பிருதிவி என்னும் மூன்று பூத உற்பத்திக்கிரமமான உலகத்தோற்றம் கூறப்படு கிறது.

இவற்றுள் எல்லா அதிகாரிகட்கும் பொருந்துமாறு, தைத்திரீய உபநிஷதம் கூறும் ஐந்துபூத உற்பத்திக்கிர மத்தை இந்நூலாசிரியர் எடுத்துக் கூறுகின்ருர்.

ஞானத்தை, இந்நூலின் 44-ஆம் பிரிவில் "முப்பத்தாறும் தத்துவமாகிய அதுவே தான் என்றும், தானே பரமசிவம் (பரமசிவம் என்னும் ஈசுர லட்சியார்த்தப் பிரம்மம்) என்றும், கலக்கமறத் தெளிந்தவனே சிவ தரிசனமுடைய சீவன் முத்தனும்." என்று கூறுத லால் அறிவித்து, நூலின் முடிவில் "சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோட்சம் அடையக் கடவர்" எனக் கூறுகின்றார்.

ஆகவே இந்நூலானது மோட்ச விருப்பமுடைய வர்களான முமுட்சுக்கள், மோட்ச சாதனமான பிரம்ம ஆத்ம ஐக்கிய ஞானத்தை அடைவதற்காக, ஆரம்ப காலத்தில் கற்பதற்கு ஏற்ற சிறப்பினை யுடையதாக இருப்பதால், பல குரு பரம்பரைகளில் மாணுக்கர்கள் ஞானசாதக ஆரம்பத்தில் கற்குமாறு அமைக்கப் பெற்றுள்ளது.

## இந்நூலின் வியாக்கியானத்தின் (விரிவுரையின்) சிறப்பு

இத்தகைய சிறந்த நூலிற்குத் திருவாரூர், ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயம், ஸ்ரீ. சித. சிவானந்த சுவாமிகள் வியாக்கியானம் என்னும் சிறந்த விரிவுரை இயற்றியிருக்கின்றனர்.

இந்த விரிவுரையில், முன்னர் அநுபந்த சதுட்டய நிருபகம், சாதன சதுட்டய நிருபகம் என்னும் இரண்டு நிருபகங்களும் வினா விடை முறையிலான பொருள் விளக்கங்களுடன் நூலிற்கு மிகவும் பொருத்தமுடையனவாகக் கூறப்பட்டுள்ளன.

மற்றும் நூலின் விஷயங்களுக்கு (பொருள்களுக்கு) ஏற்ப, 1. பிரம்ம விலக்கண *நிரூபகம், 2. அத்தியாரோப நிரூபகம், 3. திதி நிரூபகம், 4. அபவாத நிரூபகம், 5. தத்துவ விவேசன நிரூபகம், 6. சீவன் முத்தி நிரூபகம் என ஆறு நிரூபகங்களின் பிரிவுகளைக் கூறுவதுடன், நூலின் 47 பிரிவுகளையும் கூறி, அவற்றிற்கு உரிய பதங்களுக்குச் சிறந்த பொருள் விளக்கங்களும் கூறப்பட்டுள்ளன.

மற்றும் அதிகாரிகளுக்குப் பிரம்ம ஆத்ம ஏகத்துவ ஞானத்தைக் குறித்து உண்டாகும் எல்லா விதமான சந்தேகங்களும் நீங்கும் முறையில், வினாக்களும், அவற்றிற்குரிய சிறந்த விடைகளும், அவற்றிற்குரிய பிரமாணங்களாக வேதாந்த உபநிஷத்துக்கள், பகவத்கீதை, ரிபுகீதை, ஞானவாசிட்டம், விவேக சூடாமணி, பஞ்சதசி, ஜீவன் முக்தி விவேகம், கைவல்லிய நவநீதம், வேதாந்த சூடாமணி முதலிய அநேக நூல்களும் கூறப்பட்டுள்ளன.

மற்றும் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் முதலிய மதங்களில், உபநிஷத மகாவாக்கியங்களுக்குக் கூறப்படும் அர்த்த விளக்கங்களும் வினாவிடை முறையில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

இவ்வாறான சிறப்புக்கள் அமைந்த இவ்வியாக்கியான நூலானது, கற்கும் முமுட்சுக்களான அதிகாரிகளுக்கு உண்டாகின்ற சந்தேகங்கள் அனைத்தும் நீங்கிப் பிரம்ம ஆத்ம ஏகத்துவ ஞானம் உண்டாவதற்குச் சிறந்த சாதனமாக அமைந்துள்ளது.

---

* நிரூபகம் = விளக்கம் கூறுதல்.

இந்த மூன்றும் பதிப்பில், முன் இரண்டு பதிப்புக் களிலும் வியாக்கியானத்தில் பிரிக்கப்பட்டுக் கலந் துள்ள இந்நூலின் மூலமானது, அவ்வாறே இருப்ப துடன், தனியாகவும் ஒருமிக்க அமைக்கப்பட்டு இந் நூலின் முன்புறம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இவ்வாறு தனியாக அமைக்கப்பட்ட மூலநூலில், மேற்படி வியாக்கியான நூலின்படியான, நிரூபகப் பிரிவு எண்களும், நூல்பிரிவு எண்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

இவ்வாருன பிரிவுகளானவை, இன்ன நிரூபகப் பிரிவில், இன்னநூல் பிரிவில், இன்ன விஷயங்கள் (பொருள்கள்) கூறப்பட்டுள்ளன. என ஞாபகங் கொள்வதற்கு உறுதுணையாக இருப்பனவாம்.

மற்றும் மேற்படி வியாக்கியான நூலில் பிர மாணங்களாகக் கூறப்பட்டுள்ள நூல்களின் பெயர் அகராதி வரிசையும். மற்றும் இந்நூலின் பல அர்த்தங்கட்குப் பொருந்தக்கூடிய. பொதுப் பிர மாணங்களாக உள்ளனவான திருவாரூர் ஸ்ரீ குரு. தக்ஷிணமூர்த்தி சுவாமிகளின் சிந்முத்திரை உப தேசம், அருள்மொழி உபதேசம் ஆகியவற்றின் அர்த்தங்களும், மற்றும் பக்கங்கள், அப்பக்கங்களில் கூறப்படும் நிரூபகம், நூல் பிரிவு, பொருள்கள் கூறப் பட்ட பதங்கள் அல்லது பதங்களின் தலைப்புகள். ஆகியவைகளை அறிவிக்கும் குறிப்பும் இந்நூலின் பின்புறம் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

மற்றும் நாநா சீவவாதக் கட்டளையாகிய இந் நூலின் சிருஷ்டிக் கிரமத்தை விளக்கும் படமும் இந்நூலின் முன்புறம் சேர்க்கப் பட்டிருக்கிறது.

*இங்ஙனம்,*

**மகா. கோவிந்த சுவாமி,**

கோவிலூர் மரபு.

1—7—1982

உ
சிவமயம்

(முதல் பதிப்பின் சிறப்புப்பாயிரம் முதலியன.)

## சிறப்புப் பாயிரம்.

திருக் கைலாய பரம்பரை,
பொம்ம புரம்:
ஸ்ரீ சிவஞான பாலைய தேசிகர் ஆதீனத்துச்
சிதம்பரம் ஈசானிய மடம்,
ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அவர்களால்
இயற்றப்பெற்றது.

### பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

துதியெழில் அரூர்க் குரியவன் மீக
புரமெனுந் தொல்பெயர் தனக்கே
சூழ்தர வளஞ்சான் றப்பதிக் கொருசார்
துன்னிய பதியிடைக் கருணை

நிதியென வதியுந் தக்ஷிண மூர்த்தி
நிமலதே சிகர்பரம் பரையில்
நிகழுறு முதன்மைச் சிவாநந்த விபுதன்
நேசமா தியநிறை குணத்தன்

கதியெளி துறத்தான் தேர்ந்தபன் னூலின்
கருத்துநா நாசீவ வாதக்
கட்டளை யெனுமோர் சிறிய†கஞ் சனத்தில்
காணுறக் கனுற்றினன் *நிபந்தான்

மதியெழுச் சியுறு மாண்புளோர் ஒருங்கம்
மலிபொருட் டிறமுணர்ந் தவற்றின்
மாட்சியின் ஒழுகி வீடுபே றடைவான்
வாஞ்சித்த வேட்கையே மன்னோ.

---

† கஞ்சனத்தில்—கண்ணாடியில்
* நிபம்—காரணம்

### சிதம்பரம்
### ஸ்ரீ மௌன தேசிகர் ஆதீனத்துச்
### *செல்லப்ப சுவாமிகளால் இயற்றப்பெற்றது.*

## ஆசிரியப்பா.

திருவளர் செங்கேழ் மருமலர்த் தவிசின்
உருவளர் திசைமுகத் தொருவன் பயந்த
கடலுடை யுடீஇய புடவிமா மகட்கு
வடிவுடை யிதய வாரிச மதுவாய்ப்
பஞ்சபூ தங்களின் பகுதிய தலங்களுள்

விஞ்சமுற் றலமென விளம்பிடப் பட்டதாய்க்
காப்புடைக் கடவுடன் மாப்பெருந் தேவி
யோப்பியைம் புலனும் ஒருங்கிய மனத்தோ
டானுவி னமர்ந்தே யறந்தலை நின்று
பூணர வார்த்த பொதியிருள் களத்து

நாதனைத் தெய்வ நாயகன் றன்னை
வாதனை தீரிய வழிபடப் பெற்ற
காரண முறுதலிற் கமலா லயமென
ஆரணம் மொழிதரும் அமலமே வியதாய்
நிகிலமும் புரக்கும் நீள்நெறி யாதிய

வகிலமும் புரக்கும் அரசர்க டௌிவான்
செம்பொற் றியாகரா யப்பெயர் திகழ்தர
வம்பொற் றவிசின் அரியணை மீமிசை
பரசமர் கரதலப் பண்ணவன் உலகெலாம்
பரசுற வனுதிநம் அரசுவீற் றிருப்பதாய்

†வினையால் அணைதரா மெய்ப்பொருள் வெஃகாது
*வினையால் அணைதரும் மெய்ப்பொருள் வெஃகி
நேமிவான் கறங்கென நிலைதடு மாறுபு
பூமியந் தரசுவர்க் கங்களிற் புகுந்து
அலைதரு பவத்தொடர் பார்ந்ததோர் பிறப்பினில்

உலைதரல் அகற்றுபு வுறுகதி யளிப்பதாய்
விளங்குறுஞ் செல்வ வளங்கொளா ரூரிற்
றுளங்குவன் மீகக் களங்கமில் புரத்திற்
றிகழுறுஞ் சீர்சால் தெக்ஷிணா மூர்த்தியின்
புகழுறு மடத்தின் பொற்பமர் தலைவன்

அரியவே தாந்த அரும்பொருள் நூல்பல
தெரிமுறை தெரிந்து தெளிநிலை கண்டோன்
தவமருள் பொறுமை தக்கசீர் வாய்மை
பவந்தெறு தூய்மை பான்மையி னேய்ந்தோன்
சிவாநந் தத்தே சிமிழ்ப்புறு சிந்தையின்

---

† கர்மத்தினால் அடையமுடியாத பாரமார்த்திக சத்தியமாகிய, ஆன்மப்பிரம்மப் பொருளை விரும்பாமல்.

* கர்மத்தினால் அடையக்கூடிய வியாவகாரிக சத்தியமாகிய, உலகப்பொருள்களை விரும்பி.

நவாநந் தஞ்செய் சிவாநந்த நாமம்
இடுகுறி யன்றுகா ரணக்குறி யென்னப்
படுகுறி யாகப் படைத்துயர் பரிசினன்
தாமின் புறுவ துலகின்பு றக்கண்டு
காமுற லுறுவர் கற்றறிந் தாரெனும்

மெய்ம்மொழிப் புலவர்தம் வியனுரைப் படியே
செய்முறை யிதுவெனச் சிந்தையில் நாடி
சேடாத் திரிசிவன் எனப்பெயர் சிறந்த
வாடாத் தவமுறு வாய்மையன் உரைத்த
கட்டளை யென்னுங் காமரு நூற்குப்

பெட்புற வெவரும் பேருரை செய்து
கற்பவர் உளம்மிகக் களியொடு மிளிர
விற்பனர் தாம்நனி விருந்தாட் டயரக்
கிளக்கரும் பொருள்நுணுக் கங்கள்மீக் கிளர
விளக்கலிற் றம்புகழ் விளக்கினன் நிலத்தே.

---

திருச்சிராப்பள்ளி தாலுகா, திருநயம்,
ஸ்ரீ அ. நரசிம்ம பாரதியார் அவர்கள் இயற்றியன.
அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

நீர்தூக்கு நிலவலயத் துயிர்பாசம்
வீட்டியின்ப நிலைமைத் தாய
பார்தூக்கு மைம்பூதப் பான்மையதூ
லத்தநுவின் பரிசு காட்டிச்
சீர்தூக்குஞ் சேஷாத்ரி யெனும்பெரியோன்
சொன்னுண சீவ வாதங்
கூர்தூக்குங் கட்டளைக்குக் கொண்டபொருள்
தெருட்டிவிக்குங் கொள்கை யெண்ணி. (1)

கோடன்மர பேய்ந்துறுமா ணவருக்கல்
லாலுண்மை குறிக்கொ ணமை
யாடலினூற் றனதநுபூ திச்சுருதி
யருத்தமெலாம் ஆங்காங் குற்ற
வேடகத்தும் எழுதவொணு மநோலயத்தை
விருத்தியென விசைத்தான் ஆரூர்க்
கூடல்தெட்சி ணமூர்த்தி யர்தீனச்
சிவாநந்த குரவன் அம்மா. (2)

---

கோவிலூர்
ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் மாணுக்கர்களில் ஒருவராகிய
புதுவயல்
ஸ்ரீ அழகப்ப ஐயா அவர்கள் இயற்றியது.
வெண்பா.

சீரார் திருக்கமலைத் தெட்சிணு மூர்த்திமர
பாரா ரியசிவா நந்தனுய்ந்–தோருபொருள்
செய்தளித்த னன்நாநா சீவவா தக்கட்ட
ளையிதுவென் னூலுமென்ன லாம்.

---

# நூலின் வரலாறு.

தெக்ஷிண கைலாயமெனப் புராணாதிகளில் கூறப்படும், ஸ்ரீ காளத்திப் பதியின்கண், மறையவர் குலத்தில் அவதரித்துச் சேஷாத்திரி சிவனார் என்னும் பிள்ளைத் திருநாமம் உற்ற, ஒரு தவசிரேட்டர் இளமையில்தானே வடமொழி தென்மொழிகளில் வல்லுனராய், அறிவு, அடக்கம், வைராகம் ஆதிய சற்குணங்களைப் பொருந்திப் பதினாறு வயதுக்குள், அரிய அற்புதங்கள் தம்பால் தோன்ற ஞாந சூரியனாய் விளங்கிக் கொண்டிருந்தனர்.

பின்னர் தாம் சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்திவடிவ மோக்ஷமாகிய பேரின்புறல் போல், உலகு பேரின்புறும் வண்ணம் கருணைகூர்ந்து பொன்முகரி நதி தீரத்தில் எழுந்தருளி, ஆங்கு அளவில் மாணவர்கட்கு ஞாநோபதேசங்கள் செய்து, வேதாந்த சாஸ்திரார்த்தங்களை இனிது விளக்கும் பல நூல்கள் இயற்றியதோடு, பாலகர்கட்கும் எளிதில் போதமாகும் நிமித்தம், தைத்திரீய சாந்தோக்கிய மாதிய உபநிடத அநுசாரமாக நாநா சீவவாதம் என்னும் ஓர் அரிய கிரந்தம் வடமொழியில் இயற்றியருள, அதனை அவருடைய மாணாக்கர்களில் சிறந்தவரும், வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவரும் ஆகிய நாராயண சிவனார் என்பவர், நமஸ்கரித்து ''சுவாமி! இந்த அரிய கிரந்தம் தென்மொழி

யிலும் இருப்பின், தென் னுட்டவர்க்கும் பயன்படும் என்று எண்ணுகின்றனன்; இதனைத் திருவுளம் பற்ற வேண்டும்'', என்று கூற, ஆசிரியர் "அங்ஙனமாயின், நம் முன்னர் நீயே மொழி பெயர்க்கக் கடவாய்'', என்று அருளினர். அவ் வாஞ்ஞையைச் சிரமேற் கொண்டு, அங்ஙனம் மொழி பெயர்த்து, நா நா சீவ வாதம் என்னும் பெயரையே வைத்துத் தமது ஆசிரியராற்ருனே ஈதும் வெளிப்பட்டதாகக் கூறி யருளினர்.

அது காரணமாகவே இந்நூலானது சேஷாத்திரி சிவனுரால் தென்மொழியில் அருளிச் செய்யப்பட்ட தாக வழங்கி வருகின்றது.

---

# நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியானம்

## அறிவிப்பு

அகண்ட பரிபூரண சிதாகாச சொரூப பரம கிருபாநிதி யாகிய ✻சிதம்பர தேசிகன் திருவடித் தொண்டர்களில் ஒருவன் போல் அபிநயித்துக் காட்டிக்கொள்ளாநின்ற, கல்வியறிவின்றிய ஏழை மதியிற் சிறந்த எனது சித்தத்தில், சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞையோடு கூடிய சுவாநுபூதிமான்களாயுள்ள பெரியோர்களால், வியாக்கியானஞ் செய்யத்தக்க வேதாந்த சாஸ்திரங்களில் ஒன்ருகிய நாநா சீவ வாதக் கட்டளை என்னும், இந்நூலுக்குப் புகழ் விரும்புதலாதிய உலக வாசனு ஸம்ஸ்காரம் பற்றி ஒன்றினுலும் மறிபடாமல் அதிகரித்தெழுந்த ஆசையால் வியாக்கியானம் செய்துள்ளேன்.

பெரியோர்கள், சிறுவர்கள் வசனிக்கும் வழுக்கள் உள்ளனவாகவும், நிரம்பா மொழிகளாகவும் உள்ள மழலைச் சொற்களைக் கேட்டு வெறுப்புருமல், வழுக்கள் இல்லனவாகவும், நிரம்பிய மொழிகளாகவும் உள்ள தெளி சொற்களுக்கு ஆன பொருள்கள் கொள்வது போலும், மேகமானது சமுத்திர சலத்தைக் கைக் கொண்டு அதிலுள்ள உவர்ப்பினை நீக்கி நன்னீராக உலகம் உய்யும் பொருட்டு வருடிப்பது போலும், பெரியோர்கள் இவ்வியாக்கியானத்தில்

---

✻ க்ஷமிவந க்ஷேத்திரமென்னும் கோவிலூர் வேதாந்த மடாலயம், மூன்ரும் குருமூர்த்தியாகிய, ஸ்ரீகருணுநிதி சுவாமிகள் என வழங்கும், ஸ்ரீ சிதம்பர ஞான தேசிக சுவாமிகள்.

உள்ள சொற்குற்றம் பொருட்குற்ற மாதிகளை நோக்கி வெறுப்புறுமல் கைக்கொண்டு, குற்றங்களை நீக்கிக் குணமுள்ளதாக அதிகாரிகள் உய்யும்பொருட்டு, கிருபையோடு போதித்தருள வேண்டும் எனவும், அதிகாரிகட்கு இந்நூலில் பிரவிருத்தியுண்டாகும் நிமித்தம், ஆவசியகமாகக் கூறவேண்டிய அநுபந்த சதுட்டயம் சாதந சதுட்டயங்களை முன்னர் விரித்திருப்பதோடு, இந்நூலில் இல்லாத சிற்சில அருத்த விசாரங்களை வேறுநூன்முகமாக விசாரித்துத் தெரிந்துகொள்ளுஞ் சாமர்த்தியம் இன்றிய மந்த அதிகாரிகளும், இந்நூலில்தானே எளிதாகத் தெரிந்துகொள்ளும் நிமித்தம், சமயம் நேர்ந்த போது, ஓரோர் இடத்தில் விரிக்கப்பட்டிருப்பதையும், மற்றென்று விரித்தல் என்னும் குற்றத்துக்கு இலக்காக்காமல், அங்கீகரித்துக் கொள்ள வேண்டும் எனவும் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்

சித. சிவானந்த சுவாமி.

| நிருபக எண | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 1 | 3 | சுத்த ரஜஸிற்குச் சித்து ரூப சத்தி யென்றும், சுத்த தமஸிற்குச் சத்து ரூப சத்தி யென்றும் பெயர். |
| | 4 | இவற்றில் காரணமான ஆநந்த ரூப சத்தியுடனே பரப் பிரஹ்மம் கூடி சர்வாநந்தம் என்னும் சுழுத்தியவத்தையை அடையும் போது பரப் பிரஹ்மம் என்னும் பெயர் போய்ப் பரமாநந்தர் என்னும் பெயர் வந்தது. இந்தப் பரமாநந்தர் சித்து ரூப சத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாச மென்னும் சொப்பனவத்தையை அடையும் போது, பரமாநந்தர் என்னும் பெயர் போய்த் தேஜோ மயர் என்னும் பெயர் வந்தது. இந்தத் தேஜோ மயர் சத்து ரூப சத்தியுடனே கூடிச் சர்வ வியாபகம் என்னும் சாக்கிராவத்தையைஅடையும் போது, தேஜோமயர் என்னும் பெயர் போய்ப் பரிபூரணர் என்னும் பெயர் வந்தது. |
| 2 | 5 | இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரஹ்மத்தில், சுத்தியில் இரசதம் போல, மூலப்பிரகிருதி யென்னும் ஒரு சத்தியுண்டு. அந்தச் சத்தி விகிருத சத்துவ இராசத தாமதமாகிய முக்குண சொரூபமாக விரிந்து தோன்றும். |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 6 | அம்முக்குணங்களில் சத்துவ குணம் மாயை யென்றும், சருவஞ்ஞ வுபாதி யென்றும், ஈசுவர காரண சரீர மென்றும் சொல்லப்படும். அம்மாயை யில் நின்மல சலப் பிரதிபிம்பம் போலப், பிரஹ்மப் பிரதி பிம்பம் சுலக்ஷணமாகவுளது. அந்தப் பிரதிபிம்ப சைதந்நியம் சருவஞ்ஞனாகிய ஈசுவர னென்று சொல்லப்படும். |
| ,, | 7 | அச்சத்துவ குணமாயை, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்திற் றுமதம் என்னும் முக்குண சொரூபமாய் இருக்கும். அவற்றுள், சத்துவத்தில் சத்துவம் பிரதாநமாகும் போது, அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன், சகத்தை யிரட்சிக்கின்ற மையால் விஷ்ணு வென்றும், சத்துவத்தில் இராசதம் பிரதாநமாகும் போது, அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன் சகத்தைச் சிருஷ்டிக்கின்றமையால் பிரஹ்மா என்றும், சத்துவத்திற் றுமதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமாயுள்ள ஈசுவரன், சகத்தை யுபசம்மாரஞ் செய்கின்றமையால் உருத்திரனென்றும் சொல்லப்படுவன். இங்ஙனம் சத்துவ குண கற்பனை கூறப் பட்டது. |

| பிரகரண எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 8 | இராசத குணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து, அவித்தைக ளென்றும், சீவ காரண சரீரங்க ளென்றும் சொல்லப் படுவனவாய், ஒன்றற்கொன்று தார தம்மிய முள்ளவைகளாய் இருக்கும். இவ்வவித்தை களிடத்திலும் மலிந சலப் பிரதிவிம்பம் போலப், பிரஹ்மப் பிரதிவிம்பங்களுளவாம். இப்பிரதி விம்ப சைதந்நியங்கள். கிஞ்சிஞ்ஞ ரென்றும் சிதாபாச சீவ ரென்றும் பிராஞ்ஞரென்றும் சொல்லப்படும். |
| ,, | 9 | இவ்வவித்தைகளும் இராசதத்தில் சாத்துவீகம், இராசதத்தில் இராசதம், இராசதத்தில் தாமதம் என்னும் முக்குண சொரூபங்களாக வுள்ளன. இவற்றுள், இராசதத்தில் சாத்துவீகம் பிரதானமாகும் போது. அதில் பிரதி விம்பமாயுள்ள சிதாபாசன், தத்துவ ஞான நிஷ்டனாவன். இராசதத்தில் இராசதம் பிரதானமாகும் போது, அதில் பிரதிவிம்பமாயுள்ளசிதாபாசன், காமக் குரோத பரனாய்க் கன்ம நிஷ்ட னாவன். இராசதத்தில் தாமதம் பிரதான மாகும் போது, அதில் பிரதிவிம்பமா யுள்ள சிதாபாசன், சோம்பல் நித்திரை மயக்கங்கள் உடையவனாவன். இங்ஙனம், இராசத குண கற்பனை சொல்லப்பட்டது. |

| திருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 10 | தாமத குணமானது, ஆவரணம், விக்ஷேப மென இரண்டு சத்திகளாகத் தோன்றும். இவ்விரண்டில் ஆவரண சத்தியானது, தத்துவ ஞானியும், ஈசுவரனும் தவிர, மற்றைச் சீவர்கட் கெல்லாம் சரீரத் திரயம் சிதாபாசன் சாக்ஷி சைதந்நியம் என்னுமிவைகளுன் ஒன்றற் கொன்றுள்ள பேதந் தெரிய வொட்டாமல் மறைக்கும். இதனல் மறைப்பை யுடைய சீவர்கள் (29) தத்துவங்களையும், ஒருமைப் பாடாக நானென் றபிமாநிப்பர். இந்த அபி-மாநமே அகங்காரக் கிரந்தி யென்றும், சம்சார பந்த மென்றும் சொல்லப் படும். சற்குரு கடாக்ஷத்தால் இவ் வாவரணம் நீங்கி (29) தத்துவங்களின் ஒன்றற் கொன்றுள்ள பேதந் தெரி-கிறதே முத்தி. இப்படி ஆவரண சத்தியின் காரியம் சொல்லப் பட்டது. |
| ,, | 11 | இனி விக்ஷேப சத்தியினின்றும் சத்த தந்மாத்திரையான ஆகாயந் தோன்றிற்று. அதினின்றும் பரிச தந்மாத்திரையான வாயுவும், அதினின்றும் ரூப தந் மாத்திரையான அக்கினியும், அதினின்றும் ரச தந்மாத்திரையான அப்புவும், அதினின்றும் கந்த தந்மாத்திரையான பிருதிவியுந் தோன்றின. இவ் வைந்து பூதங்கட்கும் காரணமான விக்ஷேப |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 11 | சத்தியில், தமஸில் சத்துவம், தமஸில் இராஜஸம் தமஸில் தமஸ" என்னு-மிவைகள் அற்பங் கருவாக இருந்த-மையால், அதன் காரியமாகிய ஐந்து பூ த ங் க ளு ம் முக்குணங்களுடனே தோன்றின. இப் பூ த ங் க ட் கு த் தந்மாத்திரைகளென்றும், அபஞ்சீ-கிருத பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும், சூக்ஷ்ம பூதங்க-ளென்றும் பெயர் சொல்லப் படும். |
| .. | 12 | சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்களும் தூல பூ த ங் க ளு ம் தோன்றின. எங்ஙன மெனின், ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் சாத்வீகாம் ஸ த் தி ல் பூதத்துக் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைக்கப்பட்டது அந்தக் கரண மென்று சொல்லப் ப டு ம். இ வ் வ ந் த க் க ர ண த் தி ல், ஆகாயத்தினம்ஸம் கூடியதற் கடையாளம், அ ந் த க் கரணமும் ஆகாயத்தைப் போல, சகல மா ன கேள்விகளுக்கும் இ ட ங் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளம் என்று பெயர். வாயுவி னம்ஸம் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் வாயுவைப் போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மந மென்று பெயர். அக்கிநியின் அம்ஸங் |

| திருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 12 | கூடியதற் கடையாளம் அந்தக் கரணமும் அக்கிநியைப் போல, ஈதின்ன தென்று விளக்கு விக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தி என்று பெயர். அப்புவின் அம்ஸங் கூடியதற் கடையாளம் அந்தக் கரணமும் அப்புவைப் போல விடயங் களைப் பற்றி யிழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர். பிருதிவியி னம்ஸங் கூடியதற் கடையாளம். அந்தக் கரணமும் பிருதிவியைப் போல கடினமாக நின்று நானென்றபிமாநிக்கின்றது. இப்படி அபிமாநிக்கின்ற விருத்திக்கு அகங்காரம் என்று பெயர். |
| „ | 13 | பின்னும் ஆகாய மாதிய பஞ்ச பூதங்களின் சாத்வீ காம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைக்கப் பட்டது சுரோத்திராதி ஞானேந்தியரி ங்களென்றுசொல்லப்படும்.இவைகளில் சுரோத்திரம் ஆகாசத்தின் அம்ஸமான படியால், ஆகாசத்தின் குணமான சத்தத்தை மாத்திரமறியும். துவக்கு வாயுவினம்ஸமான படியால், வாயுவின் குணமான பரிசத்தை மாத்திரம் அறியும். சட்சு அக்கினியின் அம்ஸமான படியால், அக்கிநியின் குணமான ரூபத்தை மாத்திரம் |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 13 | அறியும். சிங்குவை அப்புவின் அம்ஸமான படியால் அப்புவின் குணமான இரசத்தை மாத்திரம் அறியும். ஆக்கிராணம் பிருதிவியின் அம்ஸமான படியால் பிருதிவியின் குணமான கந்தத்தை மாத்திரம் அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாத படியால், ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது, அந்தக் கரணம் ஐந்தும் ஒன்ருகக் கூடிய தானமையால், ஐந்திந்திரியங்களினுலும் ஐந்து விடயங்களையும் அறியும். அந்தக் கரணம் (5) ஞாநேந்திரியம் (5) ஆகிய பத்தும் சத்துவாம்சம் ஆனபடியால் ஞான சாதனமாயின. |
| | 14 | பின்னும், ஆகாயமாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சங்களில், பூதத்துக் கோரொரு மாத்திரையெடுத்து ஒன்ருகக் கூட்டி வைக்கப் பட்டவை வியாநாதி பஞ்ச வாயுக்களாம். இவைகளில் வியாந வாயு, ஆகாயத்தின் அம்சமான படியால் ஆகாயத்தைப் போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராண வாயு வாயுவின் அம்சமான படியால் வாயுவைப் போல, இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். அபாந வாயு, அக்கினியின் அம்சமான படியால்- |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 14 | அக்கிநியைப் போல, சாடராக்கிநியாக உஷ்ணித்துக் கொண்டு, குதத்தைப் பற்றி நின்று உண்ட அந்த பாநாதிகளைச் சீரணிப்பிக்கும். சமாந வாயு, அப்புவின் அம்சமான படியால், சரீர நடுவான நாபி ஸ்தாநத்தினின்று, உண்ட அந்த ரசங்களை அப்புவைப் போல இழுக்கும். உதாந வாயு, பிருதிவியின் அம்சமான படியால், கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப் போலக் கடிநமாக நின்று உண்ட அந்த பாநாதிகளைக் கடையும். இந்த ஐந்து வாயுக்களையு மல்லாமல், வாந்தி பண்ணுவிக்கின்றது, நாகன் என்றும், இமைத்து விழிப்பிக்கின்றது, கூர்மன் என்றும், குறுகுறுத்துத் தும்முவிக்கின்றது, கிரிகரன் என்றும், கொட்டாவி கொள்ளுவிக்கின்றது, தேவதத்தன் என்றும், வீங்குவிக்கின்றது, தநஞ்சயன் என்றும் வேறே ஐந்து வாயுக்கள் உண்டென்று சிலர் சொல்லுவர். இவ்வைந்தும் பிராணனுடைய, தொழிலானபடியால் வேறல்ல. |
| 48 | 15 | பின்னும் ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சத்தில், பூதத்துக் கோரொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைக்கப் பட்டவை, வாக்காதி கன்மேந்திரியங் |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 15 | கள் என்று சொல்லப்படும். இவை களில் ஆகாயத்தினிடமாக வாக்கு வசநிக்கும். வாயுவினிடமாகப் பாணி இடுதல் ஏற்றல் செய்யும். அக்கினி யினிடமாகப் பாதம் நடக்கும். அப்பு வினிடமாகப் பாயுரு மலசலங்களை வெளியிற் றள்ளும். பிருதிவியினிடமாக உபத்தம் சுகத்தைப் பண்ணும். இவ் வைந்திந்திரியங்களும் தனித் தனியே இருக்கின்றமையால், ஒன்று மற் றொன்றின் தொழிலைச் செய்ய மாட்டாது. வியாநாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன்ருகக் கூடிய தானமையால், கன்மேந்திரியம் ஐந்தின் வழியினுனும் ஐந்து தொழிலை யும் செய்து முடிக்கும். இவ் வாயுக்கள் (5) கன்மேந்திரியங்கள் (5) ஆகிய (10)ம் இராஜதாம்சமானமையால், கிரியா சாதந மாயின. |
| ,, | ,, | அந்தக் கரணம் (5) ஞாநேந் திரியம் (5) வாயுக்கள் (5) கன்மேந் திரியம் (5) ஆகிய (20) தத்துவங் களும், சூட்சும சரீரம் என்று சொல்லப் படும். இச் சூட்சும சரீரத்தை மாயாப் பிரதிவிம்பராகிய ஈசுவரன், அவித்தி யாப் பிரதி விம்பராகிய ஜீவர்கள் அநேக ரானமையால், ஒவ்வொரு வருக்கும், ஒவ்வொரு சரீரமாகக் |

| நிரூபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 16 | சிருஷ்டித் தளித்தான். இப்படிச் சூட்சும சரீர கற்பனை சொல்லப் பட்டது. |
| ,, | 17 | இனித் தூல பூத உற்பத்தி சொல்லப் படுகிறது. மிஞ்சிய தாம தாம்சமாக இருக்கின்ற ஐந்து பூதங் களையும், ஒவ்வொன்றை இரண்டி ரண்டாகப் பகுத்து, முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து இரண்டாம் பாதி ஐந்தில் தன் னம்சத்துடன் கூட்டாமல், மற்றைய நான்கு பூதங்களுடனும், பூதத்துக்கு அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகச் சேர்க்கின்றது பஞ்சீ கரணம் என்று சொல்லப் படும். |
| ,, | 18 | இங்ஙனம், பஞ்சீகரிக்கப் பட்ட தூல பூதங்களில், ஆகாயத்தில், பரிச ரூப ரச கந்தமாகிய நான்கு குணங் களும் வியாப்பியமானமையால், அதிரி சியமாம்; நிச குணமாகிய சப்தம் திரிசியமாம். வாயுவில் ரூப ரச கந்த மாகிய மூன்று குணங்களும் வியாப் பியமானமையால் அதிரிசியமாம்; காரண குணமாகிய சப்தமும், நிச குணமாகிய பரிசமும் திரிசியமாம். அக்கினியில் ரச கந்த மாகிய இரண்டு குணங்களும் வியாப்பியமானமையால், அதிரிசியமாம்; காரண குணங்களாகிய |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
| --- | --- | --- |
| 2 | 18 | சப்த பரிசமும், நிச குணமாகிய ரூபமும் திரிசியமாம். அப்புவில் கந்த குணம் வியாப்பியம் ஆனமையால், அதிரிசியமாம்; காரண குணங்களாகிய சப்த பரிச ரூபமும், நிச குணமாகிய ரசமும் திரிசியமாம். பிருதிவியில், காரண குணங்களாகிய சப்த பரிச ரூப ரசமும், நிச குணமாகிய கந்தமும் திரிசியமாம். |
| ,, | 19 | சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்கள் தோன்றினாற் போலப், பஞ்சீகரிக்கப்பட்ட தூல பூதங்களினின்றும், ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியாய் இருக்கின்ற தூல சரீரங்கள் தோன்றின. இவற்றுள், ஆறு தத்துவங்களாவன : சருமம், உதிரம், மாம்சம், சநாயு, அஸ்தி, மச்சையாகிய இவைகளாம். நால்வகைப் பிறப்புக்களாவன : சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் ஆகிய இவைகளாம். மூவகைச் சாதிகளாவன : இகலோக, பரலோக புத்தியைத் தருகின்ற மாநுட சரீரங்கள் உத்தம சாதியாம். பரலோக புத்தியை மறைத்து, இகலோக புத்தியை மாத்திரம் தருகின்ற பசு பக்ஷியாதிய சரீரங்கள், மத்திம சாதியாம். இரு- |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 2 | 19 | வகைப் புத்தியையும் மறைத்திருக் கின்ற மரங்கொடி செடியாதிகள் அதம சாதியாம். |
| | 20 | இப்படிப் பிருதிவி தத்துவமாய் இருக்கின்ற பூலோகத்திற்றோற்றுகின் றது போல, அப்பு, அக்கிநி, வாயு, ஆகாயம் என்னப்பட்ட தத்துவங்க ளாய் நிர னிரையே இருக்கின்ற பிதிர்லோக, தேவலோக, யக்ஷ கந்தர்வ லோக, சித்தர் லோகங் களினும், சந்திரன் நட்சத்திரமாகத் தோற்றுகின்ற பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், யக்ஷ கந்தரு வர்கள், சித்தர்கள் சரீரங்கள் உத்தம சாதியாம். காமதேநு, ஐராவதம், அந்நம், கருடனாதிய சரீரங்கள் மத்திம சாதியாம். கற்பக விருட்சம், பாரிஜாத மாதிய சரீரங்கள் அதம சாதியாம். இப்படிப் பிரகிருதி முதல் தூல சரீரம் ஈறாயுள்ள தத்துவங்களின் தோற்றங் கள் சொல்லப்பட்டன. |
| 3 | 21 | தூல சரீரமே அந்நமய கோசம். சூட்சும சரீரம் மூன்று கோசங்களா யிருக்கும். எங்ஙனமெனின்? பிராண வாயுவுங் கன்மேந்திரியங்களும் கூடிப் பிராணமய கோசம். மநதும் ஞானேந் திரியங்களும் கூடி மநோமய கோசம். புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடி |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 3 | 24 | யிருக்கும்போது, ஞாநாத்மா வெனவும் கூடத்த ரெனவும் சொல்லப்படும். |
| ,, | 25 | ஈசுவரனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவத்தைகளும் சொல்லப் படுகின்றன. கற்பிதப் பிரபஞ்ச வடிவ மாகத் தோற்றுகின்ற தூல பஞ்சபூதங் களும், அவற்றிற் றோன்றிய மூன்று சாதிகளா யிருக்கின்ற தூல சரீர சமட்டியுங் கூடி ஈசுர தூல சரீர மென்றும், விராட்டென்றும் சொல்லப் படும். இதனுடனே கூடிச் சாக்கிரா வத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசுவாநரன் என்றும், இந்த இரு வகைக்கும் அதிட்டாந சைதந்நியம், பிரஹ்மா வென்றும் சொல்லப்படும். சூக்கும பூதங்கள் ஐந்தும், அவற்றிற் றோன்றிய சூக்கும சரீர சமட்டியுங் கூடி ஈசுர சூக்கும சரீர மென்றும், இரணிய கருப்ப மென்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பநாவத்தை யைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்தி ராத்மா என்றும், இந்த இருவகைக்கும் அதிட்டாந சைதந்நியம் விஷ்ணு என்றும் சொல்லப்படும். இந்தத் தூல சூக்கும மாகிய இரண்டின் வாசனை யுடனே கூடியிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீரமென்றும், அவ்வியா கிருதமென்றும் சொல்லப்படும். இத- னுடனே கூடிச் சுழுத்தியவத்தையைப் |

| நிரூபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 3 | 25 | பொருந்துகின்ற ஈசுரன் அந்தரியாமி என்றும், இந்த இரு வகைக்கு மதிட்டாந சைதந்நியம் உருத்திரன் என்றும் சொல்லப்படும். |
| ,, | 26 | சீவன் தன் மூன்றவத்தைகளிலும் தன் மூன்று சரீரங்களாய் இருக்கின்ற (27) தத்துவங்களுடனும், நானென்று கலந்து நிற்பதுபோல, ஈசுரனும், தன் மூன்றவத்தைகளிலும் தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற (32) தத்துவங் களுடனும் கலந்து நிற்பன். சீவன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன. ஈசுரன் தன் சரீரமாகிய சகல சரீரங்க ளோடும், சகல பிரபஞ்சங்களோடும் கலந்து நிற்பன் இந்த இருவகைக்கும் சாட்சியாய் இருக்கின்ற பிரஹ்ம சைதந்நியமும், சகல சரீரங்களினும், சகல பிரபஞ்சங்களிலும் நிறைந்து, அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக் கிரமித்து எல்லையற்றிருக்கும். |
| ,, | 27 | சீவன்றன் தூல சரீர விவகாரத் திற்குக் கூடும் தத்துவங்கள்: தூல சரீர தத்துவங்கள் (6) சூட்சும சரீர தத்துவங்கள் (20), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆக தத்துவங்கள் (31). சூட்சும சரீர விவகாரத்திற்குக் கூடுந் தத்துவங்கள்: |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
| --- | --- | --- |
| 3 | 27 | சூட்சும சரீர தத்துவங்கள் (20) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆக தத்துவங்கள் (25). காரண சரீர விவகாரத்திற்குக் கூடுந் தத்துவங்கள்: சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5). சீவ விவகாரத்திற்குக் கூடும் தத்துவங்கள்: சீவன் ஈசுரன் பிரஹ்மம் (3). சாட்சி விவகாரத்திற்குள்ள தத்துவம் சாக்ஷி (1). |
| ,, | 28 | ஈசுரன் தன் தூல சரீர வியவகாரத்திற் கூடும் தத்துவங்கள்: சமட்டி தூல சரீர தத்துவம் (6), சமட்டி சூட்சும சரீர தத்துவம் (20), சமட்டி சீவன் அவித்தை (2), தூல பூதம் (5), ஈசுரன் வித்தை பிரஹ்மம் (3), ஆக (36). சூட்சும சரீர வியவகாரத்திற் கூடும் தத்துவங்கள்: சமட்டி சூட்சும சரீர தத்துவங்கள் (20), சமட்டி சீவன் அவித்தை (2), சூட்சும பூதம் (5), ஈசுரன் வித்தை பிரஹ்மம்(3), ஆக (30). காரண சரீர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்: ஈசுரன் வித்தை பிரஹ்மம் (3). ஈசுர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்: ஈசுரன் பிரஹ்மம் (2). பிரஹ்ம வியவகாரத்துக்குள்ள தத்துவம் பிரஹ்மம் (1). |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 3 | 29 | இந்திரிய வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்: இந்திரியம் (1), தூல சரீர தத்துவங்கள் (6), அந்தக் கரணம் (5), வாயுக்கள் (5), சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் (5), ஆக (22) மநோராச்சிய வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்: அந்தக் கரணம் (5), சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் (5) ஆக (10). இப்படித் தத்துவங்களின் நிலை சொல்லப்பட்டது. |
| 4 | 30 | இனி, தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழி சொல்லுகின்றோம். சகல சீவர்களிடத்தினுமிருக்கின்ற தூல சரீரங்களனைத்தும், தமக்காதாரமான தூல பூதங்களில் மடிந்து, பூத மாத்திரமாக ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத், தன் மாத்திரைகளான தாமதகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரணிய கருப்பாவத்தை யென்று சொல்லப் படும். |
| ,, | 31 | சூட்சும சரீர தத்துவங்கள் (20)ம் கட்டு விட்டுப் பூதங்களின் சாத்துவீக குணமும், இராசத குணமுமாக ஒடுங்கும். அஃதெங்ஙன மெனின், சகல பிராணிகளிடத்தினுமிருக்கின்ற |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 4 | 31 | அகங்காரமும், ஆக்கிராணமும், உதாந வாயுவும், உபத்தமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்நுவையும், சமாநனும், பாயுருவும், அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபாநனும், பாதமும் அக்கினியில் ஒடுங்கும் மநதும், தொக்கும், பிராணனும், பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியாநனும், வாக்கும் ஆகாயத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். |
| ,, | 32 | இந்தச் சூட்சும பூதங்களும், பிருதிவி அப்புவில் கரைந் தொடுங்கும் அப்புவும் அக்கிநியிற் சுவறி ஒடுங்கும். அக்கிநியும் விளக்குப் போல வாயுவில் அணைந்தொடுங்கும். வாயுவும் ஆகாயத்தில் ஓய்ந்து ஒடுங்கும். ஆகாயமும், விக்ஷேப சத்தியில் ஒடுங்கும். ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும் மூலப் பிரகிருதியின் தமோ குண மாத்திரமாய் ஆலமரம் ஆல விதையில் ஒடுங்கிறாற் போலப், பின்னுமொரு சிருட்டிக்கு வித்தாக, அவித்தையினும், மாயையினும் ஒடுங்கும். |
| ,, | 33 | இந்த மாயையும், அவித்தையும், அதி நுண்மையான மூலப் பிரகிருதி யென்னும் விந்து தத்துவமாக ஒடுங்கும். |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
| --- | --- | --- |
| 4 | 33 | அவ் விந்து தத்துவமும், பாம்பு பழுதை மாத்திரமாக ஒடுங்கியது போலத் தனக் கதிட்டாந மான பிரஹ்ம சைதந்நிய மாத்திரமாக ஒடுங்கும். |
| ,, | 34 | இப்படித் தோற்றி யொடுங்கிய தத்துவங்கள் (35). அவையாவன :- பூதங்கள் (5), தூல சரீர தத்துவங்கள் (6), சூட்சும சரீர தத்துவங்கள் (20), காரண சரீரமான மாயை அவித்தை (2), அவைகளிற் பிரதிவிம்பமாயுள்ள, ஈசுரன், சீவன் (2), ஆகிய இவைகளாம். |
| ,, | 35 | இப்படித் தோற்றி யொடுங்கிய பொய்ப் பொருள்கள் யாவும், மெய்ப் பொரு ளொன்றுகவே யுளதெனவும்; அதுவே, சுவபாவ சித்தமாகவும், நிசமாகவும் இருக்கின்ற தன் வடிவ மெனவும்; அறிந்தவனே பிரஹ்ம ஞாநியாகிய சீவன் முத்தனும். இங்ஙனம் தத்துவங்களின் ஒடுக்கம் சொல்லப்பட்டது. |
| 5 | | தத்துவம் (36)ல், பூதம் (5), மாயை (1), மாயாப் பிரதி விம்பரான ஈசுவரன் (1), பிரஹ்மம் (1), ஆகிய இந்த எட்டும் சகல பிராணிகட்கும் சமுதாயமாக அநுபவிக்கப்படும். எங்ஙனமெனின்? சகலர்க்கும் பிருதிவி |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 5 | 36 | இறக்கில் ஆதாரமில்லை. அப்பு இறக்கில் குளிர்ச்சி யில்லை. தேயு இறக்கில் பாகமில்லை, வாயு இறக்கில் பிராணன் இயக்கமில்லை. ஆகாய மிறக்கில் அவகாசமில்லை. மாயையும் மாயாப் பிரதி விம்பருமிறக்கில் சகல சமயங்கட்கும் தெய்வமில்லை. பிரஹ்ம மில்லையாயின் சகலர்க்கும் அறிவில்லை. ஆதலால், இந்த எட்டும் எல்லோருக் கும் சமுதாயமாம். |
| ,, | 37 | மற்றைய (28) தத்துவங்களும், அவனவனுக்குப் *பிருதக்காக அனுப விக்கப்படும். அஃதெதனு லெனின், ஒருவனுக்குத் தூல சரீரம் இறக்கில் எல்லோருக்கும் இறவாத படியினுனும் சூட்சும சரீரத்தில், ஒருவனுக்கு அங்க §வைகல்யம் வந்தால், எல்லோருக்கும் வராதபடியினுனும், முத்தராயிருந்த சுகர் வாமதேவ ராதியர்கட்கு, அவித் தையும், சீவனும் இறந்து போயிருக்க மற்றையோர்க் கெல்லாம் இறவாத படியினுலும், இவ்விருபத் தெட்டுத் தத்துவங்களும், பிருதக் கென்பதிற் சந்தேகமில்லை. |

* பிருதக்கு - வேறு

§ வைகல்யம் (விகலம்) - குறைவு

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 5 | 38 | இத்த த்துவங்கள் முப்பத்தாறில், எப்போதும் தானாகவே காணப்படுகிற தத்துவம் (1). எப்போதும் தனக் கந்நியமாகவே காணப்படுகிற தத்து வங்கள் (7). தானாகவும், தனக் கந்நியமாகவும் அநுபவிக்கப்படுகிற தத்துவங்கள் (28). |
| ,, | 39 | அஃதெங்ஙனமெனின், அவத்தாத் திரய சாட்சியாகிய பிரஹ்ம சைதந் நியம், எல்லா அவத்தைகளிலும் தானாகவே விளங்குகையினாலும், மற்றைத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாகக் காணப்படாத படியினாலும், பிரஹ்ம சைதந்நியம் ஒன்றுமே தானாகக் காணப்படுகிறது. |
| ,, | 40 | பஞ்ச பூதம், மாயை, மாயாப் பிரதி விம்பராகிய ஏழும் தன் தன் தொழிலான பொறுத்தல், பிண்டீ கரித்தல், தகித்தல், உலர்த்தல், இடங் கொடுத்தல், தசாவதாரம், பஞ்ச கிருத்தியங்கள் ஒரு காலத்தினும் தன் தொழில்களாகக் காணப்படாமையால், தனக்கந்நியங்களே யல்லாமற் றானாக மாட்டா, |
| ,, | 41 | மற்றை (28) தத்துவங்களுள், நான் பிராமண னாதிய வருணத்தன்; பிரமசரிய மாதிய ஆச்சிரமி; நான் |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 5 | 41 | ஆண், பெண், கருவல், சிவலை, கட்டையன், நெட்டையன், நான் பருத்தேன் இளைத்தேன் என்று, தானாக வழங்கப்படுகிற தூல சரீரம் ஆறு தத்துவங்களும், மற்றொரு வேளையில் தனக்குப் புறம்பு பட்டு, " என் மாடு, என் கன்று" என்றாற் போல, என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது, என் சரீரம் பிறந்தித்தனை நாளாயிற்று என்று வேறாக வழங்கப் படுகின்றமையினாலும்; நான் கண்டேன், கேட்டேன், பரிசித்தேன், வசநித்தேன், கொடுத்தேன், நடந்தேன், சங்கற்பித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று, தானாக வழங்கப் படுகிற சூட்சும சரீர தத்துவம் (20)ம், மற்றொரு வேளையில் தனக்குப்புறம்பு பட்டு "என் உடைமை, என் வீடு" என்றாற் போல, என் கண், என் காது, என் தொக்கு, என் வாக்கு, என் கை, என் கால், என் மநம், என் புத்தி, என் பிராணன் என்று வேறாக வழங்கப் படுகின்றமையினாலும்; நானறியேன், நானறிவேன், என்று தானாக வழங்கப் படுகிற அஞ்ஞானமும் சீவனும், மற்றொரு வேளையில் தனக்குப் புறம்புபட்டு என் அஞ்ஞாநம், என் சீவன் என்று வேறாக வழங்கப் படுகின்றமையினாலும்; இந்த இருபத்- |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
| --- | --- | --- |
| 5 | 41 | தெட்டுத் தத்துவங்களும் தானாகவும் தனக்கந்நியமாகவும் அநுபவிக்கப் படுகின்றனவாம். |
| ,, | 42 | சங்கை:- இந்த (28) தத்துவங் களும் தானால் சாக்ஷியைப் போல, ஒரு தன்மையாகத் தோற்ற வேண்டுமேயல்லாமல், பஞ்ச பூதங் களைப் போலத் தனக் கந்நியமாகத் தோற்ற நியாயமில்லை. தனக்கந்நிய மானால் எப்போதும் புறம்பாகத் தோற்ற வேண்டுமேயல்லாமல், தானாக வழங்கற்கு நியாயமில்லை. தானுமாய்த் தனக்கந்நியமுமாய் இருக்குமெனல், இருட்டாதித்தியன் என்றாற் போலும், வெள்ளாள தீக்ஷிதன் என்றாற் போலும் விருத்தமாம் எனின்? |
| ,, | 43 | உத்தரம்:- பரமார்த்த மாகத் தானென்கின்றதொரு வகையும், அத்தியாசத்தினாலே தானென்கின்ற தொரு வகையும் ஆக இருவகையும் உண்டு சாக்ஷி சைதந்யத்தைத் தானென்கின்றது, பரமார்த்த மல்லா மல், உபசாரமல்ல. தனக்கந்நிய மாகிய இருபத்தெட்டையும், தானென் கின்றது, கட்டையைக் கள்ளனென் றாற் போலும், பழுதையைப் பாம் பென்றாற் போலும், புத்திர தாராதி களைத் தானென்றாற் போலும் |

| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 5 | 43 | அத்தியாசமேயன்றி, உண்மையல்லாமையால் விருத்த மன்றும். |
| ,, | 44 | ஆகையால், அஞ்ஞாந காலந் தொடங்கி தானல்லவென்று காணப்பட்ட தத்துவங்கள் (7). இப்படிப்பட்ட விவேகம் உண்டாகிய பின்பு, தானல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள் (28). ஆகிய இந்த (35) தத்துவங்களையும், அதற்குள்ள, குணங்குறிகளுடனே கூட்டிக் காண்கின்ற அறிவானது, கடத்தைப் பார்க்கின்றவன் கடத்துக்குப் புறம்பாகவே யிருந்து கடத்தைப் பார்க்கின்றது போல, அவைகட் கந்நியமாகவே இருந்து, அவைகளை அறிகிறதென்றும்; முப்பத்தாறுந் தத்துவமாகிய அதுவே தானென்றும்; தானே பரமசிவம் என்றும் கலக்கமறத் தெளிந்தவனே சிவதரிசநமுடைய சீவன் முத்தனும். |
| ,, | 45 | இப்படிப் பிரஹ்மமே தாமென்றும், மற்றைய (35) தத்துவங்களும் தமக்கந்நிய மென்றும், பிரித்தறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்தியினாலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கின்றோம் என்கின்ற மூடகரம் போல, இந்த இருபத்தெட்டினுடைய தொழில்களையும், தந்தொழில்கள் என்று மயங்குகின்றமையால், இந்த இருபத் |



| நிருபக எண் | நூல் பிரிவு எண் | நூல் |
|---|---|---|
| 5 | 45 | தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவ மாதிய கன்மங்களிற் கட்டுப் பட்டு, அந்தக் கன்மங்களின் படியே, சநந மரணாதி சம்சாரங்களில் அடிபடுகிறோமென்று மயங்குவர். |
| ,, | 46 | பிரஹ்ம சைதந்நியமே தானென்றும், மற்றைய (35) தத்துவங்களும் தானல்ல வென்றும், தெளிந்த விவேகியானவன், அகங்காரக் கிரந்தியற்றபடியினாலே, இந்த இருபத்தெட்டின் தொழில்களையும், நான் செய்யவில்லையென்றும், இந்த இருபத் தெட்டும் புசிக்கின்றதை, நான் புசிக்கவில்லையென்றும், திடப்படத்தேறி, மயக்கமற்றிருக்கின்றமையால், இந்த இருபத்தெட்டினாலும், ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்ம சம்பந்தமில்லாமையால், சநந மரணாதி சம்சாரமில்லாமல், முத்தனாகிப் பிரஹ்ம மாத்திரமாகவே யிருப்பன். |
| 6 | 47 | இவனைச் சீவன் முத்தன் என்றும், திடப் பிரஞ்ஞன் என்றும், பகவற்பக்தன் என்றும், குணாதீதனென்றும், பிராமணன் என்றும், அதிவருணாச்சிரமி யென்றும், வாசிட்டம் முதலிய சாத்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத்தத்துவங்களைவிசாரம் பண்ணி மோக்ஷம் அடையக்கடவர். |
| | | நாநா சீவ வாதக் கட்டளை மூலம் முற்றிற்று. |

| வினு விடை எண் | 1. அநுபந்த சதுட்டய நிரூபக விஷய அநுக்கிர மணிகை. (பொருள் வரிசைக் குறிப்பு). | பக் கம் எண் |
|---|---|---|

| வினா விடை எண் | 1. அநுபந்த சதுட்டய நிரூபக<br>2. சாதந சதுட்டய நிரூபக<br>விஷய அநுக்கிர மணிகை | பக்கம் எண் |
|---|---|---|



## 2. சாதந சதுட்டய நிரூபக விஷய அநுக்கிர மணிகை

| வினா விடை எண் | 2. சாதந சதுட்டய நிரூபக விஷய அநுக்கிரமணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

## 2. சாதந சதுட்டய நிரூபக விஷய அநுக்கிர மணிகை

| வினா விடை எண் | 2. சாதந சதுட்டய நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 22 | சிரத்தை | 29 |
| 23 | சுருதியின்பாற் சிரத்தை | ,, |
| 24 | குருவின்பாற் சிரத்தை | ,, |
| 28 | ஈசுரன்பாற் சிரத்தை | 32 |
| 29 | சமாதி சட்க சம்பத்திக்கு ஏது முதலிய ஐந்தும் | ,, |
| 30 | சமாதி சட்க சம்பத்தி ஒரே சாதநம் | 33 |
| 31 | இவ் வாறும் ஒன்றற் கொன்று சககாரிகள் | ,, |
| 32 | சமம் முதற் சாதநம் | 36 |
| 33 | சிரத்தை பிற் சாதநம் | ,, |
| 34 | முமுட்சுத்துவம் | 37 |
| 35 | முமுட்சுத்துவம் முன் மந்த ரூபம் | 37 |
| 36 | முமுட்சுத்துவத்துக்கு ஏது முதலிய ஐந்தும் | 38 |
| 37 | முமுட்சுக்களின் பிரிவு | ,, |
| 38 | தீவிர முமுட்சு | ,, |
| 39 | மத்திம முமுட்சு | ,, |
| 40 | மந்த முமுட்சு | 39 |
| 41 | அதிமந்த முமுட்சு | ,, |
| 42 | துக்கங்கள் மூன்று | ,, |
| 43 | அத்தியாத்மிக துக்கம் | ,, |
| 44 | ஆதிபௌதிக துக்கம் | 40 |
| 45 | ஆதிதெய்வீக துக்கம் | ,, |
| 46 | நான்கு சாதநங்களும் வேண்டும் | ,, |
| 47 | நான்கு சாதநங்கட்கும் பலம் | 41 |
| 48 | சாதநங்க ளின்றி ஞாநஞ் சித்தியாது | ,, |
| 49 | நான்கு சாதநங்களு முள்ளானே ஞாந சாதந னை முமுட்சு வெனல் | , |
| 50 | அதிகாரிகள் மேற் செய்யத் தக்கது | 42 |

| வினு விடை எண் | 2. சாதந சதுட்டய நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 51 | அதிகாரிகள் குருவை யடையுங் கிரமம் | 42 |
| 52 | குருவை யடைந்து செய்யத் தக்கது | 43 |
| 53 | குருவுக்குத் திரவியார்ப்பணம் | 44 |
| 54 | குரு கிரகாச்சிரமிகளு மாவர் | ,, |
| 55 | சரீரார்ப்பணம் | ,, |
| 56 | வாக் கர்ப்பணம் | 45 |
| 57 | மந அர்ப்பணம் | ,, |
| 58 | குரு பரிவாதம் நிந்தை | ,, |
| 59 | பரிவாத நிந்தைய ரடையும் பலம் | 46 |
| 60 | நவ வித பத்தி | ,, |
| 61 | ஆத்தப் பணிவிடை | ,, |
| 62 | அங்கப் பணிவிடை | ,, |
| 63 | தாதப் பணிவிடை | 47 |
| 64 | சத்பாவப் பணிவிடை | ,, |
| 65 | குருவை விட்டு நீங்க லாகாது | ,, |
| 69 | அதிகாரிகள் நான்கு விதம் | 49 |
| 72 | அதிகாரிகளைப் பிரித் தறிதல் | 50 |
| 73 | மந்தர் மத்திமர்களுக்கு யோகம் | ,, |
| 74 | யோகம் | ,, |
| 75 | பஞ்ச யோகம் | 51 |
| 76 | உத்தமர்க ளுத்தமோத்தமர்களுக்கு விசாரம் | 52 |
| 77 | விசாரம் | ,, |
| 78 | ஆசாரியர் பாடஞ் சொல்லுங் கிரமம் | ,, |
| 80 | போதனை மூன்று விதம் | 54 |
| 81 | உத்தேச போதனை | ,, |
| 82 | இலக்கண போதனை | ,, |
| 83 | அதிவியாப்தி தோடம் | ,, |
| 84 | அவ்வியாப்தி தோடம் | ,, |

| வினு விடை எண் | 2. சாதந சதுட்டய நிருபக<br>1. பிரம விலக்கண நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



நூல்

## 1. பிரம விலக்கண நிருபக விஷய அநுக்கிர மணிகை

| விஞ் விடை எண் | 1. பிரம விலக்கண நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக் கம் எண் |
|---|---|---|
| 16 | ஈசுரன் றன் அசுத்தங்கள் | 64 |
| 18 | பிரஹ்மத்துக்கு உற்பாத்திய மாதிய நான் கசுத்தங்களு மில்லை | 65 |
| 19 | நித்திய விலக்கணம் | ,, |
| 20 | அபாவ இலக்கணம் | 66 |
| 21 | அபாவ அதிகரணம் | ,, |
| 22 | அநுயோகி பிரதியோகி | ,, |
| 23 | அபாவங்கள் ஐந்து | ,, |
| 24 | பிராகபாவ இலக்கணம் | ,, |
| 25 | பிரத்துவம்சாபாவ இலக்கணம் | 67 |
| 26 | சாமயிகாபாவ இலக்கணம் | ,, |
| 28 | அத்தியந்தாபாவ இலக்கணம் | ,, |
| 30 | அந்நியோந்நியாபாவ இலக்கணம் | 68 |
| 32 | பிராகபாவத்துக் கதிவியாப்தி யில்லை | ,, |
| 33 | பிரபஞ்சம் பிராகபாவமா யுள்ளது | 69 |
| 34 | பிரத்துவம்சாபாவத்துக் கதிவியாப்தி யில்லை | ,, |
| 35 | பிரபஞ்சம் பிரத்துவம்சாபாவமா யுள்ளது | 70 |
| 36 | சாமயிகாபாவத்துக் கதிவியாப்தி யில்லை | ,, |
| 37 | பிரபஞ்சம் சாமயிகாபாவமா யுள்ளது | 71 |
| 38 | அத்தியந்தாபாவத்துக் கதிவியாப்தி யில்லை | ,, |
| 39 | பிரபஞ்சம் அத்தியந்தாபாவமா யுள்ளது | ,, |
| 41 | அந்நியோந்நியாபாவத்துக் கதிவியாப்தி யில்லை | 73 |
| 42 | பிரபஞ்சம் அந்நியோந்நியாபாவமா யுள்ளது | ,, |
| 44 | பிராகபாவ இலக்கணங்களில் அங்கீகார மல்லாதது | 74 |
| 47 | பிரத்துவம்சாபாவ இலக்கணங்களில் அங்கீகார மல்லாதது | 75 |

| வினு விடை எண் | 1 பிரம விலக்கண நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண், |
|---|---|---|

| வினா விடை எண் | 1. பிரம விலக்கண நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினா விடை எண் | 1. பிரம விலக்கண நிருபக 2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிர மணிகை

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிரமணிகை | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 173 | அபூர்வதை லிங்கம் | 189 |
| 174 | பல லிங்கம் | ,, |
| 175 | அருத்த வாத லிங்கம் | ,, |
| 176 | உபபத்தி லிங்கம் | ,, |
| 178 | குதர்க்கம் | 190 |
| 180 | குதர்க்க நிவிர்த்தி | 191 |
| 181 | மநநம் | ,, |
| 182 | தருக்கம் | ,, |
| 183 | அபேத சாதக தருக்கம் | ,, |
| 184 | பேத பாதக தருக்கம் | 192 |
| 185 | அபேத சாதக அநுமாநாதி யுத்திகள் | 193 |
| 186 | பேத பாதக அநுமாநாதி யுத்திகள் | ,, |
| 187 | விபரியய துராக்கிரகம் | 194 |
| 189 | விபரியய துராக்கிரக நிவிர்த்தி | 195 |
| 190 | நிதித்தியாசநம் | ,, |
| 191 | பவிஷ்யத் பிரதிபந்தம் | 196 |
| 193 | பவிஷ்யத் பிரதிபந்த நிவிர்த்தி | ,, |
| 197 | ஞாநிக்கும், ஈசனுக்கும், ஆவரண மறைப் பின்று | 198 |
| 198 | ஆவரண சத்தி மறைப்பது | 199 |
| 199 | ஆவரண சத்தி மறைப்பின் அநுபவம் | ,, |
| 200 | அகங்காரம் | 201 |
| 201 | சுத்த அகங்காரம், அசுத்த அகங்காரம் | ,, |
| 202 | சாமாநிய அகங்காரம் | ,, |
| 203 | விசேஷ அகங்காரம் | 202 |
| 204 | முக்கிய அகங்காரம் | ,, |
| 205 | அமுக்கிய அகங்காரம் | ,, |
| 206 | அகங்காரக் கிரந்தி | ,, |

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிர மணிகை | பக்கம் எண் |
|---|---|---|
| 207 | சம்சார பந்தம் | 203 |
| 208 | குருவா லாவர[illegible] நிக்ரகம் | 204 |
| 209 | திருஷ்ட பலம், அதிருஷ்ட பலம் | ,, |
| 210 | அதிருஷ்ட பல, திருஷ்ட பலங்கட் கேது | ,, |
| 212 | குருவைச் சற் குரு வென விசேடித்ததற் கேது | 205 |
| 216 | (29) தத்துவங்கட்குள்ள பேத இலக்கணம் | 207 |
| 218 | சுவர்க்க வைகுண்டாதிப் பிராப்தி முத்தியன்று | 208 |
| 220 | ஆவரண சத்தி, விக்ஷேப சத்திகளிற் பிரதிவிம்பங்களின்று | 209 |
| 221 | விக்ஷேப சத்தியி லாகாசத் தோற்றம் | 210 |
| 224 | விக்ஷேப சத்தியில் முக் குணங்க ளற்பம் | 213 |
| 226 | அந்தக் கரண நாம காரணம் | 216 |
| 227 | வேதம் | 217 |
| 228 | வேதாங்கங்கள் | ,, |
| 229 | வேதோபாங்கங்கள் | 218 |
| 230 | உப வேதங்கள் | ,, |
| 231 | விருத்திக்கு, உள்ளம் நாமம் | ,, |
| 233 | விருத்திக்கு, மந நாமம் | 220 |
| 235 | விருத்திக்குப், புத்தி நாமம் | 221 |
| 237 | விருத்திக்குச், சித்த நாமம் | 222 |
| 240 | விருத்திக்கு, அகங்கார நாமம் | 224 |
| 244 | விருத்தி சப்தத்துக் கருத்தம் | 225 |
| 247 | அந்தக் கரணத்துக் கதிதேவதைகள் | 227 |
| 248 | சத்தங்க ளிரண்டு விதம் | 228 |
| 249 | தொநி ரூப சத்தங்கள் | ,, |
| 250 | வருண ரூப சத்தங்கள் | 229 |

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 318 | பஞ்சீகரண திருட்டாந்தம் | 265 |
| 321 | தூல பூதங்களிற் றோற்றுங் குணங்கள் | 266 |
| 324 | பூதங்களின் தருமங்கள் | 269 |
| 325 | பூதங்களின் தொழில்கள் | ,, |
| 326 | பூதங்கட் கதிதேவதைகள் | ,, |
| 327 | எழு வகைத் தோற்றமும், நால் வகைப் பிறப் பிலக்கணமும் | 271 |
| 328 | தோற்றத்தின் பேதங்கள் | 272 |
| 331 | ஓ ரறி வுயிர்கள் | 273 |
| 332 | ஈ ரறி வுயிர்கள் | ,, |
| 333 | மூ வறி வுயிர்கள் | ,, |
| 334 | நா லறி வுயிர்கள் | ,, |
| 335 | ஐ யறி வுயிர்கள் | ,, |
| 336 | ஆ றறி வுயிர்கள் | ,, |
| 337 | இக லோக விருப்ப புத்தி | 274 |
| 338 | பர லோக விருப்ப புத்தி | ,, |
| 339 | பசு பக்ஷியாதிகளின் இக லோக விருப்ப புத்தி | 275 |
| 341 | தூல சரீர நாமம் | 276 |
| 342 | சட் பாவ விகாரம் | ,, |
| 343 | சட் கோசாத்மகம் | 277 |
| 346 | தேக நாமம் | 278 |
| 347 | மெய் நாமம் | ,, |
| 348 | சரீர நாமம் | ,, |
| 349 | சீவர்கள் வேறு சரீரங்களை யடையுங் கிரமம் | ,, |
| 350 | புசிக்கப்பட்ட அந்நம் சரீர மாகிப் பூமியிற் சனிக்குங் கிரமம் | 279 |

| வினா விடை எண் | 1. அத்தியாரோப நிரூபக விஷய அநுக்கிர மணிகை, | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக் கம் எண் |
| --- | --- | --- |

| வினு விடை எண் | 2. அத்தியாரோப நிருபக 3. திதி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



3. திதி நிருபக விஷய அநுக்கிர மணிகை.

| வினு விடை எண் | 3. திதி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 3. திதி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 3. திதி நிருபக 4. அபவாத நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



## 4. அபவாத நிருபக விஷய அநுக்கிர மணிகை

| விஞ விடை எண் | 3. திதி நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| விநு விடை எண் | 3. திதி நிருபக<br>4. அபவாத நிருபக<br>விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



4. அபவாத நிருபக விஷய அநுக்கிர மணிகை

| விஞ விடை எண் | 4. அபவாத நிரூபக 5. தத்துவ விவேசந நிரூபக விஷய அநுக்கிர மணிகை. | பக் கம் எண் |
|---|---|---|



## 5. தத்துவ விவேசந நிரூபக விஷய அநுக்கிர மணிகை.

| விஞ விடை எண் | 5. தத்துவ விவேசந நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| விஞ விடை எண் | 5. தத்துவ விவேசந நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 5. தத்துவ விவேசந நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 74 | மிசிர கன்ம விதங்களும், பலன்களும் | 425 |
| 75 | கன்மங்கள் பலன் கொடுக்கும் கிரமம் | ,, |
| 76 | சஞ்சித பிராரப்த கன்மங்களின் ஆசிரயம் | 426 |
| 79 | மகா வாக்கிய விசாரம் | 428 |
| 81 | அருத்த வாத முதலிய வாக்கியங்கள் சுருதி விரோதம் | 429 |
| 82 | சுருதிக்கு விரோத மின்றிய சுபாவ சித்தார்த்த போதக வாக்கியம் | 431 |
| 83 | சத்தி விருத்தி, அதன் பொருள், இலக்கணு விருத்தி அதன் பொருள் | ,, |
| 86 | விட்ட லக்கணையும், அதனுல் மநம் பிரம மென்ற வாக்கியம் பொரு ளுணர்த்தலும் | 433 |
| 87 | விடாத இலக்கணையும், அதனுல் சச்சிதா நந்தம் பிரம மெனும் வாக்கியம் பொரு ளுணர்த்தலும் | ,, |
| 88 | விட்டு விடாத இலக்கணையும், அதனுல் தத்துவமசி மகா வாக்கியம் பொரு ளுணர்த்தலும் | 434 |
| 93 | லக்ஷண, அப்பியாச, உபதேச, சாக்ஷாத்கார வாக்கியங்கள் | 440 |
| 97 | தத்துவமசி வாக்கியத்துக்கு விரோத மாகப் பொருள் கொள்பவர்கள் | 443 |
| 98 | விசிஷ்டாத்துவித சித்தாந்தம் | ,, |
| 99 | விசிட்டாத்துவிதிகள் மகா வாக்கியத்துக்குப் பொருள் கொள்ளுதல் | 444 |
| 102 | துவித சித்தாந்தம் | 445 |
| 103 | துவிதிகள் மகா வாக்கியத்துக்குப் பொருள் கொள்ளுதல் | 446 |

| வினு விடை எண் | 5. தத்துவ விவேசந நிருபக 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|



6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை.

| வினு விடை எண் | 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 10 | பிரம வித்து வரியர்க ளிலக்கணம் | 466 |
| 11 | பிரம வித்து வரிட்டர்க ளிலக்கணம் | ,, |
| 12 | ஞாந சப்த பூமிகளின் நாமம் | 467 |
| 13 | சுபேச்சை | ,, |
| 14 | விசாரணை | 468 |
| 15 | தநுமாநசி | 469 |
| 16 | சாமாநிய சம்சர்க்கத் தநுமாநசி | ,, |
| 17 | சிரேஷ்டாசம்சர்க்கத் தநுமாநசி | 470 |
| 18 | மூன்று பூமியை யுடையார்கள் | ,, |
| 19 | சத்துவாபத்தி | ,, |
| 20 | அசஞ்சத்தி | 471 |
| 21 | பதார்த்தாபாவனை | 472 |
| 22 | துரியம் | 473 |
| 23 | ஜீவந் முத்தனைத் திடப் பிரக்ஞ னெனல் | 474 |
| 24 | அதிடப் பிரக்ஞை | ,, |
| 25 | திடப் பிரக்ஞை | 475 |
| 26 | சமாஹிதத் திடப் பிரக்ஞர்கள் | ,, |
| 27 | சமாஹிதத் திடப் பிரக்ஞர்க ளநுபவிக்கு மாநந்தம் விஷயாநந்த மன்று, ஆத்மாநந்தம் .. | 476 |
| 28 | விஷயாநந்த மல்ல வென்பதற்குக் காரணம் | ,, |
| 29 | ஆநந்தத்துக்கு விஷய லாபங் காரண மன்று | 477 |
| 30 | ஆநந்தம் விளங்குவது ஆத்மாவினுல் | 478 |
| 31 | சமாகிதத் திடப்பிரக்ஞன், ஆநந்தா நுபவி யென்பதற்கு அடையாளம் | ,, |
| 32 | உத்திதத் திடப் பிரக்ஞர்கள் | ,, |
| 33 | பகவற் பத்தன் | 479 |
| 34 | மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை | 480 |

| வினு விடை எண் | 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 35 | குணுதீத லிலக்கணம் | 480 |
| 36 | குணுதீதன் மநதின் அமைதி | 481 |
| 37 | குணுதீதன் குணங்களைக் கடக்குஞ் சாதநம் | ,, |
| 38 | ஜீவந் முத்தர்களிற் பிராமணன் | 482 |
| 39 | உத்தம, மத்திம அதம சாந்திகள் | ,, |
| 40 | வருணங்கள் (4) ஆச்சிரமங்கள் (4) | 483 |
| 41 | பிராமண வருணத்தர்கள் | ,, |
| 42 | பிராமணர்க் குரிய (8) வித பூசைகள் | 484 |
| 43 | எட்டு வித பூசாக் கிரமங்கள் | ,, |
| 44 | பிராமணர்களின் ஆபத் கால சீவநங்கள் | ,, |
| 45 | க்ஷத்திரிய வருணத்தர்கள் | 485 |
| 46 | க்ஷத்திரிய ஞகிய அரசன் நடக்கும் விரதங்கள் | 486 |
| 47 | வைசிய வருணத்தர்கள் | 487 |
| 49 | சூத்திர வருணத்தர்கள் | 488 |
| 50 | பிரமசரிய ஆச்சிரமத்தர்கள் | ,, |
| 51 | அட்ட வித மைதுநங்கள் | 490 |
| 52 | கிரகாச்சிரமத்தர்கள் | ,, |
| 53 | எட்டு விவாகங்கள் | 491 |
| 54 | கிரகாச்சிரமிகளின் பஞ்ச எக்கியங்கள் | 492 |
| 55 | வாநப்பிரஸ்தாச்சிரமத்தர்கள் | 493 |
| 56 | சந்நியாச ஆச்சிரமத்தர்கள், பிரேஷை மந்திரம் | 494 |
| 57 | எதிகள் ஏகாங்கியர்களாக இருக்கும் நிமித்தம் | 495 |
| 59 | குடீசக ராதிய நால் வகை சந்நியாசியர்கள் | 497 |
| 60 | விவிதிஷா சந்நியாசம் | 499 |
| 61 | ஸ்திரீகளுக்கு மாநத சந்நியாசத்தோடு ஆச்சிரம ரூப பாஹிய சந்நியாசமு முண்டு | 500 |

| வினு விடை எண் | 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|

| வினு விடை எண் | 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக்கம் எண் |
|---|---|---|
| 92 | சாது சங்க வுபாயத்தால், மநது நாச மாதல் | 514 |
| 93 | பிராண சலந நிரோதம் | 515 |
| 95 | பிராண சலந நிரோதத்தால், மநது நாச மாதல் | ,, |
| 97 | மநோ நாசம், வாசநா க்ஷயம், சித்தித்து இருத்தலை அறிதற்கு ஏது | 516 |
| 98 | சீவந் முத்திக்குப் பிரயோசநங்கள் | ,, |
| 99 | ஞாந ரக்ஷை | 517 |
| 102 | தப சித்தி | 518 |
| 104 | தபசு உலகா நுக்கிரகத்துக் கேது | 519 |
| 107 | சர்வ சம் வாதம் | 520 |
| 110 | அடயோகம் | 522 |
| 111 | அட்டாங்கங்கள் | ,, |
| 112 | இயமம் | ,, |
| 123 | நியமம் | 525 |
| 135 | ஆசநம் | 528 |
| 136 | பிராணுயாமம் | 529 |
| 137 | பிரத்தியாகாரம் | ,, |
| 138 | தாரணை | ,, |
| 139 | தியாநம் | 530 |
| 140 | சமாதி | ,, |
| 142 | இராஜ யோகத்துக்குப் பிரமாணங்கள் | 531 |
| 143 | இராஜ யோக அங்கங்கள் | ,, |
| 158 | சமாதி யிலக்கணம் | 535 |
| 159 | சமாதி இரண்டு | 536 |
| 163 | ரிதம்பரப் பிரக்ஞை | 537 |
| 164 | நிருவிகற்ப சமாதிக்கு அந்தரங்க சாதநம் | ,, |

| வினு விடை எண் | 6. சீவந் முத்தி நிருபக விஷய அநுக்கிர மணிகை. | பக் கம் எண் |
|---|---|---|

அநுக்கிர மணிகை முற்றிற்று.

சிவமயம்.
ஓம் பரப் பிரஹ்மணே நம:
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

# நாநா சீவ வாதக் கட்டளை

## வியாக்கியாநம்.

---

### உரைப்பாயிரம்.

---

#### கடவுள் வணக்கம்.

பிரணவப் பொருளாய்நிற்கும் பெற்றியன் கணேசன் றேவர்
கரணமின் புறவே சூரைக் காய்ந்தருள் குமரன் றூயோர்
மரணமுற் பவங்க ணீக்கு மகேசன்மா லயனின் ஞோர்கள்
சரணவாரி சங்க டம்மைச் சந்ததஞ் சிந்தை செய்வாம்.

#### வியாசாசாரியர் வணக்கம்.

திகழுமிருக் கெசுர்சாம மதர்வணநான் காகத்
திருமறையை வகுத்தவையின் பொருள்கணனி விளங்கத்
தகுபிரம சூத்திரநற் கிரணவொளி பரப்பித்
தமமெனுமோர் பேரிருளைச் சலநமிலா ஞாநப்
பகலவனு யிருந்தகற்றி யதீதசுக மெவர்க்கும்
பாலிக்கும் வியாசகுரு பதமலரெஞ் சிரத்தில்
மகிழுறவைத் தாநந்த நடநமிட்டுத் தூய
மலர்தூவி யருச்சித்து மநத்தினும்வைப் பாமே.

#### சங்கர பகவத் பாதாசாரியர் வணக்கம்.

பரமத திமிர மகற்றிடு ஞாந
பாஸ்கர னெனப்பவக் கடற்குத்
திரமுறு விசாலப் புணையென வெழுந்து
செகமெலாந் தெளிவுபெற் றேங்கச்

சரதநன் ஞாந வருள்செயும் பரம
சங்கர குருபத மலரெஞ்
சிரமதிற் றுங்கிப் பூசனை புரிந்து
திநந்திநம் பணிகுதும் யாமே.

### உகந்த தேசிகர் வணக்கம்.

சகந்தன தறிவிற் கிதரமின் றென்னத்
தனிமறை முழங்கிய படியே
யிகந்தனிற் சித்த சுத்திய ரெவர்க்கு
மெழிற்கரா மலகமா யுணர்த்தச்
சுகந்தரு நிதியாய்ச் சச்சிதா நந்த
சொரூபமாய்ப் பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகன்ற னெண்மலர்ப் பதத்தை
யுளத்துவைத் தநுதிந முனுவாம்.

### முத்திராமலிங்கதேசிகர் வணக்கம்.

சுத்தமதாய்ப் பூரணமாய்த் துரியா தீதச்
சுயஞ்சுடரா யெவ்வுயிர்க்குந் துணையாய் நிற்குஞ்
சத்தியமாய்ச் சுகமயமாய் நிமல ஞாந
சற்குருவாய் விளங்குமுத்தி ராம லிங்கப்
புத்தமுதா மெமதுபெருங் கருணை வாழ்வின்
பொற்புநிறை பதமலர்கள் சிரமேற் கொண்டு
நித்தியமும் நடம்புரிந்து துதிகள் பாடி
நெஞ்சினில்வைத் தயராம னினைகு வோமே,

### சிதம்பர தேசிகர் வணக்கம்.

ஆரணமா திகளனைத்து மறிதற் கொண்ணு
வரும்பொருளாய்ச் சாந்தமதா யனைத்தி னுக்குங்
காரணமா யுயிர்க்குயிரா யறிவா யின்பக்
கடலுருவா யெவற்றினையுங் கடந்த நித்த

பூரணமா யிருந்தும்பே ரருளா லென்றன்
புன்மதியை மருட்டியபொய்ப் பொருளை
யெல்லாஞ்
சீரணஞ்செய் தாட்கொள்ள வெளிவந் துற்ற
சிதம்பரதே சிகன்மலர்த்தாள் சிரமேற்
கொள்வாம்.

## தக்ஷிணா மூர்த்தி சுவாமிகள் வணக்கம்.

ஓரூரு மோருருவு மோர்பெயரு முரைத்தற்
குவமையுமில் பிரமமதா யிருந்துமுன மருளாற்
சீரூர்கல் லாலடியிற் சநகாதி கட்காத்
திருவுருக்கொண் டதுதானென் றறியவிந்நா
டனிலு
மேரூரப் பெயர்பூண்டு திகம்பரனு யடிய
ரெவரும்வழி பட்டரிய முத்தியுறக் குருவா
யாரூரின் பாலொளிர்வன் மீகபுரத் தெழிலா
யமர்ந்ததக்ஷி ணாமூர்த்தி யடியிணைபோற்
றிடுவாம்.

## இதுவுமது.

முத்துக்கக் கடல்கடத்தும் புணைய தாகி
மோநமெலாங் கடந்தபர மோந மாகி
யெத்திக்கும் நிறைந்தபரி புரண மாகி
யிகபரமா முலகனைத்து மெழுதற் கான
வித்துக்கும் வித்தாகிப் பரமாய்ச் சுத்த
வெளியாகி வன்மீக புரத்தின் மேவிச்
சத்துச்சித் தாநந்த மயமாய் நிற்குந்
தக்ஷிணா மூர்த்திபதந் தலைமேற் கொள்வாம்.

## அவை யடக்கம்.

பருதிவிளக் குறுசகத்தை மின்மினிதான்
விளக்கவெழு பான்மை போலச்
சுருதியுணர் பெரியோர்கள் விரித்துரைக்கத்
தக்கதுவாய்த் துலங்கு மிந்நூற்

பொருளதனைக் கல்வியறி வின்றியயான்
  விரித்துரைக்கப் புகுந்தந் தோவென்
மருளதனை யாவர்கட்கும் வெளிப்படையாய்க்
  காட்டினனிவ் வையத் தன்றே.

### கோ. பொன்னம்பல சுவாமிக ளியற்றியது.

நூலாசிரியர் பெயர்.

இப்பியி னிடையே யெழுமிர சதம்போ
  லென்றுமா யிலகியின் பாகி
யொப்பிட வேது மின்றிய பிரமத்
  துற்றிடும் பகுதிமுன் னுய
அப்பிர பஞ்ச முறைமையைத் தூல
  அருந்ததி நியாயமே யென்னச்
செப்பினன் யாருந் தெளிவுறச் சேஷாத்
  திரிசிவ னென்னுமா தவனே.

---

சிவமயம்
ஓம் பரப் பிரஹ்மணே நம:
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

# நாநா சீவ வாதக் கட்டளை
## வியாக்கியாநம்.

---

### *அநுபந்த சதுட்டய *நிரூபகம்.*
*அவதாரிகை*

ஓரௌடதத்தைக் கண்ணுற்ற போது, இது இன்ன ஔடத மென்றும், இத் தன்மைய குணங்களை யுடைய தென்றும், இதைப் புசிக்கத் தக்கவர்க ளின்ன வியாதியாளர்க ளென்றும், தெரிந்து கொள்ளும் பரியந்தம், அதனை எவரும் புசித்தற்கு முயற்சியார்கள். அது போல, இது இன்ன சாத்திர மென்றும், இதன் விஷயாதி அநுபந்தங்களிவை யென்றும், தெரிந்து கொள்ளும் பரியந்த மிச் சாத்திரத்தி லதி காரிகள் பிரவிருத்தியார்கள். அது பற்றி இச் சாத்திரத்துக் குரிய அநுபந்த சதுட்டயங்கள் இவை யென, அதிகாரிகட்கு அநாயாச மாகப் போத மாகும் நிமித்தம், அவற்றைக் குரு சீட சம்வாத ரூப மாக வெள்ளியிடக் கருதி, முன்னர்ச் சாத்திரப் பெயரும், அப் பெயர்ப் பொருளு முணர்த்துகின்றார்:-

1. விஞ:- இந் நூலின் பெயர் யாது?

விடை:- நாநா சீவ வாதக் கட்டளை யென அறிக. (1)

2. விஞ:- இந்நூலுக்கு நாநா சீவவாதக் கட்டளை யெனப் பெயர் கூறியது எதனால்?

விடை:- வாதி யென்பவன், செம்பு முதலிய வற்றிலுள்ள களிம்பு முதலிய மலிநங்களைப் பரிசந வேதியால்

* நிருபகம்—விளக்கம் கூறுதல்.

வேதித்து, அச் செப்பு முதலியவற்றைச் சுவர்ண மாகக் காணுதல் போல், ஆத்ம சொரூப மாகிய தன்னிடத்தில், அத்தியாச மாகத் தோன்றிய, ''நான் கர்த்தா, போக்தா, ஞாதா'' வெனல் முதலிய நாநா வித சீவத்துவங்களை, ''நான் அகர்த்தா, அபோக்தா, அசங்கன், சிந்மாத்திர'' னென்னும் தத்துவ ஞாநத்தால் வாதித்துத் தன்னைச் சச்சிதாநந்த சிவ சொரூப மாகத் தரிசித்தற் குரிய முறையைக் கிரம மாகப் போதிக்கின்றமையி னென அறிக. (2)

3. வினா:– அங்ஙன மாயின், செம்பாதிகளி லுள்ள களிம்பாதிய மலிநங்களைக் கெடுத்தற்கு வாதி யானவன் காரணமா யிருத்தல் போலத் தன்பாற் றோன்றிய சீவத்துவாதி மலிநங்களைக் கெடுத்தற்கு வேறு காரணன் வேண்டுமே யெனின்?

விடை:- செம்பாதிகள் சட மாதலின் அவை தம்பாலுள்ள களிம்பாதிய மலிநங்களைக் கெடுத்தற்கு வேறு காரணன் வேண்டின. ஆத்மா வாகிய தான், சித் தாதலால் தன்பால் விவர்த்த மாகத் தோன்றிய சீவத்துவங்களைக் கெடுத்தற்கு வேறு காரணன் வேண்டுவ தின் றென அறிக. (3)

அவதாரிகை.

இந் நூலாசிரியர் கூறுது விடுத்த இந் நூலுக் குள்ள அநுபந்த சதுட்டயங்க ளிவை யென அதிகாரிக ளறிந்து நூலிற் பிரவிருத்திக்கும் நிமித்தம் பிரசி நோத்தர ரூப மாக வுணர்த்தப்படுகின்றன.

4. வினா:– இச் சாத்திரத்துக்கு அநுபந்தங்க ளுளவோ?

விடை:– விஷயம், சம்பந்தம், பிரயோசநம், அதிகாரிகளென நான் கநுபந்தங்க ளுள வென அறிக. (4)

5. வினா:– இச் சாத்திரத்துக் குள்ள விஷயம் யாது?

விடை:- சீவப் பிரஹ்ம அபேத மாகிய ஐக்கியம் விஷயம். (5)

6. வினு:- இச் சாத்திரம் சீவப் பிரஹ்ம அபேதங் கூறுதல் போலச், சக சீவ பரங்க ளாகிய 35-தத்துவங்களின் பேதங்களையுங் கூறுவதா யிருக்க, இந் நூலுக்கு விஷயமாகச் சீவப் பிரஹ்ம அபேதத்தை மாத்திரங் கூறி, மற்றைத் தத்துவங்களின் பேதங்களைக் கூருது விடுத்த தென்னை?

விடை:- கானலிற் சலந் தோன்றிய போது, சலத் தோற்றங்கற்பிதம்; அது கானலை யன்றி யோர் பொருளன் றென அபவாதித்து, இருப்பது கானலே யென்று திடமாக அறிந்த புருடனுக்குக், கானல் மாத்திரம் விஷய மாகுத லன்றிச் சலம் விஷய மாகாமையால், அச் சலத்திற்றேன்றும் அலையாதி களும் விஷய மாகுத லில்லை. அது போலப், பிரஹ்மத்திற் சக சீவ பர மாகிய 35 தத்துவங்களும் கற்பித மாகத் தோற்றுகின்றன. தோற்றினும் அத் தோற்றம் பிரஹ்மத்தை யன்றி யோர் பொரு ளாக இல்லை யென அபவாதித்து, இருப்பது பிரஹ்மமே, அந்தப் பிரஹ்மமே, சீவ னென்று சித்தாந்தஞ் செய் கின்ற சாத்திரத்துக்குச் சீவப் பிரஹ்ம ஐக்கியமே விஷயம்; மற்றை 35 தத்துவங்களும் விஷய மல்ல; அவற்றின் பேதங்களும் விஷய மல்ல. (6)

7. வினு:- சம்பந்தம் யாது?

விடை:- சம்பந்திகளின் வேருய், இரு பொருள்களினு முள்ள தாய், ஒன்றை யொன்று பற்றி யுள்ள இணக்கம், அல்லது, ஒற்றுமை யென்னும் உணர்ச்சியைத் தருவது. (7)

8. வினு:- அஃதெத்தனை விதம்?

விடை: பிரதிபாதகப் பிரதிபாத்திய பாவம், ஜநக ஜந்நிய பாவம், கர்த்திரு கர்த்தவ்விய பாவம், பிராபகப் பிராப்பிய பாவ மெனப் பல வித மாம். (8)

9. வினு:- இவைகளெவைகளுக் குள்ள சம்பந்தங்களெனின்?

விடை:- சாத்திரத்துக்கும், விஷயத்துக்குமுள்ளது, பிரதிபாதகப் பிரதிபாத்திய பாவ சம்பந்தம். சொல்லுகிறது பிரதிபாதகம்; சொல்லப்படுகிறது பிரதிபாத்திய மாதலின், விஷயத்தை விளங்கச் சொல்லுகிற சாத்திரம் பிரதிபாதகம்; சொல்லப்படுகிற விஷயம் பிரதிபாத்தியமாம். சாத்திரத்துக்கும் ஞாநத்துக்கு முள்ளது, ஜநக ஜந்நிய பாவ சம்பந்தம். உற்பத்தி செய்கிறது ஜநகம்; உற்பத்தியாகிறது ஜந்நிய மாதலின், சாத்திரம் விசார மூல மாக ஞாநத்தை யுற்பத்தி செய்கின்றமையால் ஜநகம். ஞாநம் விசார மூல மாக உற்பத்தியாகின்றமையால் ஜந்நிய மாம். அதிகாரிக்கும் விஷயத்துக்கு முள்ளது, கர்த்திரு, கர்த்தவ்விய பாவசம்பந்தம். செய்கிறவன் கர்த்திரு; செய்யத் தக்கது கர்த்தவ்விய மாதலின், விசாரஞ் செய்யும் அதிகாரி கர்த்திரு; செய்யத் தக்க விசாரம் கர்த்தவ்விய மாம். அதிகாரிக்கும் பலத்துக்கு முள்ளது, பிராபகப் பிராப்பிய பாவ சம்பந்தம். அடைகிறவன் பிராபகன்; அடையப்படுகிறது பிராப்பிய மாதலின். பலத்தையடைகிற அதிகாரி பிராபகன்; அடையப்படுகிற பலம் பிராப்பிய மாம். இவற்றையன்றி வேறு சம்பந்தங்களுமுள. (9)

10. வினு:- அதிகாரித்துவம் விஷயம் பல மாகிய மூன்றும் அறிந் தநுட்டித் தடைய வேண்டியவைகளானமையால், அவைகளை யநுபந்தமாகக் கூறியது உபயோக மாம். அறிந் தநுட்டித் தடைய வேண்டியதல்லாத சம்பந்தத்தை யநுபந்த மாகக் கூறியது வியர்த்தமா மெனின்?

விடை:- எந்த வஸ்துவுக் கெதனுடன் சம்பந்தமுளதோ அந்த வஸ்துவுக் கது விஷயத்தி லுபயோகமுண்டு. எந்த வஸ்துவுக் கெதனுடன் சம்பந்தமில்லையோ, அந்த வஸ்துவுக் கது விஷயத்தி லுபயோக முண்டாகிற தில்லை. குலாலாதிகளுக்குக்

கட விஷயத்திற் சம்பந்தமுண்டு. ஆதலின், குலாலாதிகள் கட விஷயத்தி லுபயோகப்படுகின்றன. கண்ணுக்குக் காற்றுடனும், ஆகாயத்துடனும் சம்பந்த மின்று. ஆதலின். கண்ணனது காற்ருகாய விஷயத்தில் உபயோகப்படுகிறதில்லை. இங்ஙனம் சாத்திரத்துக்கும் பிரஹ்மத்துக்கும் பரஸ்பர சம்பந்த மில்லையாயின், பிரஹ்ம விஷயத்தில் சாத்திரம் உபயோகப்பட மாட்டாது. அங்ஙனமே, சாத்திர விஷயத்தில் பிரஹ்மத்தினுபயோகஞ் சித்திக்க மாட்டாது. பரஸ்பர வுபயோக நிச்சய வேதுவாகக் கூறி யிருத்தலால் வியர்த்த மல்ல. (10)

11. விஞ :— இச்சாத்திரத்துக்குப் பிரயோசநம் யாதெனின்?

விடை:— பரமப் பிரயோசநம், அவாந்தரப் பிர யோசநம் எனப் பிரயோசநம் இரண்டாம். இவ்விரண் டில் துக்க நிவிருத்தி சுகப் பிராப்தி மய மாகிய மோக்ஷம் பரமப் பிரயோசந மாகும். பிரஹ்மாத்ம ஐக்கிய ஞாநம் அவாந்தரப் பிரயோசந மாகும். (11)

12. விஞ:— மோக்ஷம் பரமப் பிரயோசநம்., ஞாநம் அவாந்தரப் பிரயோசநமென்ற தென்னை?

விடை:— சகல சீவர்களின் பிரியத்துக்கும் எது எப்போதும் விஷயமா யிருக்கிறதோ, அது பரமப் பிர யோசநமாகும் அப்பரமப் பிரயோசநம் எதன் மூல மாக அடையப்படுகிறதோ, அது அவாந்தரப் பிரயோ சநமாகும். ஆதலின், துக்க நிவிருத்தி சுகப் பிராப்தி மய மாகிய மோக்ஷம், சகல சீவர்களின் பிரியத்துக் கும் விஷயமாயிருத்தலால், அது பரமப் பிரயோசந மென்றும், ஞாந வாயிலாகவே மோக்ஷ மடையப்படு கின்றமையால், ஞாநம் அவாந்தரப் பிரயோசந மென்றும், கூறப்பட்டது. (12)

13 வினு:- மோக்ஷம் பரமப் பிரயோசநமும், ஞாநம் அவாந்தரப் பிரயோசநமு மாகு மென்பதெது போலு மெனின்?

விடை:- வாழைக் கன்று வைத்தவனுக்கு வாழைக்கனி பரமப் பிரயோசநமும், அதனைத் தரத் தக்க தண்டு இலை நாருருவமாகிய மரம் அவாந்தரப் பிரயோசநமு மாவது போலாம். (13)

14. வினு:- பிரஞ்ஞாந மாகிய சீவன் ஆநந்த மாகிய பிரஹ்மமா யிருக்கிறு னெனச் சகல வேதங்களும் வருணிக்கின்றன. இஃதன்றிச் சுவர்க்காதிகள் போல, யாது அப்பிராப்த வஸ்துவா யிருக்கிறதோ, அதன் பிராப்தி யொருவனுக் குண்டாகக் கூடும்; சதாப் பிராப்தமா யிருக்கிற வஸ்துவின் பிராப்தி யுண்டாக மாட்டாது. ஆதலால், சதா சைத்திய சொரூபமா யிருக்கிற சலத்துக்குப் புதிதாய்ச் சைத்தியப் பிராப்தி யுண்டாகு மெனல்போல் சதா பரமாநந்த சொரூப மாயிருக்கிற ஆத்மாவுக்குப் புதிதாய்ப் பரமாநந்தப் பிராப்தி யுண்டாகு மெனலும், அப்படியே, சதா சைத்திய நிவிருத்தி, அல்லது, அந்த கார நிவிருத்தி யாயிருக்கிற தீபத்துக்குச் சைத்திய நி வி ரு த் தி, அல்லது அந்தகார நிவிருத்தி புதிதாயுண்டாகு மெனல் போல், சதா அநர்த்த நிவிருத்தியா யிருக்கிற ஆத்மா வுக்குப் புதிதாய் அநர்த்த நிவிருத்தி யுண்டாகு மெனலும் அசங்கத மாமே ?

விடை:- தன் மூக்கிற் கண்ணுடி யிருக்க. அது காணுமற் போய்விட்டதாகப் பிரமத்தினுற் றேடாநின் றவனுக்குப், பின், அந்நியன் வார்த்தையால், அக் கண்ணுடி கிடைத்ததாக ஞாநமுதய மாவது போலச், சதா பரமா நந்த சொரூபமா யிருக்கிற ஆத்மாவுக்குத் தான் ஆநந்த சொரூப மல்ல வென்றும், பிரஹ்மமே ஆநந்த சொரூப மென்றும், பிரஹ்மந் தனக்கந்நிய மென்றும், உபாசனையாற் பிரஹ்மத்தை யடையலா மென்றும், அவித்யாபலத்தால் பிராந்தி யுண்டாகிறது. பின்னர் வேதாந்த சிரவணத்துக்குப் பூர்வமில்லாதது

போலிருந்த பிரஹ்மாநந்தம் குருகிருபையினுனும், சிர வண மநநாதிகளினுனும், பிராப்தமானதாகப் புத்தி யில் விளங்குகிறது. ஆதலின், அடைந்திருப்பதையும் அடையக்கூடியதாகக் கூறுதலும், அப்படியே, இரச்சு வினிடத்திற் சதா நிவிருத்தியா யிருக்கிற சர்ப்பத்துக் குத் தீபப் பிரபையால் நிவிருத்தி கூறுதல் போல, ஆத்மாவினிடத்திற் சதா நிவிருத்தியா யிருக்கிற அநர்த்தத்துக்கு, ஞாநத்தால் நிவிருத்தி கூறுதலும் அசங்கத மல்ல வென அறிக. (14)

15. வினு:– அநர்த்த நிவிருத்தி பரமாநந்தப் பிராப் தியாகிய இரண்டில் அநர்த்தத்தின் நிவிருத்தி யென் பது அபாவ ரூபமாம். பரமாநந்தப் பிராப்தி யென்பது பாவரூபமாம். அபாவமும் பாவமும் ஒன்றற்கொன்று விரோதிகளானமையால், இரண்டுஞ் சேர்ந்து மோக்ஷ மாக ஒரே யிடத்தில், ஒரே காலத்தி லிரா. ஆதலின் சாத்திரத்துக்குச் சொன்ன பிரயோசநஞ் சித்தியா தெனின்?

விடை:-சர்ப்ப நிவிருத்தி யதிட்டாந இரச்சு ரூப மாகவே சித்திக்கின்றமையால், அது பாவ ரூபமே யாவது போலக், காரண சகித சகத்து நிவிருத் தியும், அதிட்டாநப் பிரஹ்மமே யாமெனச் சுருதிகள் கூறுகின்றமையால், அநர்த்த நிவிருத்தியும் பாவ ரூப மாகிய பிரஹ்மமே யாம். ஆதலின் அது பிரஹ்மத் தோடு விரோத மின்றி அபேதமாகிச் சாத்திரத்துக்குப் பிரயோசநமாகச் சித்திக்கும். இஃதன்றி, ஒரே வஸ்து வின் பாவ ரூபமும், அபாவ ரூபமும் ஒரே யிடத்தி லொரே காலத்திற் பிரதீதியா குமென்பது விரோதமே யன்றி ஒன்றின் பாவ ரூபமும், மற்றொன்றின் அபாவ ரூபமும், ஒரே யிடத்தில் ஒரே காலத்திற் பிரதீதியாகு மென்பது விரோத மன்ரும். எங்ஙன மெனின், கடம் பட மன்றென அந்நியோந்நியாபாவம் நிகழுமிடத் தில், கடத்தின் பாவ ரூபமும், படத்தின் அபாவ ரூப மும் ஒரேயிடத்தில் ஒரே காலத்திற் பிரதீதியாகின்றன.

இங்ஙனமே, சுழுத்தியில் சுகத்தின் பாவ ரூபமும், துக்கத்தின் அபாவ ரூபமும் ஒரே இடத்தில் ஒரே காலத்திற் பிரிதீதியாவது சருவ சீவர்களின் அநுபவமாக இருக்கிறது. ஆதலின், பரமாநந்தப் பிராப்தியும், அநர்த்த நிவிருத்தியு மாகிய பிரயோசநஞ் சித்திக்கு மென்பதற் கைய மின்றென அறிக.

**சகத்து நிவிருத்தி யதிட்டாநப் பிரஹ்மம் என்பதற்குப் பிரமாணம்.**

**(ரிபு கீதை 36-ஆம் அத்தியாயம், 27-ஆம் கவி)**

"அரவுமுதற் பலவிதமாய்த் தோற்றி னலு
மதிட்டாந விரச்சுவினை யாய்ந்த றிந்தால்
மருள்வடிவா மரவுமுத லனைத்து மந்த
மாசற்ற விரச்சுவடி வாவ தேபோல்
விரவுசக முதலியவாய்த் தோற்றி னலும்
விமலவதிட் டாநபரப் பிரமந் தன்னை
யருமையுடன் நன்ருக வாய்ந்த றிந்தா
லவையாவு மகண்டபரப் பிரம மாமே." (15)

16. வினு:- இந் நூலுக் கதிகாரி யாவன்?

விடை:- மலம், விக்ஷேபம், ஆவரண மென்னும் மூன்று தோடங்களில், மல விக்ஷேப மின்றி, ஆவரண தோட மாத்திர முள்ளவனுயும், சாதந சதுட்டய சகிதனுயும், யுத்திசாமர்த்திய புத்திமானுயுமிருப்பவன் இவன் சாத்திர விசார மூலமாக ஆத்ம ஞாநத்துக்கும், ஆத்ம ஞாந மூலமாக மோக்ஷத்துக்கும், அதிகாரி யாவனென அறிக. (16)

17. வினு:-சீவர்கட்கு மல விக்ஷேப ஆவரண மென்னும் மூன்று தோடங்களும், அவைகளை நிவிருத்தித்தற்குரிய சாதநங்களும், உள வென்பதற்குப் பிரமாணங் களுளவோ?

விடை:— தூல சரீரத்திற் சகல ரோகங்களுக்கும் காரண மாக வாத பித்த சிலேட்டும மாகிய மூன்று தோடங்களும், அவைகளை நிவிருத்தித்தற் குரிய ஔடதாதிகளு முள வென்பதற்கு, ஈசுவரனாலும், தன்வந்திரி முதலிய முநீசுவரர்களாலும், வெளியிடப் பட்ட ஆயுள் வேதாதிகள் எங்ஙனம் பிரமாணங்க ளாகுமோ, அங்ஙனம், அந்தக் கரணத்தில் சகல சம்சாரங்கட்குங் காரண மாக மல விக்ஷேப ஆவரண மென்னும் மூன்று தோடங்களும், அவைகளை நிவிருத்தித்தற் குரிய கருமம் உபாசனை ஞாந மென்னும் மூன்று சாதநங்களும் உள வென்பதற்குச் சருவஞ்ஞ னாகிய ஈசுவரனால் வெளியிடப்பட்ட கருமம் உபாசனை ஞாந மென்னுங் காண்டத் திரய ரூப மாகிய இருக் காதி வேதங்களே பிரமாணங்க ளென அறிக. (17)

18. வினா:- மல தோட மாவது யாது?

விடை:- தான் பூர்வ சந்மங்களிற் செய்து நிஷித்த கன்ம பல மாகச் சித்தத்திற் பொருந்தி யுள்ள பாவ சம்ஸ்காரமாகிய அசுப வாசனைகளாம். (18)

19. வினா:— வாசனைகளைப் பிரத்தியக்ஷ மாக அறியக் கூடுமோ?

விடை:- வாசனைக ளனைத்தும் பரோக்ஷ மெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையினாலும், சித்தத்திற் சூட்சுமமாக அடங்கியிருத்தலானும், பிரத்தியக்ஷமாக அறியக் கூடாதனவாம். ஆயினும், அவற்றை அநுமாநத்தா லறியலாம். (19)

20. வினா:- அசுப வாசனைகளை அநுமாநத்தா லெங்ஙன மறியலா மெனின்?

விடை:— தூமந் தோன்றிய விடத்துத் தூம காரணமான அக்கிநி யுளதென் றறிதல் போலச், சித்தத்தில் நிஷித்த கன்மப் பிரவிருத்தி, அல்லது,

விடய இச்சைகள் தோன்றுமாயின், அவைகட்குக் காரணமான அசுப வாசனைகள், சித்தத்துள்ளன வென அநுமாநத்தா லறியலாம். (20)

21. வினு:- மல தோடம் எந்தச் சாதநங்களால் நிவிருத்தி யாகு மெனின்?

விடை:- வேத யுக்தமான கன்ம காண்டங்களிற் கூறிய நிஷ்காம கன்மம், சகல சீவர்களிடத்தினும் வைக்கப்பட்ட தயை, ஈசுவர நாம உச்சாரண மாகிய சாதநங்களால் நிவிருத்தி யாகு மென வறிக. (21)

22. வினு:- விக்ஷேப தோட மாவது யா தெனின்?

விடை:- சித்த விருத்தி, சிரவணுதிகளி லேனும், ஆத்ம சொரூபத்தி லேனும், நிலை பெரும லந்நிய விடயங்களைப் பற்றி நாநாக் கிரம மாகச் சலித்த லென வறிக. (22)

23. வினு:- விக்ஷேப தோடம் எந்தச் சாதநங்களால் நிவிருத்தி யாகு மெனின்?

விடை:- வேத யுக்த மான உபாசநா காண்டத்திற் கூறிய ஈசுவரத் தியாநம், குருத் தியாநம், அஜபா மந்திரம், மகா வாக்கியம், பிரணவம், ஈசுவர நாமோச்சாரண மாகிய சாத நங்களால் நிவிருத்தி யாகு மென வறிக. (23)

24. வினு:- அஜபா மந்திர மாவது யா தெனின்?

விடை:- வாக்கினுல் ஜெபிக்கப்படாமல், சுவாசம் வெளிப்படும் போது ஸோ (ஸ:) என்னும் ஒலியோடும், உட்செல்லும் போது, ஹம் (அஹம்) என்னும் ஒலி யோடும் தானே உதயமாகிக் கொண்டிருப்பதும், மகா வாக்கியப் பொருளையுடையதும், குரு முன்னிலை யிற் றெரிந்து கொள்ளத் தக்கது மாகும். அதனையே, சோபாதிக அஜபா காயத்திரி யென்ப ரென வறிக. (24)

25. விஞ:- அஜபா மந்திரம் வாக்கினுல் ஜெபிக்கப் படாத தாய், எது முதற் றுனே யுதய மாகிக் கொண்டிருக்கிற தெனின்?

விடை:- சரீர முண்டாகிய கால முத லென அறிக. (25)

26. விஞ:- அற்றேல், அளவில் காலம் அளவில் சரீரங்க டோறும் சகல சீவர்களுக்கும் சமமாக உதய மாகிக் கொண்டிருப்ப தானமையால், சகல சீவர் களுக்கு முள்ள விக்ஷேப தோடங்களை முன்னமே நிவிர்த்தி செய்திருக்க வேண்டும். அங்ஙனங் காணப் படாமையினுனும், புருடப் பிரயத்த நத்தாலப் பியாசிக்கத் தக்க தல்லாமையினுனு, மதனை அதிகாரி களப்பியாசிக்கத் தக்க சாதநங்களி லொன்றுகக் கூறியது அசம்பாவித மெனின்?

விடை:- சகலர்க்கும் பிரயத்தந மின்றிச் சம மாகத் தானே யுதய மாகின்ற மந்திர மாக விருக்கினும், அது சகலர்க்கும் விக்ஷேப தோடத்தை நிவிருத்திக்குஞ் சாதநமாக மாட்டாது. கடம் பட மென்னுஞ் சத்தத்தைக் கேட்பவனது சித்த விருத்தி கடாகாரம் படாகார மாவது போல, அஜபா மந்திர முதய மாகுந் தோறு மெவனுடைய சித்த விருத்தி, ஸோஹம், என்னும் அம் மந்திராகாரத்தை அடைந்து கொண்டிருக்கிறதோ, அவனுக்கு, அது விக்ஷேப தோடத்தை நிவிருத்தி செய்வதும், அப்பியாசிக்கத் தக்கது மாகிய சாதநமாகும். ஆதலின், அதனைச் சாதந மாகக் கூறியது அசம்பாவித மல்ல வென அறிக. (26)

27. விஞ:- ஆவரண தோட மாவது யா தெனின்?

விடை:- உருவ விஷயங்களை அந்தகாரமுஞ், சூரியனை மேகமுஞ், சலத்தைப் பாசியும், மறைத் திருப்பது போலச், சுயம் பிரகாச மாகிய ஆத்மாவை அறியக் கூடாத வண்ணம் மறைத் திருப்ப தென அறிக. (27)

விடய இச்சைகள் தோன்றுமாயின், அவைகட்குக் காரணமான அசுப வாசனைகள், சித்தத்துள்ளன வென அநுமாநத்தா லறியலாம், (20)

21. வினு:- மல தோடம் எந்தச் சாதநங்களால் நிவிருத்தி யாகு மெனின்?

விடை:- வேத யுக்தமான கன்ம காண்டங்களிற் கூறிய நிஷ்காம கன்மம், சகல சீவர்களிடத்தினும் வைக்கப்பட்ட தயை, ஈசுவர நாம உச்சாரண மாகிய சாதநங்களால் நிவிருத்தி யாகு மென வறிக. (21)

22. வினு:- விக்ஷேப தோட மாவது யா தெனின்?

விடை:- சித்த விருத்தி, சிரவணுதிகளி லேனும், ஆத்ம சொரூபத்தி லேனும், நிலை பெரும லந்நிய விடயங்களைப் பற்றி நாநாக் கிரம மாகச் சலித்த லென வறிக. (22)

23. வினு:- விக்ஷேப தோடம் எந்தச் சாதநங்களால் நிவிருத்தி யாகு மெனின்?

விடை:- வேத யுக்த மான உபாசநா காண்டத்திற் கூறிய ஈசுவரத் தியாநம், குருத் தியாநம், அஜபா மந்திரம், மகா வாக்கியம், பிரணவம், ஈசுவர நாமோச்சாரண மாகிய சாத நங்களால் நிவிருத்தி யாகு மென வறிக. (23)

24. வினு:- அஜபா மந்திர மாவது யா தெனின்?

விடை:- வாக்கினுல் ஜெபிக்கப்படாமல், சுவாசம் வெளிப்படும் போது ஸோ (ஸ:) என்னும் ஒலியோடும், உட்செல்லும் போது, ஹம் (அஹம்) என்னும் ஒலி யோடும் தானே உதயமாகிக் கொண்டிருப்பதும், மகா வாக்கியப் பொருளையுடையதும், குரு முன்னிலை யிற் றெரிந்து கொள்ளத் தக்கது மாகும். அதனையே, சோபாதிக அஜபா காயத்திரி யென்ப ரென வறிக. (24)

25. வினு:- அஜபா மந்திரம் வாக்கினுல் ஜெபிக்கப் படாத தாய், எது முதற் ருனே யுதய மாகிக் கொண்டிருக்கிற தெனின்?

விடை:- சரீர முண்டாகிய கால முத லென அறிக. (25)

26. வினு:- அற்றேல், அளவில் காலம் அளவில் சரீரங்க டோறும் சகல சீவர்களுக்கும் சமமாக உதய மாகிக் கொண்டிருப்ப தானமையால், சகல சீவர் களுக்கு முள்ள விக்ஷேப தோடங்களை முன்னமே நிவிர்த்தி செய்திருக்க வேண்டும். அங்ஙனங் காணப் படாமையினுனும், புருடப் பி ர ய த் த ந த் த ா ல ப் பியாசிக்கத் தக்க தல்லாமையினுனு, மதனை அதிகாரி களப்பியாசிக்கத் தக்க சாதநங்களி லொன்ருகக் கூறியது அசம்பாவித மெனின்?

விடை:- சகலர்க்கும் பிரயத்தந மின்றிச் சம மாகத் தானே யுதய மாகின்ற மந்திர மாக விருக்கினும், அது சகலர்க்கும் விக்ஷேப தோடத்தை நிவிருத்திக்குஞ் சாதநமாக மாட்டாது. கடம் பட மென்னுஞ் சத்தத்தைக் கேட்பவனது சித்த விருத்தி கடாகாரம் படாகார மாவது போல, அஜபா மந்திர முதய மாகுந் தோறு மெவனுடைய சித்த விருத்தி, ஸோஹம், என்னும் அம் மந்திராகாரத்தை அடைந்து கொண்டிருக்கிறதோ, அவனுக்கு, அது விக்ஷேப தோடத்தை நிவிருத்தி செய்வதும், அப்பியாசிக்கத் தக்கது மாகிய சாதநமாகும். ஆதலின், அதனைச் சாதந மாகக் கூறியது அசம்பாவித மல்ல வென அறிக. (26)

27. வினு:- ஆவரண தோட மாவது யா தெனின்?

விடை:- உருவ விஷயங்களை அந்தகாரமுஞ், சூரியனை மேகமுஞ், சலத்தைப் பாசியும், மறைத் திருப்பது போலச், சுயம் பிரகாச மாகிய ஆத்மாவை அறியக் கூடாத வண்ணம் மறைத் திருப்ப தென அறிக. (27)

28. வினா:– இஃதெதனால் நிவிர்த்தியாகு மெனின்?

விடை:– அந்தகாரஞ் சூரியோதயத்தால் நிவிர்த்தியாதல் போல, ஞானோதயத்தால் நிவிருத்தியாகுமென அறிக. (28)

29. வினா:- இவ் வதிகாரிக் குள்ள சாதநங்கள் ஞாந சாதநங்களா? அல்லது, கன்ம சாதநங்களா?

விடை:- இச் சாத்திரத்துக்குப் பலம் மோக்ஷ மானமையினாலும், அதனைப் பயப்பிப்பது ஞாந மானமையினாலும், இவன் பாலுள்ள சாதநங்கள் ஞாந சாதநங்களே யன்றிக், கன்ம சாதநங்க ளல்ல வென அறிக. (29)

30. வினா:– ஞாந சாதநங்க ளெத்தனை வகைப்படும்?

விடை:- சிரவணத்தை, அல்லது, ஞாநத்தைப் பிரத்தியக்ஷ பல மாக வுடைய சாதநங்கள், அந்தரங்க சாதநங்க ளெனவும், அங்ஙன மின்றி, அந்தக் கரண சுத்தியை மாத்திரம் பல மாக வுடைய சாதநங்கள், பகிரங்க சாதநங்க ளெனவும் இரு வகைப்படும். இவைகளில், விவேகாதிகள் 4, சிரவணாதிகள் 3, மகா வாக்கிய விசாரம் 1, ஆகிய எட்டும் அந்தரங்க சாத நங்க ளாம். யஞ்ஞாதி கர்மங்கள் பகிரங்க சாதநங் களாம். யஞ்ஞாதிகளை அபேக்ஷித்து, விவேகாதி களும், விவேகாதிகளை அபேக்ஷித்துச் சிரவணாதி களும், சிரவணாதிகளை யபேக்ஷித்து மகா வாக்கிய விசாரமும், அந்தரங்க சாதந மாம். இங்ஙனமே, மகா வாக்கிய விசாரத்தை யபேக்ஷித்துச் சிரவணாதிகளும், சிரவணாதிகளை யபேக்ஷித்து விவேகாதிகளும், விவேகாதிகளை யபேக்ஷித்து யஞ்ஞாதிகளும், பகிரங்க சாதநங்க ளாகு மென அறிக. (30)

31. வினா:– அங்ஙன மாயின், மகா வாக்கிய விசாரத்தை மாத்திரம் அந்தரங்க சாதந மெனவும், மற்றவைகளைப் பகிரங்க சாதநங்க ளெனவுங் கூறாமல், யஞ்ஞாதிகளை மாத்திரம் பகிரங்க சாதநங்க ளெனவும், மற்றவைக ளனைத்தையும் அந்தரங்க சாதநங்க ளெனவுங் கூறிய தென்னை யெனின்?

விடை:- அந்தரங்க மென்பது சமீபத் திருப்பது. பகிரங்க மென்பது தூரத் திருப்பது. விவேகாதிகளைப் பற்றிச் சிரவணாதிகளும், சிரவணாதிகளைப் பற்றி ஞாநமும், அப்படியே, மகா வாக்கிய விசாரத்தைப் பற்றி அபேத ஞாநமுஞ் சித்திக்கின்றமையால், ஞாநாதிகாரி யிடத்தில் விவேகாதிக ளெட்டும் விலகி யிராமல் சேர்ந்திருக்கின்றனவே யாம். ஆதலின், இவைகளைச் சமீபத் திருப்பனவாகிய அந்தரங்க சாதநங்க ளெனவும், யஞ்ஞாதி கர்மங்களையும், அவைகட்குச் சாதநங்க ளாகிய மனைவி புத்திரதநாதிகளையும், தியாகஞ் செய்தவன், ஞாநாதிகாரி யானமையால், அவனிடத்தில் யஞ்ஞாதி கர்மங்கள் சேர்ந்திராமல் விலகி யுள்ளனவே யாம். ஆதலின், யஞ்ஞாதிகளைத் தூரத்திருப்ப தாகிய பகிரங்க சாதந மெனவுங் கூறிய தென அறிக. (31)

32. வி:- இந்த அந்தரங்க பகிரங்க சாதநங்கள் எது போலும் எனின்?

விடை:- வில்லிற் பூட்டி விடப்பட்ட பாணம், லக்ஷிய சமீபத்தைச் சென் றடைவதால், அது லக்ஷியத்தைத் துளைக்கும் விஷயத்தில் அந்தரங்க சாதநமா யிருப்பது போல, விவேகாதிக ளெட்டும் ஞாநத்தைச் சமீபித்திருப்பதால் ஞாநத்திற்கு அந்தரங்க சாதநங்க ளாகவும், வில்லானது தூரத் திருந்துகொண்டு பாணத்தைப் பிரயோகித்தல் வாயிலாக லக்ஷியத்தை யடிக்கும் விஷயத்தில் பகிரங்க சாதநமா யிருப்பது போல, யஞ்ஞாதி கருமங்கள் சகுணோ பாசநாதிகள், தூரத் திருந்து கொண்டு மல விக்ஷேபங்களைப் போக்கிச் சித்த சுத்தித் துவாரா ஞாநேச்சையை யுதிப்பிக் கின்றமையால், ஞாநத்துக்குப் பகிரங்க சாதநங்க ளாகவு மிருக்கின்றன. இவைகளில், அந்தரங்க சாதநத்தைச் சம்பாதித்துக் கொண்ட பின்னர்ப், பகிரங்க சாதநத்தைக்

கைவிடவேண்டு மென அறிக. (32)

33. வினா:- அந்தரங்க சாதநத்தைச் சம்பாதித்தற்கு முன்னர்ப் பகிரங்க சாதநத்தைக் கைவிட லாகா தென்றது எதனா லெனின்?

விடை:- கிணற்றில் வீழ்ந்து ஓ ராதாரத்தைப் பிடித்துக் கொண்டு தொங்குகின்ற புருடனை, தன்னை வெளிப்படுத்துவதற் காக விடப்பட்ட கயிற்றை, நன்ருகப் பிடித்துக் கொள்ளுதற்கு முன்னரே, தான் முன் பிடித் திருந்த ஆதாரத்தைக் கைவிடுவா னாகில், அவன் எங்ஙனம் கிணற்றில் வீழ்ந்து சலத்தில் மூழ்கித் துன்புறுவனோ, அங்ஙனம், விவேக முதலிய மேற் சாதனங்களைச் சம்பாதிப்பதற்கு முன்னர்த் தான் பூர்வம் கைக்கொண் டிருந்த யஞ்ஞாதிகளைக் கைவிடுவா னாகில், உபயப் பிரஷ்டனாய், இகபர சுகத்தையும் மோக்ஷ சுகத்தையு மடையாமல், நரகத்தில் மூழ்கித்துன்புறுவன். ஆதலிற், கைவிட லாகா தென அறிக. (33)

34. வினா:- இச் சாத்திராதிகாரியை அந்தரங்க பகிரங்க சாதநங்க ளனைத்து முள்ளா னெனக் கூருமல், சாதந சதுட்டய மாத்திர முள்ளா னெனக் கூறியது எதனா லெனின்?

விடை:— இவ் வதிகாரி யஞ்ஞாதி கர்மங்களை முன்னமே தியாகஞ் செய்துவிட்டவ னானமையினாலும், இப்போ துள்ள சாதந சதுட்டய பலத்தால் குருவை யடைந்து பின்னர்ச் சிரவணாதிகளை யநுட்டிக்கத் தக்கவ னானமையினாலும், யஞ்ஞாதி கர்மங்களையும் சிரவணாதிகளையு முடையவனெனக் கூருமல், சாதந சதுட்டய மாத்திர முள்ளோ னெனக் கூறிய தென அறிக. (34)

35. வினா:- சாதந சதுட்டய மின்றிய கன்ம காண்டிகள், உபாசநா காண்டிகள், இச்சாத்திரத்துக் கதிகாரிகளல்லரோ எனின்?

விடை:- பிரகஸ்பதி சவந மென்னும் யாகத்துக்குப் பிராமணர்க ளதிகாரிக ளன்றி, க்ஷத்திரியர்களும், வைசியர்களும், இராஜசூய யாகத்துக்கு, க்ஷத்திரியர்க ளன்றிப் பிராமணர்களும், வைசியர்களும், ஸ்தோம யாகத்துக்கு வைசியர்க ளன்றிப் பிராமணர்களும், க்ஷத்திரியர்களும், எங்ஙனம் அதிகாரிக ளல்லரோ, அங்ஙனம், வேதாந்த சாத்திரத்துக்குச் சாதந சதுட்டய முள்ளவர்களே யதிகாரிகளன்றிக் கன்ம காண்டிகள், உபாசநா காண்டிகள், அதிகாரிகளல்ல ரென அறிக. (35)

36. வினா:- இச் சாத்திரத்துக்கு நான் கநுபந்தங்களுளவாயின்; இந் நூ லாசிரியர் கூறுமலேன் விடுத்தன ரெனின்?

விடை:- இந் நூல் வேதாந்த சாத்திர மாதலால், மற்றை வேதாந்த சாத்திரங்கட் குள்ள அநுபந்தங்களிந் நூலுக்கு முள தாதலினானும், இந் நூல் குரு முகமாகவே சிரவணஞ் செய்து தெளியத் தக்க தானமையினாலும், சிரவணஞ் செய்யும் அதிகாரிகட்கு ஆசிரியர்க ளெடுத்துக் கூறுவார்க ளென்பது பற்றிக் கூறுது விடுத்தனர். யாம், கிருகங்கள் நாலு பாதங்களின்றி நிலைபெற்றுச் சிறப்புருதது போலச், சாத்திரங்களும் நான் கநுபந்தங்க ளின்றி நிலை பெற்றுச் சிறப்புரு வென்பது பற்றியும், மற்றை வேதாந்த சாத்திரங்கட்குள்ள அநுபந்த சதுட்டய மிந் நூலுக்கு முள தென அதிகாரிகள் தெரிந்து கொள்ள வேண்டு மென்பது பற்றியும், அநுபந்தங்களை விரி வஞ்சிச் சங்கிரக மாகக் கூறினு மென அறிக.

இதன் விரிவை யறிய விரும்பில் விசார சாகரத்திற் காண்க. (36)

37. வினா:-அநுபந்தங்க ளில்லை யாயின், சாத்திரங் கள் நிலைபெற்றுச் சிறப் புறு வென்பது எதனு லெனின்?

விடை:- எது, தன்னை யறிந்த பின்னர் முமுட்சு வைக் கிரந்தத்தோடு சம்பந்தப்படுத்துகிறதோ, அது, அநுபந்த மெனச் சாத்திரங்களிற் கூறப்படுகின்றமை யால், முமுட்சுக்கள் கிரந்தத்தோடு சம்பந்தப்படுவதற் கேதுவான அநுபந்தங்கள் கிரந்தத்துக் கில்லையாயின், முமுட்சுக்களோடு கிரந்தம் சம்பந்த மில்லாததாகும். அங்ஙன மாயின், பாரம்பரிய மாகச் சிரவணஞ் செய்யப் பட்டு வருதலாகிய நிலைபெற்றுப் பிரபலப் படும் சிறப்பினை யுறுமல், செல்லுண்டு சிதறிப் போவதா யிருத்தலி னென அறிக. (37)

*அநுபந்த சதுட்டய நிரூபகம் முற்றிற்று.*
சிதம்பர தேசிகன் றிரு வடி வாழ்க.

உ
சிவமயம்.
ஓம் பரப் பிரஹ்மணே நம:
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

# நாநா சீவ வாதக் கட்டளை
## வியாக்கியானம்.

### *2. சாதன சதுட்டய நிரூபகம்.*

*அவதாரிகை.*

முற்கூறிய அநுபந்தங்களி லொன் ருகிய அதிகாரியின் பாலுள்ள சாதந சதுட்டயங்க ளிவை யென வுணர்த்து கின்றுர் :-

1. வினா:- சாதந சதுட்டய மாவது யாதெனின்?

விடை:- நித்தியாநித்திய வஸ்து விவேகம், இக அமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவ மாகிய நான்கு மென அறிக. (1)

2. வினா:- இவைகளில், நித்திய ாநித்திய வஸ்து விவேகமாவது யாதெனின்?

விடை:- நித்திய மாகவும், சலந ரகித மாகவு முள்ளது பிரஹ்ம மெனவும், அநித்திய மாகவும், சலந சகித மாகவு முள்ளவை தேகாதிப் பிரபஞ்சங்க ளெனவும், அன்னம் பாலையும், நீரையும், பிரிப்பது போலப் பிரித்துப் பார்ப்பது விவேக மென அறிக. (2)

3. வினா:- பிரஹ்மம் நித்தியம், தேகாதிப் பிரபஞ்சம் அநித்திய மென்பது யாதினால் எனின்?

விடை:- பிரஹ்மம் காரண மாயும், அகண்ட மாயும், அவயவ ரகிதமாயும், அதிருசிய மாயும், உற்பத்தி நாச மின்றிய தாயு மிருத்தலால், நித்திய மெனவும்; தேகாதிப் பிரபஞ்சம் பிரஹ்மத்தின் காரிய மாயும், கண்ட மாயும், அவயவ சகித மாயும், திருசிய மாயும், நாச முடையதாயு மிருத்தலால் அநித்திய மெனவுங் கூறிய தென அறிக.

பிரஹ்மம் நித்திய மென்பதற்குப் பிரமாணம்.

(கூர்ம புராணம் சாங்கிய யோக முரைத்த அத்தியாயம்)

''ஆதலாற் பிரம மொன்றே நித்திய மலகைத் தேரிற் பேதுறத் தோன்றும் நீரிற் பிரபஞ்ச மருண்டு தோன்றும்.'' (3)

4. வினா:- சகத்துப் பிரஹ்மத்தின் காரிய மென்பதற்குப் பிரமாணம் யாதெனின்?

விடை:—ஆத்மாவினின்றும் ஆகாசாதி பஞ்ச பூத சகத்துத் தோன்றிய தென்று எசுர் வேதத்தில் வருணன் பிருகுவுக்குச் சொல்லியிருக்கிறதே பிரமாணம். ஆதலின், காரிய மாகிய சகத்து அநித்திய மென்பதற் கைய மின் றென அறிக. (சர்வ வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகத்தின் மொழிப்புரை நூலாகிய, வேதாந்த சாரம் வினா-விடை) (4)

5. வினா:— ஆனால், வைகுண்டாதி யுலகங்களைச் சிலர் நித்திய மெனக் கொண்டு விரும்புகின்றனரே யெனின்?

விடை:- சாவயவப் பொருள்க ளாகிய அனைத்தும் அழியும் பொரு ளென்பது துணிபாதலின், சாவயவ மாகிய வைகுண்ட கைலாயங்க ளனைத்தும் அநித்தியமே யாகும். அவைகளை நித்திய மென விரும்புதல் புத்திப் பிரமமாமென அறிக. (சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரகம் சமஸ்கிருத சுலோகம் -20). (5)

6, வினா:—நித்தியா நித்திய வஸ்து விவேகத்துக்கு—1. ஏது, 2. சொரூபம், 3. காரியம், 4. அவதி, 5. பலம் எவை யெனின்?

விடை:- 1. அநந்த சன்மங்களிற் செய்யப்பட்ட நிஷ்காம புண்ணிய புஞ்ச பரிபாகத்தாலும், ஈசுவரோபாசனையினாலும், உதய மாகின்ற சித்த சுத்தி, சித்த ஏகாக்கிரமமே ஏது. 2 பிரஹ்மம் நித்தியம் தேகாதிப் பிரபஞ்சங்கள் அநித்திய மெனச் சாத்திராதிகளா லுண்டாகிய நிச்சயமே சொரூபம். 3. அதனையே சதா உபக்கிரம உபசம் ஹார மாதிய யுத்திகளோடு சிந்தித்தலே காரியம். 4. மதவாதிகள் கண்டிக்கினும் மத சாஸ்திரங்களைப் பார்க்கினும், பசுவைப் போலும், படிகத்தைப் போலும், அவ் வவ் வாகார மாய்ப் போகாமல், மாணிக்கத்தைப் போலப், பிரஹ்மம் நித்தியம் தேகாதிப் பிரபஞ்சம் அநித்திய மென் றுள்ள நிச்சயம் ஒன்றினாலும் மாறுபடாமற் றிடமா யிருத்தலே அவதி. 5 பிரம லோகப் பிராப்தியே பல மென அறிக. (6)

7. வினா:— நித்தியா நித்திய வஸ்துக்களின் சிந்தநம் யாதெனின்?

விடை:-தேகம் சுக்கில சுரோணித ரூப மாகக் கருப்பத்திற் றரிக்குங் காலத்தில் புழுத் தின்ன

லாதிகளாலேனும், அல்லது, கருப்பத் துள்ள பத்து மாதங்களினுள் இடை யிடையே யுண்டாகுஞ் சில தோடங்களால், கருவழிந்து விழுதலா லேனும், பிறந்த பின்பு பசு (மிருக) பட்சி பாலக்கிரக தோடங்களா லேனும், அல்லது, கணை சுர மாதிய ரோகங்களா லேனும், அல்லது, சர்ப்ப கஜ வியாக்கிர பைசாச சோர சத்துரு சல அக்கிநி இடியாதிகளா லேனும், அல்லது, இராசதண்டனையா லேனும், சைசவ கௌமார யௌவந வார்த்திகங்களில்நியம மின்றி நாச மடைதல் போல, எழு வகைத் தோற்றங்கள் யாவும் நாச மடைவது பிரத்தியக்ஷம். இஃ தன்றிப் பிரஹ்மப் பிரளய காலத்தில், பன்னிரண்டு சூரியர்களும் உதய மாய் நூறு வருடம் மழைக் கிரணத்தையும், பனிக் கிரணத்தையும், அடக்கிக் கொண்டு, உஷ்ண கிரணத்தா லெரித்துப் பிருதிவி யாதிய சகலப் பிரபஞ்சங்களையும் பஸ்பம் பண்ணி, ஆதி சேடன் மகுடங்களையும், பஸ்பம் பண்ணும் போது, ஆதிசேடன் முகத்தி லிருந்து கால கூட விஷாக்கிநி பிறந்து, சூரியாக்கிநிகளோடு சேர்ந்து, ஆதிசேடன் முதற் றுவாத சாதித்தர்களையும், பஸ்பம் பண்ணி அக்கிநி மாத்திர மாகச் சொலிக்கும். அப் போது, அவ் வக்கிநியினின்றும் சப்த மகா மேகங்களும் பிறந்து, நூறு வருடம் யானைத்துதிக்கை போல, வருஷ தாரைகளை வருஷிக்க, அதனால், எங்குஞ் சல மய மாகவே நிறைந்து, முன்பக்கிநியினு லெரி பட்ட பூமி யாதிய பிரபஞ்ச பஸ்மங்களைக் கரைத்துத் தன் மய மாக்கிக் கொண்டு, பிரளய கால மகோததி யாகி வாயுத் தம்பநத்தால் நிற்கும். அங்ஙனம் நிற்கும் சலத்தில், ஊழித் தீ யாகிய வடவாநலம் பிறந்து, அச் சலங்களை யெல்லாம் கிரகித்து விட்டு, உகாந்த காலப் பிரசண்ட வாயுவி லணைந்து லீந மாம். அவ் வாயுவும் மகாகாயத்தி லோய்வுற்று லீந மாம். அவ் வாகாயமும், அஞ்ஞாநத்தில் லீந மாம். அவ்வஞ் ஞாநமும், மாயையும், பிரஹ்மத்தில் லீந மாம்.

பிரஹ்மம் ஒன்றினுலும் லீந மாகாமல் எப்போதுஞ் சேடித்து நிற்கும் பொரு ளெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையால், பிரஹ்மமொன்றுமே நித்தியம்; தேகாதிப் பிரபஞ்ச மனைத்தும் அநித்திய மெனச் சித்தத்தில் மாறுபடாமற் பதி வுறும் படி, மேலும் மேலும், பல பல சுருதி யுத்திகளோடு நினைவுக்குக் கொண்டு வருத லென அறிக. (7)

8 வினு:- நான்கு சாதநங்களில், நித்தியாநித்திய வஸ்து விவேகத்தைச் சகல நூலாசிரியர்களும் முதன்மை யாக வைத்துக் கூறிய தென்னை யெனின்?

விடை: நித்தியாநித்திய வஸ்து விவேக முதிக்கில், அநித்திய வஸ்துக்களின் தோட திருட்டியால் வைராகமும், அதனுல், சமாதி சட்க சம்பத்தியும். அதனுல், முமுட்சுத்து வமும், ஆகிய மேற் சாத-நங்கள் மூன்று முதய மாம். அஃ துதியாவிடின், மேற் சாதநங்கள் மூன்று முதய மாகா வாம். ஆதலின், நித்தியாநித்திய வஸ்து விவேகமே மற்றைச் சாத நங்க ளுதித்தற்குக் காரண மென்பது தோன்ற முதன்மையாக வைத்துக் கூறினர்க ளென அறிக (8)

9 வினு:-பூஜை நிமித்தமும், பொரு ணிமித்தமும், கீர்த்தி நிமித்தமும், அந்நியர்கட்குப் போதிக்கும் பண்டிதர்பா லிராநின்ற நித்தியாநித்திய வஸ்து விவேகம் மேற் சாதநங் கட்குக் காரண மாகாதது எதனு லெனின்?

விடை:— பண்டிதர்கட்குச் சாத்திரப் பழக்கத்தால் நித்தியாநித்திய வஸ்து விவேக முண்டா யிருப்பினும், அது நிட்காம கன்ம உபாசனைகளா லாகிய சுத்தி யில்லாத மலிந அந்தக் கரணத்தி னுதயமா யிருத்தலால், சல சம்பந்த மின்றிய ஊஷர பூமியில் வைக்கப்பட்ட கதலி விருக்ஷ மானது கீழ்க் கன்றுக வரத் தக்க அந்நிய விருக்ஷங்கட்குக் காரண மாகாதது

போல, வைராக முதலிய மேற் சாதநங்க ளுற் பத்தியாதற்குக் காரண மாகாமல், வாக்கு மாத்திர-மாகவேயிருக்கும். அங்ஙன மிராநின்ற விவேகம் அவிவேகமேயாகு மென அறிக. 19

10. வினு:- நித்தியப் பொருள் சத்தியம், அநித்தியப் பொருள் மித்தை யென, அதிகாரி, பிரதம சாதந மாகிய விவேக காலத்திற் றுனே யறிந்து கொள்ளுகின்றமையால், அவன் பின்னர்ச் சத்திய மித்தியா பாவனை யென்னும் தத்துவ ஞாநத்தைச் சம்பாதிக்க முயலுதல் வீண் சிரமமா மெனின்?

விடை:-பிரஹ்மம், சத்தியம், சகத்து மித்தை யென விவேக காலத்திற் புராணுதிகளினுலும், யுத்தியினுலும், பரோக்ஷ மாக அறிந்ததே யன்றி, அபரோக்ஷ மாக அறியாமையினுனும், அபரோக்ஷ ஞாநத்தால் பந்த நிவிருத்தி முத்திப் பிராப்தி சித்திக்குமே யன்றிப் பரோக்ஷ ஞாநத்தால் சித்தியா தென்பது துணிபாதலினுனும், பின்னர், அதிகாரி அபரோக்ஷ ஞாநத்தைச் சம்பாதிக்க முயலுதல் வீண் சிரமமல்ல வென அறிக. (10)

11. வினு:-இக அமுத்திரார்த்த பல போக விராக மாவது யாதெனின்?

விடை:- இவ் வுலக முதற் பிரஹ்ம லோக பரியந்த மாகிய சகல லோக போகங்களினுமுள்ள நிராசை யாம். இவ் வைராகம், மந்தம், தீவ்ரம், தீவிரதர மென மூன்றுயிருக்கு மென அறிக. (11)

12. வினு:— மந்த வைராக மாவது யாதெனின்?

விடை:— மயாந பிரசவ புராண வைராகங்கள் போலப், புத்திர தார தநாதிகட்கு நாசம் வந்த போது, துக்கஞ் சகிக்க மாட்டாமல் சம்சாரங் கொடிய தெனத் தற்கால மாத்திரம் புத்தியிற் றேன்றுவ தென அறிக. (12)

13. வினா:- தீவிர வைராக மாவது யாதெனின்?

விடை:- சொற்ப புண்ணியத்தால், புத்திர தார தநாதிகள் துக்க காரண மென வெறுப் புற்று, அவைகளா லுண்டாகுஞ் சுகத்தைச் சரீர முள்ள பரியந்த மிச்சியா திருப்பதென அறிக. (13)

14. வினா:- தீவிரதர வைராக மாவது யாதெனின்?

விடை:- மிகுந்த புண்ணியத்தால், பிரஹ்ம லோக பரியந்த மான சகல லோக போகங்களும், சநந மரண சம்சாரங்களை மேன் மேலுந் தரத் தக்கவைக ளெனத் திடமாக அறிந்து வெறுப்புற்று, அவைகளில் அத்தியந்த மிச்சை யுதியாது உபேக்ஷயா யிருத்த லென அறிக. (14)

15. வினா:- வைராகத்துக்கு - 1. ஏது 2. சொரூபம் 3. காரியம் 4. அவதி 5. பலம் எவை யெனின்?

விடை:- இகத்திலுள்ள புஷ்ப சந்தநாதி விஷயங்களும், பரத்திலுள்ள அப்ஸர ஸ்திரீ அமிர்தாதி விஷயங்களும், அநித்த மாயும் அசுத்தமாயும் இருத்தலால், சுவாந வாந்தி யசந, மல மூத்திரங் கட்கும்; மேன் மேலும் இராகத்துவேஷங்களை யுதிப்பித்து ஆகாமிய சஞ்சித மென்னும் முதலை வாய்ப்படுத்திச் சன்ம சாகரத் தமிழ்த்தச் செய்வித்து அளவின்றிய துக்கங்களைத்தரத் தக்கவைக ளானமை யின், காள கூட விஷம், அக்கிநி, நரகங்களுக்கும்; சமாந மென நிரந்தரம் விசாரித்துப் பார்க்குந் தோட திருட்டியே ஏது. 2. விஷயங்களில் அருவருப்பும், பயமு முற்று அவைகளை விட்டுவிடுதலே சொரூபம். 3. பிணியி னிமித்தம் புசிக்கப் படும் ஔடதங்களி லிச்சை யுதியாதிருப்பது போல, விட்ட விஷயங் களிற் றேக தாரண நிமித்தம் புசிக்கத் தக்க சிலவற்றினு மிச்சை யுதியாதிருத்தலே காரியம். 4. வீதித் திரணங்களில் பிரியாப்பிரியங்க ளுதியா திருப்பது போல, இக பர விஷயங்க ளனைத்தினும்

பிரியாப்பிரியங்க ளின்றி யுபேக்ஷை யாயிருத்தலே அவதி. 5. பிரஹ்ம லோக சாமீபமே பல மென அறிக. விஷயங்களி லுள்ள தோஷங்களை விரி வஞ்சி விரித்திலேம் அறிய விரும்பில் வாசிட்டம் வைராக்கியப் பிரகரணத்திலும், விசார சாகரம் (5) ஆவது தரங்கம் பர்ச்சுவின் வைராக்கியப் பிரசங்கத்திலுங் காண்க. (15)

16. வினா:— சட் சம்பத்தி யாவது யா தெனின்?

விடை:— சமம், தமம், உபரதி, திதீக்ஷை, சமாதாநம், சிரத்தை ஆகிய ஆறு மென அறிக. (16)

17. வினா:— இவைகளிற் சம மாவது யா தெனின்?

விடை:— விடய வாசனையாகிய மதத்தினை யுற்று, அதனால் இறப்பு, எதிர்வு, நிகழ் வென்னும் முக்காலத்தையுங் குறித்து விடய சமூகங்க ளாகிய காட்டிற் சஞ்சரிக்க எழா நின்ற மந மென்னும் மதயானையானது, சென்ற காலத்தைப் பற்றி யெழு மாயின், அதனாற் பிரயோசநமில்லையெனவும், வருங் காலத்தைப் பற்றி யெழு மாயின், தேகம் அநித்திய மெனவும், நிகழ் காலத்தைப் பற்றி யெழுமாயின், பிராரப்தத்தின்படி சித்திக்குமே யன்றி அதற்கு வேருக யா தொன்றுஞ் சித்திக்கா தெனவும், சுருதி யாதிகளுக் கேற்க விசாரித்துப் பார்ப்ப தாகிய விவேகமும், விடய ஆராய்ச்சியினின் றெழுந்த விடய தோட திருட்டியுமாகிய அங்குசத்தால், அதனைச் செல்ல விடாமற் சுவாதீநப் படுத்திச் சிரவண மென்னுங் கட்டுத் தறியில் நிலை பெறச் செய்வ தாம். இச் சமம் தீவிரதர வைராக்கியத்தை முன்னங்க மாகவும், ஜீவ காருண்ய மாதியைப் பின் னங்க மாகவுமுடைய தென அறிக. (17)

18. வினா:— தம மாவது யா தெனின்?

விடை:— சப்த மாதிய விடய சமூகங்க ளாகிய

பாலைவநங்களிற் செல்லுதலை யுடைய பஞ்சேந்திரி யங்க ளாகிய அசுவங்களை (குதிரைகளை) விடய தோட திருட்டி யாகிய சவுக்கினுலும், அக நோக்க மாகிய கடிவாளத்தினுலும், திருப்பி கூர்மம் (ஆமை) தீங்குகள் நேரிடுங் காலத்தில், அவை தன்னைச் சாரா திருக்கும் பொருட்டு, அவயவங்களைத் தன்னில டக்கிக் கொள்ளுவது போல, விஷயங்களா லுண்டாகும் தீங்குகள் நேராதிருக்கும் பொருட்டும், சிரவணுதி களை யுத்தேசித்தும், தத்தம் ேகாளகங்க ளாகிய இலாய (குதிரை தங்கும் கூட) ங்களில் நிறுத்துத லென அறிக.

19. வினு:- உபரதி யாவது யா தெனின்?

விடை;- நீக்கப்பட்ட மனைவி புத்திர தநாதி விஷயங்கள் முன்னிடில், வாந்தாசந மல மூத்திரம் போலவும், பின்றெடர்ந்து வரும் சர்ப்ப வியாக்கி ராதிகள் போலவும், கண்டு மிகுந்த அருவருப்பும், மிகுந்த பயமு முற்று, விட்டு விடுதலும், சகல கன்மங் களும் சநந மரண சம்சாரங்கட்குக் காரண மென் றஞ்சிப் பரிசியாது விடுத்து, அவைகளில் ஆச்சிர மத்துக்குத் தக்க தாக அவசியஞ் செய்யத் தக்க விதியா யுள்ள சிலவற்றை மாத்திரம் விஸ்தரியாது சங்கிரகமாகப் பலாபேக்ஷை யின்றிச் செய்து, ஈசுவரப் பிரீதி யாக்குதல், அல்லது வியவகார மற்றி ருத்த லென அறிக. (19)

20. வினு:- திதீக்ஷை யாவது யாதெனின்?

விடை:- சிரவணுதிகட்கு விரோதிகளாக வரா நின்ற காமக் குரோத சீதோஷ்ண பசி தாக ஹாநி லாப துவந்து வாதி தாபத் திரய துக்கங் களாகிய இவைகளில், காமக் குரோதாதிகளைத் துக்க காரண மெனக் கண்டு விடுத்து, மற்றவைகள் பிராரப்த கன்ம காரியங்க ளானமையால், அநுபவித்தே தீர்க்க வேண்டுவ தெனத் தெரிந்த நிச்சய புத்தியால், சஞ் சலப்படாமற் சகித்துக் கொள்ளுவ தென அறிக (20)

21. வினு:- சமாதாந மாவது யா தெனின்?

விடை:- பூர்வாப்பியாச பலத்தால் விஷயங்களினின்றுந் திருப்பப்பட்டு முக் காலத்தையுங் குறித்தெழா தடங்கியிருக்கின்ற மநதை வெளிப்படுத்தி லக்ஷிய வஸ்துவில் ஏகாக்கிர மாக நிலைபெற் றிருக்க; அல்லது குரு முக மாகச் செய்யும் சிரவணர்த்தங்களைச் சிந்திக்கச் செய்குத லென அறிக. (21)

22. வினு:- சிரத்தை யாவ து யா தெனின்?

விடை:- சுருதி, குரு, ஈசுவரன் இவர்களிடத்தில், இளங் கன்ருனது பசுவிற் பிரியம் வைப்பது போல, வைத்திரா நின்ற பிரியத்தோடு சுருதி வாக்கிய குரு வாக்கியங்கள் சத்திய மென் றுள்ள விசுவாசமென அறிக. (22)

23. வினு:- சுருதியின்பாற் சிரத்தை வைப்பது எதற்கு எனின்?

விடை:- பவ சாகரத்துக்குக் கப்பலாயும், தாபத்திரயாக்கிநிக்கு அமிர்த வருஷ மாயும், சலத்தின் கலங்க லாதி மாசுகளை நீக்கிச் சாயை தோன்றும்படி தெளியச் செய்யா நின்ற கதக ரேணுவைப் போல, மநதி லுள்ள சகல சந்தேகங்களையும் போக்கிப் பொரு ணிச்சயந் தோன்றும்படி மநதைத் தெளிவு பெறச் செய்வதாயு மிருத்தலி னென அறிக. (23)

24. வினு:- குருவின்பாற் சிரத்தை வைப்பது எதற்கெனின்?

விடை:- அஞ்ஞா நா ந்த கா ர த் து க் கு ஞாந சூரியனுகவும், மாயா மேகத்துக்குப் பிரசண்ட மாருதமாகவும், மகா பாபிகளும், பேத வாதிகளும், தரிசந் பரிசநத்தாற் சகல பாவங்களும், சகல பிராந்திகளும் நீங்கி முத்தி யடைவதற்கேது வாகக், கருணை பத்தி வைராகப் பிரஹ்ம ஞாநமே சொரூப மாகவும், எழுந்தருளி யிருத்தலினென அறிக. (24)

25. வினா:- குரு வென்பவர் வேதாதிகள் கூறு வதையே கூறுகின்றவரன்றி வேறு கூறுகின்றவ ரல்லாமையினாலும், வேதவாக்கியங்களே முத்தியடை விப்பதற்கு காரணமாயிருத்தலினாலும், அவைகளிற் சிரத்தை வைப்பது முக்கியமேயன்றிக், குருவின்பாற் சிரத்தை வைப்பது முக்கிய மல்லவே எனின்?

விடை:- சமுத்திரத்தில் உள்ளவன், அச்சலத்தி லுள்ள கைப்பினை நீக்க அறியாமற், பாநஞ் செய்து தாகம் நீங்காமல் துக்க மநுபவிப்பது போலக், குரு வின்றி வேதார்த்தங்களை விசாரிப்பவன், பூருவ பக்ஷம் சித்தாந்த மாகிய வாக்கியார்த்தங்களில், தள்ளத் தக்கவை கொள்ளத் தக்கவை யிவையென அறியாமற் கிரகணஞ் செய்வதால். ஐய மாதிகள் நீங் காமற் றுன்பமே யநுபவிப்பன். இஃதன்றிச் சமுத்திர சலம் கரத்தாற் கிரகிக்கப்படின் கைப்பாயும், மேகத் தாற் கிரகிக்கப்பட்டு வருஷிக்கின் மதுர மாயு மிருப்பது போல, வேதார்த்தங்கள் தானே கிரகிக்கப்படின், சித்தாந்த மான பொருளிஃதென அறியாமற் சலந முற்றுத் துக்கித்தற் கேதுவாயும், பிரஹ்ம ஞாநி யாகிய குருவினாற் கிரகிக்கப்படின், சித்தாந்தமான பொருளைக் கரதலாமலகம் போல அறிந்து, சலநம் நீங்கிச் சுக முறுதற் கேது வாயு மிருத்தலால், குருவினிடத்துஞ் சிரத்தை வைக்கவேண்டுவது முக் கியமா மென அறிக. (25)

26. வினா:- குரு வென்பவர் வேதங்களின் உண்மைப் பொருளை மற்றொரு குருவால் கிரகித்தனரா? அல்லது தானே கிரகித்தனரா? வென ஆசங்கை நிகழ்ந்த போது, மற்றொரு குருவா லெனின், அவரும் மற்றொரு குருவால், அவரும், மற்றொரு குருவா லென எல்லை யின்றிச் செல்லுகின்றமையால், அநவஸ்தா தோஷம் நேரிடும். அற்றன்று; சுருதி மூலமாகத் தானே கிரகித்துக் கொண்டா ரெனின், அதிகாரிகளும்

அங்ஙனம் கிரகித்துக் கொள்ளக் கூடும். குரு வேண்டுவதின்று. ஆதலின், சுருதியின்பா லன்றிக் குருவின்பாற் சிரத்தை வைப்பது முக்கிய மல்லவே எனின்?

விடை:- சகல வேதங்களையும் வெளியிட் டருளிய ஈசுவரனே குரு மூர்த்தமாக எழுந்தருளி யிருப்பவ ரெனச் சுருதிகள் கூறுகின்றமையால், குரு வே வேதாதிகளின் உண்மைப் பொருளை ஐய விபரீதங் களின்றி வெளியிட்டவராகும். அவரையன்றி, யளவில்லாத நூல்களை யளவில்லாத காலம் வாசித் துணரினும் உண்மைப் பொருள் விளங்காது. ஆத லின், குருவினிடத்தும் சிரத்தை வைப்பது முக்கியமா மென அறிக,

குருவை யன்றிச் சாத்திரத்தால் பொருள் விளங்கா தென்பதற்குப் பிரமாணம்,

(சூத சங்கிதை பரை பூசா விதி யுரைத்த அத்தியாயம்)

"அத்தகு சொரூபஞ் சற்குரு முகத்தி னறிதரல் வேண்டுமஃதன்றி, யெத்தனை நூல்கற் றுணரினு மறித லியலுறு தால்'

(பராசர ஸ்மிருதி ஆசார காண்டம். 1-ஆம் அத்தியாயம்)

'எழுதப்பட்ட ஏட்டின் நம்பிக்கையால் குரு முக மில்லாமல் ஓதப்பட்ட கல்வி, கள்ளப் புருடனைச் சேர்ந்தவள் கருப்பம் போலச். சபையில் விளக்கத்தை யடைய மாட்டாது.' (26)

27. வினா:- ஈசுவரனுக்கேனும் வேதாதிகளி னுண்மைப் பொருளை யுபதேசித்தற்குக் குரு வாக முன்னொரு ஈசுவரனிருந்திருக்கலா மெனின்?

விடை:- சகல சுருதிகளும், ஈசுவரனை அநாதி யேக மெனக் கூறுகின்றமையால், அவருக்குப் பூர்வம், வேருக ஒரு ஈசுவர னிருந்திருக்கலா மென் பதும், சர்வஞ்ஞனெனக் கூறுகின்றமையால், அவருக்

குபதேசிக்கத் தக்க குரு விருந்திருக்கலா மென்பதும், அறியாமை யென அறிக. (27)

28. வினு:— ஈசுவரனே குருவானுல், குருவினிடத்து மாத்திரஞ் சிரத்தை வைக்க வேண்டு மெனக் கூருது, குருவுக்கு அந்நியமாக ஈசுவரன் உள னென்பது தோன்ற, ஈசுவரனிடத்துஞ் சிரத்தை வைக்க வேண்டு மெனக் கூறியது விரோதமா மெனின்?

விடை:— ஈசுவரன் வியாபக சொரூபமா யிருந்து கொண்டு, பரிச்சின்ன மாகிய குருமூர்த்தமாக ஓரோர் காலத்து, ஓரோரிடத்திற்றேற்ற மாகிறது, ஈசுவர னது ஓரம்சமேயாகும், அங்ஙனங் குரு மூர்த்த மாகத் தோற்றமாவதும் ஈசுவரனுகிய தன் ஐந்தொழில்களில் ஒன்ருகிய அநுக்கிரகத் தொழில் செய்வதற்கு மாத்திர மன்றி, மற்றைய சிருட்டி திதி சங்காராதித் தொழில் கள் செய்தற் கன்று. ஈசுவரன், ஆணவத்தில் மறைப் புண்டிருக்கு முயிர்கட்குத் தநு கரண புவந போகங் களைச் சிருட்டித்துக் கொடுத்து, அவ்வுயிர்கள் சித்த சுத்தி முதல் மோக்ஷ பரியந்தமான பலன்களை யடைதற்கு ஏது வாக இரக்ஷித்துக் கொண்டிருப்பவ ராகும். ஆதலால், குரு வின்றி ஈசுவரனிடத்துஞ் சிரத்தை வைக்க வேண்டு மெனக் கூறியது விரோத மாகா தென அறிக. (28)

29. வினு:— சமாதி சட்க சம்பத்திக்கு—1. ஏது, 2. சொரூபம், 3, காரியம், 4. அவதி, 5, பலம் எவை யெனின்?

விடை:— 1. இயம நியமாதிகள் ஏது, 2. பிரவிருத்தி யின்றியிராநின்ற சித்த நிரோதம் சொரூ பம், 3. விவகாரக்ஷயம் காரியம், 4. சுழுத்தியிற் சாக்கிர சொப்பனங்களை மறந் திருப்பது போலச், சரீராதி சகல விடயங்களையும் மறந்திருத்தல் அவதி, 5. பிரஹ்ம லோக சாரூபம் பல மென அறிக. (29)

30. வினு:- சமாதி சட்க சம்பத்தி, ஆறு சாதநங்களாக இருக்கச், சகல நூலாசிரியர்களும் ஒரே சாதநமாக வைத்துக் கூறிய தென்னை யெனின்?

விடை:- சொர்ணத்தாற் செய்யப்பட்ட அநேக மணிகள் சேர்ந்துள்ள மாலையை, ஒரே பூடணமாகக் கூறுதல் போல, சம முதலிய ஆறு சாதநங்களும் ஒன்றற் கொன்று சககாரிகளாக இருத்தலின், அவற்றை ஒரே சாதநமாகக் கூறினரென அறிக (30)

31. வினு:- இந்த ஆறு சாதனங்களும் ஒன்றற் கொன்று சககாரிக ளென்பது எதனு லெனின்?

விடை:- விஷயங்களிற் சலியாமல் மந மடங்கி யிருப்பதாகிய சமஞ் சித்தியாத வரையில் இந்திரிய நிக்கிரக முண்டாகாது. அதனுல், தமஞ் சித்தியாது. பால் வார்த்து வளர்க்கப்பட்ட பூனையாயிருக்கினும் கட்டில் அகப்படாவிடின், எலியைக் காணில், அதன் மேற் பாய்வதுபோல, விஷயங்களினின் றுந் திருப்பப்பட்ட மநதாயிருக்கினும் அடக்க முருவிடின், புதி தாகிய போகங்களை விரும்பிக் கன்மங்களிற் பிரவிருத்திக்கும். அதனுல், உபரதி சித்தியாது. அந்தர் முகமாகிய மநதால் சீதோஷ்ணுதிகளைச் சகிக்க முடியுமே யன்றிப், பகிர்முக மாகிய மநதால் சகிக்க முடியாது. அதனுல், திதீக்ஷை சித்தியாது. விஷயங்களிற் சலிக்கு மநதுக்கு லக்ஷிய வஸ்துவில் ஏகாக்கிர முண்டாகாது. அதனுல், சமாதாநஞ் சித்தியாது. ஸ்திரீ புத்திர தநேச்சையாற் சலிக்கும் மநதுக்குக் குரு சாஸ்திரங்களில் விசுவாச முதியாது. அதனுல், சிரத்தை சித்தியாது. சித்தியாவதற்குச் சமத்தைத் தம மாதிய சாதநங்களைந்தும் அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) இந்திரிய நிக்கிரக மாகிய தமஞ் சித்தியாத வரையில், விடய தரிசநத்தால் மநம் பகிர்முகப்படும். அதனுல், சமஞ் சித்தியாது. விடய

தரிசந முள்ள வரையில் மநது விடய போகங்களைக் கருதி கன்மங்களிற் பிரவிருத்திக்கும். அதனால், உபரதி சித்தியாது. இந்திரிய வழித்தாய்ச் சலிக்கு மநது சீதோஷ்ணாதிகளைச் சகிக்க முடியாது. அதனால், திதீக்ஷை சித்தியாது. இந்திரியப் பிரவிருத்தி யுள்ள வரையில், மநது லக்ஷிய வஸ்துவில் நிலைபெறாது. அதனால், சமாதாநஞ் சித்தியாது. ரூபாதி விஷயங்களில் ஆசக்தி யுள்ள மநது, குரு சாஸ்திரங்களை விசுவசியாது. அதனால், சிரத்தை சித்தியாது. சித்தியாவதற்குத் தமத்தைச் சம மாதிய ஐந்து சாதநங்களும் அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) சகல கன்ம பரித்தியாகமாகிய உபரதி சித்தியாவிடின், மநது போக விருப்பத்தால் கன்மங்களிற் பிரவிருத்திக்கும். அதனால், சமஞ் சித்தியாது. இந்திரியங்களும் கன்ம சாதநங்களை நாடும். அதனால், தமஞ் சித்தியாது. தநத்தை விரும்பித் தொழில் செய்பவன், தந நஷ்டங்களைச் சகியாதது போலச் சுகத்தை விரும்பிக் கன்மத்திற் பிரவிருத்திக்கும் மநது, சீதோஷ்ணாதி துவந்துவங்களைச் சகியாது. அதனால், திதீக்ஷை சித்தியாது. கன்மப் பிரவிருத்தி யுள்ள மநது லக்ஷிய வஸ்துவில் நிலை பெறாது. அதனால், சமாதாநஞ் சித்தியாது. போகேச்சையால் கன்மங்களிற் பிரவிருத்திக்கும் மநதுக்கு, அவைகளின் நிவிருத்தியைப் போதிக்கும் குரு சாஸ்திரங்களில் விசுவாச முதியாது. அதனால், சிரத்தை சித்தியாது. சித்தியாவதற்கு உபரதியைச் சம மாதிய ஐந்து சாதநங்களும் அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) சீதோஷ்ணாதிகளைச் சகிக்கும் திதீக்ஷை சித்தியாத வரையில், மநது அவைகளை நிவிர்த்திக்கும் சாதநங்களைக் கருதிப் பகிர்முகப்படும். அதனால், சமஞ் சித்தியாது. அது பற்றியே இந்திரியங்களும் பகிர்முகப்படும். அதனால். தமஞ் சித்தியாது. தலை நோய் சகிக்காதவன், அதன் நிவிருத்திக் கான பற்றுகளைத் தலைக் கிடுவது போல, சீதோஷ்ணாதிகளைச் சகிக்க முடியாத மநது, அதன் நிவிருத்திக் கான கிரியைகளிற்

பிரவிருத்திக்கும். அதனால், உபரதி சித்தியாது. சீதோஷ்ணாதி துவந் துவங்களிற் றபிக்கும் மநது, லக்ஷிய வஸ்துவில், நிலைபெறாது. அதனால், சமாதாநஞ் சித்தியாது. சகிப் பின்றித் தாபப்படும் மநதுக்குக், குரு சாஸ்திரங்களில் விசுவாச முதியாது. அதனால், சிரத்தை சித்தியாது. சித்தியாவதற்குத் திதீக்ஷையைச் சம மாதிய சாதநங்கள் ஐந்தும், அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) லக்ஷியத்தில் நிலை பெற் றிருக்குஞ் சித்த யேகாக்கிர மாகிய சமாதாநஞ் சித்தியாத வரையில், வெளியில் நின்றுந் திருப்பப்பட்ட பட்டி மாடானது, கட்டுப்படாவிடின், பின்னும் வெளியி லோடுவது போல, விஷயங்களினின்றுந் திருப்பப் பட்ட மநதா யிருக்கினும், லக்ஷிய வஸ்துவில், நிலை பெறாவிடின், பின்னும் பகிர் முகப்படும். அதனால், சமஞ் சித்தியாது, அது பற்றியே, இந்திரியங்களும், பகிர் முகப்படும். அதனால், தமஞ் சித்தியாது. லக்ஷியத்தில் நிலை பெறாத, மநது போகேச்சையால் கன்மங்களிற் பிரவிருத்திக்கும். அதனால், உபரதி சித்தியாது. நியாயத்திற் கட்டுப்படாதவன், தண்டனை யாதிகளை யேற்றுக் கொள்ளாதது போல, லக்ஷியத் தில் நிலை பெறாத மநது, சீதோஷ்ணாதி துவந் துவங் களைச் சகிக்கமுடியாது அதனால், திதீக்ஷை சித்தி யாது. அரசன் சந்திப்பை விரும்பாதவன், மந்திரி முதலியோர்களைச் சிநேகியாதது போல, லக்ஷிய வஸ்துவை யடைய விரும்பாத மநது, குரு சாஸ்திரங் களை விசுவசியாது. அதனால், சிரத்தை சித்தியாது. சித்தியாவதற்குச் சமாதாநத்தைச் சம மாதிய ஐந்து சாதநங்களும், அபேக்ஷிக்கின்றன. (இங்ஙனமே) சற் குரு சாஸ்திர வசநங்களில் விசுவாச ரூப சிரத்தை சித்தியாவிடின், புருட னனவன், விதவை யானவள் தன் னழகைப் பார்ப்பதற் குபயோக மாகிய சிங்காரங் களைச் சிங்காரித்துக் கொள்ளாதது போலச், சிரவணத்துக் குபயோக மாகிற சம முதலிய சாத நங்களி லொன்றையும், த்ரா ணஞ் செய்து,

கொள்ளுகிற தில்லை. மற்றும், சிரத்தை யின்றித் தாரணஞ் செய்து கொண்ட சகல சாதநங்களும், விதவை செய்து கொண்ட சிங்காரம் போல, வியர்த்த மாம். ஆதலால், சிரத்தையைச் சம மாதிய ஐந்து சாதநங்களும் அபேக்ஷிக்கின்றன. இங்ஙனம், சம முதலிய, ஆறு சாதநங்களும் ஒன்றற் கொன்று சககாரிகளா யுள்ளன வென அறிக. (31)

32. வினா:- இந்த ஆறு சாதநங்களில் சமத்தை முதலினும், சிரத்தையை அந்தத்தினும், வைத்துக் கூறிய தென்னை யெனின்?

விடை:- விருக்ஷமானது சாகை, தளிர், இலை, மலர், காய் பல (பழ) மாதியவைகட்கு ஆதாரமா யிருத்தல் போல, மநமானது சம மாதிய சகல சாதநங்கட்கும் ஆதாரமா யிருத்தலால், மந நிரோத மாகிய சமம், முதலில் வைத்துக் கூறப்பட்டது. விருக்ஷத்தின் அந்தத்தி லுள்ள பழத்தின் பரிபாக அவஸ்தையில் மாதுரிய மான, இரத முண்டாவதா யிருத்தலால், விருக்ஷத்தின் சர்வ அங்கங்களினும், பலம் (பழம்) சிரேஷ்ட மாவது போல, விவேக வைராக சம மாதிய சகல சாதநங்களினும் சிரத்தையால் முமுட்சுத்துவ முண்டாகின்றமையால், சிரத்தையே சிரேஷ்ட மாம். ஆதலால், சிரத்தை அந்தத்தில் வைத்துக் கூறப்பட்டது. இப்படியே, பலத்தின் உற்பத்திக்குப் பின்னர், மாதுரிய மான இரத முண்டாவது போலச், சிரத்தையின் உற்பத்திக்குப் பின்னர், முமுட்சுத்துவ முண்டாகின்றமையால், முமுட்சுத்துவத்தைச் சிரத்தைக்குப் பின்னர் வைத்துக் கூறிய தென அறிக. (32)

33. வினா:- சிரத்தை யுண்டாகிய பின்னர் தான், முமுட்சுத்துவ முண்டாகு மென்றது எதனா லெனின்?

விடை:- மோக்ஷ மொன் றுளது, அதனை யடைந்தவர் சகல துக்கங்களு மின்றி யெப்போதும்

பிரஹ்மாநந்த சொரூப மாக அழி வின்றி யிருப்பார்க ளெனக் கூறுநின்ற குரு சாஸ்திர வசநங்களிற் கேட் பவனுக்கு நம்பிக்கை யுண்டாகு லன்றி, மோக்ஷத்தை யடைய வேண்டு மென்னு மிச்சை யுதய மாகிறதில்லை யாகலி னென அறிக. (33)

34. வினு:- முமுட்சுத்துவம் யா தெனின்?

விடை:- சில திந வுபவாசத்தாற் பசி யதி கரித்தவன், ஸ்திரீயையும், நடந கீத மாதிகளையும், விரும்பாமல், அன்னத்தை மாத்திரமும்; சிர ரோமத்தில் நெருப்புப் பற்றப் பெற்றவன், சேற்றை யும், பனித் துளியையும் விரும்பாமல், இறங்கு துறையில் அமிழ்த்தத் தக்க சலத்தை மாத்திரமும் விரும்புவது போலத் தாபத் திரய துக்கங்களை நிவிருத்திக்கும் பொருட்டு, அநித்திய மாகிய சாலோகாதி பத மோக்ஷங்களைத் தரத் தக்க, கன்மம், பத்தி யுபாசனை யாதிகளை விரும்பாமல், நித்திய மாகிய ஐக்கிய மோக்ஷத்தை மாத்திரம் அதி தீவிர மாக விரும்புத லாம். இம் முமுட்சுத்துவம் சகல சாத நங்களு முண்டாதற்குப் பூர்வம் மந்த ரூப மாக வுள்ள தென அறிக. (34)

35. வினு:- முமுட்சுத்துவம், சகல சாதநங்களு முண்டாதற்கு முன்னம் மந்த ரூப மாக வுள்ள தென்றது எதனு லெனின்?

விடை:- மந்தரா யிருப்பவர்கட்கும், பிரயோசந வுத்தேச மின்றி யெந்தப் பிரவிருத்தியும் உண்டா காது. இப்படியே, மோக்ஷ ரூப பல இச்சை யின்றி, நிஷ்காம கன்ம முதலிய சாதநங்களில் எவர்களுக்கும் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால், மந்த முமுட் சுத்துவம் சர்வ சாதநங்களுக்கும் முன்னரேயுண்டா யிருக்கிறது; ஆயினும், அது தீவிரமாக இல்லை. நிஷ்காம முதலிய அந்நிய சாதநங்கள் சித்தியான

பின்னர் தீவிர முமுட்சுத்துவ முண்டாகிறது. இதுவே குரு சரண சேவை, சிரவணம் முதலிய மேற் சாதநங் களிற் பிரவிர்த்திப்பதற்கு ஏதுவா யுள்ள தெனை அறிக. (35)

36. வினு:- முமுட்சுத்துவத்திற்கு-1. ஏது, 2. சொரூபம், 3. காரியம், 4. அவதி, 5. பல மாகிய ஐந்து மெவை யெனின்?

விடை:- 1. சாது சங்கம் ஏது, 2. இக பர சுக இச்சையின்றி, மோக்ஷ சுகத்தில் மாத்திர முள்ள இச்சை சொரூபம். 3. சற் குருவைத் தேடி யடைதல் காரியம், 4. சர்வ கன்ம பரித்தியாகம் அவதி. 5. பிரஹ்ம லோக சாயுச்சியம் பல மென அறிக. (36)

37. வினு:-முமுட்சுக்க ளெத்தனை பிரிவின ரெனின்?

விடை:-தீவிரன், மத்திமன், மந்தன், அதிமந்த னென்ன நான்கு பிரிவின ராவ ரென அறிக. (37)

38. வினு:- தீவிர முமுட்சு யாவ னெனின்?

விடை:- தாபத் திரய துக்கங்களைச் சகிக்க முடி யாதவனுய்த் துக்க காரண மாகிய ஈடணுத் திரயங் களையும், சுட்ட சட்டியைக் கை விடுவது போல, அதி விரைவாய் விட்டுத் துறந்து, வியாதியாற் துன்புறுப வன், தகுதி யாகிய வைத்தியனைத் தேடி யடைவது போலச், சற் குருவைத் தேடி யடைபவனுகும். இவன் இச் சன்மத்திற் ருனே சீவன் முத்த னுவ னென அறிக. (38)

39. வினு:- மத்திம முமுட்சு யாவ னெனின்?

விடை:- ஈடணுத் திரயாபிமாநமே சர்வ துக்க காரண மென்பதையும், பிரமாத்மைக்கிய ஞாநமே

இவைகளை நிவிர்த்தித்து அதீதாநந்த மய மோக்ஷத்தைத் தரத் தக்க தென்பதையும், சாத்திரத்தாலும், சற் சங்க வசநத்தாலும், யூகத்தாலும், அறிந்த பின்னும், மனைவி, புத்திராதி குடும்பங்களை விட் டொழிய மாட்டாமல், சஞ்சலம் பொருந்திய பாச மநதுடன் கூடியிருப்பவ னுவன். இவன் மூன்று சன்மத்திற் சீவன் முத்த னுவ னென அறிக. (39)

40. வி௵:- மந்த முமுட்சு யாவ னெனின்?

விடை:-மோக்ஷ மடை தற்குக் காலம் பின் னிருக்கின்றது, இப்போ தேன் அவசரப்பட வேண்டும், புசிக்கத் தக்க போகங்க ளனைத்தையும் புசித்துச், செய்யத் தக்க விவகாரங்க ளனைத்தையுஞ் செய்து முடித்து விட்டு, அதற்கு மேல், மோக்ஷ எத்தனஞ் செய்வோமென் றெண்ணிக் கொண்டிருப்பவ னுவன். இவன், யுகாந்தத்தில் முத்த னுவ னென அறிக. (40)

41. வி௵:-அதிமந்த முமுட்சு யாவ னெனின்?

விடை:-வருவது சும்மா யிருக்கினும் வரும், வராதது எந்த எத்தனம் பண்ணினும் வராது. மார்க்கத்திற் செல்பவனுக்கு யா தொரு பிரயத்தநமு மின்றியெதிரே மாணிக்க மிருந்து கிடைத்தாற்போல, நமக்கும் மோட்சம் கிடைக்குமாறுற் கிடைக்குக, பிரயத்தநம் பண்ண வேண்டா மென்னும், மூட புத்தியோடிருப்பவன். இவன் பல யுகங்கள் செல்லினும் முத்தியடையாதவ னுய்ப் பல வித துக்காநுபவியாகவே யிருப்ப னென அறிக. (41)

42. வி௵:- துக்கங்க ளெத்தனை விதமா மெனின்?

விடை:-அத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்வீகம் என மூ விதமா மென அறிக. (42)

43. வி௵:- இவைகளில் அத்தியாத்மிக துக்கமாவது யா தெனின்?

விடை:- ஆத்மாவை யாசிரயித்திராநின்ற தூல சூட்சும சரீரங்களைப் பற்றி வராநின்ற துக்க மாகும். இதுவும், க்ஷய, குன்ம சுர மேக குஷ்ட காச வலிப் பாதிய ரோகம், பசி தாகம் என்பவற்றினால் வருந் துக்கங்க ளாகிய காயிகமும், காம முதலியவற்றால் வருந் துக்கங்க ளாகிய மாநஸிகமு, மென இரண்டு விதமா மென அறிக. (43)

44. ஆதிபௌதிக துக்கங்க ளெவை யெனின்?

விடை:- தனது சேர்க்கைக்கு வேறும், இந்திரி யங்கட்கு விஷய மாயும் உள்ள, சத்துரு, சோர, கஜ, வியாக்கிர, சுவாந, சர்ப்ப, முதலை யாதிய அந்நியப் பிராணிகளே, ஆதி பௌதிகங்களாம். இவைகளைப் பற்றி வராநின்ற துக்கங்களென அறிக. (44)

45. வினா:- ஆதிதெய்வீக துக்கங்க ளெவை யெனின்?

விடை:- தனது சேர்க்கைக்கு வேறயின வாயும், சட்சு விந்திரியத்துக்கு விஷய மல்லாதன வாயும், உள்ள தெய்வங்கள் ஆதிதெய்வங்க ளாம். இவைக ளால் நடத்தப் பட்ட யக்ஷ ராக்ஷச பிசாச கிரகாதிக ளாலும், மிகு பனி மிகு மழை இடி காற்று வெயிலாதி களாலும், மதி லிடிந்து விழுதல், மர மொடிந்து விழுத லாதிகளாலும் வராநின்ற துக்கங்க ளென அறிக. (45)

46 வினா:-அதிகாரிகட்குச் சாதநங்கள் ஒன்றிரண்டு, குறைவுபடாமல் நான்கும் வேண்டுமோ வெனின்?

விடை:-முதற் சாதந மட்டு முள்ளார்கள் விஷயா சக்தராய், காமிய கன்மங்களிற் பிரவர்த்திக்கின்ற மையால், வைராக மாகிய இரண்டாஞ் சாதநமும் வேண்டும், இவ்விரண்டு சாதநங்க ளுள்ளாரும், கோபாதிகளாற் றபிக்கின்றமையால் சமாதி சட்க சம்பத்தி யாகிய மூன்றும் சாதநமும் வேண்டும். இம்

மூன்று சாதநங்க ளுள்ளாரும் குருவை யடைந்து சிர வணாதியில் பிரவிருத்தி யின்றி யிருத்தலால், முமுட் சுத்துவ மாகிய நான்காஞ் சாதநமும் வேண்டு மென அறிக. (46)

47. வினா:- இந் நான்கு சாதநங்கட்கும் பலம் யா தெனின்?

விடை:- நான்கு சாதநங்களும் அவதி பரியந்தம் ஒத்திராமல் ஒன்றற் கொன்று தார தம்மிய மாக இருக்கிற் புண்ணிய லோகமும், அவதிபரியந்தம் ஒத் திருக்கில், இவ்வுலகிற் றனே யுண்டாகின்ற சிரவணா திகளும் பல மாமென அறிக. (47)

48. வினா:- சாதநங்க ளின்றிச் சிரவணஞ் செய்பவ னுக்கு ஞாநஞ் சித்தியாதோ வெனின்?

விடை:-சூத்திரன் உபநயநஞ் செய்யினும், அவனுக் குப் பிராஹ்மணத்துவஞ் சித்தியாதது போலச் சாத நங்களில்லாதவன் சிரவணஞ் செய்யினும் சிரவணந் திடப்படாது திடப்படாத சிரவணத்தால், ஞாநஞ் சித்தியாது. ஆதலின், சிரவண காலத்திலேனும் சாத நங்களை யப்பியாசித் தடைய வேண்டு மென அறிக. (48)

49. வினா.-நான்கு சாதநங்களு முள்ளவர்களே அதி காரிக ளென்பது துணிபா யிருக்க, அவர்களை மூன்று சாதநங்களு முள்ளவர்க ளென்பதுந் தோன்றப் பெயர் கூறாமல், பிந்திய ஒரு சாதந மாத்திர முள்ளார்க ளென்பது தோன்ற, முமுட்சுக்க ளெனச் சாத்திரங்க ளிற் பெயர் கூறுவது எதனா லெனின்?

விடை:— முமுட்சுத்துவ மானது, நிஷ்காம கன்மங்களும், விவேகாதி மூன்று சாதனங்களும் உண்டாவதற்குப் பூர்வம், மந்த ரூப மாகவும், விவேகம், வைராகம், சமாதி சட்க சம்பத்திக ளுதய

மாகியதற்குப் பின்னர் தீவிர ரூப மாகவும், முன் பின் வியாபித்திருப்ப தென்பதும். முமுட்சுத்துவ மின்றி, மற்றை மூன்று சாதநங்க ளுடையரா யிருப்பினும், அவர்க ளதிகாரிக ளல்ல ரென்பதும், முமுட்சுத்துவ மின்றிய மற்றைச் சாதநங்கள் பயன்படா வென்பதும், முமுட்சுத்துவமே குரு சேவை சிரவண முதலிய வற்றிற் பிரவிர்த்தித்து மோக்ஷ மடைதற்கு முக்கிய காரண மென்பதும், தோன்றும் நிமித்த மென அறிக. (49)

50. வினா:- நான்கு சாதநங்களையும் அடைந்துள்ள அதிகாரிகள் மேற் செய்யத் தக்கது யா தெனின்?

விடை:— பிணியாளர்கள் பிணியை நிவிர்த்திப்ப தாகிய ஔடதந் தரத் தக்க பண்டிதரைத் தேடி யடைவது போல், சம்சார பந்தங்களை நிவிர்த்திப்ப தாகிய ஞாநாநுக் கிரகஞ் செய்யத் தக்க சற் குருவைத் தேடி யடைகுத லென அறிக. (50)

51. வினா:- அதிகாரிகள் குருவைத் தேடி யடையுங் கிரமம் யா தெனின்?

விடை:- கிராதர் வலையி லகப்பட்டு அவ் வலையைக் கிழித்துக் கொண்டு ஓடாநின்ற மா னனது, பின்னும் வேடர் குடிசி லாதிய கிராமங்களையும், புலி யாதிய மிருகங்கள் வசிக்கும் மலை குகை பெருங் காடாதிகளையும், பாலை வநங்களையும் நாடாமல், சீதள மாகவும் நிர்ப்பய மாகவு முள்ள, நல் லாரணியங்களை நாடிச் செல்வது போலச். சநந மரண சம்சார துக்கங்கட்குப் பயந்து, ஸ்திரீ தந புத்திராதிகளின் அபிமாநங்களைத் துறந்து வெளிப்பட்ட முமுட்சு வானவன், பின்னும் ஸ்திரீயாதிகளையும், உலோகாயத ராதிய பேத வாதிகள் சங்கங்களையும், சன்ம ஏது வான சரியை கிரியை யாதிகளைப் போதிப்பவரும், பூச்சியத் தன்மை, பொருள், புகழ் நிமித்தம்,

வேதாந்த சாத்திரங்களைப் போதிப்பவரு மாகிய அநாசாரியர்களையும் நாடாமல், பிரதிப்பிரயோசந விருப்ப மின்றிக், கிருபா நிமித்தம், ஞாநாநுக்கிரகஞ் செய்பவராயும். கல்வி அறிவு அடக்கம் வைராகம் சீவ காருண்ணியங்க ளுள்ளவராயும், பிரஹ்ம ஞாநி யாயு முள்ள, சற் குருவை, மநத்தி லன்பும், வாக்கிற் ஸ்ரோத்திரமும், கரத்தி லாராதனைக் குரிய பத்திர புட்பாதிகளுமாகிய இவைகளோடு, அதி விரை வாகத் தேடி, யருகிற் சென்று அவர் திரு வடியைத் தரிசித்துப், பத்திர புட்பங்களா லருச்சித்துச், சிரமேற் குவித்த அஞ்சலி யஸ்த ருய்ப் பல தரம் வலம் வந்து, நமஸ்கரித் தெழுந்து நின்று, வாக்காற் றுதித்து, மநதாற் றியாநிப்பது, குருவை யடையுங்கிரம மென அறிக. (51)

52. வினா:- குருவை யடைந்த அதிகாரிகள், மேற் செய்யத் தக்கது யா தெனின்?

விடை:- பெரு வியாதியாற் றுன்புறுபவன், அவ் வியாதியை நிவிர்த்திக்க வல்ல பண்டிதர்பால், தன் வியாதியை நிவிர்த்தி செய்ய வேண்டு மெனப், பிரிய வசநங்கள் கூறிப், பொரு ளாதிகளைக் கொடுத்துப், பிரிய முண்டாகும் படி, அவர்க் குபசரணை செய்து கொண்டிருப்பது போலச் சம்சார பந்தங்களை நிவிர்த்திக்க வல்லசற்குரு சந்நிதாநத்தில் நமஸ்கரித் தெழுந்து, கிருபா சொரூபி யாகிய சற்குருவே! ஓ சுவாமி! ஓ பகவானே! நானார்? இந்த நாநா வாகிய உலகம் யாது? இது யாரை யுடையது? எனக்குச் சநந மரண சம்சாரம் வந்த வா றேது? இது எதனால் நீங்கும்? அடியேனுக் கநுக்கிரகஞ் செய்தருள வேண்டு மெனச், சமயம் நேர்ந்த போது நேர்ந்த போது விண்ணப்பித்துத், தன் திரவிய சரீர வாக்கு மநங்களைப் பாத காணிக்கை யாக அர்ப்பணஞ் செய்து, குரு பரிவாத நிந்தை யின்றியவனாயும்.

அவைகளைக்கேட்கச் சகியாதவனையும், நவ வித பக்தி யுடையவனையும், குருவுக்குத் தன்பாற் கிருபை யுண்டாகும்படி, ஆத்தம் அங்கம் தானம் சத்பாவ மென்னும் பணிவிடையாதிகளைச் செய்து கொண்டு, உடற் சாயை போலும், ஊசி நூல் போலும், குளிர் காய்வான் போலும். குருவை விட்டு நீங்காம லிருப்ப தென அறிக. (52)

53. வினா:- குருவுக்குச் செய்யும் திரவியார்ப்பண மாவது யா தெனின்?

விடை:- மனைவி, புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், திரவியம், கிரகம், தானியம் ஆகிய இவை கட்குத் திரவியம் எனப் பெயராம். குரு வானவர், சர்வசங்கப் பரித்தியாகஞ் செய்த துறவி யாயின், அவர் இவைகளி லொன்றையும் விரும்பாதவரும், சர்வ சங்கப் பரித்தியாகிகளிடத்திற் பிரியரு மாக இருப்பவரானமையால், அவர் கருத்துக் கிணங்க இவைக ளனைத்தையும் பரித்தியாகஞ் செய்து விடுதல்; அல்லது, கிரகாச்சிரமி யாயின், இவைகளனைத் தையும், அவருக்கே உபயோக மாகும்படி தத்தஞ் செய்து விடுத லென அறிக. (53)

54. வினா:-பிரஹ்மவித்துக்க ளாகிய ஆசாரியர்கள் கிரகாச்சிரமத்தினு மிருப்பார்களோ வெனின்?

விடை:- யாக்ஞவல்கியர், உத்தாலகர், வசிட்டர் முதலிய ஆசாரியர்கள் கிரகாச்சிரமத்தில் இருந்த தாகச் சாத்திரங்கள் கூறுகின்றமையால், கமல பத்திரோதகங்கள் போலக் கிரகாச்சிரமத்திலும் பற்றி யும் பற்றும லிருப்பார்களென அறிக. (54)

55. வினா:- சரீரார்ப்பண மாவது யா தெனின்?

விடை:- சரீரத்தைச் சதா குரு பணியினும், அவர் கட்டளைக்குக் கொஞ்ச மேனும் மாறுமலும், இருக்கும்படி செய்குத லென அறிக. (55)

56. வினா:-வாக் கர்ப்பணம் யா தெனின்?

விடை:—குரு வாக்கியமே சகல தாபங்களையுஞ் சாந்தஞ் செய்வ தாகிய தேவாமிர்த மென்னுந் திட நம்பிக்கையால், அற்பமேனுந் தோட திருஷ்டியின்றி, வாக் கிந்திரியம், குருவையே சதா கீர்த்தித்துக் கொண் டிருக்கும்படி செய்குத லென அறிக. (56)

57. வினா:— மநார்ப்பணம் யா தெனின்?

விடை:- சச்சிதாநந்த பரிபூரண சிவசொரூபமே, நம்மையாட்கொண் டிரக்ஷிக்கும் பொருட்டுக் கிருபை யினாற் குரு மூர்த்த மாக எழுந்தருளி யிருக்கிற தென்னும் நம்பிக்கையால், ஆசாரியர் தன்பாற் பிரிய மாக இருக்கும் போது, இரக்ஷக கர்த்த ராகிய விஷ்ணு சொரூப மாகவும், கோபமாக இருக்கும் போது, சம்ஹார கர்த்தராகிய உருத்திர சொரூப மாகவும், இராசத வியவகாரத்திருக்கும் போது, சிருஷ்டிகர்த்த ராகிய பிரஹ்ம தேவ சொரூப மாகவும், சாந்த மாக இருக்கும் போது சீதள மாகிய கங்கா தேவி சொரூப மாகவும், உபதேச வசநங்க ளாகிற கிரணங்களாற் சந்தேக விபரீதங்கட்கு மூல மாகிய அஞ்ஞாநாந்த-காரத்தை நிவிர்த்திக்கும் போது, சர்வத்தையும் விளக்கி வைப்ப தாகிய சூரிய சொரூப மாகவும் கருதி, அற்பமேனுந் தோடதிருட்டி யின்றிப் பாவிப்ப தாகிய, ஈசுவர பாவனை மாரு திருக்கும்படி செய்குவ தென அறிக. (57)

58. வினா:- குரு பரிவாதம், நிந்தை யெவை யெனின்?

விடை:- குருவின்பா லுள்ள துர்க் குணத்தை எடுத்துரைப்பது பரிவாத மாம். இல்லாத துர்க்குணங் களை யாரோபித்துக் கூறுவது நிந்தை யாம். எவ் விடத்தி லிவைகளிருக்கிறதோ, அவ் விடத்தி லிராமல்

தன் இரு காதுகளையும் மூடிக் கொண்டு வேறிடத்துக்குச் சென்று விட வேண்டு மென அறிக. (58)

59. வினா:- குரு பரிவாதம், நிந்தை செய்தவரடையும் பலம் யா தெனின்!

விடை:—பரிவாதஞ் செய்தவனுக்குக் கழுதைச் சென்மமும், நிந்தை செய்தவனுக்கு நாய்ச்சென்மமும் பலமென அறிக. (*வயித்திநாத தீக்ஷிதீயம் வருணாச்சிரம காண்டம் பக்கம் 333) (59)

60. வினா:— ஆசாரியர்பால் வைக்கப்பட்ட நவ வித பத்தியா தெனின்?

விடை:— சிரவணம், கீர்த்தநம், ஸ்மரணம், பாத சேவநம், அருச்சநம், வந்தநம், தாஸ பாவம், தோழமை, ஆத்ம நிவேதநம், அதாவது தேகாதிகளெல்லாவற்றையுஞ் சமர்ப்பித்தல் என்னும் ஒன்பது மென அறிக. (60)

61. வினா:— குருவுக்குச் செய்யும் பணிவிடைகளில் ஆத்தப் பணிவிடை யாதெனின்?

விடை:— இரு விழிக் கொரு மணி போற், சீடனறிவு, ஆசாரியர் மந நோக்கப் பிரகாரம் நிற்றலாகிய அநுகூல விருத்தி யென அறிக. (61)

62. வினா:- அங்கப் பணிவிடை யா தெனின்?

---

* இதில் சீவன்முத்தி நிரூபகம் 62 ஆம் வினா விடையிலும், வயித்திநாத தீக்ஷிதீயம் வருணாச்சிரம காண்டம், உதாரணமாகக் கூறப்பட்டுள்ளது.

விடை:- கண்ணைப் பாது காக்கும் நிமை போல், ஆசாரியர் அங்கத்தைப் பாது காத்தலும், அவர் சரீர சௌக்கியத்துக்குத் தக்க குற்றேவல் புரிதலு மென அறிக. (62)

63, வினா:— தாநப் பணிவிடை யா தெனின்?

விடை:— பிதா தன் பொருளைத் தன்னைப்பாது காக்கத் தக்க மகற்குக் கொடுத்தல் போலச், சீடன் தன்னைப் பந்தத்தினின்றும் வெளிப்படுத்தி, முத்தியிற் சேர்க்கத் தக்க, ஆசாரியருக்குத், தன் னுடல் பொருளாவியைத் தத்தஞ் செய்து, அவ ரிருக்குந் தாந மாகிய மனை நில முதலியவற்றைப் பூர்வம் தன் மனை நில முதலியவற்றைப் பாது காத்து வந்ததினும், பதின் மடங் கதிக மாகப், பிரியத்தோடு பாது காத்து வருத லென அறிக. (63)

64. வினா:- சத்பாவப் பணிவிடை யா தெனின்?

விடை:— ஆசிரியரைச் சச்சிதாநந்த சிவ சொரூப மாக மநதிற் பாவித்த லென அறிக.

**ஆத்த மாதிய பணி விடை நான்கிற்கும் பிரமாணம்.**
**(வேதாந்த சூடாமணி கவி. 9)**

''ஆத்தமுட னங்கமே தாநஞ்சற் பாவ மாமவற்றுட் குருபரனுக் கநுகூல விருத்தி; யாத்தமுயர் குருபரன் குற்றேவலே யங்க மருட்குரவர்க் குரிய மனை நிலமுதலா மவற்றைக்; காத்தலது தாநமாஞ் சற் குருவே மெய்யாக் கண்ட சிவ மெனநம்பு மதுவேசற் பாவம்''. (64)

65, வினா:— சீடர்க ளெது பரியந்தம் ஆசாரியர்க்குப் பணிவிடை செய்து வர வேண்டு மெனின்?

விடை:— தங்கள் சரீர முள்ள பரியந்தம் பணி விடைகள் செய்து கொண்டு, குருவை விட்டு நீங்கா திருக்க வேண்டுமென அறிக.

பிரமாணம் (கைவல்லிய நவநீதம்)
(சந்தேகந் தெளிதற் படலம் கவி 2)

"நற்கருத் துடையோ னாகி ஞாநவா னாகி நின்றோன்
மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரந் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான்"
(65)

66. வினா:— குருவை விட்டு நீங்கா திருக்க வேண்டு மென்பது எதனா லெனின்?

விடை:— பிணியாளர் ஔடதாதிகளைப் புசிக்குங் காலத் துண்டாகும் குண தோஷங்களைத் தெரிவித்து, மேற்புசிக்கத் தக்கவைகளையும், அடிக் கடி தெரிந்து கொள்ளும் நிமித்தம், பண்டிதரை நீங்கா திருப்பது போல, மாணாக்கர்கள் பந்த நிவிருத்திக் கான தியா நாதிகளை யநுட்டிக்குங் காலத்துச் சித்தத்தி லுண்டா கும் குண தோஷ சந்தேகாதிகளை, ஆசிரியர்பால் தெரிவித்து, மே லநுட்டிக்கத் தக்கவைகளைத் தெரிந்து கொள்ளும் நிமித்த மென அறிக. (66)

67. வினா:— தெரிந்து கொள்ளத் தக்கவைகளைத் தெரிந்து கொண்ட பின்னரும். மாணாக்கர்கள் குருவை விட்டு நீங்கா திருந்தும், பணிவிடைகள் செய்து வர வேண்டுமோ வெனின்?

விடை:— மாணாக்கர்கள் குருவின்பாற் றெரிந்து கொள்ளத் தக்கவைகளைத் தெரிந்து கொண்ட பின்னர் குரு பணிவிடைகளைச் செய்யாமற் கைவிடுவராயின், செய்நன்றி மறத்த லென்னுந் தோட முதய மாகி, மாணாக்கர்களடையத் தக்க ஞாநத்தைப் பிரதிபந்திக் கும். ஆதலின், சரீரமுள்ள பரியந்தம் செய்துவர வேண்டு மென அறிக. (67)

68. வினு:- அற்றேல், மாணுக்கர்கள் தியாந பலத்தால், நிருவிகற்ப சமாதியை யடைந்து, திரி புடித்தோற்றமின்றிச் சொரூபாகார மாக நிலை பெற்றிருக்கும் போது, குரு பணிவிடைகள் கைவிடப்படும். அது செய் நன்றி மறத்த லெனுந் தோடத்துக் கிலக்காகாதோ வெனின்?

விடை:- மாணுக்கர்கள், ஆசிரியரைச் சச்சிதாநந்த சிவ சொரூப மாக நிச்சயித் துள்ளவர்க ளானமையின், அவர்கள், நிருவிகற்ப சமாதியில் அச்சச்சிதாநந்த சிவ சொரூபமே தா மாகச் சேடித்து நிற்ற லாகிய அந் நிலைமை ஆத்த மாதிய நான்கு பணிவிடைகளில் மே லாகிய, சத் பாவப் பணிவிடையின் பரிபாக முதிர்ச்சியா யிருத்த லுமன்றி, மாணுக்கனுக் குபதேசிக்கும் போது, தான் பெற்ற பேற்றை யுலகமும் பெற வேண்டு மென்னுங் காருண்ணியத்தால், இவன் நிற்விகற்ப சமாதியை யுற்று, முக்தனுக வேண்டு மென்பது, ஆசிரியர் கருத் தாதலின், அவர் கருத்தின் வழி நிற்ற லாகிய ஆத்தப் பணிவிடை யாகவு மிருத்தலால், அது, செய் நன்றி மறத்த லென்னுந் தோடத்துக் கிலக்காகாதென அறிக. (68)

69. வினு:- அதிகாரிகள் பல வித மாக இருப்பார்களோ வெனின்?

விடை:- மந்தர், மத்திமர், உத்தமர், உத்தமோத்தமரென நான்கு விதமா யிருப்பார்க ளென அறிக. (69)

70. வினு:-மோக்ஷ மடைய வேண்டுமென்னு மொரே கருத் துடைய அதிகாரிகளை, நான்கு வித பேத மாகக் கூறியது எதனு லெனின்?

விடை:- ஒருவரை விட ஒருவர் சீக்கிரத்தில் முத்தி யடையக் கூடியவர்களா யிருத்தலி னென அறிக. (70)

71. வினு:- அங்ஙன மிருப்பது எதனு லெனின்?

விடை:- வாழை மரம், ஈர விறகு, சுள்ளி விறகு, கற்பூர மாகிய இவைகள், முறையே ஒன்றற் கொன்று சீக்கிரத்தில் நெருப்புப் பற்றக் கூடிய ஈர மாதிய தோஷக் குறைவை யுடையனவா யிருப்பது போல, மந்தர் முதலிய நால்வரும் ஒருவரை விட ஒருவர், சீக்கிரத்தில் முத்தியடையக் கூடிய சித்த மலிநக் குறைவை யுடையவர்களா யிருத்தலி னென அறிக. (71)

72. வினு:- மந்தர் முதலிய நால்வரையும் எங்ஙனம் பிரித்தறியலா மெனின்?

விடை:- சாதந சதுட்டயங்கள் ஏது பரியந்த முள்ளவர்களை மந்தர் எனவும், சொரூப பரியந்த முள்ளவர்களை மத்திம ரெனவும் காரிய பரியந்த முள்ளவர்களை உத்தம ரெனவும், அவதி பரியந்த முள்ளவர்களை உத்தமோத்தம ரெனவும், பிரித் தறிய லாம். இவர்களில், மந்தர் மத்திமர்களிருவருக்கும், யோகமும், உத்தம ருத்தமோத்தம ரெனுமிருவருக் கும், விசாரமும், முக்கிய மாகு மென அறிக. (72)

73. வினு:- மந்தர் மத்திமர்களுக்கு யோகம் முக்கிய மென்றது எதனு லெனின்?

விடை: மந்தர் மத்திமர்க ளாகிய இருவருக்கும் சித்த சஞ்சலாதிகள் மிகுதியா யிருக்கும். அவைகளை யோகம் எளிதாய் நிவிர்த்தித்து அந் நிவிருத்தித் துவாரா நிருவிகற்ப சமாதியை யுண்டுபண்ணுவதா யிருத்தலி னென அறிக. (73)

74. வினு:- யோக மாவது யாதெனின்?

விடை — புராண சிரவணத்தால் சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகளைப் பரோக்ஷ மாக அறிந்து தியாநிப்பது போல, மோக்ஷ இச்சையால் குரு முக மாகச் செய்யப்பட்ட சாஸ்திர சிரவணத்தால், பிரஹ்மத்தைப் பரோக்ஷ மாக அறிந்து, பின்னர், அபரோக்ஷ மாதற்கு விசாரஞ் செய்யாமல், சதா தானே பிரஹ்ம மெனப் பாவித்து, மந்திர யோகம், பரிச யோகம், பாவ யோகம், அபாவ யோகம், மகா யோகமென்னும் பஞ்ச யோகங்களில், யா தானும் ஒன்றன் அநு சந்தாநத்தால், மநதைப் பிரஹ்மத்தில் லயப்படுத்துவ தென அறிக. (74)

75. வின:— மந்திர மாதிய பஞ்ச யோகங்க ளெவை யெனின்?

விடை:- 1. பிரணவ மாதிய மந்திரங்களின் அநுசந்தாநத்தால், பிரஹ்மத்தில் மந மடங்குதல், மந்திர யோகம் 2. பிரணவத்தோடு மநமும் பிராணனும் ஒன்ருகி மூலத்திருந்து இடை கலை பிங்கலை மார்க்கங்களை யடைத்துச் சுழுமுனை என்னும் நாடி மார்க்க மாக ஆருதாரங்களையுங் கிரம மாகக் கடந்து சென்று, பிரஹ்ம ரந்திரத் துட்புகுந்து, சிரோ மத்திய தேசத்திற் பூரண மாகி நிறைந் துள்ள ஆன் மப் பிரகாசத்தி லடங்குதல், பரிச யோகம். 3. சுவர்க்கம் சிர மாகவும், திசைகள் செவிக ளாகவும், சந்திர சூரியர்கள் விழிக ளாகவும், அக்கிநி முக மாகவும், ஆகாயம் உந்தியாகவும், பூமி பாத மாகவும் உள்ள, ஈசுவர னுடைய அளவு படாத விராட் புருட வடிவத்தை யாயினும், அல்லது அளவுபட் டுள்ள, சதுர்ப் புஜங்களும், அவைகளுக் குரிய ஆயுதங்களும், அலங்காரங்களும், பொருந்திய ஈசுவர னுடைய திவ்விய மங்கள வடிவத்தையாயினும், நினைந்து, அவ் வடிவங்களி லுள்ள அவயவங்களை, ஒரோ ரவயவ மாக நீக்கிப் பின், நீக்கப்படாமற் சேடித்து நின்ற அவயவியாகிய பிரஹ்மத்தில், மந மடங்குதல்,

பாவ யோக மாம். 4. கரணங்களுக்கு அகோசரமா யுள்ள அதீதப் பிரஹ்மத்தில், மந மடங்குதல், அபாவ யோக மாகும். 5. சிருட்டி பிரளயங்களிலும், அறி வறியாமைகளிலும், ஒரு தன்மை யாகவே யிரா நின்ற பிரஹ்மத்தில் மந மடங்குதல், மகா யோக மாகு மென அறிக. (75)

76. வினா:– உத்தம உத்தமோத்தமர்க ளிருவருக் கும் விசாரம் முக்கிய மென்றது எதனு லெனின்?

விடை:– இருவருக்குஞ் சித்த சஞ்சலாதிகளுக் கேதுவா யுள்ள, மல விக்ஷேப தோடங்க ளின்றி, ஆவரண தோட மாத்திர மிருத்தலின், அதனை, விசார ஞாநம் எளிதாய் நிவிர்த்தித்துப், பிரஹ்ம சாக்ஷாத்கார நிருவிகற்ப சமாதியை யுண்டுபண்ணுவ தாகலின் என அறிக. (76)

77. வினா:- விசார மாவது யா தெனின்?

விடை:- குரு முக மாகச் செய்யப்பட்ட சிரவணத் தால், சர்வாதார மாகச் சச்சிதாநந்த பரிபூரண பரமாத்மாவுள தெனப் பரோக்ஷ மாக அறிந்து, பின்னர் அபரோக்ஷமாக அறியும் நிமித்தம், சிற் சொரூப மாகிய பரமாத்மாவையும், சட சொரூப மாகிய அநாத்ம வஸ்துக்களையும், சுருதி யுக்தி யநுபவங்களுக் கேற்க வேறு பிரித்துப் பார்த்த லென அறிக. (77)

78. வினா:- ஆ சி ரி ய ர் கள் மாணுக்கர்களுக்குச் சாத்திர பாடங்கள் போதிக்குங் கிரமம் யா தெனின்?

விடை:- மாணுக்கர்களின் வருணங்களுக்குத் தக்க தாக 12, 9, 6, 3 வருட பரியந்தம் சோதிக்குதல், அல்லது, அதிதீவிர னுக இருக்கின், கால நியம மின்றிப் போதிக்குதல் முதலிய கிரம மாக, நித்திரை சோம்பல் சஞ்சலங்களும், இராஜத விவகாரங்களு

யின்றிப், புத்தி தெளிவா யிருக்குங் காலமும், ஈ, எறும்பு, மசகம், சந சங்கம், புழுக்கம், அசுத்தங்க ளின்றிச் சிறந்த இடமும், பார்த்துச், செங்கழுநீர் மாலை தரித்த மார்பின ராயும், சாத்திர மேந்திய கையின ராயும் உள்ள ஆதி குருதக்ஷிணாமூர்த்தியைப் போல், தென் முக மாகச் சீட ராதியர்களா லிடப்பட்ட ஆசநத் திருந்து, கடவுளை வாழ்த்திப் போதிக்கப்படுவ தாகிய சாத்திரார்த்தங்களை யுள்ளத்தின்கண் ணமைத்துக் கொண்டு, விரைதலும், வெகுளலு மின்றி, விருப்போடு முக மலர்ச்சி யுடையராய்க், கேட்பவர்கள் புத்தியளவை யறிந்து, அதற்குத் தக்க தாக, ஐய விபரீதங்க ளின்றித் தெளிவு பொருந்த நாநா வித யுத்தி பூர்வக மாகப் போதிக்குத லென அறிக. (78)

79. வினா:- ஈசுவரனே ஆசிரிய மூர்த்த மாக எழுந்த ருளி யிருப்பவ ரெனக் கூறுகின்ற சுருதிகட்கு, ஆசிரியர் கடவுளை வாழ்த்திப் பாடங் கூறுபவ ரென்பது விரோத மாமெனின்?

விடை:- சீவன் முத்தர்கள், "பாரகாரிய மானலும் பலர்க் குபகாரமாக நேரதாய்ச் செய்வ" ரெனக் கைவல்லிய நவநீத மென்னுஞ் சாத்திரங் கூறுகின்ற மையால், ஆசிரியர் கடவுளை வாழ்த்துவது தன் பொருட் டன்றும். சீட ராதிய சீவர்கள் பிரஹ்ம ஞாந முதய மாகும் பரியந்தம் ஈசுவர வாழ்த்தாதிகளைச் செய்யாமல் கைவிடுவார்களாயின், அவர்கட்குச் சித்தத்தி லுள்ள மலிநங்கள் நிவிருத்தியாகாமல், விருத்தி யாகும். அதனால், சாதநங்கள் நிலை பெற்றுப் பூர்த்தி யடையாமற் குறை வுறும். அதனால், சிரவணந் திடப்படாது. அதனால், ஞாந முதய மாகாது. அதனால், முத்தி சித்தியாது. ஆதலால், நாமே கடவுள் வாழ்த்தாதிகள் செய்து காட்டுவ மாகில், நாம் செய்வதைப் பார்த்துச் சீட ராதியர்களுஞ் செய்து மலிநம் நீங்கி ஏகாக்கிர மாகிய சுத்த சித்தர்க

ளாகிச், சிரவணுதிகளின் பலத்தால் ஞாநமும், அதனுல், முத்தியும் பெறுவ ரெனப், பரோபகார நிமித்த மாகக் கருதிக் கருணை யினுற் செய்து காட்டுபவ ராகும். ஆதலால், விரோத மின் றென அறிக. (79)

80. வினு:- போதனை யெத்தனை வித மா மெனின்?

விடை:- உத்தேசம், இலக்கணம், பரீக்ஷை யென மூ வித மாகு மென அறிக. (80)

81. வினு:- உத்தேச போதனை யாவது யா தெனின்?

விடை:- அறிவிக்கப்படும் தத்துவத்தைப், பெயர் மாத்திர மாகக் கூறுத லென அறிக. (81)

82. வினு:- இலக்கண போதனை யாவது யா தெனின்?

விடை:- அறிவிக்கப்படு மிலக்கியத்துக்கு, அதி வியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவ தோடங்க ளின்றிய, அசாதாரண தருமங்க ளாகிய சிறப்புத் தன்மையைக் கூறுத லென அறிக. (82)

83. வினு:- அதிவியாப்தி தோட மாவது யா தெனின்?

விடை:- அறிவிக்கப்படும் இலக்கியத்துக்குக், கூறிய இலக்கணம், மற்ருே ரிலக்கியத்தினு மிருத்த லாம். அது, கோ டுள்ளது பசு வெனல் போலு மென அறிக. (83)

84. வினு:- அவ்வியாப்தி தோடம் யா தெனின்?

விடை:- அறிவிக்கப்படும் இலக்கியத்துக்குக், கூறிய இலக்கணம் அவ் விலக்கியத்தின் ஏக தேசத் தில்லா திருத்தலாம். அது, பசு கபில நிற முள்ள தெனல் போலு மென அறிக.

85. விஞ:- அசம்பவ தோட மாவது யா தெனின்?

விடை - அறிவிக்கப்படு மிலக்கியத்துக்குக், கூறிய இலக்கணம் அவ் விலக்கிய முழுவதினு மில்லா திருத்தலாம். அது, பசு ஒற்றைக் குளம் புடைய தெனல் போலு மென அறிக.

86. விஞ:- முத் தோடங்களு மின்றிச் சிறந்த விலக்கணம் யா தெனின்?

விடை:- பலவற்றிற்கும் பொது வாக வின்றி, ஒன்றற்கே யுள்ளதும், குறைவும் அபாவமு மின்றியது மாகிய இலக்கண மாம். அது, கழுத்துத் தாடை முதுகுக் கொண்டையை யெப் போது முடையது பசு வெனல் போலு மென அறிக. (86)

87. விஞ:- இவ் விலக்கணம், முத் தோடங்களு மின்றிய தெனல் எதனு லெனின்?

விடை:- கழுத்துத் தாடை முதுகுக் கொண்டை யாகிய இலக்கணம், பசு வினங்கட் கன்றி, மற்றைய மிருகங்கட் கில்லாமையால், அதிவியாப்தி தோடமும், பசு வினங்க ளனைத்தினு மெப் போது மிருத்தலால், அவ்வியாப்தி அசம்பவ தோடங்களு மின்றிய தென அறிக. (87)

88. விஞ:- பசுவுக் கிரா நின்ற கழுத்துத் தாடை ஒஞ்ஞுக்கு மிருப்பதால், அதிவியாப்தியாகு மெனின்?

விடை:- ஒஞ்ஞுக்குக் கழுத்துத் தாடை, எப் போது மிராமல், ஒரோர் காலத்திருக்கிறது. அதனுல், அதிவியாப்தியில்லை யென்பது தோன்றக், கழுத்துத், தாடையை யெப்போது முடைய தென்றதோடு, முதுகுக் கொண்டையையுமுடைய தென்றமையால், பசுவிற்குக் கூறிய இலக்கணம் அதிவியாப்தி தோட முடைய தாகா அறிக (88)

89. விஞ - பிரஹ்மத்துக்குச் சிறந்த இலக்கணம் யா தெனின்?

விடை:- சச்சிதாநந்த இலக்கண மென அறிக (89)

90. வினு:- பிரஹ்மத்துக்குக் கூறிய சச்சிதாநந்த இலக்கணம், அதிவியாப்தி யாதிய முத் தோடங்களு மின்றிய தாகுமோ வெனின்?

விடை:- குறிப்பிடப்பட்ட இலக்கிய மாகிய பிரஹ்மத்துக்குக், கூறிய சச்சிதாநந்த இலக்கணம் குறிப்பிடப்படாத மற்ற இலக்கியங்க ளாகிய பிரகிருதி முதலிய தத்து வங்களில், ஒன்றற்கேனு மில்லாமை யால், அதிவியாப்தி தோடமும், பிரஹ்ம வியாபகத்தி லேக தேச மாயினுங் குறைவுபடாமல், எப்போதும் பூரண மாக இருத்தலால், அவ்வியாப்தி அசம்பவ தோடங்களு மின்றியதே யாகு மென அறிக. (90)

91. வினு:- பரீக்ஷா போதனை யாவது யா தெனின்?

விடை:- தன்னால் வியவகரிக்கப்படும் பொருளுக் குக் கூறப்படு மிலக்கண முண்டோ இல்லையோ, வெனச் சீடன் ஆராய்ந் தறிந்து தெளியும்படி யாக, வினுவிப் பரீக்ஷிக்குத லென அறிக.

உபதேசமுறை மூவகை என்பதற்குப் பிரமாணம்.
(வேதாந்த சூடாமணி)

கவி-16. "இனையவுப தேசமுறை யுத்தேசத் துடனே யிலக்கணஞ்சோ தனையெனமூன் றினையு முடைத் தாமால்."

கவி-17 "அறியவுணர்த் துறுபொருளை நாமமாத் திரத்தா லறைந்திடுத லுத்தேச மாங்களகம் பளமாம், குறியுடைய தானெனல்போ லப்பொருளிற் சிறந்த குறியுரைத்த லிலக்கணமவ் விலக்கியமாய் பொருளிற், செறிவுறுமவ் விலக்கணமுண் டோவிலையோ வென்னத் தெரிந்திடுதல் பரீட்சை." (91)

92. வினு:- மாணுக்கர்கள் ஆசிரியர்பால் சாத்திர பாடங்கேட்டுக் கொள்ளுங் கிரமம் யா தெனின்?

விடை:- ஆசிரியர்பால் கால மறிந்து சென்று, அட்டாங்க பஞ்சாங்க மாக நமஸ்கரித் தெழுந்து, அவர் குறிப்பின் வழி சார்ந்து, இருக்கச் சொன்னபின் உட்கார்ந்து, ஞாநசாத்திரத்தை யவிழ்த்தே சாதநத்தில் வைத்து, அஞ்சலி யஸ்தராய்ச், சித்திரப் பாவை போ லசை வற இருந்து, படிக்க வுத்தர வளித்த பின்னர்க், கடவுளை த் தோத்தரித்துச் சாத்திரத்தைக் கையி லெடுத்துப் படித்து, பசி மிகுந்தவனுக்கு உணவினிடத் துள்ள இச்சை போலப் பாடங் கேட்டலி லிச்சை யுடைய ராய், மநஞ் சலியாமல், ஏகாக்கிரத்தோடு கேட்கப்பட்ட பொருள் களில், மீட்டுங் கேட்கத் தக்கவைகளைக் கேட்டுமறந்து விடாம லுள்ளத்திலமைத்துக் கொண்டு, நிறுத்தும் படி யுத்தர வளித்த போது, படித்த லாதிகளை நிறுத்திச், சாத்திரத்தைக் கட்டிக், குருவை தோத் தரித்து, செல்லும்படி யுத்தரவளித்த பின்னர், முன் போலவே நமஸ்கரித் தெழுந்து, சிர மேற் குவித்த அஞ்சலி யஸ்த ராய் ஆசிரியர் பார்வை யுள்ள பரியந்தம் புறங் காட்டாமல், பின்னிட்ட நடைய ராய்ச் செல்வ தென அறிக. (92)

93. வினு:- முமுட்சுக்கள் குரு முக மாகச் சிரவணஞ் செய்யத் தக்கவைக ளெவை யெனின்?

விடை:- ஜீவப் பிரஹ்ம ஐக்கிய போதக வேத முடிவாகிய உபநிஷத்துக்களும், இவைகளை முதனூ லாகக் கொண்டு விளங்காநின்ற வழி நூல்களும் சார்புநூல்களுமா மென அறிக. (93)

சாதந சதுட்டய நிருபகம் முற்றிற்று.
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

உ
சிவமயம்

ஓம் பரப் பிரஹ்மணே நம:
சிதம்பர தேசிகன் றிரு வடி வாழ்க.

# நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியாநம்.

நூல்

## 1. பிரஹ்ம விலக்கண நிரூபகம்.

### அவதாரிகை

வட நூற் கடலையுந் தென் னூற் கடலையும் ஒருங்கே நிலை கண் டுணர்ந் தருளிய சேஷாத்திரி சிவ மென்னு முநிவரர், தா மடைந்த பிரஹ்மாத்ம வைக்கிய ஞாநாநு பூதியை உலகமு மடைந்துய்ய வேண்டு மென்னும் பெருங்கருணையால், வேதங்களின் முடிவா யுள்ள தைத்திரீய சாந்தோக்கியாதி யுப நிடதங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட, அத்தியாரோப அபவாதக் கிரம வாயி லாக ஜகஜீவ பரங்களாகிய (35) தத்துவங்களையும், மித்தை யென்றும், உற்பவ நாசமுடையன வென்றும் தனக் கன்னிய மென்றும், பரதத்துவ மான சுத்தப் பிரஹ்மமே சத்திய மென்றும் உற்பவ நாச ரகித மென்றும், அதுவே தற் சொரூப மென்றும், அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார மாக அறிந்து, கவலை கெட்டிருக்கின்றவனே ஜீவன் முத்த னெனவும், திடப்பிரஞ்ஞ னெனவும், பகவத் பக்தன் எனவும், குணாதீத னெனவும், பிராஹ்மண னெனவும், அதிவருணாச்சிரமி யெனவும், தெரிவிப்பான் றொடங்கி, முன்னர்ச் சர்வாதார மா யுள்ள பிரஹ்மத்தை நிரூபிக்கின்றார்.

(நூல் பிரிவு-1)

சுத்தப் பிரஹ்மமா யிருக்கின்ற சருவ சாக்ஷி யினிடத்திலே, அக்கினியிற் சூடு போல, அபிந்ந

மாக ஒரு சத்தியுண்டு. அந்தச் சத்தி அவ் வதீதப் பிரஹ்மத்தி லடங்கி யிருக்கும் போது, அதற்குச், சுத்தப் பிரஹ்ம மென்று பெயர்.

(பத வுரை)

(பதம்) சுத்தப் பிரஹ்மமா யிருக்கின்ற— (பொருள்) அசுத்தமின்றிய பரிசுத்தப் பிரஹ்மமாயுள்ள,

(பதசாரம்)

ஜக ஜீவ பர மாகிய (35) தத்துவங்களுக் குள்ள அசுத்த இலக்கணங்க ளின்றி, நித்திய புத்த முக்த சத்திய பரமாநந்த அத்துவிதமாகிய சுத்த விலக்கணங்களைப் பொருந்திப், பெரி தாகிய அனைத் திற்கும் பெரி தாகவுள்ள தென்பது தோன்றச் சுத்தப் பிரஹ்ம மென்றார்.

1. வினா:- குண ரகிதப் பிரஹ்மத்தைச் சுத்தப் பிரஹ்ம மெனக், குணசகிதப் பிரஹ்ம மாகக் கூறிய தென்னை யெனின்?

விடை:— பிரஹ்மம் குண ரகிதமா யிருக்கினும், அசுத்த இலக்கணங்களை யுடைய ஜக ஜீவ பரங்கட்கு வே றிலக்கண முடைய தென அதிகாரிகட்கு அறி விக்கு நிமித்தம். பிரஹ்மத்துக்குக் குணங் கற்பித மாக உண் டெனல் கூடு மாதலி னென அறிக. (1)

2. வினா:- பிரஹ்மத்துக்குக் குணங் கற்பித மாக வுண்டென, யாரேனுஞ் சொல்லி யிருக்கின்றார்களோ வெனின்?

விடை:— வித்தியாரணிய சுவாமிகள் பஞ்சதசி திருப்தி தீபிகையில், நிரம்ச வஸ்துவில், அம்ச கற்பனை யெப்படி வந்த தென்னுங் கடாவிற்குத், தன்னைக் குறித் தில்லாவிடினும், தள்ளப்பட்ட வுபாதியைக் குறித் துண் டென்று சொல்லியிருக்கிறா ரென அறிக. (2)

3. வினு:—அற்றேல், குணியை ஆசிரயித் திருப்ப தாகிய குணத்தைப், பின்னர் வைத்துக் கூருமல், சுத்தப் பிரஹ்ம மென்று முன்னர் வைத்துக் கூறிய தென்னை யெனின்?

விடை:— நீலோற்பலத்தை யறியுங் கால், நீல நிற மாகிய குணத்தை யறிதற்கு முன், அக் குண லகித மாகிய உற்பலத்தை யறிதற்குக் கூடாதது போல, சுத்த மாதிய குண விலக்கணங்களை யறிதற்கு முன், அவைகளைச் சொரூப மாக வுடைய பிரஹ்மத்தை யறிதற்குக் கூடாதாதலி னென அறிக. (3)

4. வினு:— ஜக ஜீவ பர மாகிய (35) தத்துவங்க ளெவை யெனின்?

விடை:-தூல சரீர தத்துவம் 6, சூக்ஷ்ம சரீர தத்துவம் 20, பூதம் 5, ஜீவன் அவித்தை 2, ஈசுவரன் மாயை 2 என்னும் இவைக ளென அறிக. (4)

5. வினு:- அசுத்த இலக்கணங்க ளெவை யெனின்?

விடை:- விவேகிகளால் அருவருக்கத் தக்க, அசத்து சடம் துக்கம் அநித்தம் கண்டம் ஜநித்தல் பருத்தல் இளைத்தல் சலித்தல் மரித்தல் திரை நரை வியாதி துர்க்கந்த முதலியவைக ளென அறிக. (5)

6. வினு:— தூல சரீர தத்துவம் ஆறும், அசுத்த முடைய தென்றது எதனு லெனின்?

விடை:— யாவரும் அருவருக்கத் தக்க, சுக்கில சுரோணிதங்களே காரண மாகவும், மலங்களாற் செய்யப்பட்டும், மலங்களே பூரிக்கப்பட்டு மிராநின்ற மலபாண்டம் போல, சுக்கிலாதி மலச் சேறுகளால் நிருமித மாகிக், கிருமி மல மூத்திர பாத்திரமாயுள்ள, தேக லிரத்த மாமிசாதிகளே சொரூப மாகவும், தான் துர்க்கந்த மாக இருத்தலு மன்றித்,

தன் னுள்ளிற் சார்ந்த கிருத குள பாயாசாதிகளையும், வெளியிற் சார்ந்த புட்ப சந்தந புனுகாதிய வாசநாத் திரவியங்களையும், துர்க்கந்த முள்ளன வாக்குதலும், நவத் துவாரங்களினும் மல மூத்திர கோழை பீளை யாதிகளை யொழுக்குதலும், பருத்த லிளைத்த லாதிய விகாரங்களைப் பொருந்து தலுமே காரிய மாகவும், இராஜ சிநேக முள்ளவரையில், யாவரும் சிநேகித்தற் குரியவனு யிருந்த துஷ்ட சேவகன், ராஜ சிநேகம் நீங்கிய பின்னர், ஒருவராயினுஞ் சிநேகித்தற் குரியவனாகாமல், யாவர்களாலுந் துட்ட னிவ னென நிந்தை கூறி நீக்கப்பட்டுத் தண்டனை யாதிகளாற் கெடுவது போல, ஜீவன் கூடி யிருக்கும் பரியந்தம் மனைவி மக்கள் சுற்றத்தார்க ளியாவர்களுங் கணவன் பிதா பந்து வெனச் சிநேகித்தற் குரியதா யிருந்து, ஜீவன் நீங்கிய பின்னர், ஒருவராயினுஞ், சிநேகித்தற் குரியதாகாமல், பரிசித்தவரைப் பரிசித்தவர்க்கும் ஆசூசமாகிய அசுத்தம் பற்றச் செய்வதாய், வீங்கி வெடித்து அழுகிக் கரைந்து, நாறும் பிரேத மிது வென யாவரும் வெறுப் புற்றுத் தாங்க ளிருக்கும் ஊரினு மிருத்தற் கி ட ங் கொடாமல், வெளியிற் கொடு போய், மயாநத்திற் றழல் மூட்டிக் கொளுத்தப்பட்டுக் கெடுதலே அவதி யாகவும், வாத பித்த சிலேட்டும காரியமாகிய வியாதி யாதிகளே பல மாகவு முடையதா யிருத்தலி னென அறிக. (6)

7. வினு:- இரு பது தத்துவ மாகிய சூக்ஷ்ம சரீரம் அசுத்த முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- பூதங்களே காரண மாகவும், இராகத் துவேஷ சங்கற்ப நிச்சய பலம்பல மின்மை யாதிய வைகளே சொரூப மாகவும், சாக்கடை மலக் குழி யாதிய தேசங்களில் வசிக்குங் கிருமிகள் போல, மல மூத்திர பூரித பாத்திர மாகிய தூல சரீரத்தில் வசித்தலும், விருப்பு வெறுப்பு தாங்கல் சலித்தல்

காண்டல் கேட்டல் வசநித்த லாதியவைகளைப் புரிதலுமே காரிய மாகவும், விதேக முத்தியில் நாச மாகுதலே அவதி யாகவும் தாபத் திரய துக்கங்களே பல மாகவு முடையதா யிருத்தலி னென அறிக. (7)

8. வினா:— காரண சரீர மாகிய அஞ்ஞாநம் அசுத்த முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- காரண சூநிய மாகவும், அநிர்வாச்சியத் துவமே சொரூப மாகவும், கண்ணுக்கு ரூப விஷயங் களைக் காச படலாதிகள் மறைத்தல் போலச், சிதாபாசன் அளவில் காலம், சம்சாரத்தில் அமிழ்ந்தித் தன் சுபாவ சொரூபத்தை விசாரியாமல் உபேக்ஷித் திருத்தற்கும், தேகாதிகளை யானென தென் றபிமா- நித்தற்கும், ஏது வாக ஆத்மாவை மறைத்தலே காரிய மாகவும், பிரஹ்மாத்மைக்கிய ஞாநத் தாற் கெடுதலே அவதி யாகவும், நிட்பிரயோசநமே பல மாகவு முடையதா யிருத்தலி னென அறிக. (8)

9. வினா:— ஜீவன் அசுத்த முடைய னென்பது எதனு லெனின்?

விடை:— தான் தோன்றற்கு அஞ்ஞாநமே காரண மாகவும், அதிட்டாந ஆசிரய ஆபாச சங்காத (கூட்ட) கர்த்திருத்துவ போக்திருத்துவ ஞா ருத்துவங்களே சொரூப மாகவும், தேக தரும மான *ஜாதி வருணாச்சிரம வசத்த னாய், விதி நிஷேத கன்மங்களிற் பிரவிருத்திப்பதே காரிய மாகவும், பிரஹ்மாத்ம வைக்கிய ஞாநத்தால், அவித்தை யினோடு கெடுதலே அவதி யாகவும், ஜநந மரண தாபத் திரயங்களிற் சுழல்வதே பல மாகவு முடையனு யிருத்தலி னென அறிக. (9)

---

*ஜாதி-மநுட ஜாதி வருணம்-பிராமணாதி வருணம். ஆச்சிரமம்-பிரமசரிய மாதி ஆச்சிரமம்.

10. வினு:- ஆகாய பூதத்துக் கசுத்தம் யா தெனின்?

விடை:- விக்ஷேப சத்தியிற் ஞேன்றிக் கெடு- தலும், சத்த குணத்தோடு, இடி, காற்று, வெயில் மேக படலாதிகளை யுற்றிருத்தலு மென அறிக (10)

11. வினு:- வாயு பூதத்துக் கசுத்தம் யா தெனின்?

விடை: ஆகாயத்திற் ஞேன்றிக் கெடுதலும், பரிச குணத்தோடு, சலித்தலும், துர்க்கந்த மாதிகளை யிழுத்தலுமென அறிக. (11)

12. அக்கிநி பூதத்துக் கசுத்தம் யா தெனின்?

விடை:-வாயுவிற் ஞேன்றிக் கெடுதலும், ரூப குணத்தோடு, புகை பொறி வெப்ப மாதிகளை யுற்றிருத்தலு மென அறிக. (12)

13. வினு:-அப்பு பூதத்துக் கசுத்தம் யா தெனின்?

விடை:-அக்கிநியிற் ஞேன்றிக் கெடுதலும். ரச குணத்தோடு, அலை திவலை நுரை கலங்கல் சேறு பாசி யாதிகளை யுற்றிருத்தலு மென அறிக. (13)

14, வினு:-பிருதிவி பூதத்துக் கசுத்தம் யா தெனின்?

விடை:-அப்புவிற் ஞேன்றிக் கெடுதலும், கந்த குணத்தோடு, மலம், மூத்திரம், குப்பை, சேரி, மயா நாதிகளை யுடையதா யிருத்தலு மென அறிக. (14)

15. மாயைக் கசுத்தம் யா தெனின்?

விடை:-காரண மின்றிய தாகவும், அநிர்வாச்சி யத்துவமே சொரூப மாகவும், கூடாததைக் கூட்டு வித்தலும், நாம ரூபப் பிரபஞ்ச மாகப் பரிணமித்த லுமே காரிய மாகவும், பிரஹ்மாத்ம வைக்கிய ஞாநத்தாற் கெடுதலே, அவதியாகவும், நிஷ்பிரயோ சநமே பல மாகவு முளதா யிருத்தலென அறிக. (15)

16. வினு.-ஈசுவரனுக் கசுத்தம் யா தெனின்?

விடை:—தான் தோன்றற்கு, மாயையே காரண மாகவும். அதிட்டாந ஆசிரயு ஆபாச சங்காதமே (கூட்டமே) சொரூப மாகவும், சிருஷ்டி யாதி பஞ்ச கிருத்தியங்களே காரிய மாகவும், பிரஹ்மாத்ம வைக்கிய ஞாநத்தால், மாயை கெடும் போது, பிரஹ்மத்தில், லய மாதலே அவதி யாகவும், பிரஹ்ம விஷ்ணு ருத்திர ராதி மூர்த்த மாக ஆவிர்ப்ப வித்தலே பலமாகவு மிருத்த லென அறிக. (16)

17. வினு:—அசுத்த மாகிய ஜக ஜீவ பரங்க ளனைத் தும். பிரஹ்மத்திற் றோன்றின வெனவும், அவைக ளனைத்தினும் பிரஹ்மம் வியாபித்திருக்கிற தெனவும் சுருதிகள் கூறுகின்றமையால், அவைகளின் அசுத்தங் கள் பற்றுமல், பிரஹ்மஞ் சுத்தமா யுள்ள தென்பது பொருந்தா தெனின்?

விடை:—பிரஹ்மத்திற் றோன்றிய ஜக ஜீவ பரங் கள், சுத்தியிற் றோன்றிய ரஜதம் போல, மித்தை யானமையினுனும், ஜக ஜீவ பரங்களைப் போல, உற் பாத்தியம், ஆரப்பியம், சமற்காரியம், விகாரிய மாகிய அசுத்தங்க ளுடையது பிரஹ்ம மென ஒர் சுருதியேனுங் கூருமையினுனும், சகல சுருதிகளும் அசங்கமும், நிருவிகாரமும், சுயம்பிரகாசமும், சுத்தமு மா யுள்ளது பிரஹ்ம மெனக் கூறுகின்றமையினுனும், வாயு வாதிய பூதங்கள், ஆகாயத்திற் றோன்றினும், ஆகாயம், அப் பூதங்களில் வியாபித்திருக்கினும், அவைகளின் சலந உஷ்ண சீத கடிந தருமங்கள், ஆகாயத்தைப் பற்றுதது போல, ஜக ஜீவ பரங்கள், பிரஹ்மத்திற் றோன்றினும், அவைகளிற் பிரஹ்மம் வியாபித்திருக்கினும், அவைகளின் அசுத்தங்கள், பிரஹ்மத்தைப் பற்று வென்பது பொருந்து மென அறிக. (17)

18. வினு:-பிரஹ்மத்திற்கு உற்பாத்தியம் ஆரப்பியம், சமற்காரியம், விகாரிய மாகிய நான் கசுத்தங் களு மில்லை யென்றது எதனு லெனின்?

விடை:- சகல சுருதிகளும் பிரஹ்மத்தை அநாதி யெனக் கூறுகின்றமையால், ஒன்றினு லுண்டாக்கப் படுவதாகிய உற்பாத்தியமும்; அத்வைதம் சர்வாத் மக, மெனக் கூறுகின்றமையால், ஒன்றினு லடையப் படுவ தாகிய ஆரப்பியமும்; நின்மலம் சுயம்பிரகாச மெனக் கூறுகின்றமையால், ஒன்றினல் விளக்கப் படுவ தாகிய சமற்காரியமும்; நிஷ்கிரியம் நிருவிகார மெனக் கூறுகின்றமையால், விகாரப் படுவ தாகிய விகாரியமும்; பிரஹ்மத்துக் கில்லை யென்றதாம். இஃதன்றி, மூர்த்த மாயும், கன்ம காரிய மாயு முள்ள பொருளானுல், அதற்கு மயாந மாதிய தேச பேதத் தாலும், ஆசூச மாதிய கால பேதத்தாலும், சண்டாள ராதிய ராலும், உச்சிட்ட மாதிகளாலும், அசுத்த சம்பந்த முள தாகும். பிரஹ்மம் அமூர்த்த மாயும், கன்ம காரிய மல்லாததாயும், அசங்க மாயும், அத்து வித மாயும், விளங்கும் பொரு ளானது பற்றி, அசுத்த சம்பந்த மின்றிய தென்றதென அறிக.

**பிரஹ்மம் சுத்த மென்றதற்குப் பிரமாணம்.**
**(சுக்கில எசுர் வேதத்தின் நிராலம்போபநிடதம்)**

''சுத்தம் சிவம் சாந்தம் நிர்க்குணம் இந்தச் சத்தங்களால், சொல்லத் தக்க தாயும், வாக்குக் கெட்டாத தாயுமிருக்கின்ற சைதந்நியமே பிரஹ்மம்.'' (18)

19. வினு:-சுத்தப் பிரஹ்மத்துக்குப் பத சாரத்தில் விரித்துக் கூறிய (1) நித்திய (2) புத்த (3) முத்த (4) சத்திய (5) பரமாநந்த (6) அத்துவித மாகிய, ஆறி லக்கணங்களில், முற் கூறிய நித்திய இலக்கண மியா தெனின்?

விடை:- ஓரபாவமு மின்றிச் சதோதயமா யிருத்த லென அறிக. (19)

20. வினு:-அபாவ மாவது யா தெனின்?

விடை:-இல்லை யென்னும் ஞாநத்திற்கு விஷய மாயிருப்பது, அல்லது, சம்பந்த சாதிருசியங்களுக்கு வேருய்ப் பிரதியோகியின் அபேக்ஷா சகித ஞாநத் திற்கு விஷயமா யிருப்ப தென அறிக. (20)

21. வினு:-அபாவத்துக் கதிகரணம் யா தெனின்?

விடை:-அநுயோகி யென அறிக. (21)

22. வினு:-அநுயோகி யாது? பிரதியோகி யா தெனின்?

விடை:-எதனிடம் அபாவந் தோற்றுகிறதோ, அது அபாவத்தின் அநுயோகி யாகும். எதன் அபா வந் தோற்றுகிறதோ, அது, பிரதியோகி யாகு மென அறிக. (22)

23. வினு:-அபாவங்கள் எத்தனை வகை யெனின்?

விடை:-சம்சர்க்காபாவம், அந்நியோந்நியா பாவமென இரு வகைப்படும். இவ்விரு வகைகளில், அந்நியோந்நியாபாவம் ஒரே வித மாம். சம்சர்க்கா பாவம் பிராகபாவம், அதாவது, முன் னபாவம்; பிரத்துவம்ஸாபாவம், அதாவது, அழிவுபாட்டபாவம்; சாமயிகாபாவம், அதாவது, ஓர் சமயத்தி லபாவம்; அத்தியந்தாபாவம், அதாவது, முழுது மபாவம்; என்னும் பேதத்தால் நான்கு வகைப்படும். இந் நான்கு அபாவமும், அந்நியோந்நியாபாவமும், சேர்ந்து, ஐந்து வகையா மென அறிக. (23)

24. வினு:-பிராகபாவம் யா தெனின்?

விடை:- †காரியத் தோற்றத்திற்கு முன்னுள்ள அபாவம். அது தோற்ற மின்றி நாச முடையதும், தன்

(†) இங்கு, அபாவங்களின் இலக்கணங்கள், நியாய சாஸ்திரக் கிரமமாகக் கூறப்படுகின்றன. இவற்றில் வேதாந்தத்திற்கு அங்கீகாரமின்மையாதி விஷயங்கள் 43 ஆம் வினு விடை முதல் காண்க.

பிரதியோகியின்*சமவாயி காரணத்தின்கண் ணிருந்து எதிர் மறைப் பொருளைத் தோற்றுவிப்பதாய்த், தோன்றுமென்னும் விவகாரத்துக் கேது வாயது மென அறிக. உதாரணம்:- கபாலத்திற் கட மில்லை; அல்லது, தந்துக்களிற் பட மில்லை என்ப தாம். (24)

25. வினா:-பிரத்துவம்சாபாவம் யா தெனின்?

விடை: தோன்றிய அழிவுபாடாகிய காரியத்தில் காரண மில்லாமை யாம். அது உற்பத்தி யுடையதும் நாச மின்றியதும், காரியத் தோற்றத்திற்குப் பின் னுள்ளதும், தன் பிரதியோகிய ற் ஒருன்றிப், பிரதி யோகியின் சமவாயி காரணத்தின்கண் ணிருப்ப தாய், அழிந்த தென்னும் விவகாரத்துக் கேது வாயதும் என அறிக. உதாரணம்:-கடமழிந்த வழிக் கபாலத் திற் கட மில்லை என்ப தாம். (25)

26. வினா:- சாமயிகாபாவம் யா தெனின்?

விடை:- ஓர் சமயத்தி லுள்ள அபாவம். அது உற்பத்தி நாச முடைய தென அறிக. உதாரணம்:- பூதலத்திற் கட மில்லை என்ப தாம். (26)

27. வினா:- சாமயிகாபாவம், உற்பத்தி நாச முடைய தென்றது எதனா லெனின்?

விடை: பூதலத்தி லுள்ள கடத்தை, ஓர் காலத்தி லன்னிய தேசத்திற்குக் கொண்டு போய் விட்ட போது, அக் கடத்தின் அபாவம், கட சூநிய கால சம்பந்தி யாகிய பூதலத்தி லுண்டாகி, அப் பூதலத்தில் கடத்தைக் கொண்டு வந்து வைத்த போது, கடத்தின் அபாவம் நட்ட மாகின்றமையி னென அறிக. (27)

28. வினா:- அத்தியந்தாபாவம் யா தெனின்?

விடை:- முக் காலத்தினு முள்ள தாய்ச் சம் சர்க்கத்தால் வரைந்து கொள்ளப்படும், எதிர்மறைத்

* சமவாயி காரணம்=முதற்காரணம்.

தன்மையையுடைய தாம். அது, அந்நியோந்நியா பாவத்துக்கு வேருயும், உற்பத்தி நாச சூநிய மாயு முள்ள அபாவ மென அறிக. (28)

29. வினு:- அத்தியந்தாபாவம் எங்கே காணப்படு மெனின்?

விடை:- யாதொரு பதார்த்தம், எந்தக் காலத்தும் எதனிடத் துண்டாகிற தில்லையோ, அதனிடத்து அந்தப் பதார்த்தத்தின் அத்தியந்தா பாவம் காணப்படு மென அறிக.

உதாரணம்:- வாயுவின்கண் ரூப மில்லை; அல்லது கந்த மில்லை என்ப தாம். (29

30. வினு:- அந்நியோந்நியாபாவம் யா தெனின்?

விடை:- ஒன்றன் வேருகிய வத்துக்களி லுள்ள ஒன்றன் பேதம்; அல்லது அபேதத்தை நிஷேதிப்ப தாகிய அபாவம்; அல்லது, தாதாந்மியத்தால் வரைந்த பொருளைப் பிரதியோகியாக வுடைய இன்மை யாம். அது, அத்தியந்தா பாவத்துக்கு வேருகவும், உற்பத்தி நாச சூநிய மாகவு முள்ள அபாவமா மென அறிக. உதாரணம்: கடம் பட மன்று; படம் கட மன்று என்ப தாம். (30)

31. வினு - பிரஹ்மம் ஓ ரபாவமு மின்றிய தாயின், இவ் வைந்தபாவங்களையும் உடையது யா தெனின்?

விடை:- சேதநாசேதந நாம ரூபப் பிரபஞ்ச மென அறிக. (31)

32. வினு:- அபாவங்களில், பிராகபாவத்துக்கு அதி வியாப்தி தோட மில்லையோ வெனின்?

விடை:- இல்லை; இதனை அநாதி யெனலால், அத்தியந்தாபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது நாச முடைய தல்ல; நாச முடைய

தெனலால், சாமயிகாபாவமும் இத் தன்மைத் தாமே எனின்? அது அநாதி யல்ல; அநாதியும், அந்தமும் உடைய தெனலால், வேதாந்த சித்தாந்தத்தில் மாயையும் இத் தன்மைத் தாமே யெனின்? அது அபாவரூப மல்ல பாவ ரூப மாம்; அற் றன்று; மாயை யென்னும் வார்த்தைக்கு பண்டிதர்கள் யா தொன்று இல்லையோ, அதுவெனப் பொருள் கூறு கின்றமையினும். எவள் வாஸ்தவத்தி லில்லையோ அவள் தான், மாயை யென எஜுர் வேதத்தி லுள்ள சர்வ சாரோபநிடதங் கூறுகின்றமையினும், மாயை அபாவ ரூபமே யெனின்? அபாவம், ஒன்றற் கேனும் உபாதாந காரண மாக விராது. மாயை யோ, பஞ்ச பூத பௌதிகங்கட்கு உபாதாந் காரண மாக விருத்த லினும், உபநிடதம் மாயையை வாஸ்தவத்தி லில்லாத தென்றல், கற்பித மாகவுள்ள தெனக் கொள்ளற்பாலதாயிருத்தலினும், அவ் வுபநிடதமே, ஓரிடத்தில், "மாயை பிரமாணப் பிரமாணங்கட்குப் பொது வானவள், இருக்கிறவளு மல்ல, இல்லாதவளு மல்ல, இரண்டுங் கலந்தவளு மல்ல, வாக்குக்கெட்டாதவள்" எனக் கூறுகின்ற மையினும், †அபாவ ரூப மல்ல; சதசத் விலக்ஷண் *பாவ ரூப மா மென அறிக. (32)

33. வின:- பிரபஞ்சம் பிராகபாவ இலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- காரிய மாகிய கடந் தோன்றற்குப் பூர்வம் காரண மாகிய கபாலத்தி லில்லாதது போலக், காரியமாகிய பிரபஞ்சஞ், சிருட்டிக்குப் பூர்வம் காரண மாகிய பிரஹ்மத்தி லில்லாமையி னென அறிக. (33)

34. வின:- பிரத்துவம்ஸாபாவத்துக் கதிவியாப்தி தோடமில்லையோ வெனின்?

---

† அபாவரூபம்=இன்மை உருவம்.

* பாவரூபம்=உண்மை உருவம்.

விடை:- இல்லை; இதனை நாச மின்றிய தெனலால், அத்தியந்தாபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, உற்பத்தி யுடைய தல்ல; உற்பத்தி யுடைய தெனலால், சாமயிகாபாவமும், இத் தன்மைத்தாமே யெனின்? அது நாச மின்றிய தல்ல: உற்பத்தி யுள்ளதும், நாச மில்லது மெனலால், மோக்ஷமும் ஞாநத்தா லுதயமாகின்றமையால், உற்பத்தி யுள்ளதும், முத்தர்கட்குப் பின்னர்ச் சம்சார முண்டாகாமையால் நாச மில்லது மாமே யெனின்? அது, அபாவ ரூப மல்ல; பாவ ரூப மாகும். அற்றன்று; சுருதிகள் அஞ்ஞாநம், அஞ்ஞாந தற் காரியங்களின் நிவிர்த்தியே மொக்ஷ மெனக் கூறுகின்றன. நிவிருத்தி யென்பது துவம்ஸ மானமையால், மோக்ஷமும் துவம்ஸ மாகிய அபாவ ரூப மா மெனின்? சர்ப்ப நிவிருத்தி யிரச்சு வாவது போலக், கற்பிதங்களின் நிவிருத்தி அதிட்டாந ரூபமே யாமென அச் சுருதிகளே கூறுகின்றமையால், கற்பிதமாகிய அஞ்ஞாநம், அஞ்ஞாந தற் காரியங்களி னிவிருத்தி, அதிட்டாநப் பிரஹ்ம ரூப மாம். ஆதலின், மோக்ஷம் அபாவ ரூபமன்று பாவ ரூப மா மென அறிக. (34)

35. வினா:- பிரபஞ்சம், பிரத்துவம்சாபாவ இலக்கண முடைய தென்றது எதனா லெனின்?

விடை:- உடைத லாகிய காரியத் தோற்றத்திற்குப்பின், காரண மாகிய கட மில்லாதது போலப், பிரளயத்தில் நாச மடைத லாகிய காரியத் தோற்றத்திற்குப்பின், காரணமாகிய பிரபஞ்ச மில்லாமையி னென அறிக. (35)

36. வினா:- சாமயிகாபாவத்துக் கதிவியாப்தி தோட மில்லையோ வெனின்?

விடை:– இல்லை; இதனை உற்பத்தி யுடைய தெனலால், பிரத்துவம்சாபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, நாச முடைய தல்ல; நாச முடைய தெனலால், பிராக பாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, உற்பத்தி யுடைய தல்ல; உற்பத்தி நாச முடைய தெனலால், பூத பௌதிகங்க ளாகிய பதார்த்தங்க ளனைத்தும் இத் தன்மையன வாமே யெனின்? அவை, அபாவ ரூபங்க ளல்ல; இருக்கிற தென்னும் ஞாநத்துக்கு விஷய மா யிருத்தலால், பாவ ரூபங்க ளா மென அறிக. (36)

37. வினு:- பிரபஞ்சம், சாமயிகாபாவ விலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:– சிருட்டி யாகிய ஓர் காலத்தி லுண்டா கிறதாயும், பிரளய மாகிய ஓர் காலத்தில் நட்ட மாகிற தாயு மிருத்தலி னென அறிக. (37)

38. வினு:– அத்தியந்தாபாவத்துக் கதிவியாப்தி தோடமில்லையோ வெனின்?

விடை:–இல்லை; இதனை, உற்பத்தி சூநிய மெனலால், பிராகபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, நாச சூநிய மல்ல; நாச சூநிய மெனலால், பிரத்துவம்சாபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, உற்பத்தி சூநியமல்ல; உற் பத்தி நாச சூநிய மெனலால், பிரஹ்மமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, அபாவ ரூப மல்ல; பாவ ரூப மாம். உற்பத்தி நாச சூநிய அபாவ ரூப மெனலால், அந்நியோந்நியாபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, அந்நியோந்நியா பாவத்துக்கு வேரு மென அறிக. (38)

39. வினு:–பிரபஞ்சம், அத்தியந்தாபாவ இலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- வாயுவின்கண் உருவ மில்லாதது போலப் பிரஹ்மத்தின்கண் பிரபஞ்சம் முக் காலத்தினு மில்லாமையினென அறிக. (39)

40. வினு:—நாம ரூபாத்மக மாகவும், சுக துக்கா நுபவங்கட் கேது வாகவும், பிரத்தியக்ஷ மாகவும், நீண்ட காலமுள்ள தாகவும் இருக்கின்ற பிரபஞ்சம், அத்தியந்தாபாவமுடைய தெனல் மயக்க மா மெனின்?

விடை:—இல்லது உள்ள தாகா தென்னும் நியாயப்படி, யா தொன்று, முன்னும் பின்னும் அபாவப் பொருளோ, அது, மத்தியினும் அபாவப் பொருளே யாம். யாங்ஙன மெனின், கயிற் றரவு, சொப்பனப் பிரபஞ்சம், சந்நிபாத நோயினுற் ருேன்றும் சோர கஜ வியாக்கிர முதலியவைகள், நாம ரூபாத்மக மாகவும், சுக துக்கா நுபவங்கட் கேது வாகவும், பிரத்தியக்ஷ மாகவும், நீண்ட கால முள்ளன போலவுந் தோற்றினும், அவைகள், வாஸ்தவத்தில், முக் காலத்தினு மில்லாத அபாவப் பொருட்களே யாவன போலப், பிரபஞ்சம், சிருட்டிக்கு முன்னும், பிரளயத்திற்குப் பின்னும், அபாவப் பொருளா யிருப்பது மன்றி, மத்தியினும், மருள் விழிக்குப் பாவப் பொருள் போற் ருேன்றினும், உண்மை ஞாந மாகிய தெருள் விழிக்கு, அபாவப் பொருளே யாம். ஆதலின், பிரபஞ்சம் அத்தியந்தா பாவ முடைய தெனல், மயக்க மன் றென அறிக.

### பிரபஞ்சம் முக் காலத்தினு மில்லை யென்பதற்குப் பிரமாணம்.

(யசுர் வேதத்தின்)

(தேஜோபிந்தூபநிடதம் 4 ஆம் அத்தியாயம்)

"இந்தப் பிரபஞ்சம் இல்லவே இல்லை. எப்போது மில்லவே யில்லை." (40)

41. வினா:—அந்நியோந்நியாபாவத்துக் கதிவியாப்தி தோடமில்லையோ வெனின்?

விடை:—இல்லை; இதனை, உற்பத்தி சூநிய மெனலால், பிராகபாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, நாச சூநிய மல்ல; நாச சூநிய மெனலால், பிரத்துவம்சாபாவமும் இத் தன்மைத் தாமே யெனின்? அது, உற்பத்தி சூநிய மல்ல; உற்பத்தி நாச சூநிய மெனலால், ஆத்மாவும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, அபாவ ரூப மல்ல; உற்பத்தி நாச சூநிய அபாவ ரூப மெனலால், அத்தியந்தா பாவமும், இத் தன்மைத் தாமே யெனின்? அது, அந்நியோந் நியாபாவ ரூப மல்ல; அதற்கு வே றுகு மென அறிக, (41)

42. வினா:-பிரபஞ்சம், அந்நியோந்நியாபாவ இலக்கணமுடைய தென்றது எதனை லெனின்?

விடை:—கடம் படமும், படம் கடமும் ஆகாதது போல, ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி, தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீர மாகிய அவித்தை, மாயை, ஜீவன், ஈசுவரன் என்னுந் தத்துவங்களில், ஒன்று மற் றொன்றாகாமையி னென அறிக. (42)

43. வினா:—இவ் வைந் தபாவங்கட்குங் கூறிய இலக்கணங்கள் முழுவதும் வேதாந்தத்துக் கங்கீகார மோ வெனின்?

விடை:-இங்கே அபாவங்களி னிலக்கணங்கள் நியாய சாஸ்திரக் கிரம மாகக் கூறப்பட்டன வாதலால், இவ் வபாவங்களில், சாமயிகாபாவ மல்லாத, மற்றை நான் கபாவங்களுக்கும், கூறிய இலக்கணங் களிற் சிற்சில இலக்கணங்கள் அங்கீகார மல்ல வென அறிக. (43)

44. வினு:-பிராகபாவ இலக்கணங்களில், எவ் விலக் கணம் அங்கீகார மல்லாத தெனின்?

விடை:—கடத்தின் பிராகபாவம், அநாதி யெனல் அங்கீகார மல்ல. எதனு லெனின், கடப் பிராகபாவத் துக்கு அதிகரணம், கபால மாம். அக் கபாலம், உற் பத்தி யுடைய தானமையால், அதனை அதிகரண மாக வுடைய அபாவமும் உற்பத்தி யுடையதே யாம். அதனு லென அறிக. (44)

45. வினு:—கடப் பிராகபாவம், கபால முண்டாதற்கு முன், கபாலத்தின் அவயவங்களி லிருக்கும், அதற்கு முன், அவயவத்தின் அவயவங்களி லிருக்கும். இவ் வாற்ருல், பரமாணுக்களி லிருக்கும், பரமாணு அநாதி யானமையால், அதனை அதிகரண மாக வுடைய கடப் பிராகபாவமும் அநாதி யா மெனின்?

விடை:- பிராகபாவம், தன் பிரதியோகியின் உபாதாந காரணத்தி லன்றி, மற்றையவற்றி லிரா தென்பதும்; கபாலத்தின் அவயவம், கபாலத்தின் உபாதாந காரணமே யன்றிக் கடத்தின் உபாதாந காரண மன் றென்பதும்; நையாயிகர் கொள்கை யாகும், ஆதலால், பரமாணுக்கள் துவி யணுகத்துக்கு உபாதாந காரணமும், துவி யணுகம் பிராகபாவத் துக்கு அதிகரணமு மாகுமே யன்றிக்கடத்துக்கு உபா தாந காரணமும், கடப் பிராகபாவத்துக்கு அதிகர ணமு மாகா. ஆகுமாயின், பரமாணுவில் நின்றும் கடம் உற்பத்தி யாதல் வேண்டும். இஃ தன்றிப் பிரு திவிப் பரமாணு, அப்புவினும்; அப்பு, அக்கினியினும்; அக்கிநி, வாயுவினும்; வாயு, ஆகாயத்தினும்; ஆகாயம் தமோகுணப் பிரகிருதி யாகிய விக்ஷேப சத்தியினும்; சிருட்டி காலத் துண்டாயின வென வேதாந்த சாத்திரங்கள் கூறு கின்றமையால், காரிய மாகிய பிருதிவிப் பரமாணு வானது, தனக்குக் காரண மாகிய அப்பு வாதிய நான்கு பூதங்களுற்

பத்தி யாகிய சிருட்டி காலத்துக்கு முன்னமே கடப் பிராகபாவத்துக்கு அதிகரண மாக யிருக்கிற தெனல் புத்திரன், தன்னைப் பெற்ற பிதா, பிதாவைப் பெற்ற பிதாமக ராதிய முன்னோர்க ளுற்பத்தியாகிறதற்கு முன்னமே யிருக்கிற னெனல் போல, அறிஞர்கள் நகைப்புக் கிட மாகுமென அறிக. (45)

46. வினா:-மாயை அநாதியானமையால், மாயை யில் சகல காரியங்களின் பிராகபாவங்களும், அநாதி யாகவுள்ளன வெனக் கொள்ளில், விரோத மில்லையே யெனின்?

விடை:-எங்கே அபாவங்களின் அதிகரணங்களை இந்திரியங்கள் கிரகிக்க வில்லையோ, அங்கே, அபாவங்கள் பிரத்தியக்க மாகா வென்பது துணி பானமை பற்றி, இந்திரியங்கட்கு விடய மாகாத மாயையில், காரியங்களின் பிராக பாவங்கள். அநாதி யாக வுள்ளன வென ஒப்புதல் அசங்கதமாம். அது, சித்தாந்தத்துக்கு இஷ்டமு மில்லை. ஆதலால், பிராக பாவத்துக்குக் கூறிய அநாதி யிலக்கணம் அங்கீகார மல்ல வென்று அறிக. (46)

47. வினா:-பிரத்துவம்ஸா பாவத்துக்குக் கூறிய இலக்கணங்களில், எவ் விலக்கணம் அங்கீகார மல்லாத தெனின்?

விடை:- பிரத்துவம்சாபாவம், தன் பிரதியோகி யின் சமவாயி காரண மாகிய கபாலத்தி லிருக்கிறது. அது, நாசமில்ல தென்பது அங்கீகார மல்ல; எதனு லெனின், நாசமாவ தாகிய கபாலத்தை அதிகரண மாக வுடைய தாக இருத்தலின். அப்படியன்று; கபால மாகிய வியக்தி நாசமடையினும், கபாலத்துவ மாகிய ஜாதி நாசமின்றிய தாகும். அது பற்றி, அதனை அதிகரண மாக வுடைய அபாவமும், நாச மில்ல தென்ற தெனின். அப்படியானல், கடமாகிய

* வியக்தி நாச மடையினும், கடத்துவ மாகிய †ஜாதி நாசமில்ல தாகும். அதுபற்றிக் கடம் நாச மில்லதெனு ஒப்பாமல், அதற்கு நாச மொப்பியது அசங்கதத் தினும் அசங்கதமாம். ஆதலால் பிரத்துவம்சாபாவம் நாச சூநியமெனல், அங்கீகாரமல்ல வென அறிக. (47)

48. வினு:— அத்தியந்தாபாவத்துக்குக் கூறிய இலக்கணங்களில், எவ் விலக்கணம் அங்கீகார மல்லாத தெனின்?

விடை:— அத்தியந்தாபாவம் உற்பத்தி நாச சூநியமெனல் அங்கீகார மல்ல, எதனு லெனின், ரூபத்தின் அத்தியந்தாபாவம் வாயுவின்கண் ணுளது. வாயு உற்பத்தி நாசமுடையதா யிருத்தலின், அதனை அதிகரண மாக வுடைய அத்தியந்தாபாவமும், உற்பத்தி நாச முடைய தாகும். அல்லது, அநாதி யதிகரணம் பற்றி, அத்தியந்தாபாவம் அநாதியா மென்பதை யொப்பினும், நாச முடையதாகும். எதனுலெனின், அத்வைத மதத்தில் ஆத்மாவுக்கு வேருகிய அநாத்ம பதார்த்தங்கள் யாவும் மாயையின் காரியங்களாகும். எங்ஙனம், ஆகாயாதிகளைப் போலக் கட மாதிய பதார்த்தங்கள் மாயையின் காரியங்களாக இருக்கின்றனவோ, அங்ஙனம், அபாவங்களும் மாயையின் காரியங்களாக இருக்கின்றன. காரிய வஸ்துக்கள் யாவும் மித்தை யானமையினுனும், மித்தை யான வஸ்துக்களுக்கு நித்தியத்துவஞ் சம்பவிக்கா தென்பது துணிபானமையினுனும், அவைகள், நாச முடையனவே யாம். ஆதலால், அத்தியந் தாபாவம் உற்பத்தி சூநிய மெனல், ஏக தேச அங்கீகாரமாயினும், நாச சூநிய மெனல் அங்கீகார மல்ல வென அறிக. (48)

---

* வியக்தி ஒரு தருமத்தைப் பொருந்திய அநேக தருமிக ளாம்.
† ஜாதி அநேக தருமிகளிற் கலந் துள்ள ஒரு தரும மாம்.

49. வினா:- அந்நியோந்நியாபாவத்துக்குக் கூறிய இலக்கணங்களில் எவ்விலக்கணம் அங்கீகார மல்லாத தெனின்.

விடை:- அந்நியோந்நியாபாவம் அநாதி நித்திய மெனல் அங்கீகார மல்ல. எதனாலெனின், கடத்திற் படத்தின் அந்நியோந்நியாபாவ மிருக்கிறது. அதற் கதிகரணம் கடமாம். படத்திற், கடத்தின் அந்நியோந் நியாபாவ மிருக்கிறது அதற்கு அதிகரணம் படமாம். கடமும், படமும் உற்பத்தி நாச முடையனவா யிருத்தலின், அவற்றை அதிகரண மாகவுடைய அந்நியோந்நியாபாவமும், உற்பத்தி நாச முடைய தாகும், அநாதி யதிகரணத்தில், அந்நியோந்நியா பாவ மிருக்கில், அநாதி யாகுமே யெனின். அங்ஙன மிருக்கினும், அது, நாசமுடையதாகும். யாங்ஙன மெனின், பிரஹ்மத்தில், சீவனது பேத மிருக்கிறது. அது, சீவனது அந்நியோந்நியாபாவ மாகும். அதற்கு, அதிகரணம் பிரஹ்ம மாகும். பிரஹ்மம் அநாதி யாதலால், பிரஹ்மத்தி லுள்ள சீவனது பேத ரூப அந்நியோந்நியாபாவமும், அநாதி யாகும். பிரஹ்ம ஞானத்தால், அஞ்ஞாந நிவிருத்தித் துவாரா பேதம் நாசமாகும் போது, அவ் வபாவமும் நாசமாய் விடும். ஆதலால், அந்நியோந்நியாபாவத்துக்கு அநாதி யிலக்கணங் கூறுதல், ஏக தேசத்தில் அங்கீ கார மாயினும், நித்திய இலக்கணம் அங்கீகாரமல்ல வென அறிக. (49)

50. வினா:- பிரஹ்மம் ஐந் தபாவமு மின்றிய தென்றது எதனா லெனின்?

விடை:- மண்ணானது கட கலசாதிகள் தோன் றற்கு முன்னருமிருப்பது போலப். பிரஹ்மம், நாம ரூபப் பிரபஞ்சந் தோன்றுத லாகிய சிருட்டிக்கு முன்னரும், உற்பத்தி யின்றிய அநாதியா யிருத்த லால் பிராகபாவமும்; கடகலசாதிகளழிந்த பின்னரும்

மண்ணிருப்பது போலப், பிரபஞ்ச மழிவுறுத லாகிய பிரளயத்துக்குப் பின்னரும், நாசமின்றி யிருத்தலால், பிரத்துவம்சாபாவமும்; மண், கட கலசாதிகள் தோன்றற்கு முன்னரும், அழிந்த பின்னரும், மத்தி யிலும், எப்போது மிருப்பது போலப், பிரபஞ்சந் தோன்றற்கு முன்னரும், அழிந்த பின்னரும், மத்தி யினும் எப்போதுஞ் சதோதயமாக இருத்தலால், சாமயிகாபாவமும்; அத்தியந்தாபாவமும்; மண், கட கலசாதிக ளெல்லாவற்றினு மிருப்பது போலச், சகல பிரபஞ்சங்களினும் வியாபித்துச் சர்வாத்மக மாக யிருத்தலால், அந்நியோந்நியாபாவமும் இன்றிய தென்ற தென அறிக

**பிரஹ்மம் நித்திய மென்பதற்குப் பிரமாணம்.**
**(வேதாந்த சூடாமணி கவி 32)**

"உரியனமுன் னின்மையொடு பின்னின்மை யன்றி யொன்ருென்ருகாமை யென்று மின்மையென நான்காய்த் திரியுமபா வங்களிவை நித்தியத்துட் புகாத திறத்தனவாம்."

**(கூர்ம புராணம் சாங்கிய யோக முரைத்த அத்தியாயம்)**

"ஆதலால் பிரஹ்ம மொன்றே நித்தியம்" (50)

51. வினா:- பிரஹ்மம் புத்த விலக்கண முடைய தென்றது எதனுலெனின்?

விடை:- இயற்கை யறிவும், செயற்கை யறிவும், இன்றிய கட கலசாதிகட்கும்; இயற்கை யறிவின்றிச் செயற்கை யறிவு போற் ருேன்ருநின்ற சரீர த்ரய சிதாபாச மாயை கட்கும்; அந்நியமா யிவைக ளனைத் தையும் பிரகாசிப்பித்துக் கொண்டு, தா னொன்றி னுலும் பிரகாசிக்கப்படாமல் சுவயம் பிரகாசத் தன்மையால் நித்தியாபரோக்ஷமாய், எக்காலத்தும், புத் என்னும் அறிவு வடிவ மாக இருத்தலின் என அறிக.

பிரமாணம் (இலக்கணவிருத்தி கவி. 27)

"அறைதலுறு தானுயும் கூடி நின்று மறிவற்ற கடம தி பூதா திக்கு, முறைதனக்கோ ரறிவிலதா யொன்றினேடே யுறுதலினு லெறிவெனவேதோன்று கின்ற, குறைவுறுமூன் றுடல்சீவன் மாயை கட்குங் கூறலுறும் வேருகி யவைக டம்மைக், கறையின்றிப் பிரகாசஞ் செய்தெப் போதுங் கநபோத வடிவாம்நாம் புத்த மாமே" (51)

52. வினு:- பிரஹ்மம் முக்த விலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- எந்தக் காலத்தும், சூரியன், அந்தகாரப் பற்றின்றியும்; ஆகாயம், வாயு வாதிய நான்கு பூதப் பற்றின்றியு மிருப்பது போலப், பிரஹ்மம், அஞ்ஞாந தற் காரியங்க ளாகிய தேகாதிப் பிரபஞ்சப் பற்றின்றி யிருத்தலினென அறிக. (52)

53. வினு:- பிரஹ்மம் சத்திய இலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- திந மாத வருட கால கற்பங்கடோறும் ஆரோபித மாகத் தோன்றுநின்ற அவத்தாத் திரயப் பிரபஞ்சங்கட்கு விலக்ஷண மாய், அவைக ளுண்டா தற்கு முன்னும், உண்டாகி அழிந்த பின்னும், மத்தியினும், தோன்றல் திரிதல் கெடுத லாகிய விகாரங்களை யுருமல், ஒரே பிரகார மாக விளங்கிக் கொண் டிருத்தலி னென அறிக.

பிரமாணம்.

(சுக்கில யசுர் வேதத்தின் நிராலம் போபநிடதம், சர்வ சாரோபநிடதம்)

"பிரஹ்மம் சத்தியம் சகத்துப் பொய்."

"முக் காலத்தினுந் தொடர்புற் றிருப்பது சத்தியம்." (53)

54. வினா:- பிரஹ்மம் பரமாநந்த இலக்கண முடையதென்றது எதனா லெனின்?

விடை:- கால கன்ம பேதத்தால், கிரகம், தநம், மகன், மனைவி, சரீரம் முதலியன வெறுப்புக்கு இடமாய்க் கைவிடப்படினும், ஆத்ம சொரூப மாகிய பிரஹ்மம், எந்தக் காலத்தினுங் கைவிடப்படாமல், பரமப் பிரீதிக்கு விடயமா யிருத்தலினானும்; ஐம்பது கோடி பூ மண்டலங்களையும், அள வற்ற சேநா சமூகங்களோடு அழகு இளமை அரோக திட காத்திர வித்தை வீரிய விவேக ஐசுவரியங்களையுடைய ஏக சக்கிராதிபதி யா யிருந்து பாலநஞ் செய்து வரும், சார்வ பௌமனுக் குள்ள, மநுடாநந்த முதல், இக் கற்பத்தில் மநுடனா யிருந்து, புண்ணிய விசேடத்தால் கந்தருவ பதத்தை யடைந்த, மநுட கந்தருவ னாநந்தம்; பூர்வ கற்பத்திற் செய்த புண்ணிய விசேடத்தா லிக் கற்பத்திற் றானே கந்தருவ னாகிய, தேவ கந்தருவ னாநந்தம்; அக்கிநிசுவாத்தாதிய பிதிர் தேவதைக ளாநந்தம்; கற்பாதியிற்றானே தேவத்துவத்தை யடைந்த ஆஜாந தேவ ராநந்தம்; வர்த்தமாந கற்பத்தில் அசுவமேதாதிய கருமங்களைச் செய்து மகத் பதத்தை யடைந்தவ ராயும், ஆஜாந தேவரால் சேவிக்கப் பட்டவ ராயும் உள்ள கரும தேவ ராநந்தம்; அட்டவசு துவாதசாதித்தியர் ஏகா தச வுருத்திரர் என்னும் 31 முக்கிய தேவ ராநந்தம்; நூறு யாகங்கள் செய்து தேவ லோகாதிபதி யான இந்திர னாநந்தம்; தேவ குரு வாகிய பிரகஸ்பதி யாநந்தம்; பிரஜைக ளென்னும் ஜீவ கோடிகளுக் கதிபதி யாகிய பிரஜாபதி யாநந்தம்; இரணிய கருப்ப னாநந்தம் வரை ஒன்றற் கொன்று உத்தரோத்தரம் நூறு நூறு மடங் கதிகமா யுள்ள பதி னொரு வகை யாநந்தங்களையும், பேந தரங்க புற்புத திவலைகள் போலற்பமெனும் படி வியாபக மா யுள்ள பிரளய கால மகோததி போன்ற பே ராநந்த சொரூப மா யிருத்தலினானு மென அறிக.

(11) வகை ஆநந்தங்களுக்குப் பிரமாணம்.
(கைவல்லிய நவநீதம்)

(2 ஆவது சந்தேகந் தெளிதற் படலம் கவி 131)

"மனுடன் மனுடகந் தருவன் றேவநன் மாகந் தருவனொண் பிதிரோடே, பனுமா ஜாநர்கள் கருமத் தேவர்கள் பகர்முக் கியரிந் திரனுசான், கனமார் பிரஜா பதியென் விராட்டுபொன் கர்ப்பப் பிரமனென் றின்னோர்கள், பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம்." (54)

55. வினா:- இவ்வாநந்தங்கட்கு வேருகிய ஆநந்தங் களுமுளவோ வெனின்?

விடை:- மநுடாநந்த முதலிய (11) வகை ஆநந் தங்களும், எட்டு வித ஆநந்தங்களில், ஓர் வித ஆநந்த மானமையின், இவைகளை யல்லாமல், வேருநந்தங் களு முளவா மென அறிக. (55)

56. வினா:- எட்டு வித ஆநந்தங்க ளெவை யெனின்?

விடை:- விடயாநந்தம், பிரஹ்மாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிஜாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்தம், வித்தியாநந்த மென்பவைகளாம். இவைகளில், வநிதைய ராதிய விடய லாபத்திற் றேன்றுவது விடயாநந்தம். நித்திரையிற் றேன்றுவது பிரஹ்மாநந்தம். நித்திரை தெளிந்துந் தெளியாவிடத்திற் றேன்றுவது வாசநாநந்தம். விருப்பு வெறுப் பின்றிய உபேக்ஷா புத்தியிற் றேன்றுவது முக்கியாநந்தம். யோக வலியால் மநோ லய மான விடத்திற் றேன்றுவது நிஜாநந்தம் பிரிய வஸ்துக்களில், யானே பிரிய வஸ்து வென அறிந்த விடத்திற் றேன்றுவது, ஆத்மா

நந்தம். நாம ரூபப் பிரபஞ்ச மனைத்து மித்தை, யாமே சத்தியமென்னும் விவேகத்திற் ரேன்றுவது அத்வைதாநந்தம் தத்துவமசி யாதி மகா வாக்கிய ஜந்நிய அபரோக்ஷ ஞாநத்திற் ரேன்றுவது வித்தியாநந்தம் என அறிக.

எட்டுவித ஆனந்தங்களுக்குப் பிரமாணம்
(வேதாந்த சூடாமணி கவி 31-32)

"மாதுமுதல் விடயவூ தியங்கடமிற் ரேன்றி வரல் விடய வாநந்தங் கண்படையிற் ரேன்றல், ஓதுபிர மாநந்தந் துயிலொழிவிற் ரேற்ற முடையது தான் வாசநா நந்தங்கே டின்ப, மாதலிலா நொது மல்மதி தோன்றுதல்முக் கியமா மாநந்தம் மநோலயயோ கத்தினில்வந் துதித்த, லேதமறும் நிஜாநந்தம் பிரியவிட யத்துள் யான்பிரிய னெனத் தோன் றுதலாந்மா நந்தம்."

"விரியுமுல கனைத்தும்பொய் மெய்மைதா னென்னும் விவேகத்திற் ரேன்றுவதே யத்துவிதா நந்தம், அரியமறை முடிவாகும் வாக்கியஞா நத்தா லாதலது வித்தியா நந்தமென வறிக." (56)

57. வினு:-பிரஹ்மம் அத்துவித இலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:-சஜாதீய விஜாதீய சுவகத பேத ரகித மாயிருத்தலி னென அறிக. (57)

58. வினு:-சஜாதீய பேத மாவது யா தெனின்?

விடை:-மரத்துக்கு, மற்ருேர் மரத்திஞேடும், பிராமணனுக்கு, மற்ருேர் பிராமணஞேடும் உள்ள சமாந சாதித்துவ பேத ௦மன அறிக. (58)

59. வினு;-பிரஹ்மத்துக்குச் சஜாதீய பேத மின் றென்பது எதனு லெனின்?

விடை:- சர்வாத்மக பரிபூரண சத்தாகிய பிரஹ்மம் ஒன்றே யாகும். அதற்கு, சஜாதீய மாக வேறு பிரஹ்ம மில்லாமையி னென அறிக. (59)

60. வினு:-இருக்கிற தென விவகரிக்கப்படுகிற தெது வோ, அது, சத் தெனச் சாத்திரங்கள் கூறுகின்றமை யால், ஜீவ சேதந மிருக்கிறது, ஈசுவர சேதந மிருக்கிறது, வானிருக்கிறது, காற் றிருக்கிறது, கந லிருக்கிறது, ஜல மிருக்கிறது, மண் ணிருக்கிற தென விவகரிக்கப்படுகிற ஜக ஜீவ பரங்கள் யாவும் சத்துக் களே யாகும். ஆதலின், இவை பிரஹ்மத்துக்குச் சஜாதீய பேதங்க ளாமே யெனின்?

விடை:-கடாகாயம், மடாகாயம், சலாகாயம், மேகாகாயம், குதி ராகாய மென உபாதி திருஷ்டி யால் பல வாகாய மாக விவகரிக்கப்படினும், உண்மை யில் ஒரு ஆகாயமா யிருத்தல் போல, சொரூப திருஷ்டியா லாராயு மிடத்துப் பல வாக வின்றி, யாவும் ஓர் சத் தாகவே யிருத்தலின், பிரஹ்மத்துக்கு சஜாதீய பேதங்க ளின் றென அறிக. (60)

61. வினு;-கடம், கடம், கட மென ஒரு பெயராற் கூறப்படினும், கடங்கள் சிறியது, பெரியது, வலியது என ஒன்றற் கொன்று வேறுபட்டுத் தார தம்மியங் களா யுள்ள, பல கடங்க ளாக விவகரிக்கப்படுவன போல, இருக்கிற திருக்கிற தெனச் சத்துக்கள், ஒரு பெயராற் கூறப்படினும், கர்த்திருத்துவாதி யபேத ரூப ஜீவ சத்து, சர்வஞ்ஞத்து வாதி யபேத ரூப ஈசுவர சத்து, சப்த மாதி யபேத ரூப பூதசத் தென ஒன்றற் கொன்று தார தம்மியங்களா யுள்ள பல சத்துக்க ளாகச் சாத்திரங்களில் விவகரிக்கப்படுகின்ற மையால், சத்துக்கள் பலவே யா மெனின்?

விடை:-கடம், கடம், கட மென ஒரு பெயராற் கூறப்படினும், அவைகள் வாய், கழுத்து, பண்டி.

அடி யென்னும் அவயவ பேதங்களை யுடைய, சிறிது, பெரிது, கனம், கன மின்மைய வாதிய வெவ் வேறு தன்மையனவா யிருத்தலினாலும், ஓர் கடத்துக்கும், மற்றோர் கடத்துக்கும், மத்தியில் கடாபாவப் பிரதீதி காணப்படுகின்றமையினாலும், கடங்கள் பல வாம். ஆதலின், கடத்துக்குச் சஜாதீய பேதங்க ளுள்ளன வாகும், இருக்கிற திருக்கிற தென ஒரு பெயராற் கூறப்படுவது மன்றி, அவயவ ரகிதமா யிருத்தலி னானும், இருக்கிற திருக்கிற தென்னுஞ் சத் தம்ஸத் துக் கிடையில் சத்தின் அபாவப் பிரதீதி யின்றி, யிருக் கிற தெனச் சத்தே பிரதீதியாகின்றமையினானும், சாத்திரங்களில் உபாதி பேதம் பற்றி, பல சத் தாக விவகரிக்கப்பட்டதே யன்றி, சொரூபம் பற்றி யன்றாம். ஆதலின், சத்து ஒன்றே யாகு மென அறிக. (61)

62. வின:-பாரமார்த்திக சத்து, வியாவகாரிக சத்து, பிராதிபாசிக சத்து என மூவித சத்துக்க ளுள வெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையால், சத்துக்கள் பலவே யாகும் ஆதலின், பாரமார்த்திக சத் தாகிய பிரஹ்மத்துக்கு, மற்றைச் சத்துக்கள் சஜாதீய பேதங்க ளாகலா மெனின்?

விடை:-ஞாநத்தாற் பாத மாவது வியாவகாரிக சத்து, ஞாந மின்றிப் பாத மாவது. பிராதிபாசிக சத்து, ஆகிய இரண்டு சத்துக்களும், ஒன்றினாலும் பாத மாகாததா யுள்ள பாரமார்த்திக சத் தாகிய பிரஹ்மத்துக்குச் சஜாதீய பேதங்களாகா தென அறிக. (62)

63. வின:-சொற்ப காலத்தில் நியம மின்றி யிறந்து போகின்ற பிராஹ்மணனும், நீண்ட கால மாகிய நூறு வயது பரியந்த மிருந்து கால நியமப்படி யிறந்து போகின்ற பிராஹ்மணனும் எந்தக் காலத் தினும் இறந்து போகாமல் காய சித்தி யாதிகளா யிருக்கின்ற பிராஹ்மணனும், ஜீவித்திருப்பதில்,

கால வி த் தி ய ா ச ங் க ளை யுடையவர்களாக இருக்கினும், பிராமண சாதித்துவத்தில் வித்தியாச மின்றிச் சம மாக வுள்ளவர்க ளாவது போலப், பிராதி பாசிக சத்தும், வியாவகாரிக சத்தும், பாரமார்த்திக சத்தும், ஒன்றற் கொன்று ஜீவித்திருப்பதில், கால வித்தியாசங்களை யுடையன வாக இருக்கினும், சத்துச் சாதித்துவத்தில், சமமாகவே யிருக்கின்றமை யால், பாரமார்த்திக சத்துக்கு, மற்றைச் சத்துக்கள் ஸஜாதீயங்க ளல்ல வென்றது பொருந்தா தெனின்?

விடை:-பிராதிபாசிக சத்தும், வியாவகாரிக சத்தும், கற்பித மானமையின் பொருந்து மென அறிக. (63)

64. வினு:-அசேதநங்க ளான அவித்தை யாதிய பஞ்ச பூத பௌதிகங்கள் கற்பிதங்க ளாயினும், பிராதி பாசிக தைசதனும், வியாவகாரிக விசுவனும், பிரஹ்மத்தைப் போற் சேதநங்க ளாகக் காணப் படுகின்றமையால், கற்பிதங்க ளன்று. வாஸ்தவ மாகிய சத்துக்களே யாகு மெனின்?

விடை:-காரிய மாகிய பிரதிபிம்ப சூரியன், அவி சாரத்தால் காரண மாகிய பிம்ப சூரியன் போலவும், அந்நியம் போலவுந் தோற்றினும், பிம்ப சூரியனுக்கு அந்நிய மாகாதது போலக், காரியமாகிய விசுவனும், தைசதனும், காரண மாகிய பிரஹ்ம சேதநம் போல வும், அந்நியம் போலவும் தோற்றினும் அந்நிய மாகா ரென அறிக. (64)

65. வினு:-அற்றேல் தைசதனையும், விசுவனையும், பிரஹ்ம மெனச் சுருதிகள் ஒரே பெயரால் வியவ கரிக்க வேண்டும். அங்ஙன மின்றிப், பிரஹ்மம் விசு வன் தைசத னெனப் பேத மாகிய மூன்று பெயரால் வியவகரிக்கின்றனவே யெனின்?

விடை:-சலம், அலை, நுரை யெனப் பேத மாகிய மூன்று பெயரால், சலம் வியவகரிக்கப்படினும், சலத்தில் அலையும், அலையில் நுரையும், கற்பித மானமையால், நுரை அலைக்கும், அலை சலத்துக்கும் வேறாகாமல், வாஸ்தவத்தில் சல மாத்திர மாகவே நிலை பெறுவது போலப், பிரஹ்மம், விசுவன், தைசதனெனப் பேத மாகிய மூன்று பெயரால் பிரஹ்மம் விவகரிக்கப்படினும், பிரஹ்மத்தின்பால் விசுவனும். விசுவன்பால் தைசதனும் கற்பித மானமையால், தைசதன் விசுவனுக்கும், விசுவன் பிரஹ்மத்துக்கும் அந்நிய மாகாமல், பிரஹ்ம மாத்திரமாகவே நிலை பெறும். ஆதலின், அந்நிய மல்ல வென அறிக. (65)

66. வினா:- பிராதிபாசிக தைசதன் வியாவகாரிக விசுவனிடத்தும், அவ் விசுவன், பாரமார்த்திகப் பிரஹ்மத்தினிடத்துங் கற்பித மென்றது எதனாலெனின்?

விடை:- பிராதிபாசிக சர்ப்பப் பிரதீதி வியாவகாரிக இரச்சு ஞாநத்தினாலும், வியாவகாரிக இரச்சுப் பிரதீதி இரச்சு வுபகித சேதந ஞாநத்தினாலும், பாத மாவது போலப், பிராதிபாசிக தைசதப் பிரதீதி வியாவகாரிக விசுவ ஞாநத்தினாலும், வியாவகாரிக விசுவப் பிரதீதி பாரமார்த்திகப் பிரஹ்ம ஞாநத்தினாலும், பாத மாகின்றமையி னென அறிக. (66)

67. வினா:- பிராதிபாசிக தைசதன் வியாவகாரிக விசுவனிடத்தும், வியாவகாரிக விசுவன், பாரமார்த்திகப் பிரஹ்மத்தினிடத்தும், கற்பித மானால், இவைகள் முறையே ஒன்றற்கொன்று காரண மாகும். அற்றேல், காரணத்தின் றன்மை காரியத்தினிடத்தும் விளங்க வேண்டும். அங்ஙனம் எவைகள் விளங்குகின்றன வெனின்?

விடை:- சலத்தின் றன்மை யாகிய, சுவை, நெகிழ்ச்சி, குளிர்ச்சி அலையினிடத்தும். அதன் மூலை

மாய் நுரையினிடத்தும் விளங்குவன போலப். பார மார்த்திகப் பிரஹ்மத்தின் இருப்பு விளக்கம் பிரியத் தன்மை என்பன வியாவகாரிக விசுவனிடத்தும், அப்படியே, பிராதிபாசிக தைசதனிடத்தும் விளங்கு கின்றன வென அறிக. (†வாசு—3—வரு) (67)

68. வினு:- எது எதனிடத்திற் கற்பிதமோ, அதற்கு, அது அதிட்டாந மாகும். ஆதலால், பிராதிபாசிக தைசதன் விசுவனிடத்தும், அவ் விசுவன், பார மார்த்திகப் பிரஹ்மத்தினிடத்துங் கற்பித மாஞல், முறையே தைசதனுக்கு விசுவனும், விசுவனுக்கும் பிரஹ்மமும் அதிட்டாநமென்று சொல்ல வேண்டும். அங்ஙனஞ் சொல்லில் கற்பித மாகிய தைசதனுக்கு, வாஸ்தவ மாகிய பிரஹ்மம் அதிட்டாநமாகுமே யன்றி, மற் ருேர் கற்பித மாகிய விசுவன் அதிட்டாந மாகாது; ஆகு மெனல் விரோத மா மெனின்?

விடை:- பிராதிபாசிக சர்ப்பத்துக்கு வியாவ காரிக இரச்சு வுபகித சேதநமே அதிட்டாந மாக இருக்கினும், இரச்சு, அச் சேதந வியாபகத்தைப் பெற்றிருத்தலால், மித்தை யாகிய இரச்சுவையும், மித்தை யாகிய சர்ப்பத்துக்கு அதிட்டாந மெனத் தூல திருஷ்டியை நோக்கி ஒரோ விடத்திற் கூறுவது போலப், பிராதிபாசிக தைசதனுக்கு வியாவகாரிக விசுவனில் வியாபித்துள்ள பாரமார்த்திகப் பிரஹ்மமே அதிட்டாந மாக இருக்கினும். வியாவகாரிக விசுவன், அச் சேதந வியாபகத்தைப் பெற்றிருத்தலால், மித்தை யாகிய விசுவனையும், மித்தை யாகிய தைசத

† ஸ்ரீ வாசுதேவ யதீசுவரர் இயற்றிய 45 நிருபகங்களை யுடைய பிருஹத் (விரிவு) வாசுதேவ மனனம் என்னும் விவேகசார நூலே, அவரது சிஷ்யர் சுருக்கியியற்றிய 12 வருணகங்களையுடைய லகு (சுருக்க) வாசுதேவ மனனம், மூன்ரும் வருணகத்தின் விஷயங்களாம். (நிருபகம்-வருணகம்-என்பவை பிரகரணங்களென்னும், பிரிவு களாம்).

னுக்கு அதிட்டாநமெனத் தூல திருஷ்டியை நோக்கிச் சாத்திரங்கள் ஒரே ரா விடத்திற் கூறுகின்றன. ஆதலின், விரோதமின்றென அறிக. (68)

69. விஞ:— விஜாதீய பேத மாவது யாதெனின்?

விடை:— மரத்துக்கும் கல்லுக்கும், பிராஹ்மணனுக்கும் சூத்திரனுக்கும், மனிதனுக்கும் மிருகங்களுக்கும் உள்ள அந்நிய சாதித்துவ பேத மென அறிக. (69)

70. விஞ:- பிரஹ்மத்துக்கு விஜாதீய பேத மின்றென்பது எதனு லெனின்?

விடை:— பிரஹ்ம விலக்கணத்துக்கு வே றிலக்கணமுடைய பொரு ளில்லாமையி னென அறிக. (70)

71. விஞ:- மாயை பிரஹ்ம விலக்கணங்கட்கு வேருகிய அநிருத சட துக்க விலக்கணங்களை யுடையதாதலின், அது பிரஹ்மத்துக்கு விஜாதீய மாகலாமே யெனின்?

விடை:— மாயை சத்திய வஸ்து வாயின், அது பிரஹ்மத்துக்கு விஜாதீய மாகும். அங்ஙன மின்றி, மித்தியா வஸ்து வாதலின், விஜாதீய மாகா தென அறிக. (71)

72. விஞ:— சத்திய வஸ்துவுக்கு மித்தியா வஸ்து வேறிலக்கண முடைய தென்பது பிரசித்த மா யிருக்க, ஒன்றற்கொன்று விஜாதீய மாகா தென்றது எதனு லெனின்?

விடை:— எது மித்தியா வஸ்துவோ, அது வாஸ்தவ அதிட்டாநத்துக்குப் பிந்ந மாகா தென்னுஞ் சுருதியும், மண்ணிற் கற்பித மாகத் தோற்றுங் கட சத்தி, மண்ணினுக்கு அந்நிய மாக நிலை பெருததுபோலப், பிரஹ்மத்திற் கற்பித மாகத் தோற்றுகின்ற

மாயா சத்தி, பிரஹ்மத்துக்கு அந்நிய மாக நிலை பெரு தென்னும் யுக்தியும், ஓர் சங்கற்பத்தின் அந்தத் துக்கும், அடுத்த மற் ருேர் சங்கற்பத்தின் ஆதிக்கும் மத்தியி லுள்ள, நிர்ச்சங்கற்ப காலத்திற் பிரகாசிக் கின்ற தனது சுபாவ நிலையில் மாயாப் பிரதீதி யின்றி, அறிவு மாத்திர மாகவே யிருக்கின்ற அநுபவமு, மிருத்தலி லென அறிக.

பிரமாணம்

(சூத சம்மிதை விசேட சிருஷ்டி)

''நிருமல சிவன்றன் மாயையாற் கனுப்போ னிருமிக்கப் பட்டன வெல்லாம், மருவுகா ரியங்கா ரணத்திற்கு வேரு காமையின் மாயைரு பந்தான், பெருகுமா யையுமற் றதிட்டாந மாகும் பிரஹ்மத்தின் வேருன தன்று, குருபரனருள்கைக் கொண்டுமுக் குறும்புங் கொன்றுயர்ந் தோங்கிய முநிவீர்.''

(பிரமகீதை 4ஆவது கேனுேபநிடத அத்தியாயம். கவி 27)

''எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்பு வர்கள், மெய்ப்பரமன் றனையொழிய வேருெருமா யையுமில்லை, ஒப்பரிய பரனுெழிய வொருமாயை யுண்டாகி, லப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்ருே'' (72)

73. வினு:- சுவ கத பேத மாவது யா தெனின்?

விடை:- தனக்கும், தன்னிடத்திற் ருேன்றித், தன்னை விட் டகலா திருப்பதற்கு முள்ள பேத மென அறிக. (73)

74. வினு:- அஃ தெது போலு மெனின்?

விடை:- மரத்துக்கு, மரத்தைவிட் டகலாதிருக் கும் பத்திர புட்ப பலாதிகளுக்கும், அவயவிக்கும்,

அவயவியிற்ரேன்றி அவயவியை விட்டகலாதிருக்கும் அவயவ மாகிய அஸ்த, பாத, மஸ்தகங்களுக்கு முள்ள பேதம் போலு மென அறிக. (74)

75. வினு:- பிரஹ்மத்துக்குச் சுவ கத பேத மின் றென்பது எதனு லெனின்?

விடை:- பிரஹ்மம் ஓ ரவயவமு மின்றி நிரவயவப் பொருளா யிருத்தலி னென அறிக. (75)

76. வினு:- அகம் சத்தத்துக்குப் பொருள் பிரஹ்ம மெனச் சுருதிகள் கூறுகின்றமையால், அகம் ராகி, அகந் துவேஷி, அகங் காமி. அகங் குரோதி, எனத் தோன்ரு நின்ற இராகாதி தருமங்க ளனைத்தும் பிரஹ்மத்தி னிடமாகவே தோன்றி யுள்ளவைக ளாகும். ஆதலால், அத்தருமங்கள், பிரஹ்மத்துக்கு அவயவங்க ளாகிய சுவகதங்க ளாகுமே யெனின்?

விடை:- இராகாதிக ளனைத்துஞ் சாக்கிர சொப்ப நங்களில், அந்தக் கரணந் தோன்றிய போது தோன்றிச், சுழுத்தி யாதிகளில் அடங்கிய போது அடங்கி விடுகின்றமையால், அசத்துச் சட துக்க மய மாகிய அந்தக் கரணத்தின் தருமங்களே யன்றிச், சச்சிதாநந்த மய மாகிய பிரஹ்மத்தின் தரும மன் ரும். ஆதலின், பிரஹ்மத்துக்குச் சுவகதங்களாகா வென அறிக. (76)

77. வினு:- அற்றேல், சச்சிதாநந்த விலக்கணங்கள் ஆத்மா வாகிய பிரஹ்மத்தில், அகம் சச்சிதாநந்த மெனத் தோன்றுகின்றமையால், அவ் விலக்கணங்க ளேனும், பிரஹ்மத்துக்கு சுவ கதங்க ளாகாவோ வெனின்?

விடை:- சச்சிதாநந்த இலக்கணங்கள் பிரஹ் மத்தின் சுபாவ மாய் எப்போது முள்ள அசாதாரண தருமங்க ளாகவும், அபேத மாகவும், ஏக மாகவும்,

விளங்காநின்ற சொரூப லக்ஷணங்க ளாகும். ஆதலின், அவ் விலக்கணங்கள் பேதமாகிய சுவகதங்க ளாகாவென அறிக. (77)

78. வினா:- கையானது, அத்தம் கரம் பாணி யெனப் பல வாக வியவகரிக்கப்படினும், பரியாய சப்த பேதமே யன்றி, அருத்த பேத மில்லாமல், கை யொன்றாகவே யிருக்கிறது. அங்ஙன மிராமல் சத்து சித்து ஆநந்த மெனச் சத்தத்தினும், இருப்பு விளக்கம் சுகமென அருத்தத்தினும், ஒன்றற் கொன்று பேத மாகக் காணப்படுகின்றமையால், சச்சிதாநந்தம் ஏக மெனல் பொருந்தா தெனின்?

விடை:- அக்கினியானது உலோகிதம், உஷ்ணம், பிரகாச மெனச் சத்தத்தினும், சிவப்பு வெம்மை ஒளியென அருத்தத்தினும், பேத மாக வியவகரிக் கப்படினும், அக்கினி யொன் றாகவே யிருத்தல் போலும்; சல மானது, சைத்திய திரவ சுக்கில மெனச் சத்தத்தினும், குளிர்ச்சி இளகல் வெண்மை யென அருத்தத்தினும், பேத மாக வியவகரிக்கப் படினும், சலம் ஒன்றாகவே யிருத்தல் போலும்; சச்சி தாநந்த இலக்கணம் சத்தத்தினும், அருத்தத்தி னும், பேத மாக வியவகரிக்கப்படினும், சத்தின் தேஜசே சித்தும், சித்தி னிருப்பே சத்தும், இவ் விரண்டின் ஒருமையே, ஆநந்தமு மாய் அபேத மாக இருத்தலால், ஏக மெனல் பொருந்து மென அறிக. (78)

79. வினா:- மரத்துக்கு அந்நியப்படாமல் மரத்தி லிரா நின்ற பத்திர புட்ப பலாதிகளை மரத்துக்குச் சுவ கதங்களாக ஒப்பியது போலப், பிரஹ்மத்துக்கு அந்நியப்படாமல், பிரஹ்மத்தி லிரா நின்ற சச்சிதா நந்த இலக்கணங்களைப் பிரஹ்மத்துக்குச் சுவகதங்க ளாக ஏன் ஒப்ப வில்லை யெனின்?

விடை: மர முழுதும், பத்திர புட்ப பல மாக இராமல், ஓரோ ரிடத்திற் பத்திரமும், ஓரோ ரிடத்திற் புட்பமும், ஓரோ ரிடத்திற் பலமும், ஓரோ ரிடத்திற் பத்திர புட்ப பலங்களி னபாவமு மாக இருத்தலால், மரத்துக்குப் பத்திர புட்ப பலாதிகள் பேத மாகிய சுவ கதங்களாக ஒப்பப்பட்டன. அங்ஙனம், பிரஹ்மத்தில் ஓரோரிடத்திற் சத்தும், ஓரோ ரிடத்திற் சித்தும், ஓரோ ரிடத்தி லாநந்தமும், ஓரோ ரிடத்திற் சச்சிதாநந்தங்களி னபாவமுமாக இராமல், பிரஹ்ம முழுவதுஞ் சச்சிதாநந்த சொரூப மாகவே யிருத்தலால், சச்சிதாநந்த இலக்கணங் களைப் பிரஹ்மத்துக்குச் சுவ கதங்க ளாக ஒப்ப வில்லை யென அறிக. (79)

80. வினு:- எந்த மதஸ்தரும் பிரஹ்மத்துக்கு சுவ கதாதிய மூன்று பேதங்களில், ஓர் பேத மாயினும் ஒப்ப வில்லையோ வெனின்?

விடை:- பரவியாபகத்திற் சீவர்கள், பரத்தின் தருமமாய்ப் பிந்நா பிந்நமாக இருக்கிறுர்களென்னும் விசிஷ்டாத்துவிதிகள் சுவகதமும், சொற்ப விசிஷ் டாத்துவித அங்கீகாரிக ளாய்ப், பரசிவ சமாநம் ஆன்மா வென்னும், சிவ சமவாதிகள், சஜாதீயமும், பரம் வேறு, ஜீவர்கள் வேறு, பரத்தி னருளால் சீவர்கள் முத்தியில் தத் தம் குணங்களோடு இன்ப மநுபவிக்கின்றன ரென்னும் துவித வாதிகள், விஜாதீயமும், சுருதியாதிகட்கு விரோத மாக ஒப்பி யிருக்கின்றன ரென அறிக. (80)

81. வினு:- இங்ஙன மொப்பியது சுருதியாதிகட்கு விரோத மென்றது எதனு லெனின்?

விடை:— ஏகமேவாத்துவித மென்னும் சாமவேத சாந்தோக்கிய சுருதியும், யஜுர்வேத தைத்திரீய சுதிருயும், ஏக மென்னும் பதத்தால், சுவகதமும்;ஏவ வென்னும் பதத்தால் சஜாதீயமும்; அத்துவித

மென்னும் பதத்தால் விஜாதீயமும்; பிரஹ்மத்துக் கின் றென்கின்றமையால் சுருதிக்கும் உலகங்க ளனைத் தினுக்கும், ஏகச்சக்கராதிபதி யாகிய சார்வ பௌமன் இருக்கும் போது, மற் றொருவனுக்கு சொற்ப சக்க-ராதிபதித்துவமேனுஞ் சித்தியாதது போலப், பிரஹ்மம் பூரண சத் தாக இருக்கும் போது, ஜீவாதிகட்கு அற்ப சத்துத்துவ மேனுஞ் சித்தியா தென்னும் யுத்திக்கும், வாசிட்டம் 4 ஆவது திதிப்பிரகரணத்தில் 5 ஆவது கசன் கதை, கவி. 20 ''மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில், வானில்வை யகத்தி லெங்கும் நானன்றி மற்றொன் றில்லை, யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லை, தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா நந்தம்'' என்ற கச முநிவ ராதிய மகரிஷிகள் சுவாநுபவத் துக்கும் பொருந்தாமையி னென அறிக.

பிரமாணம். (யசுர் வேதத்தின் சர்வசாரோபநிடதம்)

''சஜாதீய. விஜாதீய, பேத மற்றது பிரஹ்மம்''

(அதர்வணவேதத்தின்)

(மாண்டூக்கிய உபநிடதம் 7ஆம் வாக்கியம்)

''சாக்கிர முதலிய அவஸ்தை யற்றது. விகார மற்றது, மங்களகர மானது, மூன்று வித (சஜாதீய விஜாதீய சுவகத) பேத மற்றது பிரஹ்மம்.''

(ரிபு கீதை 1 ஆம்அத்தியாயம்)

''அத்துவித அறிவுருவே பிரஹ்ம மாகும்.'' (81)

82. வினா:- பிரஹ்மம் பெரிதா யுள்ள அனைத்துக்கும் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- சிறிதாயுள்ள அனைத்துக்குஞ் சிறிதா யுள்ள ஜீவன் முதல், அவித்தை யென்னும் ஆநந்த மய கோசம், விஞ்ஞாந மய கோசம், மநோ மய கோசம், பிராண மய கோசம், அந்ந மய கோசம்,

கிரகம், நகரம், தேசம், பிருதிவி, அப்பு, அக்கிநி, வாயு, ஆகாயம், விராட்டு, இரணியகருப்பம், அவ் வியாகிருதம், பிரகிருதி பரியந்தம், முறையே ஒன்றற் கொன்று பெரி தாகும். பெரி தாகிய இவைக ளனைத் தும் ஆகாயத்தில் மேக படலங்கள் ஏக தேச மாகத் தோன்றுதல் போலப், பிரஹ்மத்தி லேக தேச கற்பித மாகத் தோன்றுதலினனும், பிரஹ்மத்துக்குச் சமா நாதிக மான பொரு ளில்லாமையினனு மென அறிக. (82)

83. வினு:- ஜீவனினும் ஆநந்த மய கோசம் பெரி தென்றது எதனு லெனின்?

விடை:— பிரதிபிம்பங்கட்கு ஆசிரய மாகிய சல தருப்பணுதிகள் வியாபகமா யிருத்தல் போலப், பிரஹ் மப் பிரதிபிம்ப னுகிய ஜீவனினும் ஜீவாசிரய மாகிய ஆநந்த மய கோசம் வியாபகமா யிருத்தலி னென அறிக. (83)

84. வினு:- ஆநந்த மய கோசத்தினும் விஞ்ஞாந மய கோசம் பெரி தென்றது எதனு லெனின்?

விடை:— கடாதிகளை விளக்குவ தாயும், அந்த காரத்தை நிவிர்த்திப்ப தாயு முள்ள சூரிய கிரணம் அவைகளினும் வியாபகமா யிருப்பது போல, ஆநந்த மய கோச தரும மாகிய பிரிய மாதிகளை விளக்குவ தாயும், அஞ்ஞாநத்தை நிவிர்த்திப்ப தாயு முள்ள ஞாநாகாரமான புத்தி விருத்தி, அவைகளினும் வியாபகமா யிருத்தலி னென அறிக. (84)

85. வினு:- விஞ்ஞாந மய கோசத்தினும் மநோ மய கோசம் பெரி தென்றது எதனு லெனின்?

விடை:- விஞ்ஞாந மய புத்தியின் காரண மாகிய அக்கிநிக்கு மநதின் காரண மாகிய வாயு, வியாப கமும், காரணமு மானமையினலும், புத்தி, மநோ

சங்கற்ப வஸ்துக்களுக்குள் ஏக தேசத்தி லொன்றை நிச்சயித் தறிவதேயன்றி, அதிக்கிரமித்து வேறொன்றையும் நிச்சயித் தறிவதல்லாமையினாலு மென அறிக. (85)

86. வினா:- மநோ மய கோசத்தினும் பிராண மய கோசம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- மநது சாக்கிர சொப்பனங்களி லிருந்து சுழுத்தியிற் கெட்டுப் போதல் போற், கெடாமல் பிராணன் மூன றவத்தைகளினுஞ் சலித்துக் கொண்டிருப்பதாயும், மநாதி தத்துவங்களைச் சலிக்கச் செய்வ தாயும், மூர்ச்சை யோக சமாதிகளில், பிராண னடங்கி யிருக்கும் போது மநதும் யா தொரு செயலு மின்றி யடங்கிவிடுகின்றமையினாலு மென அறிக. (86)

87. வினா:- பிராண மய கோசத்தினும் அந்ந மய கோசம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- இலாயத் திருந்து வெளி வந்து, பின்பு உள்ளே சென்று நிற்கின்ற குதிரைக்கு, இலாயம் வியாபகமா யிருப்பது போலத் தூல சரீரத் திருந்து வெளி வந்து, பின்புள்ளே சென்று நிற்கின்ற பிராணனுக்குத் தூல சரீரம் வியாபகமா யிருத்தலி னென அறிக. (87)

88. வினா:- அந்ந மய மாகிய தூல சரீரத்தினும் கிரகம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- கூடு, பல குருவிகள் வசித்தற்கு இடமா யிருத்தல் போலக், கிரகம், பல தூல சரீரங்கள் வசித்தற்கிடமா யிருத்தலி னென அறிக. (88)

89. வினா:- கிரகத்தினும் நகரம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- பல கிரகங்கள், பல ஆவணங்கள் (கடைகள்) பல ஆலயங்கள் அரண் மனைகள், தடாகங்கள், கூபங்கள், கோட்டை கொத்தளம், அகழி

முதலியன சேர்ந் துள்ளது நகர மானமையி னென அறிக. (89)

90. வினா:- நகரத்தினுந் தேசம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:— பல நகரங்களோடு பல நதி, வநம், பருவதாதிகளும், பல கிராமங்களும், சேர்ந் துள்ளது தேச மானமையி னென அறிக. (90)

91. வினா:- தேசத்தினும் பிருதிவி பூதம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:— கடத்துக்கு மண் ஆதாரமா யிருத்தல் போலச், சகல தேசங்கட்கும் பிருதிவி பூதம் ஆதாரமா யிருத்தலி லென அறிக. (91)

92. வினா:- பிருதிவியினின்றும் அப்பு, அக்கிநி, வாயு, ஆகாயங்கள் ஒன்றற் கொன்று பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- பிள்ளைச் சரீரத்தினும், தாய்ச் சரீரம் பெரி தாகவும், காரண மாகவு மிருப்பது போலப், பிருதிவியாதி ஐந்து பூதங்களும், முறையே ஒன்றற் கொன்று பதின் மடங்கதிக மாகவும், காரண மாகவு மிருத்தலி னென அறிக. (92)

93. வினா:— ஆகாயத்தினும் விராட்டு சரீரம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- ஆகாயத்தினோடு மற்றை நான்கு பூதங் களும் சமட்டி தூல சரீரங்களும் சேர்ந் துள்ளது விராட்டு சரீரமானமையி னென அறிக. (93)

94. வினா: — விராட்டு சரீரத்தினும் இரணியகருப்ப சரீரம் பெரி தென்றது எதனா லெனின்?

விடை:- விராட்டு சரீர முதித் தொடுங்கற்குக் காரணமும், சூக்கும பூதங்களும், சமட்டி சூக்கும சரீரங்களுஞ் சேர்ந் துள்ளதும், இரணியகருப்ப சரீர மானமையி னென அறிக. (94)

95. வினு:- இரணிய கருப்ப சரீரத்தினும் அவ்வியா கிருதம் பெரி தென்றது எதனு லெனின்?

விடை:-இரணியகருப்ப சரீரம்தோன்றி யொடுங் கற்குக் காரணமா யிருத்தலி னென அறிக. (95)

96. வினு:- அவ்வியாகிருதத்தினும் பிரகிருதி பெரி தென்றது எதனு லெனின்?

விடை:- அவ்வியாகிருதம், பிரகிருதியின் முக் குணங்களில் ஓர் குண மாத்திர மாக இருத்தலி னென அறிக. (96)

97. வினு:- பி ர கி ரு தி யி னு ம் பிரஹ்மம் பெரி தென்றது எதனு லெனின்?

விடை:- இப்பியில் வெள்ளி ஆரோபித மாகத் தோன்றுதல் போலப், பி ர ஹ் ம வியாபகத்திற் பிரகிருதி ஆரோபித மாகவும், ஏகதேச மாகவுந் தோன்றுதலி னென அறிக.

பிரமாணம்

(அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிடதம்)

''சூக்குமத்துக்குஞ் சூக்கும மாயும், பெரிதுக் கெல்லாம் பெரி தாயு மிருக்கிறது பிரஹ்மம்.''

(கருணைகர சுவாமிகள் அ ரு ளி ச் செய்த, சொரு பானந்த உபநிடதம் கவி 28)

''அரிதான ஜீவனுக்குப் பஞ்ச கோசமைங்குகையா மதின்குகையா மைம்பூ தந்தா, மிரியாத விராட்டிது மற் றிதற்கு மேலா மிரணியகருப்பமதா மிதற்கு மேலாம், பெரிதாமவ் வியாகிருத மிதற்கு மேலாம் பேசருமவ் வியத்தமிதிற் பெரிதாஞ் சுத்தம், உரியார்க ளிதனைமகத் தென்பர் மேலா மொளியைமகத் தின் மகத்தென் றுரைப்பர் மேலோர்.'' (97)

(பதம்) சர்வ சாக்ஷியினிடத்திலே—

(பொருள்) சகலத்தையும் விளக்கிவைத்துக் கொண்டிராநின்ற சாக்ஷியி னிட மாக,

பத சாரம்

தத் துவம் அசி யென்னும் பதத் திரய வாச்சியார்த்த சமூகங்க ளெல்லாவற்றின் ரேற்ற வொடுக்கங்க ளாகிய அந் நுவ ய வெதிரேகங்களை விளக்கிவைத்துக் கொண்டு தா னொரு விகாரமு முறும லிருத்தலின், பிரஹ்மத்தைச் சருவ சாக்ஷி யென்றார்.

98. வினா:— தத் துவம் அசி யென்னும் முப் பதங் களும் எந்த வாக்கியத்தின் பதங்க ளெனின்?

விடை:- சாமவேத மகா வாக்கியத்தின் பதங்க ளென அறிக. (98)

99. வினா:— சருவ சாக்ஷியால் விளக்கி வைக்கப் படும் பதத் திரய வாச்சியார்த்த சமூகங்க ளெவை யெனின்?

விடை:— தத் என்னும் பதத்திற்கு, விராட்டு இரணிய கருப்பம் அவ்வியாகிருத மென்னும் சரீரத் திரயம், சிருட்டி திதி சம்மார மென்னும் அவத்தாத் திரயம், வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி யென்னும் அபிமாநித் திரயம் ஆகிய (9) ம், துவ மென்னும் பதத்திற்கு, தூலம் சூக்ஷ மம் காரண மென்னும் சரீரத் திரயம், சாக்கிரம் சொப்பனம் சுழூத்தி யென்னும் அவத்தாத் திரயம், விசுவன் தைசதன் பிராஞ்ஞ னென்னும் அபிமாநித் திரயம் ஆகிய (9)ம், அசி யென்னும் பதத்திற்குச், சத்து ரூப சத்தி, சித்து ரூப சத்தி, ஆநந்த ரூப சத்தி யென்னும் சரீரத் திரயம், சருவ வியாபகம், சருவப் பிரகாசம், சருவாநந்த மென்னும் அவத்தாத் திரயம், பரிபூரணன், தேஜோ மயன், பரமாநந்த னென்னும் அபிமாநித் திரயம் ஆகிய (9) மாகக் கூடியவைக ளென அறிக. (99)

100. வினு:- பிரஹ்மம் சருவ சாக்ஷியானுல், வாச்சியார்த்தங்களை யறிவது போல, லக்ஷியார்த் தங்களையும் அறிய வேண்டு மன்றோ வெனின்?

விடை:- லக்ஷியார்த்தங்கள் பிரஹ்மத்தின் சொருப மானமையால், பிரஹ்மம் அறியப்படு பொருளு மாகாது. தன்னை யெதிரிட்டு மறியாது. அறியு மெனின், பிரஹ்மத்துக்கு ஆத்மாசிரய தோஷம் வரு மென அறிக. (100)

101. வினு:– ஆத்மாசிரய தோஷ மாவது யாது? பிரஹ்மம் தனக்குத்தான் அறியப்படு பொரு ளாகா தென்றது எதனு லெனின்?

விடை:– தானே, அறித லாகிய கிரியைக்குக் கர்த்தாவாகவும், தானே, கிரியாப் பிரயோசநத்தை யேற்குங் கரும மென்னுஞ் செயப்படு பொருளாகவு மிருப்பது, தன்னைப் பற்றுத லென்னும் ஆத்மாசிரய தோஷ மாம். குலாலனும் குடமும், பரிச்சிந்ந மானமையால், குலாலன், கிரியைக்குக் கருத்தாவும், குடம், கிரியாப் பிரயோசநத்தை யேற்குஞ் செயப்படு பொருளு மாகும். அது போல, பிரஹ்மம் தனக்குத் தான், பிந்ந மாக இராமல், அத்துவித மாயும், பூரண மாயு மிருத்தலால், தன்னை யறிதற்குத் தானே கர்த்தாவும் தானே செயப்படு பொருளு மாக இராது. ஆதலின், அறிபடு பொரு ளாகா தென்ற தென அறிக. (101)

102. வினு:– சர்வ சாக்ஷி, யிவைகளை யெங்ஙனம் விளக்கி வைத்துக்கொண் டிருக்கிற தெனின்?

விடை:- நாடக சாலைத் தீப மானது, நிர்த்தந வாத்திய இராக கீர்த்தந வேடிக்கை நிமித்தம் நாடக சாலையிற் கூடி யுள்ள, அரசர், மந்திரி, சேவகர் பரிசாரகர், நிர்த்தந கணிகையர், தாள மத்தளர்க ளாதியரின் தோற்ற மாகிய பாவங்களையும், நாடக சாலையை விட்டு அரசராதியர் நீங்கிய பின்னர்,

அவர்களின் அபாவங்களையும், தார தம்மிய மற விளக்கி வைத்துக் கொண்டு, ஒரு தன்மை யாக இருப்பது போல, சருவ சாக்ஷி யாகிய பிரஹ்மம், தன்னிற் கற்பித மாகிய பிந்நா சத்தி அபிந்நா சத்திகளின் விகாரத்தாற் றோன்றிய பதத் திரய வாச்சியார்த்த சமூகங்களின் பாவங்களையும், அச் சத்திகளின் சங்கோசத்தால் வாச்சியார்த்தங்க ளொடுங்கிய பின்னர், அவைகளின் அபாவங்களையும் விளக்கி வைத்துக் கொண்டு, தா னொரு விகாரத் தினையு முறாமல் சாக்ஷி மாத்திர மாக இருக்கிற தென அறிக. (102)

103. வின:- சருவ சாக்ஷி யாகிய அதீதப் பிரஹ்ம மானது தத் பத வாச்சியார்த்த மாகிய வைசுவாநர, சூத்திராத்மா, அந்தரியாமி நாம ஈசுவரரும், துவம் பத வாச்சியார்த்த மாகிய, விசுவ, தைசத, பிராஞ்ஞ நாம சீவரும், கற்பிதர்க ளானமையால், ஓர் காலத்தில் நாச மடைவார்கள். அப்போ தவர்களின் அபாவங்களை விளக்கி வைத்துக் கொண்டிருக்கு மென்பது பொருந்தும். அசி பத வாச்சியார்த்த மாகிய, பரிபூரண, தேஜோ மய, பரமாநந்த நாம சைதந்நியங்கள், சத்தியப் பொருட்க ளானமையால் ஓரபாவங்களு மின்றிய நித்திய மாகும். ஆதலின், அவைகளின் அபாவங்களையும் விளக்கி வைத்துக் கொண் டிருக்கு மென்பது பொருந்தா தெனின்?

விடை:- அதீதப் பிரஹ்மத்தி லடங்கி யிருந்து வெளிப் பட்ட பரா சத்தியின் முக் குண விகாசத்தால், அவ் வதீதப் பிரஹ்மத்துக்குத் தோன்றிய பரிபூரண தேஜோ மய பரமாநந்த நாமங்கள் பொரு ளெப் படியோ, அப்படியே, விளக்கிக் கொண்டிரா நின்ற அத்வைத அவஸ்தாந ரூப நிருவிகற்ப துரியா வத்தையுங் கடந்த அதீத நிலையில் பரா சத்தி யொடுங்கிய போது ஒடுங்கி, நான் பரிபூரணம் தேஜோ மயம் பரமாநந்தம் என்னும் பிரஞ்ஞை

ரூப அகண்டாகார விருத்தியும் நழுவிப் போகின்றதையே இங்கே பரிபூரண தேஜோ மய பரமாநந்தர்களின் அபாவ மென்றதாம். ஆதலின், அங்ஙனம் கூறியது பொருந்து மென அறிக.

*பிரமாணம் (லக்ஷணவிருத்தி கவி 84)*

*அகிலசக கிரியைக்கு மாதித்திய சநிதாந மானதே மூலமாக-வமர்தல்போற் சர்வவிந் தியசகத் தொழில் களும் அசைவில்லை தந்நியத்தின், விகலமில் லாத தோர் சந்நிதா நங் கொண்டு விதம்விதம தாக மிகவும்-விரிவாய்ந டக்குகினு மிலகுகரி யாகவே மேவும்நாம் தாமாகவுந், திகழுபிர விர்த்தியும்நி விர்த்தியுஞ் செய்யாது சேர்கின்ற ஒன்றினாலுஞ்- செய்வித்த லில்லாது மத்யஸ்த னுகவே திநமிவையை நாடி நின்று, துகளிலாக் கனலிபோற் சகலவித தொழிலை யும் தோற்றுவிக் கின்றவதுவே-சொரூபமா நாம் சர்வ சாக்ஷியென் றநுதிநம் தூய்மநதி லெண்ணு வாயே.''* (103)

(பதம்) அக்கிநியிற் சூடு போல, அபிந்ந மாக ஒரு சக்தி யுண்டு-

(பொருள்) அக்கிநியிடத் திராநின்ற உஷ்ண சத்தியைப் போல், அபேத மாக ஓர் சத்தி யுளது.

*பத சாரம்.*

உஷ்ண சத்தி அக்கிநியும், அக்கிநிக் கந்நியமு மல்லாததா யிருப்பது போலப், பிரஹ்மத்தி னிடமாக இருக்கின்ற சத்தி யானது, பிரஹ்மமும், பிரஹ்மத் துக்கு அந்நியமும், அல்லாததா யிருப்ப தென்பது தோன்ற அக்கிநியிற் சூடு போலென்றார்.

104. வின:— உஷ்ண சத்தி அக்கிநியும், அக்கிநிக்கு அந்நியமு மல்ல தென்றது எதனு லெனின்?

விடை:— உஷ்ண சத்தியை அக்கிநி யெனின், மணி மந்திரங்களால் உஷ்ண சத்திக்கு நாசம் வந்த

போது, அக்கிநிக்கு நாசம் வரல் வேண்டும், அங்ஙன மின்மையால், உஷ்ண சத்தி அக்கிநியு மல்ல; அக்கிநிக் கந்நிய மெனின், அது அக்கிநியை விட்டுத் தனியே காணப்படாமையால், அக்கிநிக் கந்நியமு மல்ல வென்றதென அறிக. (104)

105. வினா:- இது போலப் பராசக்தி, பிரஹ்மமு மல்ல, பிரஹ்மத்துக் கந்நியமு மல்ல வென்றது எதனா லெனின்?

விடை:- சத்தி பிரஹ்ம மெனின், அச் சத்திக்குப் பிரஹ்ம மெனவே சுருதிகள் பெயர் கூற வேண்டும்: அங்ஙன மின்றிச், சத்தி யெனவே பெயர் கூறுகின்றமையால், சத்தி பிரஹ்மமு மல்ல, அல்லது, பிந்நமாக இருக்கின்ற தெனின், பிரஹ்மத்தைவிட்டுப் பிரிந்து தனியே யிருக்க வேண்டும். அங்ஙனம், சத்த னாகிய பிரஹ்மத்தைப் பிரிந்து தனியே யிராமையால், சத்தி பிரஹ்மத்துக் கந்நியமு மல்ல வென்ற தென அறிக. (105)

(பதம்) அந்தச் சக்தி அவ் வதீதப் பிரஹ்மத்தில்-

(பொருள்) அபேத மாக இராநின்ற அச் சத்தியானது, அகோசர மாகிய அப் பிரஹ்மத்தி னிடமாக,

106. வினா:- பிரஹ்மம் அகோசர மென்றது எதனா லெனின்?

விடை:- பிரமாணங்களா லறியத் தக்க உருவம் அருவம் உருவாருவ முதலிய அறியப்படுபொருளாகாது, அதீதப் பொரு ளானமையி னென அறிக. (106)

107. வினா;- பிரமாண மாவது யா தெனின்?

விடை:- பிரமா ஞாநத்துக்கு எது கரணமோ, அது பிரமாணம் (அளவை) என அறிக. (107)

108. வினா:- பிரமா ஞாநம் யாது? கரணம் யா தெனின்?

விடை:- யதார்த்தாநுபவம் பிரமா ஞாந மாகும். அதாவது, நிருவிகற்ப வுணர்வை முன்னாகக் கொண்டு ஐய வுணர்வும், திரி புணர்வு மின்றி விடயங்களைச் சவிகற்ப மாய் நேரே யறிவ தாகிய ஞாநம். அது, பாதிக்கப் படாத பொருளை விஷய மாக வுடையதாயும், ஸ்மிருதி யல்லாத தாயு முள்ள தாம்.

கரண மென்பது, அசாதாரண காரண மெனப்படும். அது சர்வ காரியங்கட்குங் காரணமா யுள்ள தன்மா தன்ம முதலியவைகள் போலச், சாதாரண காரணங்களாக இராமல், கட முதலிய காரிய விசேஷங்கட்குத் தண்டம்போல யாதானுமோர் காரியத்துக்கு மாத்திரம் காரணமா யுள்ள தென அறிக. (108)

109. வினா:- பிரமாணங்க ளெத்தனை யெனின்?

விடை:- †பிரத்தியக்ஷப் பிரமாணம், அநுமானப் பிரமாணம், உவமானப் பிரமாணம், சப்தப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணம், அநுபலப்திப் பிரமாணம் என ஆறு பிரமாணங்க ளாம். இவ் வாறும் வேதாந்தத்துக்கு அங்கீகார மாகும். இவற்றோடு சம்பவம் ஐதீக மென்னும் இரண்டனையுஞ் சேர்த்து இப் பிரமாணங்க ளெட் டென்பாரு முள ரென அறிக. இவற்றை வேதாந்த சூடாமணியிற் காணலாம் (109)

110. வினா:- பிரத்தியக்ஷப் பிரமாணம் யா தெனின்?

† வேதாந்தத்துக்கு அங்கீகாரமாகிய ஆறு பிரமாணங்களில், பிரத்தியக்ஷம், அருத்தாபத்தி என்னும் இருவகைக்கு மட்டும், பிரமாணங்களுக்கும், பிரமைகளுக்கும் பெயர் ஒன்றேயாம். இவ்வாறு விருத்தி ரத்நாவலி இரண்டாம் ரத்நத்தில் கூறியுள்ளது.

விடை:- நேத்திர முதலிய இந்திரியங்கள், தத் தம் விஷயங்களோடு சம்பந்தித்த போது, பிரத்திய க்ஷப் பிரமா வுண்டாகிறது. மற்றைக் காலத் துண்டா கிற தில்லை, ஆதலால், பிரத்தியக்ஷப் பிரமாவுக்குக் கரணங்க ளாகிய நேத்திர முதலிய இந்திரியங்கள், பிரத்தியக்ஷப் பிரமாண மாம். அதாவது, கட படாதி விடய தரிசந மாகிய காட்சி யுணர்வின் கரண மென அறிக. (110)

111. வினு:- அநுமாநப் பிரமாணம் யா தெனின்?

விடை:- அநுமிதிப் பிரமையின் கரண மெதுவோ, அதுவென அறிக. (111)

112. வினு:- அநுமிதிப் பிரமை யாவது யா தெனின்?

விடை:- இலிங்க ஞாநத்தாற் றோன்றும் ஞாந மாம். அது, பருப்பதத்திற் றோன்றுந் தூமப் பிரத் தியக்ஷ லிங்க ஞாநத்தா லுண்டாகும் வந்நி ஞாநம். வந்நி சாத்தியம்; தூமம் இலிங்க மாம். இவ் வநுமா நம் சுவார்த்தம் பரார்த்த மென இரண்டாம். தனக்குத் தானே தூம ஞாநத்தால் வந்நி ஞாந முண்டாவது, சுவார்த்தாநுமாநம்-தானறிந்த படி வந்நியை அந்நியனுக்குத் தெரிவித்தல் பாரார்த்தா நுமாநம். இதனைத் தெரிவிக்கும் வாக்கியம், பிரதிஞ்ஞை, ஏது, திருட்டாந்த மெனும் மூன் றவயவங்க ளுடைத்து; பருப்பதம் வந்நி யுடைத் தெனல் பிரதிஞ்ஞை, புகை யுண்மை யினு லெனல் ஏது; அடுக்களை போ லெனல் திருட்டாந்தம். இவைகளால் நிச்சயிக்கத் தக்க அநுமாநம் அந் நுவயம், வெதிரேக மென இரண்டாம். யாங்குப் புகை யுண்டோ, ஆங்கு வந்நி யுண் டெனல் அந்நுவ யம். யாங்கு வந்நி யில்லையோ, ஆங்குப் புகை யில்லை யெனல் வெதிரேகம். இவையன்றிப், பூர்வக் காட்சி யநுமாந மெனவும், கருத லநுமாந மெனவும், ஆகமாநுமாந மெனவும் மூன் றுள. பரிமளம் வந்த

போது இங்குப் பரிமளிப்பது இன்ன மல ரெனப் பூர்வாநுபவ வாசநா சம்ஸ்காரத்தா லறிவது, பூர்வக் காக்ஷி யநுமாநம். ஒருவன் வசநிக்கும் வசநத்தால், அவ னறிவை யளவிடுகிறது கருத லநுமாநம். ஒருவ னுடைய ஐசுவரியத்தை, அல்லது, தாரித்திரியத்தைப் பார்த்துப், பூர்வம் இவன் இன்ன புண்ணியம், அல்லது, இன்ன பாவம் செய்தவ னென அறிவது ஆகமாநுமாந மென அறிக. (112)

113. வினா:- உவமானப் பிரமாணம் யா தெனின்?

விடை:- உவமிதிப் பிரமையின் கரண மெதுவோ, அது என அறிக (113)

114. வினா:- உவமிதிப் பிரமை யா தெனின்?

விடை:- இன்னது, இன்னது போ லிருக்கு மென்னுங் கேள்வியால், அதனை மற்றோரிடத்திற் காணும் ஒப்புமை யுணர்வாற் றோன்றும் ஞாநம். அதாவது, ஆவினை நிகர்த்தது *மரை யென்ற வநசரன் வாக்கியங் கேட்ட மரையுரு வறியான், வநத்திற் சென்று மரையைக் கண்ட போது, வநசரன் வாக்கியார்த்த ஸ்மரணாநந்தரம், இது மரை யென அறித லென அறிக. (114)

115. வினா:- சப்தப் பிரமாணம் யா தெனின்?

விடை:- சாப்திப் பிரமையின் கரண மெதுவோ, அதுவென அறிக. (115)

116. வினா:- சாப்திப்பிரமை யா தெனின்?

விடை:- வாக்கிய ஜந்நிய ஞாநம், சாப்திப் பிரமையாம்; அதாவது, திருஷ்ட வாதி யாகிய ஆப்தன் வசநத்தால், நதிக் கரையாதிகளில் கதி வர்க்கங்க ளுள்ளன வென அறிதலாம். இப்பிரமாண மும், தந்திர கலை (கரும காண்டம்), மந்திர கலை

*மரை = கவயம் என்னும் காட்டுப் பசு.

(உபாசநா காண்டம்), உபதேச கலை (ஞாந காண்டம்) என மூ வகைப்படும். இவைகளில், கரும காண்டம் பற்றி, முன்னொடு பின் விரோத மின்றி, யநுட்டித் தலையுணர்வது, தந்திர உரை யளவை யாகும். உபாசநா காண்டம் பற்றி, மநாதிகளை யடக்கித் தெய்வ வழிபாடாகிய வாய்மையை யுணர்வது, மந்திர வுரை யளவை யாகும் ஞாந காண்டம் பற்றி, அநாதி நித்திய மாகிய பிரஹ்மம், தன்னின் வே றில்லாத சச்சிதாநந்த சொரூபமா யிருத்தல் முதலிய இயல்பைத் தா னுணரும் வழியையும், பிறருக்குணர்த்தும் வழியையுமுணர்வது, உபதேச வுரை யளவை யாகு மென அறிக. (116)

117. வினா:- * அருத்தாபத்திப் பிரமாண மாவது யாது? அருத்தாபத்திப் பிரமையாவது யாது? எனின்?

விடை:–உபபாதக (†சம்பாதக) கற்பனைக்கு, ஏதுவாகிய உபபாத்திய (‡சம்பாத்திய) ஞானம் அருத்தா பத்திப் பிரமாணமாம். இந்த ஏதுவினால் உண்டாகும் உபபாதக கற்பனையாகிய ஞானம் அருத்தாபத்திப் பிரமையாம்.

எது வின்றி எது சம்பவியாதோ, அதற்கு அது உபபாத்தியம்.

---

* அருத்தாபத்திப் பிரமாணம். அருத்தாபத்திப் பிரமையின் கரணம் (ஏது), அருத்தாபத்திப் பிரமாணமாம். (பிரமாணம்=அளவை) அருத்தாபத்தி யென்பது, அர்த்தஸ்ய ஆபத்தி யெனப் பிரிபடும்; அதன் பொருள்: அர்த்தஸ்ய அர்த்தத்தின் (பொருளின்=அதாவது சம்பாதகவஸ்துவின்); ஆபத்தி=கற்பனை என்பதாம்.

(திருஷ்டார்த்தாபத்தியில்)

† சம்பாதகவஸ்து, இராப்போஜனம்.

‡ சம்பாத்தியம், தூலத்தன்மை அதாவது பருமை.

இந்த அருத்தாபத்தியானது:- திருஷ்டாருத்தாபத்தி (காட்சிப் பொருட் பேறு), சுருதாருத்தாபத்தி (கேள்விப் பொருட்பேறு) என்று இருவகைத்தாம்.

1. திருஷ்டாருத்தாபத்தி:- பகற்காலத்தில் உணவுண்ணாதுள்ள ஒருவனது உடம்பு, இளையாது பருத்திருத்தலைக் கண்டு, அவனது உடம்பு இளையாது பருத்திருத்தற்குக் காரணம் அவனிரவின்கண் உணவினை யுண்ணுதலா மென்று அவனிடத்து இராப்போஜனத்தைக் கற்பிக்குமிடத்து, இளையாத பருமை இரவுண்டலால் பொருந்துமன்றி வேறோராற்ருற் பொருந்தா தென்பது பெறப்படுவதாம். இங்கு இளையாத பருமை பொருந்தாமையால் இரவுண்டல் கற்பிக்கப்படுதலின், பருமை பொருந்தாமையின் ஞானம் திருஷ்டாருத்தாபத்திப் பிரமாணமாம்; அதனால் இரவுண்டலைக் கற்பித்தல் திருஷ்டாருத்தாபத்திப் பிரமையாம்.

2. சுருதாருத்தாபத்தி:- ஒருவன் தேவதத்தன் வீட்டிலில்லையென்று கூறினால், அதனைக் கேட்ட மற்றொருவன் அத்தேவதத்தன் வேறோரிடத்தில் ஜீவனத்துடன் இருப்பானென்பதை ஆராய்ந்து கற்பிக்குமிடத்து, தேவதத்தனது ஜீவனம் அவன் வேறோரிடத் திருத்தலால் பொருந்துமன்றி வேறோராற்ருற் பொருந்தாதென்பது பெறப்படுவதாம். இங்கு ஜீவனம் பொருந்தாமையால் வேறோரிடத் திருத்தல் கற்பிக்கப்படுதலின், ஜீவனம் பொருந்தாமையின் ஞானம் சுருதாருத்தாபத்திப் பிரமாணமாம்; அதனால், வேறோரிடத்திருத்தலைக் கற்பித்தல் சுருதாருத்தாபத்திப் பிரமையாம். (117)

118. வினா:- அநுபலப்திப் பிரமாணம் யா தெனின்?

விடை:- இல்லை யென்னும் ஞானத்திற்கு விஷயமாவது; அல்லது, பிரதியோகியின் அபேக்ஷையோடு

கூடிய ஞாநத்திற்கு விஷய மாவது அபாவ மெனப் படும். அவ்வபாவப் பிரமையின் அசாதாரண காரணம் அநுபலப்திப் பிரமாண மாகும். அது, பதார்த்த அபாவ நிச்சயத்துக்கு ஏது வாகிய அப் பதார்த்தத்தின் அப்பிரதீதியா மென அறிக. மேற்படி பிரமாணங் களின் விசேட விபரங்கள் விருத்தி ரத்நாவலியில் காண்க. (118)

119. வினு:— சம்பவப் பிரமாண மாவது யாதெனின்?

விடை:- ஆயிர மாகிய எண்ணில், நூ றெனும் எண் ணுண் டெனு முணர் வென அறிக. (119)

120. வினு:— ஐதிகப் பிரமாண மாவது யா தெனின்?

விடை:- இம் மரத்தில் யக்ஷ னுள னென்னும் வசநத்தால், அம் மரத்தில் உண்டாகும் யக்ஷ னுணர் வென அறிக. (120)

121. வினு:— பிரஹ்மம் பிரத்தியக்ஷாதிப் பிரமா ணங்களால் விடயீகரிக்கக் கூடாத தென்றது எதனு லெனின்?

விடை:— பிரஹ்மம் உருவ மாக வாவது, அல்லது நீல முதலிய நிறங்களுக் காசிரய மாக வாவது இருக்கு மாயின், நேத்திரேந்திரிய ஜந்நிய ஞாநத் துக்கு விஷய மாம். பரிச மாகவேனும், அல்லது, பரிசாசிரய மாகவேனும் இருக்குமாயின், துவக் கிந் திரிய ஜந்நிய ஞாநத்துக்கு விஷயமாம். சப்த ரச கந்த குணங்க ளுளவாயின், சுரோத்திர சிங்குவை ஆக்கிரா ணேந்திரிய ஜந்நிய ஞாநங்கட்கு விஷயமாம். அங்ஙன மின்றி, இவைகட்கு விலக்ஷண சொரூபமாக இருத்த லால், பிரத்தியக்ஷப் பிரமாணத்துக்கும்; வந்நி தூமங்கள் போல, எதார்த்தத்தில் காரண காரிய பாவ மாக இல்லாமையால், அநுமாநப் பிரமாணத்துக்கும்; மரைக்குச் சாதிருசிய மாகப் பசு விருப்பது போலப்,

பிரஹ்மத்துக்குச் சாதிருசிய மாக வேறு பொருள் ஔபாதிக மாக விருத்தலன்றி, நிருபாதிக மாக இல்லாமையால், உவமாநப் பிரமாணத்துக்கும்; பதத்தின் அர்த்த போத ஏது வான சாமர்த்தியம் சக்தியெனப்படும். சக்தி விருத்தியா லுணரப்படும் அர்த்தம் சக்கிய மாம். சக்கிய சம்பந்தம் இலக்கணை யாம். இங்ஙனம் பரம்பரா சம்பந்த மான இலக்கணா விருத்திக்கு விஷயமே யன்றிச் சக்தி விருத்திக்கு விஷயமல்லாமையால், சப்தப் பிரமாணத்துக்கும்; பருத்தலிளைத்த லாதி விகாரங்களைப்பொருந்துதலும், ஓரிடத்தின்றி, மற் றோரிடத்திருப்பது மாக இராமல், நிருவிகார மாகவும், பூரண மாகவும், இருத்தலால், அருத்தாபத்திப் பிரமாணத்துக்கும், அசத் தாக இராமல், நித்திய சத் தாக விளங்கிக் கொண்டிருத்தலால், அபாவப் பிரமாணத்துக்கும் விஷய மன்று. சம்பவப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணத்திலும், ஐதிகப் பிரமாணம், சப்தப் பிரமாணத்திலும், அடங்கியுள்ளன வானமையால்; அவ் விரண்டிற்கும் பிரஹ்மம் விஷயமன் றென்பதற்குக் காரணம், இங்கேயெழுதப்படவில்லை. இதனால், சகலப் பிரமாணங்களினாலும் விடயீகரிக்கக் கூடாத தென்ற தென அறிக.

பிரஹ்மம் அகோசர மென்பதற்குப் பிரமாணம். (பிரஹ்ம கீதை 4வதுகேநோபநிடத முரைத்த அத்தியாயம் 6ஆம் கவி)

''வாக்கும் மனமுங் கண்ணும் மற்றுளவிந் தியங்களுமே, நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செல மாட்டா''. (121)

(பதம்) அடங்கியிருக்கும்போது, அதற்குச் சுத்தப் பிரஹ்ம மென்று பெயர்-

(பொருள்) ஒடுங்கி யிருக்கும் போது அவ்வதீதப் பிரஹ்மத்துக்குப் பரிசுத்த மாகிய பிரஹ்ம மென்று நாமமாம்.

122, வினா:- பிரஹ்மத்தில் சத்தி யென் ஞென்று அடங்கி யிருக்கு மாயின், வஸ்து இரண்டாம். அற்றேல் அத்துவிதம் எங்ஙனஞ் சித்திக்கு மெனின்?

விடை:- மண்ணி லடங்கியிரா நின்ற கட சக்தி மண்ணிற் கந்நிய வஸ்து வாகாமல், மண் மாத்திர மாகவே யிருத்தல் போலப், பிரஹ்மத்தி லடங்கியிரா நின்ற பரா சக்தியும் பிரஹ்மத்துக்கு அந்நிய வஸ்து வாகாமல், பிரஹ்ம மாத்திர மாகவே யிருத்தலால், வஸ்து இரண் டின்ரும். ஆதலால், அத்துவிதஞ் சித்திக்கு மென் றறிக (122)

(நூல் பிரிவு 2)

அந்தச் சக்தி விசிரிம்பித்துச் சுத்தப் பிரஹ்மத்தை வியாபிக்கும் போது, அப் பிரஹ்மம் பரை வியாபகத் திற்குள்ளிருந்த படியால், அதற்குப் பரப் பிரஹ்ம மென்று பெயராம்.

(பதம்) அந்தச் சத்தி விசிம்பித்து சுத்தப் பிரஹ் மத்தை வியாபிக்கும் போது-

(பொருள்) அதீதப் பிரஹ்மத்தி லடங்கியிருந்த அச் சத்தி யானது, விரிந்து பரிசுத்த மாகிய பிரஹ் மத்தைச் சூழ்ந்து கொள்ளும் போது,

123. வினா:- பிரஹ்மத்தி னுள்ள சத்தி, பிரஹ் மத்தை தானே வியாபிப்பது எங்ஙன மெனின்?

விடை:- அக்கிநியி லுள்ள புகை, அக்கிநியை யும், ஆகாயத்தி லுள்ள மேகம், ஆகாயத்தையும், வியாபித்தது போலு மென அறிக. (123)

(பதம்) அப் பிரஹ்மம் பரை வியாபகத்துக்குள் ளிருந்தபடியால், அதற்கு பரப் பிரஹ்ம மென்று பெய ராம்-

(பொருள்) முற் சொல்லப்பட்ட சுத்தப் பிரஹ்ம மானது, பராசத்தியினது வியாபகத்துக்குள்ளா யிருந்தமையால், அந்தச் சுத்தப் பிரஹ்மத்துக்கு மேலாகிய பிரஹ்மமென்று நாம மாம்,

124. வினு:— பரை வியாபகத்துள் பிரஹ்ம மிருக்கு மாயின், அது, வியாப்பியப் பொருளாகுமே யெனின்?

விடை:- திக்கெங்கணும் நிறைந்து வியாபக மாக இராநின்ற ஆகாயம், தன்னுளேக தேச மாக ஓரிடத்திற்றேன்றிய மேக வியாபகத் திருக்கினும், அதனுல், அது வியாப்பியப் பொருளாகாதது போல, சகல தத்துவங்களினும் நிறைந்து அப்பாலும் அளவிடற் கரிய வியாபக சொரூப மாக யிராநின்ற பரப் பிரஹ்மம் தன்னுளேக தேச மாகத் தோன்றிய பராசத்தியின் வியாபகத்திருக்கினும் வியாப்பியப் பொருளாகா தென அறிக. (124)

125. வினு:— சுத்தப் பிரஹ்மம் பரப் பிரஹ்ம மெனப் பெயர் பெற்ற தெது போலு மெனின்?

விடை:— மண்ணி லடங்கி யிருந்த கட சத்தி, கடா கார மாக விரிந்து ஆகாயத்தை வியாபித்த போது, அக் கட வியாபகத் தளவா யிராநின்ற ஆகாயம், கடாகாய மெனப் பெயர் பெற்றது போலு மென அறிக. (125)

126. வினு:- மண்ணி லடங்கி யிருந்த கட சத்தியைக் காரியப்படுத்தற்கு மண்ணிற்கும், சத்திக்கும், அந்நிய மாக நிமித்த காரணுனை குலாலன் வேண்டியது போலப், பிரஹ்மத்தி லடங்கி யிருந்த பரா சத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மத்துக்கும், சத்திக்கும், அந்நிய மாக நிமித்த காரணன் வேண்டுமே யெனின்?

விடை:- கட சத்திக் காதார மாகிய மண் சட மானமையால், கட சத்தியை விகாசப்படுத்தற்கு வேறு சேதநனை குலாலனே வேண்டிற்று. சத்திக் காதார மாகிய பிரஹ்மம், சேதந மானமையால், சத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மமே நிமித்த

காரணமு மாகும். ஆதலால், வேறே நிமித்த காரணன் வேண்டுவ தின் றென அறிக. (126)

127. வினா:. பிரஹ்மஞ் சேதந மாக இருக்கினும், நிஷ்கிரிய சொரூப மெனச் சுருதிகள் கூறுகின்றமை யால், சத்தியை விகாசப்படுதற்கு எங்ஙனம் காரண மாகு மெனின்?

விடை:- ஊசியைச் சேட்டிப்பித்தற்கு நிஷ்கிரிய மாகிய காந்தக்கல் காரணமாதல் போலச், சத்தியை விகாசப்படுத்தற்குப் பிரஹ்மம் நிஷ்கிரிய வஸ்து வாக இருக்கினும் காரண மாகு மென அறிக. (127)

128. வினா:- இச் சத்திக்குப் பரை யெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- சப்தப் பிரஹ்மங்களுந் தோன்று வதற்குக் காரணமா யுள்ள பிரகிருதிக்கு மேலாகிய பரப் பிரஹ்மத்தை வியாபித்து அபேதமா யிருத்தலி னென அறிக. (128)

129. வினா:- சப்தப் பிரஹ்மங்க ளெவை? அவைகள் பிரஹ்ம மெனப் பெயர் பெற்றது எதனா லெனின்?

விடை:- பிரமன், விட்டுணு, உருத்திரன், பிரணவம், வேதம், பிராஹ்மணன், பசு என்னு மிவ் வேழு மாம். இவை, முறையே சிருட்டிக்கும், திதிக்கும், சங்காரத்துக்கும், மந்திரங்கட்கும், சாத்திரங்கட்கும், வருணங்கட்கும், மிருகங்கட்கும், தலைமை பூண்டிருத்தல் பற்றி யென அறிக. (129)

(நூல் பிரிவு 3)

இலக்ஷண சூநிய மா யிருக்கின்ற இந்தச் சத்திக்குப் பிரஹ்ம சந்நிதாநத்திற் புருட சமூகத்தில் ஸ்திரீக்கு இன்பம் சநித்தாற் போல, அவிகிருத

சத்துவ ரஜஸ்தமோ குணங்க ளுண்டாயின. இவற்றுள், சுத்த சத்துவத்துக்கு, ஆநந்த ரூப சத்தி யென்றும், சுத்த ரஜஸிற்குச், சித்து ரூப சத்தி யென்றும், சுத்த தமஸிற்குச், சத்து ரூப சத்தி யென்றும் பெயர்.

(பதம்) இலக்ஷண சூநியமா யிருக்கின்ற இந்தச் சத்திக்கு:-

(பொருள்) பிரஹ்மத்துக்கு விலக்ஷண வடிவ மின்றியதா யுள்ள இந்தச் சத்திக்கு,

130. வினு:- பரை யென்னுஞ் சத்தியை லக்ஷண சூநிய மென்றது எதனு லெனின்?

விடை:- பிரகிருதியைப் போல, உற்பவ நாச அவயவாகாரப் பிரபஞ்ச வடிவ மாகப் பரிமணமித்த லின்றிய தாய், நிரவயவ மாகிய பிரஹ்மத்தில் பேத மின்றி நிரவயவமாகவே யிருத்தலி னென அறிக. (130)

(பதம்) பிரஹ்ம சந்நிதாநத்தில் புருட சமூகத்தில்:-

(பொருள்) நிருவிகாரமா யுள்ள பிரஹ்மசமூகத்தில் நீண்ட காலம் பிரிவுற் றிருந்த சகல ஐசுவரியங் களையுமுடைய பிரிய நாயகன் சேர்க்கையில்,

131. வினு:- ஐசுவரியங்க ளென்பவை யெவை யெனின்?

விடை:- இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகநம், அடிமைகளும், அழகு, இளமை, அரோகம், திட காத்திரம், வித்தை, வீரியம், விவேகம் என்பனவு மென அறிக. (131)

(பதம்) ஸ்திரீக்கு இன்பஞ் சநிந்தாற் போல:-

(பொருள்) கற்பிற் சிறந்த மனையாளுக்கு, முக மலர்ச்சியோடு சுகஞ் சநித்தாற் போல,

(பதம்) அவிகிருத சத்துவ ரஜஸ் தமோ குணங்களுண்டாயின:-

(பொருள்) வேறுபாடற்ற சாத்வீக இராஜத தாமத மென்னும் முக்குணங்களும் தோன்றின.

132. வினா:- பிரஹ்ம சந்நிதாநத்தில், பரா சத்திக்கு முக்குண முண்டாகிய தெனின், பிரஹ்மத்துக்கு முன்பாக வேறிடத்திற் சத்தி யிருக்கிறதென்ருகிறது. அற்றேல், பிரஹ்ம முள்ளவிடத்திற் சத்தியும், சத்தி யுள்ளவிடத்திற் பிரஹ்மமு மில்லாததாகிப், பிரஹ்மம் கண்டப் பொரு ளாகுமே யெனின்?

விடை:- இங்கே சந்நிதாந மென்பதற்கு, முன்பு எனப் பொருள் கொள்வது, ஆராய்வுக் குறைவேயன்றி வேறன்று. மற்றென்னெனின், சந்நிதாந மென்பது, சமூகம். அதாவது, கூடி நிற்ற லாகிய கூட்ட மாம். அக்கிநியை உஷ்ண சத்தி கூடி நிற்றலால் அக்கிநியும், ஆகாயத்தை மேகங் கூடி நிற்றலால், ஆகாயமும், கண்டப் பொருளாகாதது போலப், பிரஹ்மத்தைப் பரா சத்தி கூடி நிற்றலால், பிரஹ்மம் கண்டப் பொரு ளாகா தென அறிக. (132)

133. வினா:- அற்றேல், பிரஹ்மத்தைப் போல, சத்தியும் அநாதி யானமையால், அநாதியே பிரஹ்மத்திற் சத்தி பிரிவின்றி யபேதமா யிருக்கிற தாகும். ஆதலால், சத்திக்கு முக் குணங்களும், அநாதியாகவே யுள்ளனவாகு மன்றி, யிடையி லோர் காலத்தில் பிரஹ்ம சந்நிதாந விசேடத்தால் முக் குணங்களுண்டாயின வெனல் அசப்பாவித மெனின்?

விடை:- வியாதி யாதிகளாற் சரீர மெலிந்து யாதொரு செயலு மின்றிப், பிரேதம் போலப், புருடன் மடியிற் ருனே படுத்திருக்கிற ஸ்திரீக்கு, புருடனைத் தான் சார்ந்திருந்தும் காமாதி விகாரங்க ளுதய மாகாமல், சரீர மெலிவு நீங்கிச் செய லுண்டாகி யெழுந்த

பின்னர்ப் புருட தரிசந விசேடத்தாற், காமாதி விகாரங்க ளுண்டாதல் போலப், பரா சத்தி பிரஹ்ம வியாபகத்தில செய லற்று ஒடுங்கி அதிசூக்ஷ்மமா யிருக்கும் போது, அதற்குக் குணங்க ளுதய மாகாமல், கால பரிபாகத்தாற் செயல் பெற்றுத் தடித்து, விகாச மாகிய பின்னர்ப், பிரஹ்மத்தின் சேர்க்கை விசேடத்தால் முக் குணங்களு முதய மாயின. ஆதலால் அசம்பாவித மன்றென வறிக. (133)

134. வினு:- பரையிற் றோன்றிய முக் குணங்களும், வேறுபடுந் தன்மை யில்லன வாயின், ஒன்றே யாகும். ஆதலால், அவைகட்கு வெவ்வேறு பெயர்கள் கூறப் படா தெனின்?

விடை:- சலத்துக் குள்ள சத்திகள், வேறுபடுந் தன்மை யில்லன வாயினும், அவைகட்குக் குளிர் இளகல் வெண்மை யென வெவ்வேறு பெயர் கூறுவது போலப், பரையிற் றோன்றிய முக் குணங்களும் வேறு படுந் தன்மை யில்லன வாயினும், அவைகட்கு வெவ் வேறு பெயர் கூறலா மென அறிக. (134)

(பதம்) இவற்றுள், சுத்த சத்துவத்துக்கு, ஆநந்த ரூப சத்தி யென்றும்:-

(பொருள்) இம் முக்குணங்களுள், பரிசுத்த மாகிய சாத்வீக குணத்திற்குச் சுக சொரூப சத்தி யெனவும்,

(பதம்) சுத்த ரஜஸிற்கு, சித்து ரூப சத்தி யென் றும், சுத்த தமஸிற்குச் சத்து ரூப சத்தி யென்றும் பெயர்-

(பொருள்) பரிசுத்த மாகிய இராசத குணத்திற்கு அறிவு சொரூப சத்தி யெனவும், பரிசுத்த மாகிய தாமத குணத்திற்கு உண்மை ரூப சத்தி யெனவும் நாம மாம்.

135. வினா:- இப் பரா சத்தியின் குணங்களைச் சுத்த குணங்க ளென்றது எதனா லெனின்?

விடை:- சுத்த மாகிய பிரஹ்மத்தை, அசுத்த மாகிய ஜக ஜீவ பரங் களாகத் தோன்றச் செய்யும் பிரகிருதியின், அசுத்த குணக் கலப்பில்லன வாயும், பிரஹ்மத்தின் சுத்த மாகிய சச்சிதாநந்த இலக்கணங் களை யுள்ளபடி விளங்கச் செய்வதாயு, மிருத்தலி னெண அறிக. (135)

136. வினா:- பரையின் முக் குணங்கட்கும், முறையே ஆநந்த ரூப சத்தி, சித்துரூப சத்தி, சத்துரூப சத்தி யெனப், பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- சத்துவ குணம், பிரஹ்மத்தின் அத்வைதாநந்த இலக்கணத்தைத் ததாகாரமா யிருந்து விளங்கச் செய்யுந் தன்மைய தாதலால், அதற்கு, ஆநந்த ரூப சத்தி யெனவும்; இராஜத குணம், சுயம்பிரகாச மாகிய சித் திலக்கணத்தைத் ததாகாரமா யிருந்து விளங்கச் செய்யுந் தன்மைய தாதலால், சித்து ரூப சத்தி யெனவும்; தாமத குணம், முக் காலத்தினு முள்ள வியாபக மாகிய சத் திலக்கணத்தைத் ததாகார மாயிருந்து விளங்கச் செய்யுந் தன்மைய தாதலால், சத்து ரூப சத்தி யெனவும்; பெயர் வந்த தென அறிக. (136)

(நூல் பிரிவு-4)

இவற்றில் காரண மான ஆநந்த ரூப சத்தி யுடனே பரப் பிரஹ்மங் கூடிச் சர்வாநந்த மென்னுஞ் சுழுத்தி யவத்தையை யடையும் போது, பரப் பிரஹ்ம மென்னும் பெயர் போய்ப், பரமாநந்த ரென்னும் பெயர் வந்தது. இந்தப் பரமாநந்தர் சித்துரூபசத்தி யுடனே கூடிச் சர்வப் பிரகாச மென்னும் சொப்ப நாவத்தையை யடையும் போது, பரமாநந்த ரென்னும் பெயர் போய்த் தேஜோ மய ரென்னும் பெயர் வந்தது. இந்தத் தேஜோமயர் சத்து ரூபசத்தி

யுடனே கூடிச் சர்வ வியாபக மென்னும் சாக்கிராவத் தையை யடையும் போது, தேஜோ மய ரென்னும் பெயர் போய்ப் பரிபூரண ரென்னும் பெயர் வந்தது.

(பதம்) இவற்றில், காரண மான ஆநந்த ரூப சத்தி யுடனே பரப் பிரஹ்மங் கூடி சர்வாநந்த மென்னுஞ் சுழுத்தி யவத்தையை யடையும் போது, பரப் பிரஹ்ம மென்னும் பெயர் போய், பரமாநந்த ரென்னும் பெயர் வந்தது:-

(பொருள்) இம் மூன்று சத்திகளிற், பிரதாந மான சுக ரூப சத்தியோடு, மே லாகிய பிரஹ்மஞ் சேர்ந்து, பூரணா நந்த மய மென்று சொல்லப்படுவ தாகிய சுழுத்தி யவத்தையைப் பொருந்துகின்ற போது, மேலாகிய பிரஹ்ம மென்கிற நாம மானது நீங்கி, மேலாகிய சுக சொரூபரென்கின்ற நாம முண்டாயிற்று.

137. வினா:- ஆநந்த ரூப சத்தியைச், சத்து ரூப சத்திக்கும் சித்துரூப சத்திக்குங் காரண மென்றது எதனாலெனின்?

விடை:- சாக்கிர சொப்பனங்கட்குச் சுழுத்தி காரண மானமையால், சுழுத்தி யவத்தா ரூப மாகிய ஆநந்த ரூப சத்தியைச், சத்து ரூப சத்தி, சித்து ரூப சத்திக்குக், காரண மென்ற தென அறிக. (137)

138. வினா:- சுழுத்தி யவத்தையை யடைந்த பரப் பிரஹ்மத்துக்குப் பரமாநந்த ரெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- சிவ துரிய மாகிய பரை வியாபகத்தில் சுபாவ சொரூப மாக இருந்த வண்ணமே யிருந்த பரப் பிரஹ்மம், பரையின் சத்துவ குண மாகிய ஆநந்த ரூப சத்தி சம்பந்தத்தால், அதீதாநந்த மாகிய துரியாவத்தையினின்றும் நழுவி, உபசாந்த

மாகிய சுழுத்தி யவத்தையைப் பொருந்திச், சர்வப் பிரகாச, சர்வ வியாபக மாக விளங்குகிறோ மென்னும் சொப்பன சாக்கிரப் பிரஞ்ஞைக ளின்றி மேலாகிய ஆநந்த மய மாக நிற்றலி னென அறிக. (138)
(அசி பதார்த்த மான சிவ சுழுத்தி)

(பதம்) இந்தப் பரமாநந்தர் சித்து ரூப சத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாச மென்னுஞ் சொப்பநாவத்தையை யடையும் போது, பரமாநந்த ரென்னும் பெயர் போய்த் தேஜோ மய ரென்னும் பெயர் வந்தது—

(பொருள்) இந்தப் பர சுக சொரூபர், அறிவு சொரூப சத்தியோடு சேர்ந்து, பூரணப் பிரகாச மென்னும் கநா அவத்தையைப் பொருந்துகின்ற போது, பரசுக சொரூப ரென்னும் நாமம் நீங்கிப், பிரகாச சொரூப ரென்னும் நாமமுண்டாயிற்று.

139. வினா:— சொப்பநாவத்தையில், பரமாநந்தருக்குத் தேஜோ மய ரெனப் பெயர் வந்தது எதனாலெனின்?

விடை:- சிவ சுழுத்தி யாகிய ஆநந்த ரூப சத்தி வியாபகத்தி ருந்த, பரமாநந்தர் பரையின் ரஜோ குணமாகிய சித்து ரூப சத்தி சம்பந்தத்தால், உபசாந்த மாகிய சுழுத்தி யவத்தையினின்றும் நழுவி, சர்வப் பிரகாச மாகிய சொப்பநாவத்தையைப் பொருந்திச், சர்வ வியாபக மாக விளங்குகிறோ மென்னும் பிரஞ்ஞை யின்றிப் பூரணப் பிரகாச மயமாய் நிற்றலி னென அறிக. (139)
(அசி பதார்த்த மான சிவ சொப்பநம்)

(பதம்) இந்தத் தேஜோ மயர் சத்து ரூப சத்தியுடனே கூடி, சர்வ வியாபக மென்னும் சாக்கிரா

வத்தையை அடையும் போது, தேஜோ மய ரென்னும் பெயர் போய்ப் பரிபூரண ரென்னும் பெயர் வந்தது

(பொருள்) இந்தப் பிரகாச சொரூபர் இருப்பு ரூப சத்தியோடு சேர்ந்து பூரண வியாபக மென்னும் நன வவத்தையைப் பொருந்துங் காலத்தில் பிரகாச சொரூபர் என்கின்ற நாம மானது நீங்கி வியாபக சொரூபர் என்கின்ற நாமம் உண்டாயிற்று.

140. வினு:- சாக்கிராவத்தையில் தேஜோ மயர்க்குப் பரி பூரண ரெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:- சிவ சொப்பந மாகிய சித்து ரூப சத்தி வியா பகத் திருந்த தேஜோ மயர், பரையின் தமோ குண மாகிய சத்து ரூப சத்தி சம்பந்தத்தால், சர்வப் பிரகாச மென்னுஞ் சொப்பநாவத்தையினின்றும் நழுவிச், சம்பூரண ஸ்தாநமாகிய சாக்கிராவத்தையைப் பொருந்திச், சராசரப் பிரபஞ்சங்க ளனைத்துந் தன்மய மாகித், தானே பூரண மய மாக நிற்றலி னென அறிக. (140)

(அசி பதார்த்த மான சிவ சாக்கிரம்)

1. பிரஹ்ம விலக்கண நிருபகம் முற்றிற்று.
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

உ
சிவமயம்
ஓம் பரப் பிரஹ்மணே நம :
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.
நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியாநம்.

## 2. * அத்தியாரோப நிருபகம்.

### *அவதாரிகை.*

பூர்வ நிருபகத்தில் விளக்கிய நித்த மாதிய சுத்த விலக்கணங்களை யுடைய பரப்பிரஹ்மத்தில், பிரகிருதி முதற் றூல சரீர மீருகிய தத்துவங்களின் ருேற்ற மாகிய அத்தியாரோபக் கிரமத்தை நிருபிக்கின்ருர்:-

* அத்தியாரோப நிருபகம் — கற்பனை விளக்கம் கூறுதல்,

(நூல் பிரிவு-5)

இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரஹ்மத்திற், சுத்தியில் இரசதம் போல, மூலப் பிரகிருதியென்னும் ஒரு சத்தி யுண்டு, அந்தச் சத்தி விகிருத சத்துவ இராசத தாமத மாகிய முக் குண சொருப மாக விரிந்து தோன்றும்.

(பதம்) இந்த அகண்ட—

(பொருள்) இப் போது பிரஹ்ம விலக்கண நிரூபகத்திற் கூறிய ஒன்றினாலுங் கண்டிக்கப்படாத,

1. வினு:—பிரஹ்மம் கண்டிக்கப்படாத தென்றது எதனு லெனின்?

விடை:-உலோகாயத முதலிய புறச் சமயங்கள். வேதாநுசார மான கன்ம காண்டங்களினாலும், அக் கன்ம காண்டங்களும், உபாசநா காண்டங்களினாலும், அவ் வுபாசநா காண்டங்களும், ஞாந காண்ட மாகிய உபநிடதங்களினாலும் கண்டிக்கப்படும். அவ் வுபநிடதங்களைக் கண்டித்தற்கு, அவற்றினும், பிரபலப் பிரமாணங்க ளில்லாமையால், அவையே, சகல பிரமாணங்கட்கு மே லாகிய வேத முடிவாக விளங்குகின்றன. அங்ஙனம் விளங்குகின்ற உபநிடதங்களும், பிரஹ்மத்தை அகண்டம் பூரணம் சச்சிதாநந்தமெனக் கீர்த்திக்கின்றமையி னென அறிக. (1)

(பதம்) பரிபூரண-

(பொருள்) வியாபக மாக முற்றிலும் நிறைந் துள்ள,

2. வினு:-பிரஹ்மத்தைப் பரிபூரண மென்றது எதனு லெனின்?

விடை:—தேசம், காலம், வஸ்து வாகிய மூன்றி ஞலும், பரிச்சேத முருமல், வியாபக மாக நிறைந்தி ருப்ப தானமையி னென அறிக. (2)

3. வினு:-பிரஹ்மம் தேசத்தாற் பரிச்சேத முரு தென் றது எதனு லெனின்?

விடை:-ஒவ் வொரு பொருள்களும் ஒரு தேசத் துள்ளன வாயும், ஒரு தேசத் தில்லன வாயு மிருத்த லின், அவை, தேசத்தாற் பரிச்சேத முள்ளன வாகும். அங்ஙனமின்றிப், பிரஹ்மம் சகல தேசங்களினும், இருக்கிற திருக்கிற தென வியாபக சத்தாய் விளங்கிக் கொண்டிருத்தலின், பரிச்சேத மின்றிய பரிபூரண மாம். (3)

4. வினு:—அற்றேல், பிரஹ்மம் தேசத்தால் மாத்திரம் பரிச்சேத ரகித மெனல் போதுமானதா யிருக்க, அதனேடு காலத்தினுலும் பரிச்சேத ரகித மெனக் கூறியது எதனு லெனின்?

விடை:-தேசத்தால் மாத்திரம் பரிச்சேத ரகித மெனில், சகல தேசங்களினும் நிறைந்து வியாபகமா யிருக்கின்ற ஆகாயத்துக்கும் பூரணத்துவஞ் சித்திக் கும். அதனுல், பிரஹ்மத்துக்கு அதிவியாப்தி தோடம் வரும். அங்ஙனம் வராமல், அதனை நிராகரிக்கும் நிமித்தம், காலத்தினுலும் பரிச்சேத மின்மை கூறிய தென அறிக. (4)

5, வினு:— இங்ஙனங் கூறுவதால், பிரஹ்மத்துக்கு ஆகாயத்தால் அதிவியாப்தி தோட மில்லை யென்பது எதனு லெனின்?

விடை:— ஆகாயம் சிருட்டி காலத்திற் ருேன்றிப் பிரளய காலத்தில் நாச முறுதலால். தேசத்தால் மாத்திரம் பரிச்சேத ரகிதமா யுள்ளதே யன்றிக், காலத்தினுனும் பரிச்சேத மின்றிய தன் றென அறிக.

6. விஞ:—பிரஹ்மம் காலத்திஞனும் *பரிச்சேத ரகித மென்பது எதஞ லெனின்?

விடை:- ஒரு காலத் துள்ளனவும், மற் ருெரு காலத் தில்லனவு மாகிய பொருள்கள், கால பரிச் சேத முள்ளன வாகும். பிரஹ்மம் அங்ஙன மின்றி, அநாதியாதலின், பூத காலத்தினும்; நித்திய மாதலின், பவிஷியத் காலத்தினும்; சத்து ரூப மாதலின், வர்த்தமாந காலத்தினும் விளங்கிக் கொண்டிருத்தலி னென அறிக. (6)

7. விஞ:- அற்றேல், பிரஹ்மம் தேச காலங்களால் மாத்திரம் பரிச்சேத ரகித மெனல், போது மானதா யிருக்க, அவைகளோடு வஸ்துவிஞலும் பரிச்சேத ரகித மென்றது எதஞ லெனின்?

விடை:- பிரஹ்மம் தேச காலங்களால் மாத்திரம் பரிச்சேத ரகித மெனின்; சாங்கிய மதஸ்தர்கள், ஜீவனை வியாபக மென ஒப்பித் தேசத்திஞலும்; அநாதி நித்திய மென ஒப்பிக் காலத்திஞலும்; பரிச்சேத ரகித மெனக் கூறுகின்றமையால், ஜீவனுக் குப் பரிபூரணத்துவமும், அதஞல், பிரஹ்மத்துக்கு அதிவியாப்தி தோடமும் வரும். இஃதன்றிக் காலம், தேசத்திஞனும், தன்ஞனும், பரிச்சேத மற்ற தான மையால், காலத்துக்குப் பூரணத்துவமும், அதஞல், பிரஹ்மத்துக்கு அதிவியாப்தி தோடமும் வரும். ஆதலால், சாங்கிய மதாநுசார மாகச் சீவனுக்கும், காலத்திற்கும் வரும் பூரணத்துவத்தை நிராகரிக்கு நிமித்தம், வஸ்துவிஞனும் பரிச்சேத மின்மை கூறி யது என அறிக. (7)

8. விஞ:- தேச காலங்களோடு வஸ்துவிஞனும், பரிச்சேத ரகித மென்பதால், ஜீவனைப் பற்றியும், காலத்தைப் பற்றியும், பிரஹ்மத்துக் கதிவியாப்தி தோட மில்லை யென்பது எதஞ லெனின்?

*(பரிச்சேதம்' வரம்பு, அல்லது, பாகம், அல்லது, பிரிவு.)

விடை:—சாங்கியர்கள் ஜீவர்களைத் தேசத்தினுனும், காலத்தினுனும், பரிச்சேத ரகிதர்க ளெனக் கூறினும், ஜீவர்கள் அநேகர்க ளென ஒப்பியிருத்தலால், வஸ்துவினுனும், அங்ஙனங் கூருமல் பரிச்சேதமுள்ளார்க ளென்றே கூறுகின்றனர். இஃதன்றிக் காலம் ஓர் வஸ்து வாக இருப்பது போல, ஆகாய முதலிய பல வஸ்துக்கள் காலத்துக்கு அந்நிய மாக இருத்தலால், காலம் ஆகாய முதலிய வஸ்துக்களால் பரிச்சேதமுள்ளதே யாகின்றது. ஆதலி னென அறிக. (8)

9. வினு:—பிரஹ்மம் வஸ்துவினுனும் பரிச்சேத முருததென்றது எதனு லெனின்?

விடை:- மண், கட கலசாதிகளினும், பொன் கடக மகுடாதிகளினும்; வியாபித்து அவ்வவ் வாகாரமா யிருப்பது போல பிரஹ்மம் தன்னிற் கற்பிதமாகிய சேதநா சேதந வஸ்துக்க ளனைத்தினும் வியாபித்துச் சர்வாத்மகமா யிருத்தலி னென அறிக. (9)

10. வினு:— வஸ்துக்கள் ஒன்றற் கொன்று பேத தருமங்களை யுடையன வாதலின், பிரஹ்மமும் பேத தருமங்களை யடைந்தன்றே சர்வாத்மகமா யிருக்க வேண்டும்; அற்றேல், பிரஹ்மம் விகாரப் பொருளாகுமே யெனின்?

விடை:— மண்ணும் பொன்னும் முறையே பேத தருமங்களை யுடைய கடக கலசாதிகளினும், கடக மகுடாதிகளினும், வியாபித்து அவ் வவ் வாகாரமா யிருக்கினும், தத்தம் தருமங்கள் வேறுபட்டு விகாரப் பொருள்க ளாகாதது போல, பிரஹ்மம் பேத தருமங்களை யுடைய சேதநா சேதந வஸ்துக்களில் வியாபித்துச் சர்வாத்மகமா யிருக்கினும், அஸ்தி பாதிப் பிரிய லக்ஷணங்கள் வேறுபட்டு விகாரப் பொருள்களாகா தென அறிக. (10)

11. வினு:- மண்ணும் பொன்னும் முறையே கட கல சாதிகளினும், கடக மகுடாதிகளினும் வியாபித்து விகாரப் பொருள்க ளாகாதனவா யிருக்கினும், அவைகளில், ஒன்றற்கும், மற் ருென்றற்கு மிடையில் இல்லாமல், கண்டப் பொருள்க ளாவது போலப் பிரஹ்மமும் பேத தருமங்களை யுடைய சேதநாசேதந வஸ்துக்களில் வியாபித்து விகாரப் பொரு ளாகாதிரு க்கினும், அவ்வஸ்துக்களில் ஒன்றற்கும் மற் ருென்றற்கு மி டை யி ல் இல்லாமல், கண்டப் பொருளே யாம். ஆதலின், பிரஹ்மம் பூ ர ண மென்பது எங்ஙனம் பொருந்து மெனின்?

விடை:- மண் பொன் னுபமாநம், பிரஹ்மம் விகாரப் பொரு ளல்ல வென்பதற்கு மாத்திரங் கூறி யதே யன்றி, பூரண மென்பதற்குக் கூறிய தன்று. அற் றன்று; உவமேய இலக்கண முற்றிலும் பொருந் தியது உவமாந மாகுமெனின், உவமாநப் பொருள் உவமேயப் பொருளே யாய் உவமாநம் உவமேய மென் னும் பேதமும், அது பற்றிய விவகாரமு மிருக்க மாட்டாது. அங்ஙன மின்றி, அநேகமாகச் சாத்திரங் களில் இருக்கின்றமையால், உவமேயத்துக்கு எவ் வுவமாநமும், ஏக தேச மாத்திரம் பொருந்துமே யன்றி, முற்றிலும் பொருந்தாது. எங்ஙன மெனின், ஆவரம் பூப் போற் பொன் னிருக்கு மென்ருல், ஆவரம் பூ பொன்னின் நிறத்துக்கு மாத்திரம் உவ மாந மாகிறதே யன்றி, உருகல் நீளல் இறுகல் ஒளிர் தல்களுக்கு உவமாந மாகிற தில்லை. ஆதலால், சட மாகிற ஆவரம் பூ வுவமாநம் சம சத் தாய்ச் சடமா யுள்ள பொன்னிற்கே முற்றிலும் பொருந் தாத போது சடமாயுள்ள மண் பொன் னுவமாநம் விஷம சத்தாய்ச் சித்தா யுள்ள பிரஹ்மத்துக்கு எங்ஙனம் முற்றிலும் பொருந்தும்? பொருந்தாது. இஃ தன்றி, மண்ணும் பொன்னும் கண்டப் பொருள்க ளானமையால், தத் தம் காரியங்களில் ஒன்றற்கும்

மற்றொன்றற்கு மிடையில் இல்லாதன வாய்க் கண்டப் பொருள்களே யாம். பிரஹ்மம் அகண்டப் பொருளானமையால், ஆகாயம் நான்கு பூதங்களிலும் வியாபித்திருப்பது மன்றி, அவைகளினிடையினு மிருப்பது போலச், சேதநாசேதந வஸ்துக்களினும், அவைகளுக் கிடையி லுள்ள சூநியங்களினும், இருக் கிற திருக்கிற தென விளங்குதலின், பூரணமே யாகும். அல்லது ஜீவர்களும் ஈசுவரனும், பஞ்ச பூத பௌதிகங்களும், பிரஹ்மத்திற் பேத மின்றி அபேதமா யிருத்தலிற் பூரண மெனினும்; அல்லது, சர்வத் திலும் பூரித்திருத்தலால் பூரண மெனினும்; அமையு மென அறிக. (11)

12. வினா:— பிரஹ்மம் சருவத்திலும் பூரித் திருப்பது எங்ஙன மெனின்?

விடை:- கடம் சலத்தினாற் பூரிக்கப்படுவது போல அந்ந மய கோசம், பிராண மய கோசத்தினாலும், அது, மநோ மய கோசத்தினாலும், அது, விஞ்ஞாந மய கோசத்தினாலும் அது, ஆநந்த மய கோசத்தினாலும், அது, சீவாத்மாவினாலும், பூரிக்கப்படும். இங்ஙனம் பூரிக்கப்படுவ தாகிய பஞ்ச கோசங்களால், பஞ்ச பூதங்களும், இவைகளால் பூரிக்கப்பட் டுள்ள அண்ட பஹிரண்டங்க ளெல்லா வற்றினும் பூரித் திருப்ப தாகிய மாயா விசிட்டரினும், பிரஹ்மம் பூரித் திருப்பது மன்றித், தான், ஒன்றினாலும் பூரிக்கப் படாது, வியாபகமா யிருக்கிற தென அறிக.

*பிரஹ்மம் பூரண மென்பதற்குப் பிரமாணம்.*

*(ரிபு கீதை 17-ஆம் அத்தியாயம்)*

''கேவலமாம் பரப்பிரம மானதானே கெம்பீர
பூரணமாயுள்ளதாமே''

**திரி வித பரிச்சேத மற்றது பூரண மென்பதற்குப் பிரமாணம்.**

(வேதாந்த சூடாமணி கவி. 32–33)
"பூரணத்துமுருதனமூன் ருகும்"

"உரைத்தவைதாம் யாவையெனின் ஒருகாலத் துண்டின் ஞெருகாலத் தெனுங்கால பரிச்சேத முடனே, தெரித்தவொரு தேயத்துண் டொருதேயத் திலையென் றேயப்பரிச் சேதமுமொன் ருமாகா தென்னும், கருத்தில்வரு வத்து பரிச் சேதமுமா மெனவே கருதிடுக".

**பூரித் திருப்பது பூரணமென்றதற்குப் பிரமாணம்** இலக்கண விருத்தியிற் காண்க. (12)

(பதம்) சச்சிதாநந்தப் பிரஹ்மத்தில்-

(பொருள்) அஸ்தி பாதிப் பிரிய இலக்கணங்களையுடைய பிரஹ்மத்தினிடமாக,

13. வினு:– சத் திலக்கணம் யா தெனின்?

விடை:- பூத பவிஷியத் வர்த்தமாந மென்னும் முக்காலத்தினு மிருப்ப தென அறிக. (13)

14. வினு:- சத்திலக்கண முள்ளது பிரஹ்ம மென்றது எதனு லெனின்?

விடை:- மந்தாந்தகார தோடத்தால், கயிற்றின் பால், சர்ப்ப தண்ட மாலை யாதிகள் தோற்றற்கு முன்; தோற்றுகின்ற கால மான மத்தி; தோற்றி யழிவுற்ற பின்; என்னும் முக் காலத்தினும் கயிறு கெடாமல், அவைகட் காதாரமாயிருப்பது போல, அவித்தியா மல தோடத்தால், பிரமஹ்த்தின்பால், சேதநாசேதநப் பிரபஞ்ச மாகிய 35 தத்துவங்களும், தோற்றற்கு முன்; தோற்றுகின்ற காலமான மத்தி; தோற்றி யழிவுற்ற பின்; என்னும் முக் காலத்தினும் பிரஹ்மங் கெடாமல் அவைகட் காதாரமா யிருத்தலி னென அறிக.

பிரமாணம்.

(எசுர் வேதத்தின் வராகோபநிடதம் 2—ஆம் அத்தியாயம்)

''இருக்கிற தென்பது சத்து ரூபமான பிரஹ்மமே'' (14)

15. வினு:- சித் திலக்கண மாவது யா தெனின்?

விடை:- சகலப் பிரபஞ்சங்களையும் விளக்கி வைப்ப தென அறிக. (15)

16. வினு:- பிரஹ்மம் சித் திலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- சூரியன் தீபாதி சாதநாந்தரங்களை யபேக்ஷியாமல், தானும் பிரகாசமாயிருந்து கொண்டு, தன்னை யடுத்த கட படாதி வஸ்துக்களை யும், விளங்கச் செய்வது போலப், பிரஹ்மம் சூரியாதி யட்டப் பிரகாசங்களையும் அபேக்ஷியாமல், தான், சுயம்பிரகாசமா யிருந்து கொண்டு, தன்னை யடுத் திருக்கின்ற அவஸ்தாத் திரயப் பிரபஞ்சங்களனைத் தையும் விளங்கச் செய்யும் ஆற்ற லுடைய அறிவாய் விளங்குதலி னென அறிக

அறிவா யிருப்பது பிரஹ்ம மென்பதற்குப் பிரமாணம்.

(இருக்கு வேதத்தின் ஐதரேய உபநிடதம்)

'' பிரஞ்ஞாநம் பிரஹ்மம்.,, (16)

17. வினு:- சூரியாதி யட்டப் பிரகாசங்க ளெவை யெனின்?

விடை:— சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், அக்கிநி, மின்னல், சீவன், புத்தி, இந்திரியங்க ளென அறிக. (17)

18. வினு:— இவைகளில், பாஹியப் பிரகாசங்க ளெவை? ஆந்தரப் பிரகாசங்க ளெவை யெனின்?

விடை:- முறையே முன்னர் கூறிய ஐந்தும் பாஹ்யப் பிரகாசங்கள், பின்னர் கூறிய மூன்றும் ஆந்தரப் பிரகாசங்க ளென அறிக. (18)

19. வினு:- ஆநந்த இலக்கணம் யா தெனின்?

விடை:- சுகமா யிருந்து கொண்டு, தன்னைச் சார்ந்தவைகட்குஞ் சுகஞ் செய்குவ தென அறிக. (19)

20. வினு:-பிரஹ்மம் ஆநந்த இலக்கண முடைய தென்றது எதனு லெனின்?

விடை:- அமிர்த மானது, தான் மிர்த மின்றி யிருந்து கொண்டு, தன்னை யடைந்தவர்களையும் மிர்த மின்றி யிருக்கச் செய்வது போலும், வெல்லம், மதுரமா யிருந்து கொண்டு, தன்னை யடைந்த, மா முதலிய பதார்த்தங்கட்கும், மதுரந் தருவது போலும், பிரஹ்மஞ் சுக சொரூபமா யிருந்து கொண்டு, தன்னை யடுத்த விருத்தியாதிகட்குஞ் சுகத்தைத் தருகின்ற மையி னென அறிக. (20)

21. வினு:- வெல்லம், மா முதலியவைகட்கு மதுரந் தரும் போது, வெல்லத்துக் குள்ள மதுரங் குறைவு படுகிறது, அதுபோலப், பிரஹ்மம் விருத்தி யாதி கட்குச் சுகந் தரும்போது, பிரஹ்மத்துக் குள்ள சுக விலக்கணங் குறைவுபடுமே யெனின்?

விடை:- வெல்லம் கண்டப் பொரு ளாதலா னும், மா முதலியவை வெல்லத்தின் வியாபகத்து ளிராமல், வேரு யிருப்பவை யாதலானும், அவை கட்கு, மதுரந் தருவதால் வெல்லத்துக்கு மதுரத் தன்மை குறைவுபடும். சூரியப் பிரகாச வியாபகத்து ளிருக்கின்ற தருப்பணம் பிரகாசிக்கிறது. அதற்குப் பிரகாசத்தைக் கொடுத்தது சூரியனே யன்றி வேறன்று. தருப்பணத்துக்குப் பிரகாசங் கொடுத்த லால், சூரியப் பிரகாசங் குறைவுபடுகிற தில்லை. அது

போல, அகண்டமா யெங்கும் நிறைந்திராநின்ற பிரஹ்ம வியாபகத்துள் கண்ட மாகவும், அற்ப மாகவு மிராநின்ற விருத்தி யாதிகட்குப் பிரஹ்மஞ் சுகத்தைத் தருவதால் பிரஹ்மத்துக் குள்ள சுக விலக்கணங் குறைவுபடா தென அறிக. (21)

22. வினா:- சமுத்திர வியாபகத்து ளிராநின்ற சகல சீவராசிகளும் சீதளத்தைப் பெற்று அநுபவிப்பது போல, ஆநந்த சொரூப மாகிய பிரஹ்ம வியாபகத்து ளிராநின்ற சகல விருத்திகளும், ஆநந்தத்தைப் பெற் றநுபவியாமல், சிற் சில விருத்திகள் மாத்திரம் அநுபவிப்பது எதனா லெனின்?

விடை:- சூரியப் பிரகாச வியாபகத்து ளிருக்கின்ற தருப்பணங்களில் மலிநமா யுள்ளவைகள், சூரியன் பிரதிபிம்பிக்க யோக்கியதை யில்லாதன வாயும், மலிந மின்றிச் சுத்தமா யுள்ளவைகள் பிரதி பிம்பித்தற்கு யோக்கியதை யுள்ளனவாயு மிருப்பது போல, ஆநந்த சொரூப மாகிய பிரஹ்ம வியாபகத்து ளிருக்கின்ற விருத்திகளில், மல மாதிய தோடங்களை யுடையவைகள், ஆநந்தம் பிரதிபிம்பித்தற்கு யோக்கியதை யில்லாதன வாயும், மல மாதிய தோடங்க ளின்றிச் சுத்த சத்துவப் பிரதாநமா யுள்ளவைகள், ஆநந்தம் பிரதிபிம்பிக்க யோக்கியதை யுள்ளன வாயு மிருத்தலினென அறிக. (22)

(பதம்) சுத்தியில் இரசதம் போல மூலப் பிரகிருதி யென்னும் ஒரு சத்தி யுண்டு-

(பொருள்) இப்பியில் வெள்ளி போலக் காரணப் பிரகிருதி யென்று சொல்லப்பட்ட ஓர் சத்தி யுளது.

23. வினா:- பிரகிருதி யென்பது யா தெனின்?

விடை:- அநாதி கற்பித அநிர்வாச்சிய திரி குண சாமி யாவஸ்தா ரூபமா யுள்ள தென அறிக. (23)

24. வினா:- பிரகிருதியை அநாதி யென்றது எதனா லெனின்?

9—

விடை:— ஓர் காலத் தில்லா திருந்து, மற்றோர் காலத்துண்டாகிய தல்லாமையி னென அறிக. (24)

25. வினு:— பிரகிருதியைக் கற்பித மென்றது எதனு லெனின்?

விடை:- சுத்தி ரசதம் போலப், பொருளல்லாத தாயிருந்து, பொருள் போற் பொய் யாகத் தோற்று கின்றமையி னென அறிக. (25)

26. வினு:— பிரகிருதியை அநிர்வாச்சிய மென்றது எதனு லெனின்?

விடை:- சத்து அசத்து முதலிய இலக்கணங் களில், இன்ன இலக்கண முடைய தென வசநித் தற்குக் கூடாமையி னென அறிக. (26)

27. வினு:- பிரகிருதியைத் திரி குண சாமியா வஸ்தா ரூப மென்றது எதனு லெனின்?

விடை:- வெண்மை, சிவப்பு, கறுப் பாகிய மூன்று நூல்களையுஞ் சேர்த்துத் திரிக்கப்பட்ட கயிறு போல், சத்துவ இராசத தாமத மென்னும் முக் குணங்களுஞ் சேர்ந்து சம மாக வுள்ள தானமையி னென அறிக.

### பிரஹ்மத்தில் பிரகிருதி யுண் டென்பதற்குப் பிரமாணம்.

(சுக்கில யசுர் வேதம் பைங்களோபநிடதம் 1 ஆம் அத்தியாயம்)

"அதனிடத்தில் (பிரஹ்மத்தினிடத்தில்) மரு பூமியிற் சலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் புருடன், ஸ்படிகத்தில் வருணை முதலியவை போல, வெளுப்பு, சிவப்பு, கருப்பு என்னும் குண மய மானதும், வாக்குக் கெட்டாதது மாகிய (மித்தை யாகிய) மூலப் பிரகிருதியிருந்தது" (27)

28. வினா:- பிரஹ்மத்தி லுள்ளதாக முற் கூறிய பரையென்னும் சத்தியும், பிற் சொல்லிய பிரகிருதி யென்னும் சத்தியும், ஒரு தன்மையனவா, அல்லது, வெவ் வேறு தன்மையனவா வெனின்?

விடை:- பிரஹ்மத்துக்குப் பரை வேறின்றிய அபிந்நா சத்தி யாகவும், பிரகிருதி, வேருகிய பிந்நா சத்தியாகவு மிருத்தலின், ஒரு தன்மையன அல்ல வென அறிக. (28)

29. வினா:- பிரஹ்ம வியாபகத்து விருக்கின்ற இவ் விரண்டு சத்திகளில், பரையை அபிந்நா சத்தி யென்றும், பிரகிருதியைப் பிந்நா சத்தி யென்றுங் கூறிய தென்னை யெனின்?

விடை:— பரை, பிரஹ்மத்தைப் பிந்ந பிந்ந மாகத் தோற்றுவிக்காமல், ஏக மாகவே யுள்ளபடி தோற்று விப்பதாகவும், பிரஹ்மத்தின் அபேதப் பிரகாச மாகிய சிற் சத்தியாகவும் இருப்பது மின்றி, ஒன்றற் கொன்று பிந்நப்படாத அபிந்ந மாகிய முக் குண சொரூப மாகவு மிருத்தலின், அதனை அபிந்நா சத்தி யென்றும்; பிரகிருதி, பிரஹ்மத்தைப் பிந்ந பிந்ந மாகிய ஜக ஜீவ பர மாகத் தோற்றுவிப்பதாகவும், பிரஹ்மப் பிரகாசத்துக்குப் பேதமா யுள்ள அப்பிரகாசமாகிய சட சத்தி யாகவு மிருப்பது மன்றி, ஒன்றற் கொன்று பிந்ந பிந்ந மாக வுள்ள முக் குண சொரூப மாகவு மிருத்தலின், அதனைப் பிந்நா சத்தி யெனவுங் கூறிய தென அறிக.

*பிந்நா சத்தி யபிந்நா சத்தி யெனு மிரண்டு முண் டென்பதற்குப் பிரமாணம்,*

*(வைராக்கிய தீபம் 2 ஆம் கவி)*

"பின்னைய பினையாம் திரைகள்வீ சிடுமோர் பிரமவே லையிலினிப் படிவாம்"

(பெருந்திரட்டு 4 ஆவது பரனுலகப்பணை மெய்ம் மொழி)

"மன்னுநற் சிவத்துச் சத்தி மதித்திடி னிருவகைத்தாம்; பிந்நமற் றிருப்ப தொன்று பிந்நமா யிருப்பதொன்று" (29)

30. வினு:- இப் பிந்நா சத்தியை மூலப் பிரகிருதி யென்றதென்னை யெனின்?

விடை:- மூல மென்பது காரணம். (பிரகிருதி யென்பது ஆதாரம், அல்லது இயல்பு) இவைகளில் விருக்ஷந் தோன்றற்கு வித்துப் போல, ஜக ஜீவ பரங்கள் தோன்றற்குக் காரணமா யிருத்தல் பற்றி மூல நாமமும், சுவர்ணரேணுக்க ளடங்கி யிருத்தற்கு மெழு குண்டை போல, மகாப் பிரளயத்தில் ஜக ஜீவ பரங்க ளடங்கி யிருத்தற்கு ஆதாரமா யிருப்பது பற்றி, அல்லது, நாம ரூபப் பிரபஞ்சமாகப் பரிணமித்தலை யியல்பாகவே யுடையதா யிருத்தல் பற்றிப், பிரகிருதி நாமமும் சேர்ந்தமையால் மூலப் பிரகிருதி யென்றதாம். இது நிற்க, ப்ர என்பது சத்துவம்; க்ரு என்பது இராசதம்; தி யென்பது தாமதம்; சத்துவ இராஜத குண சகித தாமத குணப் பிரதாந சொரூப மானமையால், பிரகிருதி யென்னும் நாமம் வந்த தெனினும் அமையு மென அறிக. (30)

31. வினு:- பிரஹ்ம சத்திகள் அநந்த மெனச் சாத்திரங்கள் கூறுநிற்க, இச் சாத்திரம் பிரஹ்மத்தி லொரு சத்தியுண் டென அளவுபடுத்திக் கூறிய தென்னை யெனின்?

விடை:- தளிர், இலை, மலர், காய், கனி, கிளை, மரமாதிய நாநா வித நாம ரூப பேத விசித்திர சத்திக ளனைத்தும் வித்தி லடக்கம் போல, நாநா வித பேத தருமங்களையுடைய சத்திக ளனைத்தும் மூலப் பிரகிருதியி லடக்க மானமையால், சகல சத்திகளையும் பிரகிருதியி லடக்கி ஒரு சத்தியாகக் கூறிற் றென அறிக. (31)

32. வினா:— மூலப் பிரகிருதியில், சகல சத்திகளும் அடக்க மென்றால், முற் சொல்லிய பரை யென்னும் சத்தியும் அடங்கிய தாமோ வெனின்?

விடை:- பரை யென்னும் சத்தி பிரஹ்மத்தின் சச்சிதாநந்த இலக்கணங்களை விளங்கச் செய்து, பேத மின்றித் ததாகார மாகப் பிரகாசிக்குஞ் சிற் சத்தி யாதலால், சச்சிதா நந்தப் பிரஹ்மம் எவ்வளவு வியாபகமோ, அவ்வளவு வியாபக முள்ள தாகும். ஆதலால், அது, அப்பிரகாச பரிச்சிந்ந சட சத்தி யாகிய மூலப் பிரகிருதியி லடங்காது. அற்றன்று: அடங்கு மெனின், பிரஹ்மமு மடங்கிப் பரிச்சிந்நப் பொருளா யிருக்கிற தெனல் வேண்டும். அற்றேல், பிரஹ்மத்தை சச்சிதாநந்த பரிபூரண மெனக் கீர்த்திக் கும் சுருதியாதிகட்கு விரோதமா மென அறிக. (32)

33. வினா:— பிரஹ்மத்தில் பரை யாகிய அபிந்நா சத்தி, பிரகிருதி யாகிய பிந்நா சத்தி யென்னு மிரண்டு சத்திகளுமிருத்தற்கு, அக்கினியிற் சூடு, அல்லது, சுத்தி ரசதம் என ஒருபமாந மாத்திரங் கூறாமல், அபிந்நா சத்தி யிருத்தற்கு அக்கினியிற் சூடு போ லென்றும், பிந்நா சத்தி யிருத்தற்கு சுத்தியில் ரசதம் போ லென்றும், வெவ்வேறுபமாநங் கூறியது எதனா லெனின்?

விடை:- அக்கினியிலுள்ள உஷ்ண சக்தி அக்கி நியை மறைவு செய்யாமலும், அக்கினிக்குப் பிந்ந மாகத் தோற்றாமலும், அபிந்ந மாகவே யிருப்பது போலப், பிரஹ்மத்திலுள்ள பரை யென்னுஞ் சத்தி, பிரஹ்மத்தை மறைக்காமலும், பிரஹ்மத்துக்கு வேறாகத் தோன்றாமலும், எப்போதும் அபேத மாகவே யிருத்தலால், அதற்கு அக்கினியிற் சூடுவமாநமும்; சுத்தியி லுள்ள ரசதம், சுத்தியை மறைவு செய்வ தாயும், சுத்திக்குப் பேத மாகத் தோற்றுவ தாயும், இருத்தல் போலப், பிரஹ்மத்தி லுள்ள பிரகிருதி,

பிரஹ்மத்தை மறைவுபடுத்தி, ஜக ஜீவ பர பேத மாகத் தோற்றுவிப்பதாயும், பிரஹ்மத்துக்கு வேருகிய சட சத்தி யாயு மிருப்பது மன்றிப், பிரஹ்மத்தில் ஆரம்ப, பரிணம, விருத்திபக்ஷ மாகத் தோற்ருமல், விவர்த்த பக்ஷமாகவே தோற்றியதானமையினுனும், பிரகிருதிக்குச் சுத்தி ரசத உவமாநமும் கூறிய தென அறிக. (33)

34. வினு:-காரணத்தில் காரியத் தோற்றக் கிரமங்களாகிய ஆரம்ப மாதி நான்கிற்கு முள்ள இலக்கணங் களும் உபமாநங்களு மெவை யெனின்?

விடை:-ஆரம்பத்துக்கு அவயவத்தோடு கூடிய பல காரணங்களால், அவயவ சகித மாகிய ஒரு காரிய முண்டாதல் இலக்கணம்; பல தந்துக்களால் ஒரு ஆடையுண்டாதல் உபமாநம்; அல்லது, காரணத் தினின்றுங் காரிய முண்டாகிக் காரணத்திற்குப் பிந்நமா யிருத்தலும், காரண நட்டத்தாற் காரியமும் காரிய நட்டத்தாற் காரணமும் நட்டமாகா திருத்த லும் இலக்கணம்; தாயி னிடத்துப் பிள்ளையுண்டாதல் உபமாநம். பரிணமத்துக்கு, உபாதாந காரணத்துக் குச் சமாந சுபாவ முடையதாயும், அந்நியதா சொரூப மாயுமிருத்தல், அல்லது, காரணங் கெட்டுக் காரியமாதல், அதாவது, பூர்வ, ரூபத்தை விட்டு வேறு ரூபத்தையடைதல் இலக்கணம்; பால் தயிராதல் உபமாநம். விருத்திக்கு, அவயவ சகித மாகிய ஓர் காரணத்தால், அவயவ சகித மாகிய ஓர் காரியந் தோற்றலும், காரிய நட்டமாகும் போது, காரணமும் நட்ட மாதலும் இலக்கணம்; வஸ்திரங் கூடாரமாதல் உபமாநம். விவர்த்தத்துக்கு, காரணம் விகாரப்படாமல் காரியந்தோற்றலும், காரிய நட்டத் தால் காரணம் நட்ட மாகாதிருத்தலும் இலக்கணம்; சுத்தி ரசதம் உபமாநம் என அறிக. (இவற்றின் விசேட விளக்கம், இனிவரும் வினு விடைகளிற் காண்க. (34)

35. வினா:-பிரஹ்மத்தில் பிரகிருதி யாதி ஜகத்துத் தோன்றுதலை, ஆரம்ப பக்க மாகக் கூறில், விரோத மென்னை எனின்?

விடை:- நூல் வஸ்திர மாதல் போலப், பிரஹ்மம் பிரகிருதி யாதி ஜகத் தாயிற் றெனின், பல நூல்கள் சேர்ந்து வஸ்திர மாகிறது. அது போல, பல பிரஹ் மங்கள் சேர்ந்து, பிரகிருதியாதி ஜகத்தாக வேண்டும். அங்ஙன மாயின், பிரஹ்மம் ஏக மெனக் கூறும் சுருதி யாதிகளுக்கு விரோத மாம், அல்லது, நூல்கள் வஸ்திர மாயினும், வஸ்திரம், நூல்களின் சொரூப மாகவேயிருப்பது போலப், பிரஹ்மம் பிரகிருதியாதி ஜகத் தாயினும், ஜகத்துப் பிரஹ்ம சொரூப மாகவே யிருக்க வேண்டும். அங்ஙன மின் றென்பது பிரத்தி யக்ஷம், அல்லது, நூல்கள் தொழிலைப் பெற்று வஸ்திர மாவது போலப், பிரஹ்மமும் தொழிலைப் பெற்றுப் பிரகிருதி யாதி ஜகத் தாயிற் றெனின், பிரஹ்மம் நிஷ்கிரிய மென்னுஞ் சுருதிக்கு விரோத மாம். அல்லது, தாயி னிடத்துப் பிள்ளை யுண்டாதல் போலப் பிரஹ்மத்தி னிடத்தில் பிரகிருதி யாதி ஜகத் துண்டாயிற் றெனின், தாய் பிள்ளை யிருக்கு மிடத்தி லில்லாதது போலப், பிரஹ்மம் பிரகிருதி யாதி ஜகத்திருக்கு மிடத்தி லில்லாமல் கண்டப் பொரு ளாகும். அங்ஙன மாயின், பிரஹ்மத்தை அகண்டம் பூரண மெனக் கீர்த்திக்குஞ் சுருதியாதிகளுக்கு விரோதமா மென அறிக. (35)

36. வினா:- அல்லது பரிணாம பக்க மாகக் கூறில், விரோத மென்னை யெனின்?

விடை:-பால் தயி ராதல் போலப், பிரஹ்மமும், பிரகிருதி யாதி ஜகத் தாகு மானால், பால் விகாரப் பட்டுத் தயிராதல் போலப், பிரஹ்மமும் விகாரப் பட்டுப் பிரகிருதி யாதி ஜகத் தாக வேண்டும். அங்ஙன மாயின், பிரஹ்மம் நிருவிகார மெனக் கூறுஞ் சுருதி யாதிகட்கு விரோதமா மென அறிக. (36)

37. வினு:—அல்லது, விருத்தி பக்க மாகக் கூறில், விரோத மென்னை யெனின்?

விடை:-வஸ்திரங் கூடார மாதல் போலப், பிரஹ்மமே, பிரகிருதி யாதி ஜகத்தாயிற் றெனின், கூடாரம் அக்கிநி யாதிகளால் நஷ்ட மாகும் போது, வஸ்திரமும் நஷ்டமாவது போலப், பிரகிருதி யாதி ஜகத்து. பிரஹ்மாத்ம ஐக்கிய ஞாநத்தால் நட்ட மாகும் போது, பிரஹ்மமும் நட்டமாக வேண்டும். அங்ஙன மாயின், பிரஹ்மம் நித்திய மெனக் கூறுஞ் சுருதி யாதிகளுக்கு விரோதமா மென அறிக. (37)

38. வினு:—விவர்த்த பக்கமே அவிரோத மென்றது எதனு லெனின்?

விடை:-சுருதி யுத்தி அநுபவங்கட்கு விரோத மின்றியிருத்தலி னென அறிக. (38)

39, வினு:—விவர்த்த பக்கம், சுருதியாதிகளுக்கு விரோத மின்றிய தென்றது எதனு லெனின்?

விடை:—பிரஹ்மம் நித்தியம், பூரணம், நிருவி காரமெனச் சுருதி யாதிகள் கூறுகின்றன. அவை களுக் கொத்தபடி, சுத்தியிற் ரேற்ருநின்ற ரசதம், தோன்றல், திரிதல், கெடுத லாதிய விகாரங்களை யுறும் போது, சுத்தியும் அவ் விகாரங்களை யுருமல் நிருவிகாரமா யிருப்பது போலப், பிரஹ்மத் திற் ரேன்ருநின்ற பிரகிருதி யாதி ஜகத்து,தோன்றல் திரித லாதிய விகாரங்களை யுறும் போது, பிரஹ்ம மும் அவ் விகாரங்களை யுருமல் நிருவிகாரமா யிருக் கிறதென்னும் சுருதிக்கும், யுத்திக்கு மொத்தபடி, ஆத்ம சொரூப மாகிய நாமே நித்திய பூரண நிருவி கார சொரூபமா யிருக்கிரே மென்னும் பிரஹ்ம வித்துக்க ளநுபவமும் ஒத்திருக்கின்றமையி னென அறிக. (39)

40. வினு:—விவர்த்த பக்கமே சித்தாந்த மாயின், ஆரம்ப பரிணும விருத்தி பக்கங்களைச் சாத்திரங்கள் கூறியது மிகையன்ரே வெனின்?

விடை:-புத்தி தோஷத்தால் மயங்கி யுள்ள, சிற்சிலர்களை நோக்கிக் கூறியிருத்தலால், மிகையன்றென அறிக. (40)

41. வினு:- ஆரம்ப பக்கம் கூறியது எவர்களை நோக்கி யெனின்?

விடை:-உலகஞ் சத்துப் பொருள், உலகத்துக்குக் காரண மாக வேறு பொரு ளின் றென்பார்களை நோக்கிப், பிள்ளைக்குத் தா யிருப்பது போல, உலகத்துக்குத் காரணமாகப் பிரஹ்ம மிருக்கிற தெனத் தெரிவித்தற்குத், தாய் பிள்ளை யுவமாந மாகிய ஆரம்ப பக்கம் கூறிற்று; கூறினுஞ், சித்தாந்த மன்றென அறிக. (41)

42. வினு:-அற்றேல், பரிணம பக்கம் கூறியது எவர்களை நோக்கி யெனின்?

விடை:- பிள்ளைக்குத் தாய் வேறுபட்டிருப்பது போல, உலகத்துக்குப் பிரஹ்மம் வேறுபட்டு அபரிபூரண தோஷத்தை யடையுமே யென ஆசங்கிப்பாரை நோக்கித். தாய்க்குப் பிள்ளை வேறுபட்டிருப்பது போல, வேறுபட்டிராமல், பாலே தயிரா யிருப்பது போலப், பிரஹ்மமே யுலகமா யிருக்கிற தெனத் தெரிவித்தற்குப், பால் தயிருவ மாந மாகிய பரிணம பக்கங் கூறிற்று, கூறினும், அதுவும் சித்தாந்த மன்றென அறிக. (42)

43. வினு:-அற்றேல், விருத்தி பக்கங் கூறியது எவர்களை நோக்கி யெனின்?

விடை:-பால் தன் சுபாவக் கே டாகிய விகாரத்தை யடைந்து தயிரா யிருப்பது போலப், பிரஹ்மமும் தன் சுபாவக் கேடாகிய விகாரத்தை யடைந்து உலகமா யிருக்க வேண்டும். அங்ஙன மாயின். பிரஹ்மம் விகாரப் பொருளாமே யென ஆசங்கிப்பாரை நோக்கி, வஸ்திரம் தன் சுபாவக் கே டாகிய

விகாரத்தை யடையாமல் கூடாரமா யிருப்பது போலப், பிரஹ்மமும் தன் சுபாவக் கே டாகிய விகாரத்தை யுருமல், உலகமா யிருக்கிற தெனத் தெரிவித்தற்கு, வஸ்திர கூடார வுவமாந மாகிய விருத்தி பக்கங் கூறிற்று. அதுவுஞ் சித்தாந்த மன் றென அறிக. (43)

44. வினு:- அற்றேல், விவர்த்த பக்கங் கூறியது எவர்களை நோக்கி யெனின்?

விடை:- வஸ்திரம் விகாரப்படாமல் கூடாரமாயினும், கூடாரம் அக்கிநி யாதிகளால் நாச மடையும் போது வஸ்திரமும் நாச மடைவது போல, உலகமும் பிரளயத்தில் நாச மடையும் போது, பிரஹ்மமும் நாச முற் றநித்தியப் பொரு ளாமே யென ஆசங்கிப்பாரை நோக்கி, காரிய மாகிய சர்ப்பம், அல்லது, இரசதம், நாச மடையினும், காரண மாகிய கயிறு, அல்லது, சுத்தி, நாச மடையாதது போல, காரிய மாகிய உலகம் நாச மடையினும், காரண மாகிய பிரஹ்மம் நாச மடையா தெனத் தெரிவித்தற்குக், கயிற்றரவு சுத்தி ரசத வுவமாந மாகிய விவர்த்த பக்கங் கூறிற்று. இதுவே நிர்த்தோஷ மாகிய சித்தாந்த மென அறிக. (44)

45. வினு:-பிரகிருதிக்குப் பிரஹ்மத்தோ டுள்ள சம்பந்தம் யா தெனின்?

விடை:-கற்பித பேத, வாஸ்தவ அபேதமா யுள்ள அநாதி * தாதாந்மிய சம்பந்த மென அறிக. (45)

* கற்பித பேத சகித வாஸ்தவ அபேதம்.

(பதம்) அந்தச் சத்தி விகிருத சத்துவ இராசத தாமத மாகிய முக் குண சொரூப மாக விரிந்து தோன்றும்—

(பொருள்) பிரஹ்மத்தில் அநாதி கற்பிதமா யுள்ள பிரகிருதி யென்னும் அச் சத்தியானது, வெவ் வேறு தன்மையன வாகிய சாத்வீக, இராஜத, தாமத மென்னும் பெயர்களை யுடைய, திரி குண வடிவ மாக, விகாச மாகித் தோன்றுநிற்கும்.

46. வினு:— இம் முக் குணங்களும் வெவ் வேறு தன்மை யன வென்றது எதனு லெனின்?

விடை:- சத்துவ குணம் ஈசுவராசிரய மாயும், ஈசுவரன் சருவஞ்ஞத்துவாதி குண சகிதனு யிருத் தற்குக் காரண மாகவும், இராஜத குணம் ஜீவாசிரய மாயும், ஜீவர்கள் கிஞ்சிஞ்ஞத்துவாதி ஈந குண அஞ்ஞரா யிருத்தற்குக் கரண மாகவும், தாமத குணம் மறைப்புக்கும், தநு கரண புவந போக வடி வங்கட்குங் காரண மாகவும், வேறுபட்டிருத்தலி னென அறிக. (46)

(நூல் பிரிவு-6)

அம் முக் குணங்களில், சத்துவ குணம் மாயை யென்றும், சருவஞ்ஞ வுபாதி யென்றும், ஈசுவர காரண சரீர மென்றும் சொல்லப்படும். அம் மாயை யில் நின்மல சலப் பிரதிபிம்பம் போலப், பிரஹ்மப் பிரதிபிம்பம் சுலக்ஷணமாக வுளது. அந்தப் பிரதிபிம்ப சைதந்நியம் சருவஞ்ஞனுகிய ஈசுவர னென்று சொல்லப்படும்.

(பதம்) அம் முக் குணங்களில் சத்துவ குணம் மாயை யென்றும்—

(பொருள்) முற் சொல்லப்பட்ட திரி குணங் களில், நின்மல மாகிய சாத்வீக குண மானது, வாஸ்தவ சொரூபமில்லாத தாகிய மாயை எனவும்,

47. வினு:-மாயையை வாஸ்தவ சொரூப மில்லாத தென்றது எதனுலெனின்?

விடை:— மாயை யென்னுஞ் சொல்லின் பொருளை விசாரித்துப் பார்க்கு மிடத்து, யா—யா தொன்ருனது; மா— (வாஸ் தவத்தில்) இல்லையோ, ஸா — அது, மாயை யெனப் பொருள்படுகின்றமையினும், ஓர் பொரு ளாக நிலை பெருமல் அநிர்வாச்சியமா யிருத்தலினுனு மென அறிக.

மாயை வாஸ்தவ சொரூப மில்ல தென்றதற்குப் பிரமாணம்

(எசுர் வேதத்தின் சர்வ சாரோபநிடதம்)

"எவள் வாஸ்தவத்தி லில்லையோ, அவள் தான் மாயை"

(பிரஹ்ம கீதை 12ஆவது சருவ சாஸ்திரார்த்த முரைத்த அத்தியாயம். கவி 7-8)

"இடையிலோர் மாயை யுண்டென் றெண்ணு மேல், கடையதே யாம்வன் கற்ற கல்வியே."

"மாயையென் ருென்றுண் டாக மதிப்பது மநந மல்ல." (47)

48. வினு:- மாயையை அநிர்வாச்சிய மென்றது எதனு லெனின்?

விடை:— சத்து, அசத்து, சதசத்து, சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவம். பிந்நம், அபிந்நம், பிந்நாபிந்ந மாகிய நவ விலக்கணங்களில் யாதேனும் ஒரிலக்கண முடைய தென்று வசநித்தற்குக் கூடாமையி னென அறிக. (48)

49. வினு:- மாயையை நவ விலக்கணங்களில், ஒரிலக்கண முடைய தாகவேனும் வசநித்தற்குக் கூடா தென்றது எதனு லெனின்?

விடை:— சத் தெனின், முக்காலத்தினு முள்ளதா யிருத்தல் வேண்டும். அங்ஙன மின்றிப், பிரஹ்ம ஞாநத்தால் நாச மாகின்றமையால் சத்து மல்ல. அசத் தெனின், வந்தியா சுதன் போற் ருேற்ற மின்றி

யிருக்க வேண்டும். அங்ஙன மின்றி, நாம ரூபப் பிரபஞ்ச மாகத் தோன்று கின்றமையால் அசத்து மல்ல. சதசத் தெனின், சத்து உள்ளது; அசத்து இல்லது, எதிர் மறை யிலக்கண முடைய இவ் விரண்டும் ஒன்ருயிருக்கு மெனல் பகலு மிரவு மொன்ரு யிருக்கு மெனல் போல் விரோத மானமையின், சதசத்து மல்ல. சாவயவ மெனின், அவயவ சகிதமா யிருக்கவேண்டும். கந்தருவ சைநியங்களைத் தோற்று விக்கும் இந்திரசாலிகன் சத்திக்கும், தீபத்திற் பொறி யை யுதிப்பிக்கும் தீப சத்திக்கும், வடிவ மில்லாமை போலப், பிரஹ்மத்தினின்றும் பிரபஞ்சந் தோன்றச் செய்யும் மாயா சத்திக்கு வடிவ மின்மையால், சாவயவமு மல்ல. நிரவயவ மெனின், அவயவ சகித மாகத் தோற்ரு திருக்க வேண்டும். அங்ஙன மின்றி, அவயவ சகிதப் பிரபஞ்ச மாகத் தோற்றுகின்றமை யால் நிரவயவமு மல்ல. சாவயவ நிரவயவ மெனின், எதிர் மறை யிலக்கண முடைய இரண்டு மா யுள்ளது மாயை யெனல், ஏ டுள்ளதும் இல்லதும் புத்தக மெனல் போல, விரோத மானமையின், சாவயவ நிர வயவமுமல்ல. பிந்ந மெனின், பிரஹ்மத்துக் கந்நிய மாக இருக்கவேண்டும். அற்றேல், அத்துவிதத்துக் காநி வரும். வரி லென்னை யெனின், பிரஹ்மத்தை அத்துவிதம் ஏக மெனக் கீர்த்திக்கும் சுருதி யாதி களுக்கு அப்பிரமாணத்துவமும், அவைகளை வெளியிட் டருளிய ஈசுவரனுக்கு அசத்திய வாதித்துவமும் வரும். இஃதன்றி அக்கிநிக்கும், சித்திரிகனுக்குப், அந்நிய மாகப் பொறியை யுதிப்பிக்கும சத்திக்கும், சித்திரிக சத்திக்கும், இருப் பில்லாதது போலப், பிரஹ்மத்துக் கந்நிய மாக மாயா சத்திக் கிருப்பில்லாமையால், பிந்நமு மல்ல. அபிந்ந மெனின், வேப் பிலையுங் கசப் பும் போலப், பிரஹ்மமும், மாயையும், ஒன்ரு யிருக்க வேண்டும். அற்றேல், உப்பினைச் சார்ந்த மாங் கனிக்குத் தன் றன்மை கெட்டு உப்பின் றன்மை வாய்ந்தது போலப் பிரஹ்மத்துக்குச் சச்சிதாநந்த

இலக்கணங்கள் கெட்டு அசத்து சட துக்க இலக்கணங்களும், மாயைக்கு அசத்து சட துக்க இலக்கணங்கள் கெட்டுச், சச்சிதாநந்த இலக்கணங்களும் வரும். வரி னென்னை, யெனின், பிரஹ்மத்தை மாயை எனவும், மாயையைப் பிரஹ்ம மெனவும் கூற வேண்டும். கூறி னென்னை யெனின், சச்சிதாநந்த சொரூபமாயுள்ளது பிரஹ்ம மெனவும், அசத்து சட துக்கமா யுள்ளது மாயை யெனவுங் கூறுகின்ற சுருதி யாதிகட்கு விரோதமாம். இஃதன்றிப் பிரஹ்மநாமத்துக்கு வேருக மாயைக்கு, அஞ்ஞாநம், பொய்யுருவி, தமசு மோக மென அநேக நாமங்கள் கூறப்படுகின்றமையால் அபிந்நமு மல்ல, பிந்நாபிந்ந மெனின், எதிர்மறை இலக்கண மாகிய பேதமும், அபேதமும் ஒன்ருக யிருக்கின்ற தெனல், தூரமும், சமீபமும், ஒன்ருயிருககின்ற தெனல் போல, விரோத மானமையின் பிந்நாபிந்நமு மல்ல. ஆதலி னென அறிக.

*இதற்குப் பிரமாணம்*

(எசுர் வேதத்தின் சர்வ சாரோபநிடதம்)

"அந்த மாயை யிருக்கிறவளு மல்ல இல்லாத வளுமல்ல; அவ்விரண்டுங் கலந்தவளு மல்ல; வாக்குக் கெட்டாதவள்".

(மா பாரதம் உத்தர கீதை 1.ஆம் அத்தியாயம்)

"இந்தக் 'காரண சரீர மென்கிற அவ்வியா கிருதம் சத்து மல்ல; அசத்து மல்ல; சதசத்து மல்ல; பிந்நமு மல்ல; அபிந்நமு மல்ல; பிந்நாபிந்நமு மல்ல; சாவயவமு மல்ல; நிரவயவமு மல்ல; சாவயவ நிரவயவமு மல்ல".

(வேதாந்த சூடாமணி. 55 ஆம் கவி)

"பிந்நமோட சத்துச்சா வயமும்எதிர் மறையு மவை பிரிந்து தம்மின், மன்னியவு மொழிந்தநிர்வாச் சியமாகு நவ விதமம் மாயை யெய்தும்".

(கைவல்லிய நவநீதம், 2ஆம் படலம், 95ஆம் கவி)

"அதனை இன்னதென் றுரைத்திடப் படாமை யால் அவாச்சிய வடிவாகும்." (49)

50. வினா:- சுருதியாதிகள் மாயையைச் சத் தாக வாயினும், அசத் தாக வாயினும் ஒப்பாவிடின் மற் றியா தாக ஒப்பி விவகரிக்கின்றன வெனின்?

விடை:- சதசத் விலக்ஷண பாவ பதார்த்த மாக ஒப்பி விவகரிக்கின்றன வென அறிக. (50)

51. வினா:- சகல பதார்த்தங்களும் இருக்கிற தென்னும் ஞானத்துக்கு விஷயமா யுள்ள சத்தும், இல்லை யென்னும் ஞானத்திற்கு விஷயமா யுள்ள அசத்து மாய், இரு வகைப்பதார்த்தங்களு ளடங்கி யவைக ளாக இருக்கின்றனவே யன்றி, யிவைகளுக் கந்நியமாய், மூன்ருவது பதார்த்தமாக ஒன்றேனுங் காணப்படாமையால், மாயையைச் சத்துக்கும், அசத்துக்கும், வேரு யுள்ள பதார்த்த மெனல் மயக்கமா மெனின்?

விடை:- பிரகிருதி முதல் பூத பௌதிகங்களாகிய சகல பதார்த்தங்களும் விஷய மாகத் தோற்றுந் தன்மையனவும் அழியுந் தன்மையனவு மாக இருத்தலின், அவைகள், முக் காலத்தினு முள தாகிய சத்துக்கும், முக் காலத்தினு மில தாகிய அசத்துக்கும் வேறுபட்டு மூன்ருவது பதார்த்தங்க ளாகவே இருக்க, மூன்ருவது பதார்த்த மொன்றேனுங் காணப்பட வில்லை யென்பதே, சமுத்திர மத்தியில் வீழ்ந் துள்ளவன், சலம் ஓர் திவலை யேனு மில்லை யென்பது போல, மயக்கமா மென அறிக. (51)

52. வினா:- சத்துக்கு விலக்ஷணமா யுள்ளது அசத் தாகும்; அதனை, அசத்துக்கு விலக்ஷண மென்பதும், அசத்துக்கு விலக்ஷணமா யுள்ளது சத் தாகும்; அதனைச், சத்துக்கு விலக்ஷண மென்பதும் விரோத மன்றே வெனின்?

விடை:- முக் காலத்தினும் பாத மாகா திருப்பது சத் தெனப்படும்; சத்துக்கு விலக்ஷண மென்றமை யால், இரச்சு சர்ப்பம போலப், பாத மாகத் தக்க தெனவும் வந்தி சுதன் (மலடி மகன்) போல, முக் காலத்தினும் சொரூப மில்லது அசத் தெனப்படும்; அசத்துக்கு விலக்ஷண மென்றமையால், இரச்சு சர்ப் பம் போல், சொரூப முள்ள தெனவும், பொருள் படுகின்றமையால், பிரஹ்ம ஞாநத்தால் பாத மாகத் தக்க தாயும், சொரூப முள்ள தாயு மிருக்கின்ற மாயையைச், சத்துக்கும், அசத்துக்கும், விலக்ஷண மென்பது விரோத மல்ல வென அறிக. (52)

(பதம்) சருவஞ்ஞ வுபாதி யென்றும்—

(பொருள்) எல்லா மறித லாதிய சட் குணங்கள் தோன்றுதற் கேது வாய தெனவும்.

53. வினு:— சட் குணங்க ளெவை வெனின்?

விடை:— சருவஞ்ஞத்துவம், சருவேசுரத்துவம், சருவாந்தரியாமித்துவம், சருவ காரணத்துவம், சருவ நியந்திருத்துவம், சருவ சத்தித்துவ மாகிய இவைக ளென அறிக. (53)

54. வினு:— சருவஞ்ஞத்துவம் யா தெனின்?

விடை:- ஜீவர்கள் மந மொழி மெய்களாற் செய்யப்படும் நல் வினை தீ வினை யாதிக ளனைத் தையும் ஏக காலத்திலறியுந் தன்மை யென அறிக. (54)

55. வினு:- சருவேசுரத்துவம் யா தெனின்?

விடை:- இயற்கை ஞாநம், பே ரருள், முடிவி லாற்றல், வரம்பி லின்பம், வரம்பில் காட்சி, முத லியதன்மை, அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி பிராகாமியம், ஈசத்துவம் வசித்துவங் களோடு தூய வுடம்பு, மக்கள், பொன், மணி, அடிமை வாகநங்க ளாதிய சகல ஐசுவரியங்களு முளவாந் தன்மை யென அறிக. (55)

56. வினா:- சருவாந்தரியாமித்துவம் யாதெனின்?

விடை:- ஜீவர்களுடைய அந்தக் கரணங்களினுள்ளிருந்து அவரவர்கள் கன்ம தார தன்மியத்துக்கு தக்க தாகச் சுக துக்காதி போகங்களை யநுபவிக்கும்படி சூத்திரதாரி பாவையை யசைப்பது போல, அசைப்பிக்கும் பிரேரகத்துவ மென அறிக. (56)

57. வினா:- சருவ காரணத்துவம் யா தெனின்?

விடை:- சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரக மென்னும் ஐந்திற்குங் காரணத் தன்மை, அல்லது, உ பா தா ந ம் நிமித்த மென்னும் இரண்டிற்குங் காரணத்தன்மை யென அறிக. (57)

58. வினா:- உபதாந காரணம் யா தெனின்?

விடை:- எது காரிய சொரூபத்திற் பிரவேசித்து அதனோ டொற்றுமை யுடைய தாக இருக்கிறதோ, எதையின்றிக், கா ரி ய ந் திதி பெறுதோ, எது, காரியத்தின் உற்பத்தி திதி லய மாகிய மூன்றிற்குங் காரணமோ, அது, வென அறிக. (58)

59. வினா:- இஃ தெது போலு மெனின்?

விடை:- மண், காரிய மாகிய கடத்திற் பிரவேசித்து, அதனோ டொற்றுமை யுடையதா யிருத்தலும், மண்ணையின்றிக், காரிய மான கடந் திதி பெறு திருத்தலும், மண்ணே கடத்தின் உற்பத்தி திதி லய மாகிய மூன்றிற்குங் காரணமா யிருத்தலும் போலு மென அறிக. (59)

60. வினா:- நிமித்த காரணம் யா தெனின்?

விடை:- எது, காரிய சொரூபத்திற் பிரவேசியாமல், வேறு யிருந்து காரியங்களை யுற்பத்தி செய்

கிறதோ, எதன், நாசத்தால் காரியங் கெடுதி யடைகிற தில்லையோ, எது, காரிய உற்பத்திக்கு மாத்திரம் காரணமோ, அது, வென அறிக. (60)

61. வினு:- இஃ தெது போலு மெனின்?

விடை:- குலாலன் கட சொரூபத்திற் பிரவேசி யாமல், வேரு யிருந்து கடத்தை யுற்பத்தி செய்தலும், குலால நாசத்தால் காரிய கடங் கெடா திருத்தலும், குலாலன் கடத்தின் உற்பத்திக்கு மாத்திரங் காரணமா யிருத்தலும் போலு மென அறிக. (61)

62. வினு:- சருவ நியந்திருத்துவம் யா தெனின்?

விடை:- சமுத்திரம் அணை கடவா திருக்கவும், சோமன் சூரியன் கிரகம் நக்ஷத்திரம் வாடை தென்றல் முதலியன கிரமந் தவருது செல்லவும், நியமிக்குந் தன்மை யென அறிக. (62)

63. வினு:- சருவ சத்தித்துவம் யா தெனின்?

விடை:- இச்சா ஞாநக் கிரியைகள் முதலிய சருவ சத்திகளை யுடைய தன்மைக ளென அறிக. (63)

(பதம்) ஈசுவர காரண சரீர மென்றுஞ் சொல்லப் படும்—

(பொருள்) ஈசுவர னுடைய மூல சரீர மென்றுங் கூறப்படும்.

64. வினு:- மாயையை, ஈசுவர காரண சரீர மென்றது எதனு லெனின்?

விடை:-ஈசுவரன் பிரதிபிம்ப ரூப மாகத் தோன்றற் கும், ஈசுவரன் தூல சூட்சும மாகிய விராட்டு இரணிய கருப்ப சரீரங்கள் தோன்றி யொடுங்கற்கும், காரண மா யிருத்தலி னென அறிக. (64)

(பதம்) அம் மாயையில், நின்மல சலப் பிரதி விம்பம் போலப், பிரஹ்மப் பிரதிவிம்பம் சுலக்ஷண மாக வுளது—

(பொருள்) அத் தன்மை யாகிய மாயை யினிடத்து, தெளிந்த சலத்தி லுள்ள சூரியாதிப் பிரதிவிம்பம் போல, பிரஹ்மத்தின் பிரதிவிம்ப மானது, சுயலக்ஷண மாக விளங்குவதா யிருக்கிறது.

65. வினா:— ரூப சகித மாகிய சூரியப் பிரதிவிம்பம் சலத்திற் ருேன்ருநிற்கு மென்பது பொருந்தும். பிரஹ்மம், ரூப ரகித மானமையால், அதன் பிரதி விம்பம் மாயையிற் ருேன்ரு நிற்கு மென்பது பொருந்தா தெனின்?

விடை:— ரூப ரகித மாகிய ஆகாயப் பிரதிவிம்பம் சலத்திற் ருேன்ருநிற்பது போல, ரூப ரகித மாகிய பிரஹ்மப் பிரதி விம்பமும், மாயையிற் ருேன்ருநிற்கு மென்பது பொருந்து மென அறிக. (65)

66. வினா:— சலத்தில் மேக நக்ஷத்திராதிகளின் பிரதிவிம்பங்கள் தோன்றுகின்றனவே யன்றி, ஆகாயப் பிரதிவிம்பந் தோன்றவில்லையே யெனின்?

விடை:— அற்றேல், சிறிய கடத்தி னள வாகிய சலத்தில், மநுட னள வாகிய பெரிய பிரதிவிம்பந் தோற்றப்படாது; தோற்றுகின்றமையால், அதற்கு அவகாசங் கொடுத்தது, பிரதிவிம்ப ஆகாயமே யன்றி, கடமும் சலமு மன்ரும். அற் றன்று; கடமும் சலமுமே இடங் கொடுத்த தெனின்? பிரதிவிம்பைத்தப் போல, விம்ப மாகிய மநுடனுள்ளே யிருத்தற்குக் கட மாயினும், அல்லது, கடத்தின் அள வாகிய சல மாயினும் இடந்தரல் வேண்டும். தர மாட்டா வென்பது யாவர்க்குந் தெரிந்ததே யாம் இஃ தன்றி, ரூப ரகித மானவை, பிரதிவிம்பிக்கிற தில்லை என்னும் நியமமு மில்லை.

எதனு லெனின்? சத்தம் ரூப ரகிதமாயுள்ளது. அதன் பிரதித் தொநியானது சத்தத்தின் பிரதிவிம்பமே யாகும். ஆதலின், மாயையிற் பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றுநிற்கு மென்பதற் கையமின் றென அறிக. (66)

67. வினு:- அங்ஙன மாயினும், பிரஹ்மம் கண்டப் பொருளானுல், அதற்கு வேருக மாயையும், அதிற் பிரஹ்மப் பிரதிவிம்பமும் உளதென்பது பொருந்தும். அங்ஙனமின்றிப், பிரஹ்மம் அகண்ட மெனச் சுருதிகள் கூறுகின்றமையால், அதற்கு வேருக மாயையும், அதிற் பிரஹ்மப் பிரதிவிம்பமும் உளதென்பது பொருந்தா தெனின்?

விடை:- ஆகாயத்தில், அதன் காரிய மாகிய வாயு வாதிய பூதங்களிருப்பினும், ஆகாயங் கண்டப்-படாமலும், வாயு வாதிய பூதங்களி லொன்ருகிய அப்புப் பூதத்தில், பிரதி பிம்பிக்கப்பட்டு மிருப்பது போல, அகண்ட மாகிய பிரஹ்மத்தில், மித்தை யாகிய மாயை யிருப்பதால், பிரஹ்மங் கண்டப்படாமலும், மாயையிற் பிரதிபிம்பிக்கப்பட்டு மிருக்கிற தென்பது பொருந்து மென அறிக. (67)

(பதம்) அந்தப் பிரதிவிம்ப சைதந்நியம் சருவஞ்ஞனுகிய ஈசுவர னென்று சொல்லப்படும்—

(பொருள்) பிரதிபிம்ப ரூப மாக விளங்குகின்ற, அச் சைதந்நிய மானது, எல்லா மறிந்தவ னுகிய, ஈசுவர னென்னும், பெயராற் கூறப்படும்.

68. வினு:-ஈசுவரனுக்குச் சொரூபம் யா தெனின்?

விடை:- ஆசிரயமா யுள்ள மாயை, அதிற் சிற் பிரதி பிம்பமா யுள்ள ஆபாசம், அவற்றிற் கதிட்டா நமா யுள்ள பிரஹ்மம் ஆகிய மூன்று மென அறிக. (68)

69. வினா:–ஈசுவரனது தர்மங்க ளெவை யெனின்?

விடை:– சருவ சத்தித்துவம், சருவஞ்ஞத்துவம், வியாபகத்துவம் ஏகத்துவம், சுதந்திரத்துவம், சாமர்த்தி யத்துவம், பரோக்ஷத்துவம், மாயா வுபாதி யுடைமை யாகிய எட்டு மென அறிக. (69)

70. வினா:- ஈசுவரனுக்குத் தேசம் யா தெனின்?

விடை:– அவ்வியாகிருத மாகிய மாயை யென அறிக. (70)

71. வினா:– ஈசுவரனுக்குக் காலங்க ளவை யெனின்?

விடை:- சிருஷ்டி காலம், திதி காலம், பிரளய கால மாகிய மூன்று மென அறிக. (71)

72. வினா:- ஈசுர காரியங்க ளெவை யெனின்?

விடை:-சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரக மாகிய ஐந்து மென அறிக. (72)

73. வினா:–ஈசுவர சிருட்டி யாதிய காரியங்கட்குச் சாமக்கிரிக ளெவை யெனின்?

விடை:– சத்துவ இராசத தாமதங்க ளென்னும் முக்குணங்க ளென அறிக.

*மாயையி லுள்ள பிரதிவிம்பம், ஈசுவர னென்பதற்குப் பிரமாணம்.*

(சுக்கில யசுர் வேதத்தின் பைங்களோபநிடதம்)

''அதில் (மூலப் பிரகிருதியில்) பிரதிபலித்த தெதுவோ, அது, ஈசுவர சைதந்நியமா யிருக்கிறது. அவன் (அவ் வீசுவரன்) மாயையைச் சுவாதீந மாக

வுடையவ ஞயும், சரு வஞ்ஞுயும், சிருட்டி திதி லயங்கட்கு ஆதிகர்த்தா வாயும், சகத்துக்கு முளை யாயு மிருக்கின்ருன்.''

(கைவல்ய நவநீதம்,)

(தத்துவ விளக்கப் படலம் 32ஆம் கவி)

''இக்குணங் களிலே விண்போன் றிருக்குஞ்சிற் சாயை தோன்றும், முக்குணங் களினுந் தூய்தாம் முதற்குணம் மாயையாகும், அக்குணப் பிரஹ்மச் சாயை அந்தரி யாமி மாயை, எக்குணங் களும்பற் ருதோ னிமித்தகா ரணனு மீசன்.'' (73)

(நூல் பிரிவு - 7)

அச்சத்துவ குண மாயை, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தி லிராசதம், சத்துவத்திற் ருமத மென்னும் முக்குண சொரூபமா யிருக்கும். அவற்றுள், சத்துவத்திற் சத்துவம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமா யுள்ள ஈசுவரன், சகத்தை யிரட்சிக்கின்றமையால் விஷ்ணு வென்றும், சத்துவத்தி லிராசதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமா யுள்ள ஈசுவரன் சகத்தைச் சிருஷ்டிக் கின்றமையால் பிரஹ்மா என்றும், சத்துவத்திற் ருமதம் பிரதாந மாகும் போது. அதிற் பிரதிவிம்பமா யுள்ள ஈசுவரன், சகத்தை யுபசம்மாரஞ் செய்கின்ற- மையால் உருத்திர னென்றுஞ் சொல்லப்படுவன். இங்ஙனம் சத்துவ குண கற்பனை கூறப்பட்டது.

(பதம்) அச் சத்துவ குண மாயை, சத்துவத்திற் சத்துவம், சத்துவத்திலிராசதம், சத்துவத்திற் ருமத மென்னும் முக் குண சொரூபமா யிருக்கும்—

(பொருள்) வெளி.

(பதம்) அவற்றுள், சத்துவத்தில் சத்துவம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிபிம்பமா யுள்ள

ஈசுவரன் சகத்தை யிரட்சிக்கின்றமையால் விஷ்ணு வென்றும்—

(பொருள்) அம் முக் குணங்களினுள், தெளிந்த சலத்தில், தெளிந்தசலம் மேலிடுவது போலச், சத்துவ குணத்திலிராசதமும் தாமதமும் அடங்கிச் சத்துவ குண மதிகரிக்கும் போது, அச் சத்துவ குணத்திற் பிரதிபலந ரூப மாக விளங்காநின்ற ஈசுவரன், சராசரப் பிரபஞ்சங்க ளனைத்தையும் நிலை பெறும்படி யிரக்ஷிக்கின்றமையால், வியாபக சொரூபனாகிய விஷ்ணு வெனவும்.

74. வினா:- ஈசுவரன் எதன் நிமித்தம் எங்ஙன மிரக்ஷிக்கிரு னெனின்?

விடை:- சிறைச் சாலையில் கட்டுண்ட திருடன், சிறைச் சாலையை விட்டு வெளிப்படுங் கால பரியந்தம், இட்ட வேலைகளைச் செய்து கொண்டு சரீரத்தோடு ஜீவித்திருக்கு நிமித்தம், அவனுக்கு அரசன் அந்நாதிகளைக் கொடுத்து இரக்ஷிப்பது போலப், பந்த திசையி லிருக்கின்ற சீவர்கள், பந்த காரண மாகிய காமிய கன்மங்களை விடுத்து, நிட்காமிய கன்மங்களைத் தொடுத்துச், சற் குருவை யடுத்துப், பிரஹ்ம ஞாநம் பெற்று, விதேக முத்தியை யடையும்பரியந்தம் சரீரங்களோடு ஜீவித்திருக்கு நிமித்தம் அவரவர்கள் கன்மப்படி இதம், அஹிதம், இதாஹிதமாகப் போகங்களை யூட்டுவித்து இரக்ஷிக்கின்றனனென அறிக. (74)

(பதம்) சத்துவத்தி லிராசதம் பிரதாந மாகும் போது அதிற் பிரதிவிம்பமா யுள்ள ஈசுவரன், சகத்தைச் சிருஷ்டிக்கின்றமையால் பிரஹ்மா என்றும்—

(பொருள்) தெளிந்த சலத்தில், கலங்கற் சல மேலிடுவது போலச், சத்துவ குணத்தில்

சத்துவ குணமும், தாமத குணமு மடங்கி ராசத குண மதிகரிக்குங் காலத்தில், அவ்விராசத குணத்திற் பிரதிபலநரூப மாக இராநின்ற ஈசுவரன், பிரபஞ்சத்தை யுற்பத்தி செய்கின்றமையால், மகத் தாகிய பிரஹ்மா எனவும்,

75. வினு:-ஈசுவரன், எதன் நிமித்தம் எங்ஙனம் ஜக சிருஷ்டி செய்கின்றன னெனின்?

விடை:-சிறைச் சாலையிற் கட்டுண்ட திருடர்கள், கடிந வேலை யாதிகளைச் செய்து குற்றங்களினின்று விடு பட்டு வெளிப்படு நிமித்தம், அவர்கள் வேலை செய்தற்குத் தக்க கருவிகளான அரிவாள் மண் வெட்டி கூந்தாலி கடப்பாரை யாதிகளை யிரும்பாதி யில் நின்றும் உண்டுபண்ணுவது போல, அஞ்ஞாநத்தி லமிழ்ந்திப் பந்தப்பட்டிருக்கின்ற ஜீவர்கள், சரீராதிப் பிராப்தியால் சற்கருமஞ் செய்தல் முதலியவைகளால் பந்த நிவிருத்தி யாகி, முத்தி யடையு நிமித்தம், அவர்கள் சற் கன்மங்கள் செய்தற்குச் சாதநங்களான தநு கரண புவந போகங்களை மாயையினின்றும் சிருஷ்டிக் கின்றன ரென அறிக. (75)

(பதம்) சத்துவத்திற் ருமதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமா யுள்ள ஈசுவரன் சகத்தை யுப சம்மாரஞ் செய்கின்றமையால்—

(பொருள்) தெளிந்த சலத்தில் வண்டல் சல மேலிடுவது போலச், சத்துவத்திற் சத்துவமும், இராசதமு மடங்கித் தாமத குண மதிகரிக்கும் போது, அத் தாமத குணத்திற் பிரதிவிம்ப ரூப மாக இரா நின்ற ஈசுவரன், சகலப் பிரபஞ்சங்களையும் முற்றிலுஞ் சங்கரித்தலால்,

(பதம்) *உருத்திர னென்றுஞ் சொல்லப்படுவன்-

(பொருள்) சங்கார கர்த்தா வாகிய உருத்திர னென்றும் சொல்லப்படுவன்.

76. வினா:-ஈசுவரனுக்கு உருத்திர நாமம் வந்தது சங்கார கிருத்தியத்தா லெனல் போது மான ஏதுவா யிருக்க, உபசங்காரத்தா லென மிகை யாக விசே ஷித்துக் கூறியது எதனு லெனின்?

விடை:-உப வென்பது இரண்டாவது. இரண் டாவது தோற்ற மின்றிச் சங்கரிப்பவர் உருத்திர ரொருவரே யென்பதும், எமன் சங்கார கிருத்திய முள்ளவ னுயினும், அவனுல், உருத்திரர்க்கு அதி வியாத்தித் தோட மில்லை யென்பதுந் தோன்று நிமித்த மென அறிக. (76)

77. வினா:-சங்கார கர்த்தா வாகிய ஈசுவரனை யுபசம்மார கர்த்தா வென்றமையால், அவர்க்கு எமனுல் அதிவியாத்தித் தோட மில்லை யென்பது எதனு லெனின்?

விடை:- எமன் இரண்டாவதா யுள்ள காரியப் பிரபஞ்சங்களில், பஞ்ச பூதங்களையும் சூட்சும சரீரங்களையும் விடுத்துத் தூல சரீரங்களை மாத்திரம் சங்கரிக்கும் ஆற்றலுளனே யன்றிக், காரியப் பிரபஞ் சங்க ளனைத்தும் ஏக காலத்தில் காரணத்தி லடங்கும் படி உபசம்மாரஞ் செய்யும் ஆற்ற லில னென அறிக. (77)

78. வினா:-அற்றேல், காரியப் பிரபஞ்சங்க ளொடுங் கற்கு ஆதாரமான காரணமும், காரணத்தில், காரியப் பிரபஞ்சங்களை யொடுங்கும்படி சங்கரித்த

* ருதம் த்ராயவதி - ருத்ர : ॥ அதாவது (ருதம்) அஞ் ஞானத்தை (த்ராவயதி) போக்கடிக்கின்றமையால்- ருத்திரன்.

ஈசுவரனு மாகிய தோற்றங்கள், நாச மின்றிச் சேடித்து நிற்றலால், ஈசுவரனை யிரண்டாவது தோற்ற மறச் செய்யும் உபசங்கார கர்த்தா வெனல் பொருந்தா தெனின்?

விடை:-சிரவண மநநாதிகளால் சித்த பரிபாக மாகிய ஜீவர்கட்கு, ஞாநாநுக்கிரகத்தால், காரணத் தோடு காரியத் தோற்றங்களையுஞ் சங்கரித்து, அச் சீவர்களும், ஈசுவரனாகிய தானும், சல சந்திரன் சல மாகிய உபாதி நீங்கிய போது, விம்ப சந்திரனே யாவது போலப், பிரஹ்ம சொரூபத்திற் கலந்து, இரண்டாவது தோற்ற மின்றி, அத்துவித சொரூப மாகவே நிற்றலால், ஈசுவரனை உபசங்கார கர்த்தா வெனல் பொருந்து மென அறிக. (78)

79. வினா:- எமன் உபசங்காரஞ் செய்யும் ஆற்ற லிலனாதல் எதனா லெனின்?

விடை:-சிருட்டி காலத்திற் றோன்றிப், பிரளய காலத்தில், நாசமாவதாகிய, காரியப் பிரபஞ்சங்களி னுட்பட்டவ னனமையி னென அறிக. (79)

80. வினா:-உருத்திரர் எதன் நிமித்தம் எங்ஙனம் சங்கரிக்கின்றன ரெனின்?

விடை:-வெளியி லோடி விளையாடிச் சிரம மடை யாநின்ற சிறுவர்களை, மாதா பிடித்து நித்திரை பண்ணும்படி மஞ்சத் திருத்தி, அவர்கள் விளையாடுதற் கேது வாக வைத்திருந்த பந்து முதலியவைகளைப் பிடுங்கி மறைத்து விடுவது போலக், கன்ம பலத்தால் போகங்களிற் சுழன்று வருந்தாநின்ற சீவர்கள், வருந்தாமல் அஞ்ஞாநத்திற் கன்ம வாசனைகளோடு பிரஞ்ஞை யின்றி யடங்கியிருக்கும் நிமித்தம், தநு கரண புவந போக வடிவ மாகிய பிரபஞ்சங்களைச் சங்கரிக்கின்றனர். அவ் வஞ்ஞாநத்தையும், பக்குவர்

களுக்கு ஞாநாநுக்கிரக மூலமாய்ச் சங்கரிக்கின்றன ரென அறிக. (80)

81. வினா:-ஜீவர்கள் உயர்வு தாழ்வான சரீரங்களை யடைந்து, உயர்வு தாழ்வான போகங்களைத் தார தம்மிய மாக அநுபவிக்கும்படி, ஈசுவரன் சிருட்டி யாதிய கிருத்தியங்கள் செய்கின்றமையால், விஷம காரித்துவ நிர்த்தயாளத்துவ மாதிய தோஷ சகித ராவரே யெனின்?

விடை:- கற்பக விருக்ஷம், தன்னை யடைந்தவர் களது விருப்பத்தின் தார தம்மியப்படி, அவர்களுக்குப் பலனைத் தருவது போல, ஈசுவரனும், ஜீவர்களது கன்மத்தின் தார தம்மியப்படி சுக துக்கங்களை யநுபவிப்பதற் கேது வாகச் சிருட்டி யாதிகளைச் செய்கின்றமையால், விஷம காரித்துவாதி தோஷ சகித ராகா ரென அறிக. (81)

82. வினா:-ஜீவர்கள், ஓர் தொழிலைத், தன் பயன், பிறர் பயன், அவப்பய னென்னு மூன்றனுள், ஓர் பயனைக் கருதிச் செய்வது போல, ஈசுவரன் முப் பயனு ளெப் பயனைக் கருதிச் சிருட்டி யாதிகள் செய்கின்றவ னெனின்?

விடை:- ஈசுவரன், சிருட்டி யாதிகளைத் தன் பயனையும், அவப்பயனையுங் கருதாது, பிறர் பயனை மாத்திரங் கருதிச் செய்கின்றவ னென அறிக. (82)

83. வினா:-சிருட்டி யாதிகளை ஈசுவரன், பிறர் பயனை யன்றித், தன் பயனையும், அவப்பயனையுங் கருதிச் செய்கிறவனன் றென்பது எதனா லெனின்?

விடை:-துக்கம் நீங்குதல், சுகம் பெறுதல், புகழ் பொருந்துதல் ஆகிய மூன்றும் தன் பயனும்; ஈசுவரன் அநாதி மல முத்த னனமையால், துக்கம் நீங்கு

தலும் நித்தி யாநந்த மய னுனமையால், சுகம் பெறுதலும், ஒப்பாரும் மிக்காரு மில்லாதவனுன மையால், புகழ் பொருந்துதலு மாகிய மூன்றனையும் விரும்பாதவ னுகும். ஆதலின், தன் பயனையும், அறி வின்றிய சிறுவர்கள், விளையாட்டினுற் செய்யும் தொழில் அவப் பயனுக் கேது வாகும். ஈசுவரன் பேரறிவையும், ஜீவர்களிடத்திற் பேரருளையு முடைய முதியோ னுதலின், விளையாட்டினையும் விரும்பாதவ னுகும். ஆதலின், அவப் பயனையுங் கருதிச் செய் கின்றவனன் றென அறிக. (83)

84. வினு:-விஷ்ணு, பிரமன், உருத்திர னென்னும் நாமங்களைக் கர சரணுதி அவயவாகார காரிய விசிஷ்ட சேதந போதகங்க ளாகப் புராணுதிகள் கூறு நிற்க; இந்நூல் கர சரணுதி அவயவ ரகித மாயா விசிஷ்ட சேதந போதகங்களாகக் கூறியது எதனு லெனின்?

விடை:-விஷ்ணு, பிரமன், உருத்திரன், சத்தி, கணேசன், சூரியன் முதலியோர்கள் மாயையால் பண்ணப் பட்ட சரீர விசிஷ்ட சேதநங்க ளாகிய காரியப் பிரஹ்மங்க ளெனவும், அவர்களில், ஒவ் வொருவருக்கும் வேறு வேரு யுள்ள நாமங்க ளனைத்தும் காரணப் பிரஹ்மத்தி னுமங்க ளென வும் சகல மதஸ்தரு மறியும் நிமித்த மென அறிக. (84)

85. வினு:-அங்ஙனம் அவர்கள் அறிதற் காகக் கூறியது எதனு லெனின்?

விடை:-விஷ்ணு பிரமன் உருத்திர னுதியர்களின் நாமங்கள், பிரசங்கத்துக் கேற்க, லவணத்தையும், அசுவத்தையும் உணர்த்தும் சைந்தவ பதம் போல ஒவ் வோரிடத்திற் காரணப் பிரஹ்மத்தையும், ஒவ் வோரிடத்திற் காரியப் பிரஹ்மங்களையும், உணர்த்து

கின்றன வாதலின், வைணவ மாதிய ஒவ் வொரு புராணங்களினும், பரம் பொரு ளாகக் கூறப்படும் நாமங்கள், காரணப் பிரஹ்மத்தையும், பரம் பொரு ளல்லன வாகக் கூறப்படும் நாமங்கள் காரியப் பிரஹ்மங்களையும், உணர்த்துகின்றன வாயும். சகல புராணங்களினு முள்ள அந்நிய தெய்வத்தின் நிந்தை, ஒன்றன் துதியின்பொருட்டேயன்றித், தியாகத்தின் பொருட்டன் றென்ப தாயும், காரணப் பிரஹ்மமே யுபாசிக்கத் தக்க தென்பதாயும், உள்ள அபிப்பிராயங் களை மந்தப் பிரஞ்ஞையா லறியாமல், சியால சார மேய நியாயம் போலக், கிலேசிக்கின்ற சமயிகள் கலகம் நீங்கிச் சாந்த மடையு நிமித்த மென அறிக.

(85)

86. வினு:- சியால சாரமேய நியாய மாவது யா தெனின்?

விடை:- சியாலன் என்பது சமஸ்கிருத பாஷை யில், மனைவியின் சகோதரனுக் குள்ள முறைப் பெயர் (அதாவது திராவிட பாஷையில் மைத்துனன்); சாரமேய னென்பது சாதிப் பெயர் (அதாவது நாய்) நியாய மென்பது திருட்டாந்தம். மனைவியின் தமைய னுகிய மைத்துனனுக்கும், அவள் கணவன் வீட்டுக் கடுத்த வீட்டு நாய்க்கும் இடு குறிப் பெயர் உத்பாலக னும். மைத்துன னுகிய உத்பாலகன் சத்துருவுக்கும், கணவன் வீட்டு நாய்க்கும் இடு குறிப் பெயர் தாவக னும். உத்பாலகன் சகோதரி பிரதமத்தில், தன் கணவன் வீட்டுக்கு வந்திருக்கும் போது, முற் சொல் லப் பட்ட உத்பாலகன் தாவக னென்னு மிரண்டு நாய்களும் சண்டை செய்து கொள்ளப் பார்த்த தன் கணவன், அடுத்த வீட்டு நாயை, உத்பாலகன் பன்றி கழுதைகள் போற் கெட்டவ னெனவும், தன் வீட்டு நாயைத், தாவகன் மிகவும் நல்லவன் எனவும், வச நிப்பதை வீட்டினுள் ளிருந்த மனைவி கேட்டு, நமது

கணவர், நம் தமையனுகிய உத்பாலகனை நிந்தித்துத், தமையன் சத்துரு வாகிய தாவகனைச் சிறப்பிக் கின்றன ரெனக், கணவன் அபிப்பிராய மறியாமற் சமாந நாமத்தாற் பிராந்தி யுற்றுக் கிலேசித்தா ளென்பது, மைத்துனன் நாய் திருட்டாந்த மாகிய சியால சாரமேய நியாய மென அறிக. இதனைச் செவ்வை யாக அறிய விரும்பில், விசார சாகர மேழாவது தரங்கத்திற் காண்க. (86)

87. வினு:- ஈசுவரனைச் சுருதிகள், ஓ ரோரிடத்தில் மாயா சகித ரெனவும், ஓ ரோரிடத்தில் மாயா ரகித ரெனவுங், கூறிய தென்னை யெனின்?

விடை:- ஈசுவரன் மாயையை ஆசிரய மாக வுடை யவ ரானமையால், மாயா சகித ரெனவும், மாயா சகித ராக இருக்கினும், மாயையின் வச மாகாமல், அநாதி மல முக்த சருவஞ்ஞராகவே விளங்குகின்றமையின், மாயா ரகித ரெனவும் கூறின வென அறிக. (87)

(பதம்) இங்ஙனம், சத்துவ குண கற்பனை கூறப் பட்டது.

(பொருள்) இந்தப் பிரகாரம், சத்துவ குண மாயையாற் கற்பிக்கப்பட்ட விஷ்ணு வாதிய நாமங்களும், அவர்களின் செயல்களும், ஆகிய கற்பனை கூறப்பட்டது.

(நூல் பிரிவு-8)

இராசத குணம் அநேக ரூப மாய்ப் பிரிந்து, அவித்தைக ளென்றும், சீவ காரண சரீரங்க ளென்றும், சொல்லப்படுவன வாய், ஒன்றற் கொன்று தார தம்மிய முள்ளவைகளா யிருக்கும். இவ் வவித்தைக ளிடத்திலும் மலிந சலப் பிரதிவிம்பம் போலப், பிரஹ்மப் பிரதிவிம்பங்களுளவாம். இப்பிரதிவிம்ப

சைதந்நியங்கள், கிஞ்சிஞ்ஞ ரென்றும், சிதாபாச சீவ ரென்றும், பிராஞ்ஞ ரென்றுஞ் செல்லப்படும்.

(பதம்) இராசத குணம் அநேக ரூப மாய்ப் பிரிந்து, அவித்தைக ளென்றும், சீவ காரண சரீரங்க ளென்றும் சொல்லப்படுவன வாய், ஒன்றற் கொன்று தார தம்மியமுள்ளவைக ளாய் இருக்கும்—

(பொருள்) இரசோ குணப் பிரகிருதி யானது, அநேக அம்ஸங்க ளாகப் பிரிவுற்று, அஞ்ஞாநங்க ளெனவும், சீவர்கட்கு மூல சரீரங்க ளெனவும், நாமங்கள் கூறப்படுவன வாய், ஓ ரம்ஸத்துக்கு, மற் ரோ ரம்ஸம், வித்தியாச முள்ளவை களாக இருக்கும்.

88. வினு:— இராஜத குணத்திற்கு அவித்தை யெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:- யா ந வித்யதே (எது வாஸ்தவத்தில் இல்லா திருக்கிறதோ) ஸா அவித்யா (அது அவித்தை) யென்னுஞ் சுருதி வாக்கியப்படி, விசாரித்துப் பார்க்கு மிடத்து வாஸ்தவ சொரூப மின்றியதா யிருத்தலு மன்றி, வித்தை யாகிய ஞா நத்தை விரோதியாக வுடைய தாயும், மலிந வுபாதி யாயு மிருத்தலி னென அறிக.
(88)

89. வினு:— அவித்தை யெத்தனை வித மெனின்?

விடை:— மூலாவித்தை, தூலாவித்தை யென இரண்டு வித மாம். இவ் விரண்டில், சுத்த சேதநத்தை மறைப்பது மூலாவித்தை, விஷய உபகித சேதநத்தை மறைப்பது தூலாவித்தை. சுத்த சேதநத்தை மறைப்ப தாகிய மூலாவித்தை, காரண காரிய பேதத்தால் இரண்டு வகை யாம். இவ் விரண்டில், ஆவரண விக்ஷேப சத்திகள் சகிதமா ய நாதி யாகவே யுள்ளது காரண ரூப மாம். ஒன்றி னிடத்து மற்றொன்றின் (பிரதீதி) ரூப மாயுள்ளது,

அதாவது பிராந்தி ஞாநமும், அதன் விஷயமும் காரிய ரூப மாம். காரிய ரூபாவித்தையும், அநாத்ம பதார்த் தங்க ளாகிய தேகாதிகளில் ஆத்ம புத்தி, அநித்திய மாகிய ஆகாயாதிகளில் நித்திய புத்தி, துக்க ரூப மாகிய தநாதிகளில் சுக ரூப புத்தி, அசுத்த மாகிய ஸ்திரீ புத்திராதிகளில் முத்த மிடுத லாதிகள் செய் தற் கான சுத்த புத்தி யென நான்கு விதமா யிருக்கு மென அறிக. (89)

90. வினு:- அவித்தைகட்குச் சீவ காரண சரீரங்க ளெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:- சீவர்களின் தூல சூக்கும மாகிய இரண்டு சரீரங்களும் அடங்கி விரிதற்கும், சீவர்கள் தோன்றற் கும், காரணமா யநாதி யாக விருத்தலி னென அறிக. (90)

91. வினு:- அவித்தையை அநாதி யென்றது எதனு லெனின்?

விடை:- உற்பத்தி யின்றியவைகளி லொன் ருக இருத்தலி னென அறிக. (91)

92. வினு:- உற்பத்தி யின்றியவைக ளெவை யெனின்?

விடை:- பிரஹ்மம், ஈசுவரன், சீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதந்நியத்துக்கு முள்ள சம்பந்தம், அநாதி வஸ்துக்களின் பேதம் ஆகிய ஆறு மென அறிக. (92)

93. வினு:- எதனுல், இவ் வாறும் அநாதிக ளென ஒப்பப்பட்டன வெனின்?

விடை:- (1) அவித்தைக்குப் பிரஹ்மம் அதிட்டாநமாயிருப்பதால், அவித்தையினின்றும் பிரஹ்மம் உற்பத்தியான தல்ல. ஈசுவராதிகள் பிரஹ்ம மன்றிச் சித்திக்காமையால், ஈசுவராதிகளினின்றும் பிரஹ்மம் உற்பத்தியான தல்ல. ஆதலின், பிரஹ்மம் அநாதியாம். (2) பிரஹ்மம் நிருவிகாரமா யிருத்தலால், பிரஹ்மத்தினின்றும் அவித்தை யுற்பத்தி யான தல்ல. ஈசுவராதிகளின் சித்தி, அவித்தியா சித்தியின் அதீநமாக விருத்தலின், ஈசுவராதிகளினின்றும் அவித்தையினுற்பத்தி சம்பவிக்காது. ஆதலின் அவித்தையநாதி யாம் (3-4) சீவேசுரர்கள் கேவலம் பிரஹ்மத்திலாவது, கேவலம் மாயையி லாவது உற்பத்தியாகிற தில்லை. ஈசுவரனிடத்திற் சீவனுவது, ஜீவனிடத்திலீசுர னுவது உற்பத்தியாகிற தில்லை. அவித்தைக்கும் சேதநத்துக்கு முள்ள சம்பந்தத்தால் சீவேசுவர பாவங்கள் சித்திக்கின்றன. பிரஹ்மமும், அவித்தையும், அநாதி யானமையால், பிரஹ்மத்துக்கும், அவித்தைக்கு முள்ள சம்பந்தமும் அநாதி யாம். ஆதலின், இச் சம்பந்தத்தா லுள தாகிய சீவேசுவரர்களும் அநாதி யாம். (5) பிரஹ்மமும், அவித்தையும், அநாதி யானமையால், அவைகளின் தாதாந்மிய சம்பந்தமும் அநாதியாம். ஆதலின், பிரஹ்மம் அவித்தை யென்னு மிரண்டினுலும் சம்பந்தத்துக் குற்பத்தி யில்லை. ஈசுவராதிகளின் சித்தி சம்பந்த சித்தியின் அதீந மாக இருத்தலின், ஈசுவராதிகளா லும் சம்பந்தத்துக் குற்பத்தி யில்லை. ஆதலால், அவித்தியா சேதந சம்பந்தமும் அநாதி யாம். இந்த ஐந்தும் தானே தன் தன்னிடத்தி லுற்பத்தி யாகிய தென ஒப்பில், ஆத்மா சிரய தோஷம் வரும். ஆதலின். தத் தமக்குத் தத் தம்மிடத்திலும் உற்பத்தி யில்லாமையாலும் அநாதி யாம். (6) பிரஹ்ம மாதிய ஐந்திற்கும் பேதங்க ளுண்டு. எதனுல், பிரஹ்ம மாதிய ஐந்திற்கும் உற்பத்தி யில்லையோ, அதனுல்,

அவைகளின் பேதங்களுக்கு முற்பத்தி யில்லை. ஆதலின், ஐந்தின் பேதமு மநாதி யாம். இந்த நியாயத்தால் ஆறு மநாதி யென ஒப்பப்பட்டன வென அறிக. (93)

94. வினு:- அவித்தைகளைச் சரீரங்க ளென்றது எதனு லெனின்?

விடை:- சீரணிப்பன வாதலி னென அறிக. (94)

95. வினு:- அவித்தைக ளநாதியானமையால், சீரணிப்பன வல்லவே யெனின்?

விடை:- பிராகபாவம் அநாதியாயினும், நாசமுறுவது போல, அவித்தைகள் அநாதியாயினும் சீரணிப்பனவாகு மென அறிக, (95)

96. வினு:- அவித்தைகள் எதனுல் சீரணிக்கின்றன வெனின்?

விடை:- இரச்சு ஞாநத்தால் சர்ப்பஞ் சீரணிப்பது போல, ஆத்ம ஞாநத்தால் சீரணிக்கின்றன வென அறிக. (96)

(பதம்) இவ் வவித்தைக ளிடத்திலும் மலிந சலப் பிரதிவிம்பம் போலப், பிரஹ்மப் பிரதிவிம்பங் களுளவாம், இப் பிரதிவிம்ப சைதந்நியங்கள் கிஞ் சிஞ்ஞ ரென்றும்--

(பொருள்) இந்த இராசத குண மாகிய அவித்தைகளிடத்தினும், கலங்கற் சலத்தி லுள்ள சூரியப் பிரதிவிம்பம் போலப், பிரஹ்மத்தின் பிரதிவிம்பங்க ளுள்ளன, இந்தப் பிரதிபலநங்க ளாகிய சேதநங்கள் அற்ப அறிவினர்களெனவும்,

97. வினு:- சீவர்களை அற்ப அறிவினர்க ளென்றது எதனு லெனின்?

விடை:- முன் பின் ஒன்றையும் ஆலோசியா மற்றேகாதிகளை யா னென தென்னும் துரபிமாநிக ளாயும், ஓர் விஷயத்தை யறியும் போது, மற்றோர் விஷயத்தை யறியும் பேரறிவில்லாதவர்களாயும், அறிந்த விஷயத்தை யடிக் கடி மறப்பவர் களாயும், துக்க சீவனர்க ளாயு, மிருத்தலி னென அறிக. (97)

98. வினா:— இவர்களைத் துக்க சீவனர்க ளென்றது எதனா லெனின்?

விடை:- தேகாபிமாநிகளாய் விதி திடேத கன்மங்களை மேலும் மேலும் செய்து, அதனால் அள வின்றிய சநந மரணாதி துக்கங்களை மேலும் மேலும் அநுபவித்துக் கொண்டு, உயிர் வாழ்பவர்க ளான மையி னென அறிக. (98)

99. வினா:— இவர்கள் துக்க காரண மான கன்மங் களை விட்டு விடாமல், மேலும் மேலும் செய்வது எதனா லெனின்?

விடை:- அகஞ் சத்தார்த்தமா யுள்ள பிரத்திய காத்ம சொரூபமே தான், தேகாதிப் பிரபஞ்சம் மித்தை யென அறியாமல், தேகமே தான், பிரபஞ்சம் சத்திய மெனவும், அசுத்த போகங்களைச் சுத்த போகங் களெவும், அறிந்துள்ள மயக்கத்தா லென அறிக. (99)

100. வினா:- அகம் சத்தார்த்த மாகிய ஆத்மாவினி டத்து, நான் துக்கி யெனத் துக்காநுபவங் காணப் படுகிறமையால், ஆத்மாவுந் துக்க சீவி யாகுமே யெனின்?

விடை:- ஆத்மாவினிடத்துத் துக்கம் அத்தியா சத்தாற் றேற்றுகின்ற ஆகந்துகமே யன்றிச் சுபாவீக மல்லாமையால், துக்க சீவியாகா தென அறிக. (100)

101. வினா:- ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீக மன்றென்பது எதனா லெனின்?

விடை:- வேப்பிலைக்குச் சுபாவீகமா யுள்ள கசப்பை நிவிருத்திக்க ஒருவரு முயலாதது போல, ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீக மாயின், அதனை நிவிர்த்தித்தற்கு ஒருவரு முயலாதிருக்க வேண்டும் அங்ஙனமின்றிச் சகலரும் துக்க நிவிருத்தி நிமித்தமே முயலுகின்றமையினானும், இஃதன்றி, நெகிழ்ச்சிக்கு நாசம் வரும்போது, நெகிழ்ச்சியைச் சுபாவீக மாக வுடைய சலத்துக்கும் நாசம் வருவது போலத் துக்கத்துக்கு நாசம் வரும்போது, துக்கத்தைச் சுபாவீக மாக வுடைய ஆத்மாவுக்கும் நாசம் வரல் வேண்டும். அங்ஙனம் வரு மாயின், ஆத்மா நித்தியம் நிருவிகாரமென்னுஞ் சுருதியாதிகள் அப்பிரமாண மாம். இஃதுமன்றித் துக்க நிவிருத்தி யானவர்கள் ஒருவரேனுமிருக்கலாகாது. அங்ஙன மின்றித், துக்கம் நிவிருத்தியாகிச் சுகாகார மாய்ச் சுக ராதிய அநேக சீவன் முத்தர்க ளிருக்கின்றமையினானுமென அறிக. (10)

102. வினா:- அக்கிநிக்கு உஷ்ணஞ் சுபாவீக மாயினும், மணி மந்திரங்களால் உஷ்ண நிவிருத்தியும், சைத்தியாபிவிருத்தியும், சலத்துக்குச் சைத்தியஞ் சுபாவீக மாயினும், அக்கிநி சம்பந்தத்தால் சைத்திய நிவிருத்தியும், உஷ்ணாபிவிருத்தியும் வருவது போல, ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீக மாயினும், உத்கிருஷ்ட கருமோபாசநாதிகளால், துக்க நிவிருத்தியும், சுகாபிவிருத்தியும் வரலாம். இங்ஙனம் வராநின்ற துக்க நிவிருத்தி சுகாபிவிருத்தி ஆகந்துகமும், துக்கம் சுபாவீகமு மாகும். ஆதலால், ஆத்மா துக்க சீவனராகு மெனின்?

விடை:- அற்றேல், அக்கிநிக்கு உஷ்ணம் மணி மந்திரங்களாலும், சலத்துக்குச் சைத்தியம், அக்கிநி

சம்பந்தத்தாலும் தற்காலம் அடங்கி யிருக்கினும் காலாந்தரத்தி லெங்ஙனம் அபிவிருத்தியாகிறதோ, அங்ஙனம், ஆத்மாவுக்கு, உத்கிருஷ்டகருமோபாசநாதிகளாற் றுக்கம் அடங்கி யிருக்கினும், காலாந்தரத்தில் அபிவிருத்தியாக வேண்டுமே யன்றி, அத்தியந்த நிவிருத்தியாகப்படாது. அங்ஙன மின்றி, அத்தியந்த நிவிருத்தி யாகி நித்தியாநந்த மய மாக வுள்ள சுக ராதிய அநந்த சீவன் முத்தர்க ளிருக்கின்றமையினுனும், ஆத்மா ஆநந்த மய ரென அநந்த சுருதிகள் கூறுகின்றமையினுனும், சுழுத்தி சமாதிகளில், ஆத்மா ஆநந்த மயமாகவே யிருப்பது அநுபவ மானமையினுனும், சாக்கிர சொப்பநங்களில் காணப்படும் துக்காநுபவங்கள் செம்பரத்தம் புட்ப சம்பந்தத்தால் படிகத்திற் செந்நிறங் காணப்படுவது போல, ஆத்மாவினிடத்திற் கரண சம்பந்தத்தால் அத்தியாச மாகக் காணப்படுகிறதே யன்றி, வாஸ்தவத்தி லில்லாமையினுனும், ஆத்மாவைச் சுக சீவன ரென்னுமல் துக்க சீவன ரென்பது பிராந்தியே யென அறிக. (102)

(பதம்) சிதாபாச சீவ ரென்றும்—

(பொருள்) சித்தின் போலிக ளாகிய சீவர்க ளெனவும்,

103, வினு:- சீவர்கட்குச் சொரூபம் யா தெனின்?

விடை:- ஆசிரய மாகிய அவித்தை, அதி லுள்ள சிற் பிரதிவிம்பம், இவற்றிற் கதிட்டாந மாகிய கூடத்தர், இம் மூன்றுஞ் சேர்ந் துள்ள தென அறிக. (103)

104. வினு:- சீவர்களின் தருமங்க ளெவை யெனின்?

விடை;- அற்ப சத்தித்துவம், அற்பஞ்ஞத்துவம், பரிச்சிந்நத்துவம், நாநாத்துவம், பரதந்திரத்துவம், சாமர்த்திய மின்மை, அபரோக்ஷத்துவம், அவித்தியா யுபாதி யுடைமை, ஆகிய எட்டு மென அறிக. (104)

105. வினா:- சீவர்கட்குத் தேசங்க ளெவை யெனின்?

விடை:- இருதயம், கண்டம், நேத்திர மாகிய மூன்று மென அறிக. (105)

106. வினா:- சீவர்களுக்குக் காலங்க ளெவை யெனின்?

விடை:- சாக்கிரஞ், சொப்பநஞ், சுழுத்தி யாகிய மூன்று மென அறிக. (106)

107. வினா:- சீ வ ர் க ளு க் குக் காரியங்க ளெவை யெனின்?

விடை:- சாக்கிர முதல் மோக்ஷ பரியந்த முள்ள போக மாகிய சம்சாரங்களும், அகந்தை அபிமாநம் ஆசை கோப மாதிகளு மென அறிக. (107)

108. வினா:- சீவர்களுக்கு போக சாமக்கிரிகள் எவை யெனின்?

விடை:- தூலஞ் சூக்ஷமம் காரண மாகிய மூன்று சரீரங்களு மென அறிக. (108)

109. வினா:- சீவர்களைச் சிதாபாசர்க ளென்றது எதனாலெனின்?

விடை:- சலப் பிரதிபிம்ப சூரியனை யாராயுமிடத்து அது விம்ப சூரியனையும், சலத்தையும் அன்றிச் சொரூப மில்லா மையால் தோற்றம் மாத்திர மாகத் தோற்றுவ தாயும், அங்ஙனந் தோற்றினும், சூரியனுக்

குரிய உஷ்ணத்துவாதி யிலக்கணங்க ளில்லாத போலி யுருவ மாயு மிருப்பது போலச். சீவர்களை ஆராயு மிடத்து அதிட்டாந சித் தாகிய கூடத்தரை யும், ஆசிரயங்க ளாகிய அவித்தை யந்தக் கரணங் களையும், விடில் வேறு சொரூப மில்லாமற், றோற்றம் மாத்திர மாகத் தோற்றுபவர்களாயும், அங்ஙனஞ் சித்தைப் போற் றோற்றினுஞ், சித்துக்குரிய நித்தியத் துவ நிருவிகாரத்துவாதி யிலக்கணங்க ளில்லாத போலி வடிவினர்களாகவு மிருத்தலி னென அறிக. (109)

110. வினு:- இவர்களைச் சீவர்க ளென்றது எதனு லெனின்?

விடை:— அதிட்டாந ஆசிரயங்களின் பலத்தால் மோக்ஷ பரியந்தம் கர்த்திருத்துவாதி யாகார மாகச் சீவிப்பவர்க ளானமையி னென அறிக. (110)

111. வினு:- அதிட்டாந ஆசிரயங்களின் பலத்தால் சீவர்க ளெங்ஙனஞ் சீவிக்கின்றன ரெனின்?

விடை:— தருப்பணப் பிரதிவிம்ப சூரியன், ஒரு சுவரை விளக்கி வைத்துக் கொண்டு, அதிட்டாந மாகிய விம்ப சூரியன், ஆசிரய மாகிய தருப்பண மென்னு மிரண்டின் பலத்தாற் சீவிப்பது போல, அவித்தையாப் பிரதிவிம்பர்களாகிய சீவர்கள், விஷயங்களைச் சுட்டி யறிந்து கொண்டு, அதிட்டாந மாகிய கூடத்தர், ஆசிரய மாகிய அவித்தை யென்னு மிரண்டின் பலத்தாற் சீவிக்கின்றன ரென அறிக. (111)

(பதம்) *பிராஞ்ஞ ரென்றும் சொல்லப்படும்—

(பொருள்) பிரஞ்ஞா ரூபர்க ளெனவும் நாமங்கள் உடையனவாகக் கூறப்படுவனவாம்.

---

*பிராஞ்ஞன்—அறிவுள்ளவன்.

இதற்குப் பிரமாணம் (கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப் படலம் 33ஆம் கவி)

"தேசறு மவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி; நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞ ஞமே."

நூல் பிரிவு-9

இவ் வவித்தைகளும் இராசதத்திற் சாத்துவீகம் இராசதத்தி லிராசதம் இராசதத்திற் றமதம் என்னு முக் குண சொரூபங்க ளாக வுள்ளன. இவற்றுள் இராசதத்திற் சாத்துவீகம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமா யுள்ள சிதாபாசன், தத்துவ ஞாந நிஷ்ட ஞவன். இராச தத்தி லிராசதம் பிரதாந மாகும் போது அதிற் பிரதிவிம்பமா யுள்ள சிதாபாசன், காமக்குரோதபரனுய்க்கன்ம நிஷ்டனுவன் இராசதத்திற் றமதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்பமா யுள்ள சிதாபாசன், சோம்பல் நித்திரை மயக்கங்க ளுடையவ ஞவன். இங்ஙனம், இராசத குண கற்பனை சொல்லப்பட்டது.

(பதம்) இவ் வவித்தைகளும், இராசதத்திற் சாத்துவீகம், இராசதத்தில் இராசதம், இராசதத்திற் றமதம், என்னும் முக்குண சொரூபங்களாக உள்ளன.

(பொருள்) வெளி.

(பதம்) இவற்றுள், இராசதத்திற் சாத்வீகம் பிரதாந மாகும் போது-

(பொருள்) இம் முக்குணங்களுள், கலங்கற் சலத்தில் தெளிந்த சலம் மேலிடுவது போல, இராசத குணத்தில் இராசத குணமும் தாமத குணமு மடங்கிச் சாத்வீக குண மதிகரிக்குங் காலத்தில்,

(பதம்) அதிற் பிரதிவிம்பமாய் [உள்ள சிதா பாசன் தத்துவ ஞாந நிஷ்ட ஞவன்—

(பொருள்) அச் சாத்துவீக குணத்திற் போலி

யுருவமாக, இராநின்ற சீவ னுனவன், எதார்த்த சொரூபத்தை யறியும் ஞாந சாதக னுவன்.

112. விஞ:- தத்துவ ஞாந நிட்டை யாவது யா தெனின்?

விடை:- எதார்த்த ஞாநத்தை யடைதற் குரிய சாதகமென அறிக. (112)

113. விஞ:- தத்துவ ஞாந நிட்டை யென்பதற்குப் பொருள், தத்துவ ஞாந சமாதி யநுபவ மெனக் கூருமல், தத்துவ ஞாந சாதக மெனக்கூறிய தென்னை யெனின்?

விடை:- இந் நூல் அவித்தையி னிராசத குணத் திற் சாத்துவீகம் பிரதாந மாகும் போது, சிதாபாசன் தத்துவ ஞாந நிஷ்ட னுவ னெனக் கூறியிருத்தலி னென அறிக. (113)

114. விஞ:- இந்நூலிங்ஙனங் கூறியிருத்தலால், நிட்டை யென்பதற்குச் சமாதி யெனப் பொருள் கொள்ளில் விரோதமென்னை யெனின்?

விடை:- முக் குணங்களில் இரண்டு குணங்கள் சங்கோசமாய், ஓர் குணம் புருட முயற்சி யின்றி வாசநா வசத்தாய்த் தானே விகாசப்படுவ தியல்பே யாகும். ஆதலின், இயல்பாகவே விகாசப்படாநின்ற சத்துவ குணப் பிரதி விம்ப னுகிய சீவனுக்கு, ஞாந சமாதி யியல்பாகவே சித்திக்க வேண்டும். அற்றேல் நிஷ்காம கன்மம் விவேகாதி சதுட்டயம் சிரவணுதி கள் மகா வாக்கிய விசாரம் என்னும் சாதநங்களும், சாதந போதக மாகிய சுருதி வாக்கியங்களும், ஈசுவர சொரூப மாகிய சற்குருவும் வியர்த்த மாவ தோடு சற்குரு கடாக்ஷத்தால் ஆவரண நீங்குமென்ற இந்நூலும் வியர்த்த மாம். ஆதலின், நிட்டை யென்பதற்குச் சாதக மெனப் பொருள் கோடலே யமைவுடைத் தென அறிக. (114)

(பதம்) இராசதத்தி லிராசதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிபிம்ப மாய்உள்ள சிதாபாசன் காமக்குரோதபர னுய்க்கன்ம நிஷ்ட னுவன்-

(பொருள்) கலங்கற் சலத்திற், கலங்கற் சல மேலிடுவது போல, இராசதகுணத்திற் சத்துவ குண மும், தாமத குணமு மடங்கி, இராசத குண மதிகரிக் குங் காலத்தில் அவ் விராசத குணத்திற் போலி யுருவ மாக இராநின்ற சீவ னுனவன், காமக் குரோதாதி குண சிரேஷ்ட னுய்க் கரும சாதக னுவன்.

115. வினு:-கன்ம சாதக னென்பவன் யாவ னென்னின்?

விடை:- விதி பூர்வக மாகக் கன்மங்களை யநுட்டிப் பவ னென அறிக. (115)

116. வினு:- கன்ம சாதகத்தின் பலம் யா தெனின்?

விடை:- துக்க காரண மான சநநாதிக ளென அறிக. (116)

117. வினு;-சநந மாதிகளை நிவிர்த்தித்தற்குங் கன் மம் எது வாகுமே யெனின் ?

விடை:- குணங்கள், உத்தமம் மத்திமம் அதம மென மூ வகைப்படும்.

இவைகளில், சந்ம நிவிருத்திக்கு உத்தம குண சகிதமாகச் செய்யுங் கன்மங்கள் ஏது வாகும். மத்திம அதம குண சகித மாகச் செய்யுங் கன்மங்க ளேது வாகா வென அறிக. (117)

118. வினு:- உத்தம குணங்க ளெவை, மத்திம குணங்க ளெவை யெனின்?

விடை:- பத்தி சிரத்தை யென்னு மிரண்டும் உத்தம குணங்க ளாம். இச்சை மத்திம குணமா மென அறிக. (118)

119. வினா:- பத்தி யென்பது யாது? சிரத்தை யென் பது யாது? இவ் விரண்டினா லுண்டாகும் பலம் யா தெனின்?

விடை:- ஈசுவர ராதிய தேவர்கள், சற் குரு என்னும் பெரியோர்களிடத்தி லதிகப் பிரிய ரூப மாக எழாநின்ற சித்த விருத்தி பக்தி யாம். வேத வாக்கி யம் குரு வாக்கியங்களில் விசுவாச ரூப மாக எழா நின்ற சித்த விருத்தி சிரத்தை யாம். இவ் விரண்டில், பத்திக்குச் சற் கருமப் பிர விருத்தி வழித்தாய்ச் சித்த சுத்தியும், சிரத்தைக்குச் சிரவணாதிகளின் வழித் தாய் ஞாநமும் பல மா மென அறிக. (119)

120. வினா:- இச்சை யென்பது யாது? இதனா லுண் டாகும் பலம் யா தெனின்?

விடை:- மல சல விசர்ச்சநங்களும், சௌச ஸ்நாநங்களும், அந்ந பாநாதிக் கிராகியங்களுஞ் செய்ய வேண்டு மென் றெழாநின்ற சித்த விருத்தி இச்சை யாம். இவ் விச்சையை நிவிர்த்திப்பது சாத் திய மல்ல. இதற்குப் பந்தம், மோக்ஷம், நரகம், சுவர்க்கங்கள் பல மாகச் சித்தியாவாம். இவைகள் சித்தியாவிடினும், தேக மலிநங்களினானும், மல சலப் பிரவிருத்தியை அடக்கலினானும், பசி தாகங்களினா னும், உண்டாகின்ற துக்கங்களி னிவிருத்தி மாத் திரம், தற்கால பலமாகச் சித்திக்கு மென அறிக. (120)

121. வினா:- இவ் விச்சையை நிவிருத்திப்பது சாத்திய மல்ல வென்றது எதனா லெனின்?

விடை:-சௌச ஸ்நாநங்கள் செய்யாவிடின், தேகத்திலுள்ள வேர்வை யழுக்கு மல மாதிய மலிநங் களின் துர்க் கந்தங்களா லுண்டாகும் துக்கங்களும், மல சலப் பிரவிருத்தியை யடக்கில், அபாந வாயுவின்

யலத்தால் தடை மீறி மல சலங்கள் வெளிப்பட்டு விடும். இஃ தன்றி, உஷ்ணாதிய யாதானு மோர் காரணத்தால், மல சலப் பிரவிருத்தி தடைப்படில் வயிற்றுப்பிசம், ஊர்த்துவ சுவாசம், திகரடிக ளேற் படுகின்றமையினு லுண்டாகின்ற துக்கங்களும், அந்ந பாநாதிக் கிராகியஞ் செய்யாவிடின், சரீரஞ் செய லற்று மரணவத்தையை யடைதலினு லுண்டாகின்ற துக்கங்களுஞ், சகிக்க முடியாதவைக ளானமையி னென அறிக. (121)

122. வினு:- அதம குணங்க ளெவை? யவைகட்குப் பலன்க ளெவை யெனின்?

விடை:- இராகம், துவேஷம், காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மச்சரம், ஈரிஷை. அசூயை, இடம்பம், தருப்பம், அகங்கார மென்னும் 13 மாம். இவைகளுக்குத் துக்கமே பல மா மென அறிக. (122)

123. வினு:- இராகாதிய 13 மெவை? இவை களுக்குத் துக்கமே பல மென்பதற்குப் பிரமாணங்க ளெவை யெனின்?

விடை:- [1]-பரஸ்திரீ கமநம் பண்ணவேண்டு மென்றெழாநின்ற சித்த விருத்தி இராக மாம். இத னுல், பூர்வம் இராவணன் சுந்தோபசுந்தர்க ளாகிய பலிஷ்டர்களுந் துக்க மநுபவித்தனர். [2]தனக்கு அப காரம் பண்ணினவனுக்குப் பதி லபகாரம் பண்ண வேண்டு மென் றெழாநின்ற சித்த விருத்தி துவேஷ மாம் இதனுல், பூர்வம் இரணியகசிபனுந் துக்க மநுபவித்தான். [3]புத்திர மித்திர களத்திர கிரகக் கிராம க்ஷேத்திர தந தாநியாதிகள் மேலு மேலுஞ் சம்பாதிக்க வேண்டு மென் றெழாநின்ற சித்த விருத்தி காம மாம். இதனுல், பூர்வம் நரகாசுரனும், துக்க மநுபவித்தான். [4]-தனக்கு வேண்டிய காரியங்களில்

விரோதஞ் செய்பவனிடத்தி லாக்கிரக மாக எழா நின்ற சித்த விருத்தி குரோத மாம். இதனுல், பூர்வம் பகாசூரனுந் துக்க மநுபவித்தான். [5]—தான் சம்பாதித்த பொருளில், ஒருவர்க்கேனும் ஒன்ருயினுங் கொடுக்கக்கூடா தென் றெழாநின்ற சித்த விருத்தி உலோப மாம். இதனுல் பூர்வம் துரியோதநனும் துக்க மநுபவித்தான். [6] தான் சம்பாதித்த பொருளில் பிரிய மோதப் பிரமோத மாக எழாநின்ற சித்த விருத்தி மோக மாம் இதனுல், பூர்வம் தசரதனும் துக்க மநுபவித்தான். [7]—ஐசுவரிய கோலாகலத்தினுல் கெருவித்து கிருத்தியாகிருத்தி யங்கள் தெரியாமல் எழாநின்ற சித்த விருத்தி மத மாம். இதனுல், பூர்வம் கார்த்தவீரியார்ச்சுநனுந் துக்க மநுபவித்தான். [8]-தனக்குச் சமம், அல்லது, அதிக மான சம்பத் துள்ளாரைக் கண்டு சகிக்காம லெழாநின்ற சித்த விருத்தி மற்சர மாம். இதனுல் பூர்வம் சிசுபாலனும் துக்கமநுபவித்தான். [9]-தனக்கு வந்த துக்கம் பிறர்க்கும் வர லாகாதா வென்றெழாநின்ற சித்த விருத்தி ஈரிஷை யாம். இதனுல், பூர்வம் அருணுட்சதனும் துக்க மநுபவித்தான். [10]-தனக்கு வந்த சுகம் பிறர்க்கும் வரலாமா வென் றெழாநின்ற சித்த விருத்தி அசூயை யாம். இதனுல், பூர்வம் பௌண்டரீக வாசுதேவனும் துக்க மநுபவித்தான். [11]-தான் செய்த தருமத்தைச் சகலரும், பார்த்து மிகவும் நன்ரு யிருக்கிற தெனத் தன்னைப் புகழ வேண்டு மென் றெழாநின்ற சித்த விருத்தி இடம்ப மாம். இதனுல், பூர்வம் நபூருவ மகா ராசனும் துக்க மநுபவித்தான். [12]-தனக்குச் சம மாக ஒருவரு மில்லை யென் றெழாநின்ற சித்த விருத்தி தர்ப்ப மாம். இதனுல், பூர்வம் சத கந்தரனுந் துக்க மநுபவித்தான், [13]—அடா! என்னை யறியாயா! நான் பிடித்த காரியத்தை விடுவேனு! நீயா! எனக்குப் புத்தி சொல்லுகிறவ னென் றெழாநின்ற சித்த விருத்தி அகங்கார மாம். இதனுல், பூர்வம் மது கைடவருந் துக்க மநுபவித்தனர். எனக்

கூறு நின்ற பாகவத மாதிய புராணங்களும், பாரதம், இராமாயண முதலிய இதிகாசங்களும், பிரமாணங்க ளென அறிக. (123)

124. வினு:- இவ் வதம குணங்கள் தோன்றற்குக் காரணம் யா தெனின்?

விடை:- பூர்வஞ் செய் துள்ள நிடேத கன்ம பல மாகச் சித்தத்திற் பொருந்தி யுள்ள மலிந வாசனைக ளென அறிக. (124)

125. வினு:- மலிந வாசனைக ளெத்தனை வகைப்படு மெனின்?

விடை:- தேக வாசனை, லோக வாசனை, சாஸ்திர வாசனைக ளென மூ வகைப்படு மென அறிக. (125)

126. வினு:- தேக வாசனை யாவது யா தெனின்?

விடை:- அமங்கல அநாத்மா வாகிய தேகத்தைத் திவ்விய மங்கல சொரூப மாகிய ஆத்மாவாக எண்ணி, அது நாச மின்றி யழ கிளமை அரோக திட காத்திர மாக இருத்தற்குப் பூபதி யாதி ஔடதங்கள் புசிக்க வேண்டு மெனவும், தைல ஸ்நா நம் க்ஷீரபா நம் கிருத குள விசேஷ போசநங்கள் குறைவின்றியும், கால நியமந் தவருமலுஞ் செய்துவர வேண்டு மெனவும், சித்தத்திற் றிட மாகப் பொருந்தியுள்ள சம்ஸ்கார மென அறிக. (126)

127. வினு:- லோக வாசனை யாவது யாதெனின்?

விடை:- நா மெவ் வாறிருக்கில், உலகத்தி லுள்ள யாவரும் நம்மைப் பெரியவ னென மதித்துப் பூசனை யாதிகள் செய்வர்களோ, அவ்வா றிருக்க வேண்டுமெனச் சித்தத்திற் றிட மாகப் பொருந்தி யுள்ள சம்ஸ்கார மென அறிக. (127)

128. வினு:- சாஸ்திர வாசனை யாவது யா தெனின்?

விடை:- சுருதி ஸ்மிருதி யாதிக ளனைத்தையும் பாடஞ் செய்ய வேண்டு மெனவும், திரவிய தேச கால மந்திர சுத்தி பூர்வகமாய் வருணாச்சிரமங்கட்குத் தக்க தாகச் சுருதிகளிற் கூறிய யாகாதி கருமங்களைத் திரவிய மந்திர கிரியா லோபங்க ளின்றிச் செய்து வர வேண்டு மெனவும், தரும, நியாய, சாங்கிய, பாதஞ் சல, மீமாம்ஸ, தருக்க, வியாகரண, காவிய, புராணாதி சாஸ்திரார்த்தங்கள் முழுவதையும் சித்தத்தில் தரிக்கச் செய்ய வேண்டு மெனவும், திடமாகச் சித்தத்திற் பொருந்திய சம்ஸ்கார மென அறிக. (128)

129. வினு:- தேக வாசனை, லோக வாசனைகளைப் போல, சாஸ்திர வாசனைகளையும் மலிந வாசனைக ளென்றது எதனு லெனின்?

விடை:- சாஸ்திர வாசனைகளும் ஞானத்துக்குப் பிரதிபந்தக மாக இருத்தலி னென அறிக. (129)

(பதம்) இராசதத்திற் ருமதம் பிரதாந மாகும் போது, அதிற் பிரதிவிம்ப மா யுள்ள சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்கங்கள் உடையவன் ஆவன்-

(பொருள்) கலங்கற் சலத்தில் வண்டற் சல மேலிடுவது போல, இராசதத்திற் சத்துவ குணமும், ராசத குணமு மடங்கித் தாமத குண மதிகரிக்குங் காலத்தில், அதிகரித்த தாமத குணத்திற் பிரதிபலிந மாக விளங்கா நின்ற சீவ னுனவன், ஆலசிய வுறக்கப் பிரமோகங்களைப் பொருந்தினவன் ஆவன்.

130. வினு:- சோம்ப லாவது யா தெனின்?

விடை:- சிரவணுதிகள் செய்யும் போது, சற்றுப் போது சென்று செய்வோ மென அவைகளைக்

கைவிடுதலும், நன் னெறிக்கண் முயலும் வலி யின்மையு மாகிய சோர் வென அறிக (130)

131. வினா:- நித்திரை யாவது யா தெனின்?

விடை:- நியம கால மின்றிச் சிரவணாதிகள் செய்யுங் காலங்களினும், அந்தக் கரண விருத்தி அவித்தையில் இலய மாவ தென அறிக. (131)

132. வினா:- மயக்க மாவது யா தெனின்?

விடை:- குரு முக மாகவேனும், தானாகவேனுஞ் சிரவணஞ் செய்யுங் காலத் துண் டாகிய பொருளினிலை தோன்றாத தெளி வின்மை யென அறிக. (132)

(பதம்) இங்ஙனம் இராசத குண கற்பனை சொல் லப்பட்டது—

(பொருள்) இந்தப் பிரகார மிராசத குண மாகிய அவித்தையால் கற்பிக்கப்பட்ட பொய்ம்மைகள் கூறப்பட்டன.

133. வினா:- சத்துவ இராசத குணங்க ளாகிய மாயை அவித்தைகளின் விசாரத்தால் வரும் பலம் யா தெனின்?

விடை:- மாயையும், அவித்தையும் மித்தை யெனவும், இவைகள் மித்தை யானமையால், இவை களை ஆசிரயித்திருக்கும் ஈசுவரனும், சீவனும், மித்தை யெனவும், இவைகட் கதிட்டாந மான பிரஹ்மம் ஒன்றே சத்தியமெனவும், அறிவ தாகிய ஞாந மென அறிக. (133)

134. வினா:- கயிற் றரவு மித்தையானமையால், அதன் பாற் றோன்றிய நடந சலநாதிக் கிரியைகளு மித்தையாவதுபோல, ஈசுவரனும், சீவனும், மித்தை யானால், ஈசுவராநுக் கிரகமும், சீவன்பாற் றோன்றிய

விசார ஞாநமும், மித்தையே யாம். ஆதலால், அவைகள் சம்சார துக்கத்தை நிவிருத்தித்தற்கு ஏதுவாகா வெனின்?

விடை:- சம சத்தை யுடையவைகளே, ஒன்றற் கொன்று சாதக பாதகங்களுக் கேதுவாகின்றமை யால், மித்தை யாகிய சம்சார துக்கத்தை நிவிர்த்தித் தற்கு ஏதுவாகு மென அறிக. (134)

135. வினு:- சம சத்தை யுடைய வஸ்துக்க ளொன்றற்கொன்று சாதக பாதகங்களுக் கேது வாகு மென்றது யாங்ஙன மெனின்?

விடை:- வியாவகாரிக பசி தாகாதிகள், வியாவ காரிக அந்ந சலாதிகளாலும், சொப்பநத்தி லுள்ள பிராதிபாஸிக உரோக பசியாதிகள், சொப்பநத்தி லுள்ள பிராதிபாஸிக ஔடத அந்ந சலாதிகளாலும், சொப்பநம், சொப்பந சிங்க தரிசநத்திறைும், நிவிர்த்தியாவது போலச் சிருஷ்டி திருஷ்டி வாதக் கிரமத்தால், வியாவகாரிக ரூப மாகவும், திருஷ்டி சிருஷ்டி வாதக் கிரமத்தால், பிராதிபாஸிக ரூபமாகவு முள்ள மித்தை யாகிய சம்சாரம், மித்தை யாகிய ஞாநத்தால் நிவிர்த்தி யாகு மென அறிக. (135)

136. வினு:- மாயையும், அவித்தையும், சட வத்துக் களானமையால், அவைகளை மித்தை யெனல் பொருந்தும், பிரஹ்மத்தைப் போற் சித்தாக வுள்ள ஈசுவரனையும், சீவனையும், மித்தை யெனல் பொருந்தா தெனின்?

விடை:- சலத்திற் றேன்றும் பிரதிவிம்ப சூரியன், விம்ப சூரியன் போற் றேன்றினும், கற்பிதமே யாவது போல, மாயை அவித்தையிற் றேன்றிய ஈசுவரனும்,

சீவனும், சித்தைப் போற் றேன்றினும் கற்பிதர்களே யாவர்க ளென அறிக.

**சீவேசுவரர்கள் கற்பிதர்க ளென்பதற்குப் பிரமாணம்.**

(உருத்திர இருதயோபநிஷத்து)

"ஆகாயத்திலே கடாகாய மடாகாய மென எப்படிக் கற்பிக்கப்பட்டிருக்கிறதோ, அப்படியே பரப்பிரஹ்மத்தினிட மாகச் சீவேசுவரர்கள் கற்பிக்கப் பட்டிருக்கிறார்கள்."

(ரிபு கீதை)

"சீவபர சகத் தெனவே காண்ப வெல்லாம் சின்மய மாம் பிரஹ்மத்திற் கற்பி தந்தான்." (136)

(நூல் பிரிவு-10)

தாமத குண மானது, ஆவரணம், விக்ஷேப மென இரண்டு சத்திக ளாகத் தோன்றும். இவ் விரண்டில், ஆவரண சத்தி யானது, தத்துவ ஞாநியும், ஈசுவரனுந் தவிர, மற்றைச் சீவர்கட் கெல்லாம் சரீரத் திரயம் சிதாபாசன் சாக்ஷி சைதந்நியம் என்னும் இவைகளுள் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரியவொட்டாமல் மறைக்கும். இதனால், மறைப்பை யுடைய சீவர்கள் (29) தத்துவங்களையும், ஒருமைப் பாடாக நானென் றபிமாநிப்பர். இந்த அபிமாநமே அகங்காரக் கிரந்தி யென்றும், சம்சார பந்த மென்றுஞ் சொல்லப்படும். சற் குரு கடாக்ஷத்தா லிவ் வாவரணம் நீங்கி, (29) தத்துவங்களில் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரிகிறதே முத்தி. இப்படி ஆவரண சத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

(பதம்) தாமத குண மானது, ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திக ளாகத் தோன்றும்—

(பொருள்) தமோ குணப் பிரகிருதி யானது, மறைப்பு ரூப சத்தி, தோற்ற ரூப சத்தி யென்னும், உபய சத்திக ளாகத் தோன்று நிற்கும்.

*பிரமாணம் (கைவல்ய நவநீதம்)*

1 ஆவது தத்துவ விளக்கப் படலம். 35 ஆம் கவி. "தாமத குணமிரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்"

(பதம்) இவ் விரண்டில், ஆவரண சத்தி யானது-

(பொருள்) இவ் வுபய சத்திகளில், அசத்தா வரணம் அபாநாவரண மென்னும் மறைப்புச் சத்தி யானது,

137. வினு:- அசத்தாவரண மாவது யாது? அபாநா வரண மாவது யா தெனின்?

விடை:— ஆத்மா இல்லை யெனும்படி, ஆத்மாவின் சத்பாவத்தை மறைத்து, அதற்கு அசத்பாவத்தைச் சம்பாதிப்பது, அசத்தாவரணம்; ஆத்மா விளங்க வில்லை யெனும்படி, ஆத்மாவின் பாந பாவத்தை மறைத்து, அதற்கு அபாந பாவத்தைச் சம்பாதிப்பது, அபாநாவரண மென அறிக. (137)

(பதம்) தத்துவ ஞாநியும்—

(பொருள்) உண்மை ஞாந முடையார்களும்

138. வினு:- தத்துவ ஞாந மென்பது யாது? அஃதெத்தனை விதமா மெனின்?

விடை:— சத்திய மான பிரஹ்மத்தை யறிவது தத்துவ ஞாந மாகும். அது, பரோக்ஷ ஞாநம்.

அபரோக்ஷ ஞாந மென இரண்டு விதமா மென அறிக. (138)

139. வினு:- பரோக்ஷ ஞாந மென்பது யா தெனின்?

விடை:- புராண சிரவணத்தால் சுவர்க்காதிக ளுண்டென் றறிதல் போல, வேதாந்த சாஸ்திர சிரவணத்தரல், சச்சிதாநந்த பூரணப் பிரஹ்ம மிருக்கிற தென் றறித லென அறிக. (139)

140. வினு:- பரோக்ஷ ஞாநத்துக்கு முக்கிய சாதநம் யாதெனின்?

விடை:- சுரோத்திர சம்பந்தியான அவாந்தர வாக்கிய மென அறிக. (140)

141. வினு:- அவாந்தர வாக்கியம் யா தெனின்?

விடை:- பரமாத்மாவின் சொரூபம், சீவனது சொரூபங்களைப் போதிக்கும் வாக்கிய மென அறிக. (141)

142. வினு:- அவாந்தர வாக்கியம் சுவர்க்கம், அல்லது, இந்திராதிய தேவர்கள் போலக், கால தேசங்களால் மறைபட்டு அந்நியமா யுள்ள †வியவகித வஸ்துக்களைப் போதிக்கும் போது, பரோக்ஷ ஞாநத்துக்குச் சாதந மாகும். அங்ஙன மின்றிப், பரமாத்மாவைப் போதிக்கும் போது, பரமாத்மா கால தேசங்களால் மறைபடாத அவ்வியவகிதமாகவும் தானுகவு முள்ள பொருளானமையால், அபரோக்ஷ ஞாநத்துக்கும், சாதந மாகுமே யெனின்?

விடை:- தசம னிருக்கிரு னென்ற ஆப்தன் வாக்கியத்தால், தசமன் கால தேசங்களால் மறை

† வியவகிதம் - மறைவுபட்டது.

படாத அவ்வியவகித னுகவும், தானு கவு மிருக்கினும், தசம னிருக்கிருனென்னும் பரோக்ஷ ஞாந முண்டாகிறதே அன்றி, நான் தசமன் என்னும் அபரோக்ஷ ஞாந முண்டாகிறதில்லே. அது போல், பரமாத்மா கால தேசங்களால் மறைபடாத அவ்வியவகித மாக வும், தா னுகவும் இருக்கினும், பரமாத்மா இருக்கிற தென்னும் அவாந்தர வாக்கியத்தால், பரமாத்மா இருக்கிற தெனப் பரோக்ஷ ஞாந முண்டாகுமேயன்றி, அபரோக்ஷ ஞாந முண்டாகாது. ஆதலின், அவாந்தர வாக்கியம் அபரோக்ஷ ஞாநத்துக்குச் சாதந மாகா தென அறிக. (142)

143. வினு:- பரோக்ஷ ஞாநம் எப்போது பூர்த்தி (அவதி) யாகு மெனின்?

விடை:- சற் குரு சற் சாஸ்திரா நுசார மாகப் பிரஹ்ம முண் டென்னும் நிச்சயம் நழுவுத லின்றித் திடப்பட்ட போ தென அறிக. (143)

144. வினு:- பரோக்ஷ ஞாந பலம் (பிரயோஜனம்) யா தெனின்?

விடை:- அசத்வாபாதக ஆவரண நிவிருத்தி யென அறிக. (144)

145. வினு:- அபரோக்ஷ ஞாந மென்பது யா தெனின்?

விடை:- சச்சிதாநந்த மாகிய பிரஹ்மம் நா னென் றறித லென அறிக. (145)

146. வினு:- அபரோக்ஷப் பிரஹ்ம ஞாநம் எத்தனே வகை யெனின்?

விடை:- அதிடம் திட மென்னும் பேதத்தால் இரண்டு வகை யென அறிக. (146)

147. வினு:- அதிட அபரோக்ஷ ஞாந மென்பது யாது? அதனு லுண்டாகும் பலம் யா தெனின்?

விடை:- அசம்பாவனை விபரீத பாவனைகளோ டுதய மாகின்ற ஜீவப் பிரஹ்ம ஐக்கிய நிச்சயம், அதிட அபரோக்ஷ ஞாந மாகும். உத்தம லோகப் பிராப்தியும், ஞாநிகட் கேனும், அல்லது, அரசர்கட் கேனும், செல்வர்கட்கேனும், பிள்ளையாகச் சநிக்குதல் அதன் பல மாகு மென அறிக. (147)

148. வினு:- திடாபரோக்ஷ ஞாந மென்பது யா தெனின்?

விடை:- அசம்பாவனை விபரீத பாவனைக ளின்றி யுதய மாகின்ற, பிரஹ்மாந்ம ஐக்கிய நிச்சய மென அறிக. (148)

149. வினு:- திடாபரோக்ஷ ஞாநத்துக்கு முக்கிய சாதநம் யா தெனின்?

விடை:- சுரோத்திர சம்பந்தி யான மகா வாக்கிய மென அறிக. (149)

150. வினு:- மகா வாக்கிய மென்பது யா தெனின்?

விடை;- சாம வேதத்தின் முடிவா யுள்ள, அதுவே நீ, நீயே அது வென்னும் உபதேச வாக்கிய மென அறிக. (150)

151. வினு:-திடாபரோக்ஷ ஞாநத்துக்கு மகா வாக் கியமே முக்கிய சாதந மானல், சிரவணுதிகள் முக்கிய சாதநங்க ளல்லவோ வெனின்?

விடை:- அஞ்சநாதிகள் நேத்திர ரோகங்களை நிவிர்த்திக்கிற வழியாகச் சூரிய தரிசநத்துக்குச் சாத நங்களாகுமே யன்றி, நேத்திரம் போல, முக்கிய

சாதநங்க ளாகா. அது போல, சிரவணுதிகளும் ஞாநமடைதற்கு விக்கிநமா யுள்ள சம்சயாதிகளை நிவிர்த்திக்கிற வழி யாக ஞாநத்துக்குச் சாத நங்க ளாகுமேயன்றி, மகா வாக்கியம் போல, முக்கிய சாதநங்களாகா வென அறிக. (151)

152. வினு:- திடாபரோக்ஷ ஞாநம் எப்போது பூர்த்தி யாகு மெனின்?

விடை:-தேகம் நா னென்னும் புத்தி பாதிக்கப் பட்டு, ஸ்திரீக்கு, ஸ்திரீ என்னும் புத்தியும், புருடனுக்குப், புருட னென்னும் புத்தியும் மாரு திருப்பது போலப், பிரஹ்மமே நா னென்னும் நிச்சயம் மாருமல் நிலை பெற்ற போ தென அறிக. (152)

153. வினு:-திடாபரோக்ஷ ஞாந பலம் யா தெனின்?

அபா நாபாதக ஆவரணமும் * விக்ஷேபமு மாகிய காரிய சகித அஞ்ஞாநத்தின் நிவிருத்தியும், பிரஹ்மப் பிராப்தியு மாகிய மோக்ஷ மென அறிக. (153)

154. வினு:- இத் திடாபரோக்ஷ ஞாந மாகியு தத்துவ ஞாந முள்ளார் யாவ ரெனின்?

விடை:- பொன்னிற் பூடணம் போற், றன்னிற் ரேற்றுநின்ற தேகாதிப் பிரபஞ்சங்க ளனைத்தும் மித்தை யெனவும், சத்திய மாகிய பிரஹ்மமே தா னெனவும், யாதொரு பிரதிபந்தங்களு மின்றித் திடமாக அறிந்து சாந்த முற் றிருப்பவ ரென அறிக. (154)

---

* தூல சூட்சும சரீரங்களோடு சேர்ந்துள்ள சிதாபாசனும், அவன் தருமமாகிய கருத்திருத்துவ, போக்திருத்துவ, ஜநந மரணுதிகளும் விக்ஷேப மாம்.

155. வினு:- பிரதிபந்தங்க ளெவை? அவைக ளெத்தனை விதமா மெனின்?

விடை:-ஞாந மடைதற்கு விக்கிந மாக இருப்ப வைகள் பிரதிபந்தங்க ளாம். அவைகள், பூதம் வர்த்தமாநம் பவிஷிய மென மூவித மாக இருக்கு மென அறிக. (155)

156. வினு:- பூதப் பி ர தி ப ந் த க மாவது யா தெனின்?

விடை:-கைவிட் டிறந்த எருமையைப் பற்றுஞ் சந்நியாசியாரிடத்திற் கண்டது போலப், பூருவ மநுபவிக்கப்பட்டு நீங்கிய விடயங்களைப் பற்றி யுள்ள வாசனை யென அறிக. (156)

157. வினு:-சந்நியாசியாரிடத்திற் கண்டது யாது? அதுபோன்ற பூதப் பிரதிபந்தகம், ஞாந மடைதற்குத் தடையாக வுள்ள தென்றது எதனு லெனின்?

விடை:-ஓர் சந்நியாசியார் பூர்வாச்சிரமத் திருக் கும் போது, கிரக சம்ரக்ஷணைக்குத் தக்க பால் கொடுத்து வந்த எருமை மரண மடைந்தவுடனே, யினிக் கிரக சம்ரக்ஷணை செய்ய நம்மால் முடியா தெனத் துறந்து, சந்நியாசம் பெற்றுக் குருவை யடைந்து ஞாந விருப்பத்தாற் சிரவண பூர்வக மாகத் தியாநஞ் செய்து வருங் காலையில், தியாநந் திடப் படுதற்குத் தடை யாக, அவர் சித்தத்தில், எருமை யைப் பற்றிப் பூர்வம் அடைந் துள்ள வாசனை யானது அடிக்கடி, நம் கிரகத்தி லிருந்த எருமை நாலுகால் வெண்மையோடு வெடி வால் நெற்றிச் சுட்டி விரிந்த கொம்பு முதலியவற்றை யுடைய தாய், யானை போ லுயர்ந்து பருத்து நீண்ட தேக முடையது, பதக்குப் பால் கறக்கும். அப்படிப்பட்ட எருமையும் இனி

யுற்பவிக்குமா? உற்பவிக்கினும் நமக்குக் கிடைக்குமா வெனல் முதலிய பல பல சங்கற்பங்க ளாக உதித்துக் கொண்டிருந்த தென்பது சந்நியாசியாரிடத்திற் கண்ட கதை யாம். இங்ஙனம், கை விட்டுத் தவறிய இட்ட விஷயங்களைப் பற்றிப், பல பல சங்கற் பங்க ளாக வுதித்துச் சித்தத்தை யேகாக்கிர மாய் நிலை பெற வொட்டாமல் சலிக்கச் செய்கின்றமையி னென அறிக. (157)

158, வினு:- ஆசாரியர், பூதப் பிரதிபந்தகத்தை நிவிர்த்திக்கும் உபாயம் யா தெனின்?

விடை:- அவ னவன் புத்தியை யநுசரித்துப் போதிப்ப தென அறிக. (158)

159. வினு:-எருமை வாசனை யாகிய பூதப் பிரதிபந்தகத்தை நிவிர்த்திக்கும் உபாயம் யா தெனின்?

விடை:- எருமை யென்பதி லுள்ள நாமம், உருவம், இருப்பு, விளக்கம், இன்பம் என்னும் ஐந் தம்சங்களில், எருமை யென்னும் நாமம், தலை கால் வா லுட லாதிய உருவம் ஆகிய இரண் டம்சங்களும் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னு மில்லாதது மன்றி, மத்தியிலும் விசாரிக்கில் பொரு ளாக இன்றித் தோற்ற மாத்திர மாக வுள்ள மித்தை யெனவும், இருப்பு விளக்கம் இன்ப மென்னும் சத்து சித்து ஆநந்த மாகிய மூன் றம்சங்களும், நாம ரூபத் தோற்றங்களுக்கு முன் பின் மத்தி யாகிய மூன்று காலத்தினு முள்ளன வானமையால், மெய்ப் பொருளெனவும், சுருதி யுத்தி யநுபவங்களுக் கேற்கப் போதிப்ப தென அறிக. (159)

160. வினு:- வர்த்தமானப் பிரதிபந்தகம் யா தெனின்?

விடை:-விஷயாசக்தி, பிரஞ்ஞா மந்தம், குதர்க்கம், விபரியய துராக்கிரகம் என்னும் நான்கு மாம். இவைகளி லொன் றிருக்கினும் ஞாநம் உதியா தென அறிக. (160)

161. வினா:-இவைகளில், விஷயாசக்தி யா தெனின்?

விடை:-மனைவி புத்திர தநாதி விடயங்களில், என் மனைவி, என் புத்திரன், என் தந மென்னும் அபிமாந பூர்வக மாய்த் திட மாக வைத் துள்ள பிரிய மென அறிக. (161)

162. வினா:- இஃதிருக்கில், ஞாந முதய மாகா தென்றது எதனா லெனின்?

விடை:- ஆத்ம விசார காலத்திலும், ஏகாக்கிரத்தைப் பொருந்த வொட்டாமல், இட்டமான விஷயங்களைப் பற்றி, யிவை நல்லவை இவைகளுக்கு நாசம் வரலாகா தென்ப தாதிய பல பல சங்கற்ப ரூப மா யடிக்கடி சித்தத்தைச் சலிக்கச் செய்கின்ற தானமையி னென அறிக. (162)

163. வினா:-விஷயாசக்தி யெதனால் நிவிர்த்தி யாகு மெனின்?

விடை:-சம முதலிய சாதநங்களை யுள்ளபடி யநுட்டித்தலினாலும், சாத்திரங்களில், மனைவி தந புத்திர பூமியாகிய ஆர்ச்சநங்களில் (சம்பாத்தியங் களில்) எந் தெந்தத் தோடங்க ளுள்ளன வாகச் சொல்லப்படுகின்றனவோ அவைகள் சொப்பந பதார்த்தம் போல், மித்தை யென்பதற்கு எந்தெந்த யுத்திகள் சொல்லப்படுகின்றனவோ, அவைகளைச் சாஸ்திரா நுசாரமாக, மேலு மேலும் சிந்திப்பதாகிய மநநத்தினா மென அறிக. (163)

164. வினு:—பிரஞ்ஞா மந்தம் யா தெனின்?

விடை:-ஆசாரியர் சுருதிப் பிரமாண திருட்டாந்தங்களால் போதிப்ப தாகிய மகா வாக்கியார்த்தக் கிரகண சாமர்த்தியக் குறை வென அறிக. (164)

165. வினு:-இஃதிருக்கில் ஞாந முதய மாகா தென்றது எதனு லெனின்?

விடை:— புத்தி விருத்தி, விடய வாசனையால் தூலீகரித்துத் தெளி வின்றி யிருத்தலி னென அறிக. (165)

166. வினு:— பிரஞ்ஞா மந்த மெதனுல் நிவிருத்தி யாகு மெனின்?

விடை:— நிரந்தரம் நேயத்தோடு செய்வ தாகிய சிரவணத்தா லென அறிக. (166)

167. வினு:- சிரவண மாவது யாது, அஃ தெத்தனை விதமா மெனின்?

விடை:- குரு முன்னிலையிற் சட் வித லிங்க தாற்பரிய மாகச் செய்யா நின்ற வேதாந்த சாஸ்திரார்த்தக் கிரகண ரூப சித்த வியாபாரம் சிரவண மாம். அது, வேதாந்த வாக்கியத்துக்குஞ் சுரோத்திரத்துக்கு முள்ள சம்யோக ரூப சிரவண மெனவும், வேதாந்த வாக்கிய விசார ரூப சிரவண மெனவும், இரண்டு வித மென அறிக. (167)

168. வினு:- சட்வித லிங்கங்க ளெவை யெனின்?

விடை:— உபக்கிரமம், உபசங்காரம் (1) அப்பியாசம் (2) அபூர்வதை (3) பலம் (4) அருத்த வாதம் (5) உபபத்தி (6) ஆகிய இவைகளாம். இவைகளில்,

உபக்கிரமம் உபசங்கார மென்னு மிரண்டு மொரு லிங்க மென அறிக. (168)

169. வினு:- இவைகளில், உபக்கிரம உபசங்கார லிங்கம் யா தெனின்?

விடை:- சிருட்டிக்குப் பூர்வம் நாம ரூப ரகித மாகிய சத்து மாத்திர மாகவே யிருந்த தென விளக்கிப், பிரஹ்மத்துக்குச் சுவகதாதி பேதங்க ளில்லை யென நிராகரித்து, அத்துவிதத்தைப் பிரதிபாதிப்பது உபக்கிரம லிங்க மாம். பிரபஞ்சத்தைப் பிரஹ்மத்தி லபவாதித்துப் பிரத்தியகாத்மா விற்குப் பிரஹ்மத்தோ டைக்கியங் கூறி, யத்துவிதத்தைப் பிரதிபாதிப்பது உபசங்கார லிங்க மா மென அறிக. (169)

170. வினு:- இவ் விரண்டு லிங்கங்களையும் ஒரு லிங்க மென்றது எதனு லெனின்?

விடை:- பிரகரணத்தி னாரம்பம் உபக்கிரமம்: பிரகரணத்தின் முடிவு உபசங்கார மாம். ஆரம்பத்திற் சொல்லிய அருத்தத்தையே முடிவிலுஞ் சொல்லு கின்றமையி னென அறிக. (170)

171. வினு:- அற்றே லிரண்டற்கும் ஒரே பெயர் கூருமல், உபக்கிரமம் உபசங்கார மென வெவ் வேறு பெயர் கூறுவானே னெனின்?

விடை:- ஒன்று, அத்தியாரோபத்துக்கு முன்னும், மற் ெறான்று, அபவாத மாகிய ஈற்றினும். பிரஹ்மம் அத்துவித மாயுள்ள தெனத் தெரிவிக்கின்றமையி னென அறிக. (171)

127, வினு:- அப்பியாச லிங்க மாவது யா தெனின்?

விடை:— ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்கள் போலும், யாசிப்பவன் தனக்குப் பிரயோசநமாயுள்ள ஒரபிப்பிராயத்தை வெவ் வேறு வசநங்களால் விளங்கக் கூறுவது போலும், பிரஹ்மம், அத்துவிதமாயுள்ள தென வெவ் வேறு யுக்திகளால் அடிக் கடி பிரதிபாதிப்ப தென அறிக. (172)

173. வினா:- அபூர்வதை லிங்கம் யா தெனின்?

விடை:— பிரஹ்மம் சுயம்பிரகாசமா யிருத்தலால், உபநிஷத்துக்களா லன்றிப், பிரத்தியக்ஷ முதலிய இதரப் பிரமாணங்களா லறியப்படா தெனப் பிரதிபாதிப்ப தென அறிக. (173)

174. வினா:- பல லிங்கம் யா தெனின்?

விடை:- கூடத்தனை யறிந்தால் சகலத்தையு மறிந்ததாகு மெனவும், அந்த ஞாநத்துக்குச் சந்மாதி அநர்த்த நிவிருத்தியும், பிரஹ்மப் பிராப்தியு மாகிய மோக்ஷமும். பல மெனவும் பிரதிபாதிப்ப தென அறிக. (174)

175. வினா:- அருத்த வாத லிங்கம் யா தெனின்?

விடை:- பிரத்திய காத்ம சொரூப மாகிய பிரஹ்மத்துக்குப் பஞ்சகிருத்திய கருத்திருத்துவம் பிரதிபாதிப்பதும். பேத ஞாநத்தின் நிந்தையினையும், அபேத ஞாநத்தின் துதியையும், பிரதிபாதிப்பது மென அறிக. (175)

176. வினா:- உபபத்தி லிங்கம் யா தெனின்?

விடை:- சாத்திரங்களிற் பிரதிபாதிக்கப்படும் அத்வைதார்த்தத்துக்கு அநுகூல மான திருட்டாந்தங்களை உபபத்தி யென்பர். அதாவது, காரண மாகிய

மண்ணிற்கும் அதிற் ேறான்றிய காரிய மாகிய கடாதிகளுக்கும்; காரண மாகிய தங்கத்திற்கும், அதிற் றோன்றிய காரிய மாகிய பூஷணங்கட்கும்; வித்தியாச மில்லாதது போல, காரண மாகிய பிரஹ்மத்துக்கும், அதிற் றோன்றிய காரிய மாகிய ஜகத்திற்கும்; வித்தியாச மில்லை யெனப் பிரதி பாதிப்ப தென அறிக. (176)

177. வினா:- இவ் வறு வித லிங்க தாற்பரியங்களை யன்றி, வேறு தாற்பரிய மாகச் சிரவணஞ் செய்ய லாகாதோ வெனின்?

விடை:- ஜிஞ்ஞாசுக்களால் செய்யப்பட்ட சிரவண மானது, இந்த ஷட் வித லிங்கங்களில் ஒரு வித லிங்க தாற்பரிய மாகவேனு மிருக்க வேண்டும். அங்ஙன மிராததாயின், பய னற்ற தாகு மென அறிக. (177)

178. வினா:- குதர்க்க மாவது யா தெனின்?

விடை:- வேதாந்த சாஸ்திரங்களி லுள்ள அத்வைதார்த்தங்களைப் பிரதிபாதிப்பன வாகிய வாக்கியங்கட்கு, விபரீத மாக அர்த்தக் கிரகணஞ் செய்து கொண்டு, நிர் மூலமா யுள்ள விரோத தர்க்க யுத்திகளாற் றருக்கித்த லென அறிக. (178)

179. வினா:- இஃ திருந்தால், ஞாந மடையக் கூடா தென்றது எதனா லெனின்?

விடை:- சாத்திரங்களி லுள்ள பிரஹ்மாத்மைக் கியாநுசார எதார்த்த அருத்தங்களை, அக முக ஏகாக்கிர மாக இருந்து கிரகணம் பண்ண வொட்டாமல், அநுபவ விரோத சாஸ்திராநுசார மாக அருத்தக் கிரகணம் பண்ணிக் கொண்டு, அதற் கிசைந்த யுக்திகள் தேடித் தருக்கித்தலிற்றனே

புத்தியை நாடோறுஞ் செலுத்திச் சலிக்கச் செய் கின்றமையி னென அறிக. (179)

180. வினு:- இக் குதர்க்கம் எதனுல் நிவிர்த்தியாகு மெனின்?

விடை:- குரு சாஸ்திராநுசார மான மநநத்தா லென அறிக. (180)

181. வினு:- குரு சாஸ்திராநுசாரமா யுள்ள மநந மாவது யா தெனின்?

விடை:- குரு முன்னிலேயில் கேட் டுள்ள சாஸ்தி ரார்த் தங்களேத் தா னுக வாவது, தனக் கொத்த சா துக்களோடாக வாவது, ஏகாந்தத் தேகாக்கிர மா யிருந்து, சுருதி கட்கு அவிரோத மாக, ஜீவப் பிரஹ்ம அபேத சாதக, பேத பாதக தருக்கங்கள் அநுமாந முதலிய யுத்திக ளாகிய இவை களோடு சிந்தித்த லென அறிக.

பிரமாணம். (வேதாந்த சூடாமணி 127 ஆம் கவி)

"கேட்ட பொரு ளுத்தியிற் சிந்தித்தல் தீதில்மா மநநம்." (181)

182. வினு:- தருக்க மாவது யா தெனின்?

விடை:- ஆத்மாநாத்ம விசார வினு விடை ரூப மாகிய அபேத சாதக, பேத பாதக நியாய *சல்லாப மென அறிக. (182)

183. வினு:- இத் தருக்கங்களில், அபேத சாதக தருக்கம் யாதெனின்?

விடை:- ஜட சேதந மாகிய ஜகத்து யா தாகு மென ஆசங்கை நிகழ்ந்த போது, அறி வாகிய

*சல்லாபம்—வினு விடை யுடைய சொல்.

பிரஹ்ம சொரூபமே யாகும்; அறிவை யன்றி, ஜகத்துக் காணப்படாமையின். அங்ஙனங் காணப் படாவிடினும், அறிவோடு சேர்ந்து காணப்படுகிறதே யெனின், அதுவும் இருக்கிறது விளங்குகிறது நன்று யிருக்கிற தெனப் பிரஹ்மத்தின் சச்சிதாநந்த சொரூப மாகவே காணப்படுசிறது. சச்சிதாநந்தத்தோடு நாமமும் ரூ ப மு ங் காணப்படுகிறதே யெனின், தங்கத்திற் கடக மென்னும் நாமமும், வளையமா யுள்ள ரூபமுந் தோன்றினும், அவை தங்கத்துக்கு அந்நியப் பொரு ளாகாமல், எப்படித் தங்கமே யாகுமோ; மண்ணிற் கட மென்னும் நாமமும், வட்ட வடி வாகிய ரூபமுந், தோற்றினும், அவை மண்ணிற் கந்நியப் பொரு ளாகாமல், எப்படி மண்ணே யாகுமோ; அப்படி நாம ரூபங்கள் தோற்றினும், அவை சச்சிதாநந்த சொரூப மாகிய பிரஹ்மத்துக் கந்நியப் பொரு ளாகாமல், பிரஹ்ம சொரூபமே யாகு மென்ப தாதிய சல்லாபங்க ளெண அறிக. (183)

184. வினா:- பேத பாதக தருக்கம் யா தெனின்?

விடை:- சட சேதந மாகிய ஜகத் திருக்குங்கால், பிரஹ்மம் எங்ஙனம் அத்துவித மா மென ஆசங்கை வர, ஜகத் தென்பது பொரு ளல்லாமையின். ஜகத்துப் பொருளல்ல வென்பது எதனு லெனின், அது இன்மையே வடிவ மாக இருத்தலின். எங்ஙன மெனின், எது முன்னும் பின்னு மில்லாததோ, அது மத்தியினு மில்லாததே யாகு மென்னும் நியாய வாயி லாக ஆராயு மிடத்தில் ஜகத்துச் சிருட்டிக்கு முன்னும், பிரளயத்திற்குப் பின்னு, மில்லாததே யாகும்; ஆனால் மத்தியிற் றோன்றுகிறது. இல்லாதது தோன்றுமா வெனின், நினைப்புக்கு முன்னும் பின்னும் தோற்ற வில்லை; மத்தியில் மாத்திரந் தோற்றுகிறது. அங்ஙனந் தோற்றுகிறதும் இல் பொரு ளாகிய கயிற் றரவு சொப்பந பதார்த்தம் போல, மித்தை யாகத் தோற்றுகின்றமையால், ஜ க த் து இல்

பொருளே யாகும். ஆதலால், பிரஹ்மம் அத்து விதமே யாகு மென்ப தாதிய சல்லாபங்க ளென அறிக. (184)

185. வினா:– அபேத சாதக அநுமாநாதிய யுத்திக ளெவை யெனின்?

விடை:– எது சச்சிதானந்த சொரூபமோ, அது, பிரஹ்மத்துக் கந்நிய மன்று. எது, சச்சிதாநந்த சொரூப மல்லவோ, அது, பிரஹ்மத்துக்கு வேருகும். ஆதலின், ஈசுவரன் சச்சிதாநந்த சொரூப மாயிருப் பதால், பிரஹ்மத்துக் கந்நிய மன்று. கடம் வியவ காரத்தில் சச்சிதாநந்த சொரூப மல்லாமையால், பிரஹ்மத்துக் கந்நிய மாகும். ஜீவன் சச்சிதாநந்த சொரூபமா யிருப்பதால், பிரஹ்மத்துக் கந்நிய மல்ல வென்னும் அநுமாநப் பிரமாண யுத்தியும்; கடாகா சத்துக்கும், மடாகாசத்துக்கும், கட மட வுபாதிகளை நீக்கிப் பார்க்கில் பேத மில்லாதது போலப், புத்தி மாயை யாகிய உபாதிகளை நீக்கிப் பார்க்கில் ஜீவப் பிரஹ்மங்களுக்குப் பேதந் தோன்றுகிறதில்லை யென்னும் உவமாநப் பிரமாணயுக்தியும்; இங்கு நாநா வென்பது சிறிது மில்லை யென்னும் சுருதியில், பேதம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. உண்மையில் அபேத மில்லாத பக்ஷத்தில், இச் சுருதி வாக்கியம் ஏற்பட்டிருக்க மாட்டாது. ஒருவனை உபவாசி யென்பது அவனுடைய தூல பீநத்து வத்தால் நீக்கப்படுவது போலப் பேதமானது இச் சுருதியினுல் நீக்கப்படுகிற தென்னும் அருத்தாபத்திப் பிரமாண யுத்தியு மாகிய மூன்று மென அறிக. (185)

186. வினா:- பேத பாதக அநுமாநாதிய யுத்திக ளெவை யெனின்?

விடை:- ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் உபாதி சம்பந்தமா யிருத்தலால் மித்தை யாம். எது, மித்தை யன்றோ, அது, ஔபாதிகமு மன்று. வியவகாரத்தில் (வியாவகாரிக சத்தையில்) கட படங்களின் பேதம் ஔபாதிகமாக இல்லாமையால் வியாவகாரிக சத்தியமாயிருக்கிறது. ஆகையால் எவ்விடத்தி லுபாதி சம்பந்த மிருக்கிறதோ, அவ்விடத்தில் பேதமும் மித்தையாக இருக்கிற தென்னும் அநுமாநப் பிரமாண யுத்தியும்; பிம்பப் பிரதிபிம்பங்களின் பேதம் மித்தையா யிருப்பது போல, ஜீவப் பிரஹ்மங்களின் பேதமும் மித்தை யென்னும் உவமாநப் பிரமாண யுத்தியும்; மஹா வாக்கியங்களில் ஜீவப் பிரஹ்மங் களின் அபேதம் சொல்லப்படுகிறது. உண்மையில், பேதம் மித்தையாக இல்லாத பக்ஷத்தில், மஹா வாக்கியங்களில் அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிராது, பிரதிபாதிக்கப்பட்டிருத்தலால், அபேதம் சித்திக்கிற தென்னும் அருத்தாபத்திப் பிரமாண யுத்தியும்; சாக்கிர சொப்பநங்களில் உபாதியால் ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் தோன்றுகிறது. சுழுத்தியில் உபாதி யில்லாததனுல் பேதந் தோன்றுகிறதில்லை, ஆகையால், ஜீவப் பிரஹ்மங்களுக்குப் பாரமார்த் திகத்தில் பேதமில்லையென நிச்சயிக்கப்படுகிற தென்னும் அநுபலப்திப் பிரமாண யுத்தியும் ஆகிய நான்குமென அறிக. (186)

187. வினு:- விபரியய துராக்கிரக மாவது யா தெனின்?

விடை:- நான் கர்ம நிட்டன், பிராஹ்மணன், நான் கிரகஸ்தன், பலவான், பண்டிதன், கர்த்தா, போக்தாவென்று அநாத்மா வாகிய தேகாதிகளில் விபரீதமாக வைத்துள்ள ஆத்ம புத்தியை விடாத யுத்தி ரகித மாகிய அடமென அறிக. (187)

188. வினா:- இஃதிருந்தால் ஞாந முதய மாகா தென்றது எதனா லெனின்?

விடை:- தேகாதிகட்கு வி லக்ஷண மாயும், அதிசூட்சும மாயு முள்ள ஆத்துமாவில், அகம் புத்தி உதயமாதற்கு விரோதமாகத் தேகாதி அநாத்ம வஸ்துக்களில் யானென தென்னும் விபரீத புத்தி நீங்காமல் திடமா யிருத்தலினென அறிக. (188)

189. வினா:- விபரிய துராக்கிரகம் எதனால் நிவிர்த்தியாகுமெனின்?

விடை:- நிதித்தியாசநத்தால் நிவிர்த்தியாகும். இதனை, விபரீத பாவனை யென்றும், துராக்கிரகா கந்தை யென்றும் இரண்டாகப் பிரித்து, முறையே நிதித்தியாசநத்தினாலும், நிதித்தியாசன பரிபாக அவஸ்தையாகிய *சமாதியினாலும், நிவிர்த்தியாகு மென்பாரு முளரென அறிக. (189)

190. வினா:- நிதித்தியாசந மாவது யா தெனின்?

விடை:- மநநத்தால் நிச்சயித்த வண்ணம் கூடத்தராகிய நாமே பிரஹ்மம், பிரஹ்மமே கூடத்த ராகிய நாமென நிரந்தரம் நேயத்தோடு தைலதாரை போ லிடைவிடாமற் றியாநிக்கின்ற பிரஹ்மாத்மைக் கியத்துவ வடிவ சித்தவிருத்திப் பிரவாக மென அறிக.

*பிரமாணம் (வேதாந்த சூடாமணி 127ஆம் கவி.)*

"அவற்றுற் றுணிந்த] பொருளிற் சித்தமசை வறவிருத்தல் நிதித்தியா சநந்தான்." (190)

---

* சமாதியின் விளக்கங்கள் - விசாரசாகரம் பிரசங்கம் 465 முதல் 472 வரையிலும்; கைவல்லிய நவநீதம் (பொன்னம்பல சுவாமிகள் உரைநூல்) 2ஆம் படலம் 33ஆம் கவியின் விரிவுரையிலும் கூறப்பட்டுள்ளன.

191. வினா:- பவிஷியத் பிரதிபந்தக மாவது யாதெனின்?

விடை:- ஜந்மாந்தர ஏது வான பிராரப்த சேடமும், பிரஹ்ம லோகாதி யிச்சையு மென அறிக. (191)

192. வினா:- இவை யிருக்கில், ஞாந மடைதற்குக் கூடாதென்றது எதனா லெனின்?

விடை:- சருவ சங்கப் பரித்தியாகத்தால், ஞாநம் சித்திக்கத் தக்க தாகும். அதற்கு விரோத மாகப் பிராரத்தசேடம், ஞாநாநுட்டாந காலத்தினும், யாதேனுமோர் வஸ்துவில், தயை விசுவாசங்களை யுதிப்பிக்கின்றமையினாலும், பிரஹ்ம லோக இச்சை அவ் வுலகங்களை யடைதற்குரிய சாதநாநுட்டாந சங்கற்பங்களை யுதிப்பிக்கின்றமையினாலு மென அறிக (192)

193. வினா:- பவிஷியத் பிரதிபந்தக மெப்போது நிவிர்த்தியாகு மெனின்?

விடை:- ஜநந மெடுத்துப் பிராரப்த போகங்களை யநுபவித்தா லன்றி நிவிர்த்தியாகாது. இத னிவிருத்திக்குக் கால நியம மில்லையென அறிக. (193)

194. வினா:- ஒரு பிராரப்த கன்ம மானது, அந்தச் சந்மத்தோடு நிவிர்த்தியாகாமல், பல ஜந்மங்களை யெடுத்தற்கு ஏதுவாகு மெனல், விரோதமா மெனின்?

விடை:- பிரஹ்ம ஹத்தி யாகிய ஒரு பாவ கன்ம மானது, நரக துக்கங்களை யநுபவிக்கச் செய்து, பின்னர் பாம்பு, புலி, சுவாநம், புழு முதலிய பத்து

ஜந்மங்களுக் கேதுவாயிருக்கிற தென்றும்,கார்த்திகை பௌர்ணமி திநத்தில் சுவாமி தரிசந மாகிய ஒரு புண்ணிய கன்மமானது, தநாதி ஐசுவரியங்களை யுடைய ஏழு பிராமண ஜந்மங்களுக் கேதுவா யிருக்கிற தென்றும், புராணாதிகள் கூறுகின்றமையால் விரோத மல்ல வென அறிக. (194)

195. வினா:- விசார ஞாந முடையவர்களுக்குப் பல ஜந்மம் வந்த தென்றெங்கே சொல்லப்பட்டிருக்கிற தெனின்?

விடை:- சங்கற்ப சகிதரா யிருந்து விசாரம் பண்ணின வாம தேவருக் கொரு ஜந்மம் வந்ததென ஆத்ம புராணத்திலும், சடபரதருக்கு மூன்று ஜந்மம் வந்ததெனப் பாகவதத்திலும், யோகப் பிரஷ்டனு மிரண்டொரு ஜந்மத்திலே கிருதார்த்த னுவா னெனப் பகவற் கீதையிலுஞ் சொல்லப்பட்டிருக்கிற தென அறிக. (195)

196. வினா:- சாஸ்திர விசாரம் பண்ணியும் ஜந்மம் வருமெனின், விசார ஞாநமும் வியர்த்த மாமோ வெனின்?

விடை:- விசார ஜந்நிய ஞாநம் பிரதிபந்தகம் நீங்கிய உடனே மோக்ஷத்தைக் கொடுக்கின்றமை யால், வியர்த்தமாகா தென அறிக. (196)

(பதம்) ஈசுவரனும் தவிர—

(பொருள்) மாயாப் பிரதிவிம்ப ராகிய ஈசுவரனும் நீங்கலாக,

(பதம்) மற்றைச் சீவர்கட் கெல்லாம் சரீரத் திரயம்—

(பொருள்) ஏனைய சீவர்க ளெனைவருக்கும் தூல சூக்கும காரண மாகிய மூன்று சரீரம்,

(பதம்) சிதாபாசன்—

(பொருள்) சித் பிரதிவிம்ப ருகிய சீவன்,

(பதம்) சாக்ஷி சைதந்நியம்—

(பொருள்) சாக்ஷி மாத்திரமா யுள்ள கூடத்த சேதநம்,

(பதம்) என்னு மிவைகளுள்—

(பொருள்) என்று சொல்லப்பட்ட இத் தத்துவங் களுள்,

(பதம்) ஒன் றற் கொன் றுள்ள—

(பொருள்) ஓர் தத்துவத்திற்கும், மற்ருேர் தத்துவத்திற்கு மிரா நின்ற,

(பதம்) பேதம்—

(பொருள்) சடாபாச சித்திலக்கண மாகிய வித்தியாசங்களை,

(பதம்) தெரிய வொட்டாமல்—

(பொருள்) வேறு பிரித் தறிதற்குக் கூடாத வண்ணம்,

(பதம்) மறைக்கும்—

(பொருள்) தோன்ரு திருக்கச் செய்யும்.

197. விஞ:-தத்துவ ஞா நிக்கும், ஈசுவரனுக்கும், ஆவரண சத்தி, மறைவு செய்யா தென்றது எதனு லெனின்?

விடை:-ஆவரண சத்தியால் பேதந் தெரிய வொட்டாமல் மறைக்கப்பட்டிருந்த (29) தத்துவங் களில், சாக்ஷிசைதந்நிய மாகிய கூடத்தரே தா

னெனவும், மற்றைய (28) தத்துவங்களும் அந்நிய மெனவும் மித்தை யெனவும், விசார ஞாநத்தா லறிந்து, ஆவரண சத்தியை அத்தியந்தம் நாசஞ் செய்து விட்டவன் ஞாநி யானமையினானும், பிரஹ் மமே தா னெனவும், மற்றைத் தத்துவங்க ளனைத்தும் மித்தை யென்னும், இயற்கை ஞாநத் தோடு, அநாதியே அந்தகார சூநியமா யிருக்கும் சூரியன் போல, ஆவரண சூநியமா யிருப்பவன் ஈசுவர னானமையினானு மென அறிக. (197)

198. வினா:- ஆவரண சத்தி மறைப்ப தெங்ஙன மெனின்?

விடை:-அந்தகார மானது, சக்ஷு விந்திரி யத்துக்கு ரூப விஷயங்களின் கருப்புச் சிவப்பு வெண்மை யாதிய உருவ வித்தியாசங்களை யறிய வொட்டாமல் மறைப்பது போலச், சரீர சீவ சைதந் நியங்களின், சட, ஆபாச, சித் திலக்கணங்க ளாகிய வித்தியாசங்களை அறிய வொட்டாமல் மறைக்கிற தென அறிக.

பிரமாணம்

(கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப் படலம் 49 ஆம் கவி)

''தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத் தாங்கண்ட, ஞாநிக டமையு மன்றி நாஸ்திந பாதி யென்னும், ஊனிடை யுயிர்க ளுள்ளத் துணர்விழி குருடாம் வண்ணம், வானிலம் திசைகள் மூடும் மழை நிசி இருள்போல் மூடும்.'' (198)

199. வினா:- ஆவரண சத்தியால் மறைக்கப்பட்டி ருக்கும் அநுபவம் எப்போது காணப்படுகிற தெனின்?

விடை:-தூல சரீரத்தின் பருத்த லிளைத்த லாதி களை, நான் பருத்தே னிளைத்தே னெனவும்; சூக்ஷும சரீரத்தின் சங்கற்பம், நிச்சயம், பலம், பல மின்மை, காண்டல், கேட்டல், வசநம், தாந முதலியவைகளை, நான் சங்கற்பித்தேன், நிச்சயித்தேன், நான் பலவான், பலவீனன், நான் கண்டேன், கேட்டேன், நான் வசநித்தேன், கொடுத்தேன் எனவும், காரண சரீரத்தி னறியாமையை, நா னறியே னெனவும், சிதாபாசன் சுட் டறிவை, நான் சுட்டி யறிந்தே னெனவும், அகஞ் சத்தார்த்த மாகிய ஆத்மாவி லேற்றி விவகரிக்கும் போது, ஆத்ம விலக்கணங்களும்; ஆத்மாவின் சச்சிதாநந்த விலக்கணங்களைச் சரீரத் திரயம் சிதாபாசன் ம்மே லேற்றி, என் சரீராதிகள் நன்ருய் விளங்குகிற தென விவகரிக்கும் போது, சரீரத் திரய சிதாபாச இலக்கணங்களும்; ஆவரண சத்தியால் மறைக்கப்பட்டிருக்கிற அநுபவம் காணப் படுகிற தென அறிக (199)

(பதம்) இதனுல்—

(பொருள்) இவ் வாவரண சத்தியால்,

(பதம்) மறைப்பையுடைய சீவர்கள்—

(பொருள்) மறைவு செய்யப்பட்டிராநின்ற ஜீவர்கள்,

(பதம்) (29) தத்துவங்களையும்—

(பொருள்) தூல முதல் சைதந்நியம் ஈருகிய (29) தத்துவங்களையும்.

(பதம்) ஒருமைப்பா டாக—

(பொருள்) ஒரே தன்மையன வாக,

(பதம்) நா னென் றபிமாநிப்பர்—

(பொருள்) அக மென் றபிமாநிப்பர்,
(பதம்) இந்த அபிமாநமே—
(பொருள்) இப்படிப்பட்ட அபிமாநமே,
(பதம்) அகங்காரக் கிரந்தி யென்றும்—
(பொருள்) அகங்கார முடிச் சென்றும்,
(பதம்) சம்சார பந்த மென்றும்—
(பொருள்) சம்சாரக் கட் டென்றும்,
(பதம்) சொல்லப்படும்—
(பொருள்) சாத்திரங்களிற் கூறப்படும்.

200. விஞ:-அகங்கார மென்பது யா தெனின்?

விடை:-தேகாதிகளில் யா னென தென்னும் அபிமாநாகார மாக எழாநின்ற அந்தக் கரண விருத்தி யென அறிக. (200)

201. விஞ:-இவ் வகங்காரம் எத்தனை விதமா மெனின்?

விடை:-தன் சொரூபத்தைப் பற்றி யெழா நின்றது, சுத்த அகங்கார மெனவும், தேக முதலிய அநாத்மாக்களைப் பற்றி யெழாநின்றது, அசுத்த அகங்கார மெனவும், இரண்டு வித மாம். இஃது தன்றிச் சாமாநியம், விசேஷம், முக்கியம், அமுக்கிய மென அகங்காரத்தை நான்கு வித் மாகவும் கூறுவார்க ளென அறிக. (201)

202. விஞ:-சமாநிய அகங்காரம் யா தெனின்?

விடை:- தேகாதிகளி னுத்தேச மில்லாமற் றனிமையாக நா னென் றெழுத லென அறிக. (202)

203. விஞ:-விசேஷ அகங்காரம் யா தெனின்?

விடை:- தேகாதிகளின் சாதி பெயர் முதலிய தருமங்களின் உத்தேசத்தால், நா னென் றெழுத லென அறிக. (203)

204. விஞ:-முக்கிய அகங்காரம் யா தெனின்?

விடை:- தேகாதிகளோடு சங்கமா யுள்ள சிதா பாசனையும், அசங்கமா யுள்ள கூடத்தனையும், ஒன்று படுத்திக் கொண்டு, அஞ்ஞாநத்தால் முற் சொல்லிய அனைத்தினும் "நான் போனேன், வந்தேன், கண்டேன், கேட்டேன்'' என்னுஞ் சத்தத்தோடு, நா னென் றெழுத லாம். இது, சத்தி விருத்தியா லறியத் தக்க அகஞ் சத்தத்தின் அருத்தத்தை விஷயஞ் செய்யும் அகங்கார மென அறிக. (204)

205. விஞ:-அமுக்கிய அகங்காரம் யா தெனின்?

விடை:- ஞாநியிடத்து விவகார தசையில், தேகாதிகளோடு கூடிய சிதாபாசன் மாத்திரத்தில், "நான் போனேன் வந்தே'' னென்னும் சத்தத் தோடும், பாரமார்த்திக தசையில், கூடத்தன் மாத்திரத்தில், "நான் அசங்கன் சிந்மாத்திர'' னென்னும் சத்தத்தோடும், நா னென் றெழுத லாம். இவ்விரண்டும் இலக்கணவிருத்தியா லறியத் தக்க அகஞ் சத்தத்தின் அருத்தத்தை விஷயஞ் செய்யும் அகங்கார மென அறிக. (205)

206. விஞ:- (29) தத்துவங்களிலும் நா னென நிற்கும் அகங்காரத்தை, அகங்காரக் * கிரந்தி யென் றது எதனு லெனின்?

* கிரந்தி யென்பது—முடிச்சு.

விடை:— மண், பொன், கல், இரத்திநம், ஓடு முதலிய பல பொருள்களை ஒன்று படுத்தி, ஒவ் வொன்றற்கு முள்ள பேதங்க டோன்ருமல் முடியப் பட்டிராநின்ற முடிச்சைப் போல, 29 தத்துவங்களை யும் ஒவ் வொன்றற்கு முள்ள பேதந் தோன்ருத வண்ணம், ஒரு தன்மையன வாகச் சேர்த்து நா னென நிற்றலி னென அறிக. (206)

207. வி:—இதனைச் சம்சார பந்த மென்றது எதனு லெனின்?

விடை:- தன் பொருளை விடுத்து அந்நியர் பொருளைக்களவு செய்பவன் சிறைச் சாலையிற் கட்டுப்படுதற்குக் களவே காரணமா யிருப்பது போலத், தன் எதார்த்த சொரூப மாகிய ஆத்ம தத்துவத்தை விடுத்து, அந்நியமாகிய அநாத்ம தத்துவங்களைத் தா னென அபிமாநிப்பவன், ஜநந மரணுதிசம்சாரங்களிற் கட்டுப்படுதற்கு அபிமாநமே காரணமா யிருத்தலி னென அறிக.

பிரமாணம் (எசுர் வேதத்தின்சர்வசாரோபநிஷத்து)

"ஆத்மா வானவன் ஆத்மா வல்லாத தேகாதி-களைத்தா னென எண்ணிக் கொண்டு, அவைகளை ஆத்மா வென்றபிமாநிக்கிறதிஞல், அந்த அபி மாநமே ஆத்மாவுக்குப் பந்தமாகிறது." (207)

(பதம்) சற் குரு கடாக்ஷத்தால்—

(பொருள்) உத்தம குருவின் கிருபா வீக்ஷணியத்தால்,

(பதம்) இவ் வாவரணம்நீங்கி—

(பொருள்) இம் மறைப்புச் சத்தி நிவர்த்தியாகி,

208. வினு:- ஆவரணம் நீங்கியது ஈசுவர கடாக்ஷத்தா லென்றுது, சற் குரு கடாக்ஷத்தா லென்றது எதனு லெனின்?

விடை:- குரு சாஸ்திராநுசார சாதநங்களின் சம்பாதநம், தன் அந்தக் கரண கிருபையினுனும்; சற் குரு முதலிய ஞாந சாமக்கிரியை, ஈசுவர கிருபையினுனும்; சாஸ்திரார்த்த தாரண சக்தி, வேத கிருபையினுனும்; சாஸ்திரம் மற்றுந் தன தநுபவ சார மான எதார்த்த ஞாநோபதேசம், குரு கிருபையினுனும்; அடையப்படு மெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றமையால், ஈசுவர கிருபையால் அதிருஷ்ட பல மாத்திர மடையப்படுமே யன்றித், திருஷ்ட பலம் அடையப்படாமலும், சற் குரு கிருபையால் அதிருஷ்ட பலம் திருஷ்ட பல மிரண்டும் அடையப் படுதலு மாக இருத்தலி னென அறிக. (208)

209. வினு:- திருஷ்ட பல மென்பது யாது? அதிருஷ்ட பல மென்பது யா தெனின்?

விடை:- தரும வழியாற் கிடைக்கின்ற சித்த சுத்தியாதிகள் அதிருஷ்ட பல மாம். நேரே கிடைக்-கின்ற ஞாநோபதேசம் திருஷ்ட பலமா மென அறிக. (209)

210. வினு:- இவ் விரண்டு பலங்கட்கு மேதுக்க ளெவை யெனின்?

விடை:- அதிருஷ்ட பலத்துக்கு ஈசுவர சேவையும், குரு சேவையும் ஏதுக்க ளாகும். திருஷ்ட பலத்துக்குக் குரு சேவை மாத்திரம் ஏது வாகு மென அறிக. (210)

211. வினு:- ஈசுவரன் சநகாதியருக்கும், மாணிக்க

வாசகருக்கும், ஞானோபதேசஞ் செய்த தாகப் புராணாதிகள் கூறுகின்றனவே யெனின்?

விடை:- சநகாதியருக்கும், மாணிக்க வாசகருக்கும் ஈசுவரன், கல்லா லடியினும், குருந்தி னடியினும், குரு மூர்த்த மாகவே இருந்து ஞானோபதேசஞ் செய்த தாக அப்புராணாதிகளே கூறுகின்றமையால், ஞானோபதேசஞ் செய்தற் குரியவர் சற் குருவே யென அறிக. (211)

212. வினா:— குருவைச் சற் குரு வென விசேஷித்தது யாது நிமித்த மெனின்?

விடை:- பூசனை, பொருள், தருக்கம், கீர்த்தி யாதிகளி னிமித்தம் நூற் பொருள் கூறுபவ ராதிய மத்திம குருவும், வசிய மாதிகளைக் கூறுபவ ராதிய அதம குருவு மிவரல்ல ரென்பது தோன்று நிமித்த மென அறிக. (212)

213. வினா:- இவ் விருவர்களும், சற் குரு வாகா ரெனின், மற் றியாவர்கள், சற் குரு வெனின்?

விடை:— வேத சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞையும், பிரஹ்மாத்மைக்கிய ஞாந நிட்டையும், தா னடைந்த பேற்றையுலகமு மடைந் துய்ய வேண்டு மென்னுஞ் சீவ காருண்ணியமு முள்ளவ ரென அறிக. (213)

214. வினா:- சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞை, அல்லது, பிரமாத்மைக்கிய ஞாந நிஷ்டை யுடையவர் குரு வெனல் போது மானதா யிருக்க இரண்டையு முடையவர் குரு வென்ற தென்னை யெனின்?

விடை:— ஞாந நிட்டை யின்றிச் சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞை மாத்திர முடையார், தமக் கநுபவ மில்லா

தைச் சீடர்க் குபதேசிப்பது. குருடர்க்குக் குருடர் நெறி கூறுதல் போற், பயனற்ற தாகும். ஆதலின், சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞை மாத்திர முடையவர்களும் குரு வாகார்கள். சாஸ்திரார்த்தப் பிரஞ்ஞை யின்றி ஞாந நிட்டை யுடையார், தாம் ஜீவன் முத்த ராக இருக்கினும், தமக்குச் சீடர்கள் புத்தியி லுள்ளபேத சம்ஸ்காரங்களை நிவிர்த்தி செய்யத் தக்க யுத்தி யாதிகள் புத்தியி லுதய மாகா. ஆயினும், அவர் கட்குப் புத்தியில் பேத சம்ஸ்கார மின்றி உத்தம சம்ஸ்கார முடைய சிஷ்யர்கட்கு மாத்திரம் உபதேசிக் கத் தக்க யோக்கியதை யுள்ளதே யன்றிப், பேத சம்ஸ்கார முடையார்க்கு உபதேசிக்கும் யோக்கியதை யாகிய சாமர்த்திய மில்லாமையினும், குகார மாகிய அஞ்ஞாநத்தை, ருகார மாகிய ஞாநத்தால் நிவிர்த்திக்குஞ் சாமர்த்திய முள்ளார்கள் குரு வெனச் சுருதிகள் கூறுகின்றமையினும், ஞாந நிட்டை மாத்திர முடையவர்களுங் குரு வாகார்கள். ஆதலின் இரண்டையு முடையார்கள் குரு வென்ற தென அறிக. (214)

215. வினா:– சற் குருவால் ஆவரணம் நீங்கிய தெங்ஙன மெனின்?

விடை:– சூரிய கிரணத்தால் அந்தகாரம் நீங்கியது போலச் சற் குருவின் உபதேச மாகிய மகா வாக்கிய விசார ஜந்நிய ஞாநத்தால் நீங்கிய தென அறிக. (215)

(பதம்) (29) தத்துவங்களில்–

(பொருள்) சரீரத் திரய சிதாபாச சைதந்நியங்க ளாகிய (29) தத்துவங்களின்,

(பதம்) ஒன்றற் கொன் றுள்ள–

(பொருள்) ஓர் தத்துவத்துக்கும், மற் ேறார் தத்து வத்துக்கு மிரா நின்ற,

(பதம்) பேதந் தெரிகிறதே-

(பொருள்) வித்தியாசங்களைப் பிரித்து அறிதலே,

(பதம்) முத்தி-

(பொருள்) மோக்ஷ மாம்,

216. வினு:- (29) தத்துவங்கட்கு முள்ள பேதங்க ளெவை? அவைகளை யெங்ஙன மறிவது முத்தி?

விடை:- சரீரத் திரயம், சிதாபாசன், கூடத்த ராகிய (29) தத்துவங்கட்கு முறையே யுள்ள சடத்துவம், ஆபாசத்துவம், சித்துத்துவங்களே, ஒன்றற் கொன் றுள்ள பேத இலக்கணங்க ளாகும். இவைகளை யுள்ளபடி யறிவதே முத்தி யென அறிக. (௳16)

217. வினு:- துக்க நிவிருத்தி பிரஹ்மாநந்தப் பிராப்தியே முத்தியெனச் சகல சுருதிகளும் கூறுநிற்க; இந் நூல் தத்துவங்களின் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரிகிறதே முத்தி யென்றதென்னை யெனின்?

விடை:- விசார சீல ஞகிய அப்பியாசி தனக் கிதர மாகிய தத்துவங்க ளனைத்தும் மித்தை யெனவும், பரமாத்மா வாகிய தானே சத்திய மாகிய பிரஹ்ம மெனவும், தத்துவங்களின் ஒன்றற் கொன் றுள்ள பேத இலக்கணங்களைத் திட மாக அறிந்த அளவிற் றுனே, கர்த்துருத்துவ போக்துருத்துவ மாதிய ஜீவத்துவங்கள் விடுபட்டுப் பிரஹ்ம மாகவே நிலை பெறுவன். அங்ஙனம் நிலை பெறுதலே துக்க நிவிருத்தியும் பிரஹ்மாநந்தப் பிராப்தியு மாகிய முத்தி யாகும். தத்துவங்களின் எதார்த்த

இலக்கணங்களை அறிவு தாகிய ஞானமும், பிரஹ்ம சொரூப மாகச் சேடித்தலாகிய முத்தியும், ஏக கால மானமையால், ஞானத்தையும், அதன் பல மான முத்தியையும், ஒன்று படுத்திக் கொண்டு, தத்துவங் களின் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரிகிறதே முத்தி யென்ற தென அறிக (217)

218:- அற்றேல், சுவர்க்க வைகுண்டாதிப்பிராப்தி முத்தி யல்லவோ வெனின்?

விடை:– துக்க நிவிருத்தி சுகப் பிராப்தி மய மாயும், சகல ஜீவர்களது பிரியத்துக்கும் விஷய மாயும், நித்திய மாயுமுள்ளது ஆத்மப் பிரஹ்ம ஐக்கிய முத்தி யெனச் சகல சுருதிகளுங் கூறுகின்றமையால்; அசுர ராதியர், தன்னினும் அதிகரித்த தவ பலிஷ் டர்கள், ஈசுவர ருதியர்க்கு அஞ்சி நடக்கவேண்டி யிருத்தலால், துக்க ஏது வாயும்; கன்ம காண்டிகள் உபாசநா காண்டிக ளாகிய சிலர் பிரியத்துக்கு மாத்திரம் விஷயமாயும்; சுவர்க்க நரக வைகுண்ட கைலாச பந்த மோக்ஷங்களும், ஈசுவரனும், இல்லை யென்னும் நாஸ்திகர்க ளாகிய சிலர் பிரியத்துக்கும், ஆஸ்திகர்களில் நிரவயவ மாகிய பிரஹ்ம மன்றி, அவயவ சகித மாகிய சுவர்க்க வைகுண்டாதிய நாம ரூபத் தோற்றங்க ளனைத்தும் சொப்பநம்போல, அழியத் தக்க தென்னும் ஞாநகாண்டிக ளாகிய சிலர் பிரியத்துக்கும், விஷய மல்லாத தாயும்; ஈசுவர சுழுத்தி யாகிய மகாப் பிரளயத்தில் நாச முறுவதால் அநித்திய மாயும் இராநின்ற, சுவர்க்க வைகுண்டாதி கள், பேதத்தோற்றரவை யுடைய பத முத்தியே யன்றி, அபேத மாகிய ஆத்மப் பிரஹ்ம ஐக்கிய முத்தி யல்ல வென் றறிக. (218)

219. வினா:- கன்ம காண்டி உபாசநா காண்டிகள் பிரியத்துக்கும், நாஸ்திகர்கள் பிரியத்துக்கும், விஷய

மல்லாத ஆத்மப் பிரஹ்ம ஐக்கிய முத்தி யானது, எங்ஙனம் சகல ஜீவர்கள் பிரியத்துக்கும் விஷய மாகு மெனின்?

விடை:- கன்ம காண்டி உபாசநா காண்டி-களிலும், நாஸ்திகர்களிலும், பசு பக்ஷி மிருக மாதிய மற்றைச் சீவர்களிலும், துக்கத்தில் வெறுப் பின்றி விருப்பும், சுகத்தில் விருப் பின்றி வெறுப்பு முடைய ஜீவர்கள், ஒருவராயினு மில்லாமையினானும், சகல ஜீவர்களும் துக்க நிவிர்த்தியிலும், சுகப் பிராப்தி-யிலும் விருப்ப முடையவர்க ளாகவேயிருக்கின்ற-மையினானும். சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ ஆத்மப் பிரஹ்ம ஐக்கிய முத்தியே சகல ஜீவர்களின் பிரியத்துக்கும் விஷயமா யுள்ள தென்பதில் ஐய மில்லை யென அறிக. (219)

220. வினா:- மாயையினும், அவித்தையினும், பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றியது போல, ஆவரண சத்தியினும், விக்ஷேப சத்தியினும், தோன்றாதது எதனா லெனின்?

விடை:- தெளிந்த சலத்தினுங், கலங்கற் சலத்தினும், தோன்றிய சூரியப் பிரதிபிம்பம், வண்ட லாகிய சேற்றிற்றோன்றாதது போல, மாயையும், அவித்தையும், பிரதிபிம்பயோக்கியத் திரவியங்க ளாகிய சத்துவ குணமும், இராசத குணமு மானமை-யால் அவைகளிற் பிரஹ்மப் பிரதிபிம்பந் தோன்றின. ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும், பிரதிவிம்ப யோக்கியத் திரவியங்க ளல்லாத தாமத குணங்க ளானமையால், அவைகளிற் றோன்ற வில்லை யென அறிக. (220)

(பதம்) இப்படி ஆவரண சத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது—

(பொருள்) வெளி.

(நூல் பிரிவு–11)

இனி விக்ஷேப சத்தியினின்றும் சத்த தன் மாத்திரையான ஆகாயந் தோன்றிற்று. அதினின்றும் பரிச தந்மாத்திரை யான வாயுவும், அதினின்றும், ரூப தந்மாத்திரை யான அக்கிநியும், அதினின்றும் ரச தந்மாத்திரையான அப்புவும், அதினின்றும், கந்த தந்மாத்திரை யான பிருதிவியுந் தோன்றின. இவ் வைந்து பூதங்கட்குங் காரண மான விக்ஷேப சத்தியில் தமஸிற் சத்துவம், தமஸி லிராஜஸம் தமஸிற் றமஸ¬ என்னு மிவைகள் அற்பங் கருவாக இருந்தமையால், அதன் காரியமாகிய ஐந்து பூதங்களும் முக் குணங்க ளுடனே தோன்றின. இப் பூதங்கட்குத் தந்மாத்திரைக ளென்றும். அபஞ்சீகிருத பூதங்க ளென்றும், முக் குண பூதங்க ளென்றும். சூக்ஷ்ம பூதங்க ளென்றும், பெயர் சொல்லப்படும்.

(பதம்) இனி—

(பொருள்) மேலும்,

(பதம்) விக்ஷேப சத்தியினின்றும் -

(பொருள்) தோற்ற ரூபமாகியசத்தியி லிருந்தும்,

(பதம்) சத்த தந் மாத்திரை யான –

(பொருள்) சத்தமே தனக்குச் சுபாவ குணமா யுள்ள,

(பதம்) ஆகாயந் தோன்றிற்று –

(பொருள்) ஆகாய பூதந் தோன்றிற்று.

221. வினா:- சட மாகிய விக்ஷேப சத்தியில், ஆகாயந் தோன்றிய தெங்ஙன மெனின்?

விடை:- குண்டு மருந்திட்டுக் கெட்டிக்கப்பட்டுச் சடமா யுள்ள பீரங்கியில், அக்கிநி பட்டமாத்திரத்தில் சத்த முண்டாவது போல, சமட்டி ஜீவர்கள் கன்மத்துக் கேதுவாகப் பிரஹ்ம சந்நிதாநம் பற்றிப் பரிபக்குவமா யிராநின்ற விக்ஷேப சத்தியை, ஈசுவரன் அவித்தையி லடங்கியிராநின்ற ஜீவர்கட்குத் தநு கரண புவந போகங்களைக் கொடுக்கும் நிமித்தம் நினைத்த மாத்திரத்தில். அதினின்றும் சத்த குண மாத்திர மாக ஆகாயந் தோன்றிற் றென அறிக. (221)

222. வினா:- இப்பி வெள்ளியிற், பூடண முண்டாகிய தெனல் போல், பொய் யாகிய விக்ஷேப சத்தியில், ஆகாயந் தோன்றிய தெனல் பொருந்தா தெனின்?

விடை:- பொய் யாகிய கானற் சலத்தில், பொய் யாகிய அலைகளும், பொய் யாகிய கயிற் றரவில், பொய் யாகிய நடந சலநக் கிரியைகளுந் தோன்றுவன போலப், பொய் யாகிய விக்ஷேப சத்தியில், பொய் யாகிய ஆகாயந் தோன்றுதல் கூடும். இஃதன்றி, இங்ஙனந் தோன்றிய தென்பதற்கு அபிப்பிராயம், விக்ஷேப சத்தியி னுபஹித சேதநத்தினின்றும் விவர்த்த மாகத் தோன்றிய தென்பதாகவும், விக்ஷேப சத்தியே ஆகாய மாகத் தோன்றியதென்ப தாகவும், கொள்ளற்பால தானமையினானும், பொருந்து மென அறிக. (222)

223. வினா:- விக்ஷேப சத்தியே ஆகாய மாயிற் றென எங்கே சொல்லப்பட்டிருக்கிற தெனின்?

விடை:- லகு (சுருக்க) வாசுதேவ மநநம்(1) ஆவது வருணகத்தில், ''அந்த விக்ஷேப சத்தியே சூட்சும ஆகாய மாயிற்று'' என்று சொல்லப்பட்டிருக்கிற தென அறிக. (223)

(பதம்) அதினின்றும் -

(பொருள்) அவ் வாகாய பூத வுபகித சேதநத்தினின்றும்,

(பதம்) பரிச தன்மாத்திரை யான வாயுவும் -

(பொருள்) பரிச குண மாத்திரமா யுள்ள வாயு பூதமும்,

(பதம்) அதினின்றும் -

(பொருள்) அவ் வாயுவி னுபகித சேதநத்தினின்றும்,

(பதம்) ரூப தன்மாத்திரை யான அக்கிநியும்-

(பொருள்) ரூப குண மாத்திரமா யுள்ள அக்கிநி பூதமும்,

(பதம்) அதினின்றும் -

(பொருள்) அவ்வக்கிநியின் உபகித சேதநத்தினின்றும்,

(பதம்) ரச தன்மாத்திரை யான அப்புவும் -

(பொருள்) ரச குண மாத்திரமா யுள்ள அப்பு பூதமும்,

(பதம்) அதினின்றும்—

(பொருள்) அவ் வப்புவி னுபகித சேதநத்தினின்றும்,

(பதம்) கந்த தன்மாத்திரை யான பிருதிவியும்-

(பொருள்) கந்த குண மாத்திரமா யுள்ள பிருதிவி பூதமும்,

(பதம்) தோன்றின—

(பொருள்) விவர்த்த மாகத் தோன்றின.

பிரமாணம் (கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப்படலம்.) (36 ஆம் கவி)

"தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற், காற்றதாம் காற்றிற் றீயாம் கனலினீர் நீரின் மண்ணும், போற்றுமிவ் வைந்தும் நொய்ய பூதங்க ளென்று பேராம்."

(பதம்) இவ் வைந்து பூதங்கட்குங் காரண மான விக்ஷேப சத்தியில், தமசிற் சத்துவம், தமஸில் இராஜஸம், தமஸிற் றமஸு என்னு மிவைகள் அற்பங்கரு வாக இருந்தமையால், அதன் காரிய மாகிய ஐந்து பூதங்களும் முக்குணங்க ளுடனே தோன்றின—

(பொருள்) வெளி.

224. வி௵:- முக் குணங்களும் மாயையினும், அவித்தையினு முள்ளன போல், விக்ஷேப சத்தியினு மிராமற், குறைவுற்று அற்ப மாக இருந்தன வென்பது எதனு லெனின்?

விடை:— தமோ குண மாகிய முழு அம்ஸத்தில், ஆவரண அம்ஸங்க ளாக அநேக அம்ஸங்கள் பிரிவுற்றமை பற்றி யென அறிக. (224)

225. வி௵:- அற்றே லிராசத குண மாகிய அவித்தையும், அநேக அம்ஸங்க ளாகப் பிரிந்துள்ளன வாதலின், அவைகளினிடத்தும் முக் குணங்கள் அற்ப மாக வுள்ளன வெனக் கூருமல் விடுத்த தென்னை யெனின்?

விடை:— பச்சைத் தருப்பணமும், தாமரை யிலை யும், சம மாகிய நிறங்களை யுடையனவா யிருக்கினும்,

தருப்பணம், பிரதிவிம்ப யோக்கியத் திரவிய மாதலின், சூரியப் பிரதிவிம்பத்தைப் பெற்றுப் பிரதிவிம்ப யோக்கியத் திரவிய மல்லாத தாமரையிலையைப் போலிருந்த வண்ண மிராமல், அதிகரித்துப் பிரகாசிப்பது போல, முக் குணங்களும் விக்ஷேப சத்தியி லிருப்பது போலவே அவித்தைகளினும் அற்ப மாக இருக்கினும், அவித்தைகள் பிரதிவிம்ப யோக்கியத் திரவியங்க ளான இராசத குணங்க ளானமையால், சேதநப் பிரதிவிம்பத்தைப் பெற்றுப் பிரதிவிம்ப யோக்கியத் திரவிய மல்லாத தாமத குண மாகிய விக்ஷேப சத்தியின் முக் குணங்கள் போலிருந்தவண்ண மிராமல் அதிகரித்துப் பிரகாசிக்கின்றமையி னெனஅறிக. (225)

(பதம்) இப் பூதங்கட்கு—

(பொருள்) இவ் வாகாய மாதிய (5) பூதங்கட்கும்,

(பதம்) தன் மாத்திரைக ளென்றும்—

(பொருள்) தன் தன் சுபாவ மாத்திர மாக வுள்ளவைக ளெனவும்,

(பதம்) அபஞ்சீகிருத பூதங்க ளென்றும்—

(பொருள்) கலத்த லின்றிய பூதங்க ளெனவும்—

(பதம்) முக் குண பூதங்க ளென்றும்—

(பொருள்) திரி குண பூதங்க ளெனவும்—

(பதம்) சூட்சும பூதங்க ளென்றும்—

(பொருள்) நுண்ணிய பூதங்க ளெனவும்,

(பதம்) பெயர் சொல்லப்படும்—

(பொருள்) சாத்திரங்களில் நாமம் வழங்கப்படும்.

## (நூல் பிரிவு–12)

சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்களுந் தூல பூதங்களுந் தோன்றின. எங்ஙன மெனின், ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் சாத்வீகாம்ஸத்திற் பூதத்துக் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைக்கப்பட்டது, அந்தக் கரண மென்று சொல்லப்படும். இவ்வந்தக் கரணத்தில், ஆகாயத்தி னம்ஸங் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் ஆகாயத்தைப் போல, சகலமான கேள்வி கட்கு மிடங் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ள மென்று பெயர். வாயுவினம்ஸங் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் வாயுவைப் போல, அலேகின்றது. இப்படி அலேகின்ற விருத்திக்கு மந மென்று பெயர். அக்கிநியி னம்ஸங் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் அக்கிநியைப் போல, ஈதின்ன தென்று விளக்கு விக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தி என்று பெயர். அப்புவி னம்ஸங் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் அப்புவைப்போல, விடயங்களேப் பற்றியிழுக்கின்றது. இப்படியிழுக்கின்ற விருத்திக்குச் சித்த மென்று பெயர். பிருதிவியி னம்ஸங் கூடியதற் கடையாளம், அந்தக் கரணமும் பிருதிவியைப் போல, கடிந மாக நின்று நா னென்ற பிமாநிக்கின்றது. இப்படி யபிமாநிக்கின்ற விருத்திக்கு அகங்கார மென்று பெயர்.

(பதம்) சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்களும், தூல பூதங்களுந் தோன்றின. எங்ஙனமெனின், ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் சாத்வீகாம் ஸத்தில் பூதத்துக் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைக்கப்பட்டது அந்தக் கரணமென்று சொல்லப்படும் —

(பொருள்) வெளி.

226. வினா:- பூதங்களின் சமட்டி சத்வாம் ஸங்களுக்கு அந்தக் கரண மெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- அந்தர் (உள்) கரணம் (கருவி) சுரோத்திராதி இந்திரியங்களைப் போலப் பாஹியத்தி லிராமல் இருதயமாகிய உள்ளில் அறி கருவியாக இருத்தலின், இடம் பற்றி வந்த தென அறிக. (226)

(பதம்) இவ்வந்தக் கரணத்தில்—
(பொருள்) இந்த அகக் கரணத்தில்,
(பதம்) ஆகாயத்தி னம்ஸம்—
(பொருள்) ஆகாய பூதத்தின் சத்துவாம்ஸம்,
(பதம்) கூடியதற் கடையாளம்—
(பொருள்) சேர்ந்திருப்பதற்கு அறி குறி யாவது—
(பதம்) அந்தக் கரணமும்—
(பொருள்) சத்துவாம்ச சமட்டி யாகிய அகக் கரணமும்,
(பதம்) ஆகாயத்தைப் போல—
(பொருள்) ஆகாயம், மற்றைப் பூதங்கட் கிடங் கொடுத்தல் போல,
(பதம்) சகல மான கேள்விகட்கும்—
(பொருள்) கேட்கத் தக்க கல்விக ளனைத்துந் தங்கி நிற்றற்கு,
(பதம்) இடங் கொடுத்துத் தரிக்கின்றது—
(பொருள்) அவகாசங் கொடுத்துக் கொண்டிருக்கின்றது.

(பத சாரம்)

அறம் பொரு ளின்பம் வீ டென்னு நான்கையும் பயக்கத் தக்க கல்விக ளனைத்தும், அல்லது, வேதம், வேதாங்கம், வேதோபாங்கம், உபவேதம், காவியம், தருக்கம், கீதம், பரதம் முதலிய கற்றுக் கொள்ளத் தக்க கல்விக ளனைத்து மென்பது தோன்ற சகல மான கேள்விகளுக்கு மென்றார்.

227. வினா:- வேத மென்பது யா தெனின்?

விடை:- சுயம்பு வாயும், ஈசுவரன் வாக்கி னின்றும் வெளிப்பட்ட தாயும் உள்ள, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என நான் காக இருந்து அறிவைப் பயப்பிப்ப தாகிய அநந்த சாகைகளை யுடைய தென அறிக. (227)

228. வினா:- வேதாங்கங்க ளென்பவை யெவை யெனின்?

விடை:- வேதங்கட்குப், பாதம், அஸ்தம், முகம், கிராணம், நேத்திரம், சுரோத்திரம், என முறையே, 1) மந்திர சுலோகங்கட்கு அக்ஷர கணிதஞ் செய்யும் சந்தசு. 2) ஆசுவலாயந போதாயந ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில், யஞ்ஞப் பி ர யோ கா தி க ளைக் கற்பிக்கும் க ற் ப ம். 3) வைதிக சாஸ்திரார்த்த சித்தியைச் சமர்ப்பிக்கும் வியாகரணம். 4) உதாத்த அநுதாத்த ஸ்வரிதப் பிரசய மென்னும் சதுர்வித ஸ்வர கரண பூர்வக மான பதபாளிக் கிரம வேதாத்தியய நாதிகளைச் சொல்லும் சிக்ஷை. 5) லக்கிநந் திதி வாரம் நக்ஷத்திரம் யோக கரணாதி-களால் வைதிக கருமங்களுக்குக் காலந் தெரிவிக்குஞ் சோதிடம். 6) வைதிக சம்பந்த நிர்வசநத்தை நியமிக்கும் நிருத்தம் ஆகிய இவைக ளென அறிக. (228)

229. வினா:- வேதோபாங்கங்க ளெவை யெனின்?

விடை:— ஸ்மிருதி, புராணம், நியாயம், மீமாம்சை யென்னும் நான்கு மென அறிக. (229)

230. வினா:- உபவேதங்க ளெவை யெனின்?

விடை:— 1) வியாதி நிதாந, வியாதிச் சின்னங்களையும், மந்திர ஔடத சிக்ஷை ஆயுள் ஆரோக்கியாதிகளையும், காட்டும் ஆயுள் வேதம். 2) தக்ஷிணை ஆச்சியம் சரு முதலான உபகரணங்களைத் தர்மாதி சதுட்டயங்கட்குச் சாதநமாகக் கற்பிக்கும் அருத்த வேதம். 3) சத்துரு ஜயார்த்தமான மந்திராஸ்திரப் பிரயோகங்களைக் கற்பிக்கும் தநுர்வேதம். 4) சாம வேதாதிகளின் ச ரி க ம ப த நி யென்னும் சப்தஸ்வர கீதப் பிரபந்தங்களைக் கற்பிக்கும் காந்தருவ வேதம் ஆகிய இவைக ளென அறிக. (230)

(பதம்) இப்படித் தரிக்கின்ற—

(பொருள்) இங்ஙனம் அவகாசந் தந்துகொண்டிரா நின்ற,

(பதம்) விருத்திக்கு

(பொருள்) அந்தக் கரண பரிணாம மாகிய விருத்திக்கு,

(பதம்) உள்ள மென்று பெயர்—

(பொருள்) உள்ள மென்று நாம மாம்.

231. வினா:— இவ் விருத்திக்கு உள்ள மெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- உள் என்பது உட்புறத்தை யுடைய கிரகம், அது பல பதார்த்தங்க ளிருத்தற்கு இட மாக

இருத்தல் போல, கிரகிக்கப்பட்ட சகல கல்விகளு மிருத்தற்கு இடமாக இருத்தலி னென அறிக. (231)

232. வினு:- உள்ளம் ஆகாய மல்லாத மற்றைய பூதாம்ஸங்களில் ஒன் றல்லவோ வெனின்?

விடை:- உள்ளமாகிய விருத்தியில், வாயுவைப் போல, விஷயங்களி லொன்றை விடுத்து, மற்றொன்றைப் பற்றிச் சலித்தலும், அக்கிநியைப் போல, விஷயங்களை இஃதின்ன தென்று விளக்குவித்தலும், அப்புவைப் போல, விஷயங்களைப் பற்றி யிழுத்தலும், பிருதிவியைப் போல, கடிநமாக நின்று விஷயங்களை அபிமாநித்தலு மாகிய காரியங்கள் காணப் படாமையின் அல்ல வென அறிக. (232)

(பதம்) வாயுவி னம்ஸம்—

(பொருள்) வாயு பூதத்தின் சத்துவாம்ஸம்,

(பதம்) கூடியதற் கடையாளம்—

(பொருள்) சேர்ந்திருப்பதற்கு அறி குறி யாவது,

(பதம்) அந்தக் கரணமும்—

(பொருள்) சத்துவாம்ச ஸமட்டி யாகிய அகக் கரணமும்,

(பதம்) வாயுவைப் போல—

(பொருள்) வாயு சதா சலிப்பது போல,

(பதம்) அலைகின்றது—

(பொருள்) சங்கற்ப விகற்பாத்மக மாகச் சலிக்கின்றது,

(பதம்) இப்படி அலைகின்ற—

(பொருள்) இந்தப் பிரகாரஞ் சலித்துக் கொண்டிரா நின்ற,

(பதம்) விருத்திக்கு—

(பொருள்) அந்தக் கரண பரிணாம மாகிய விருத்திக்கு,

(பதம்) மந மென்று பெயர்—

(பொருள்) மந மென்று நாம மாம்.

233. வினா:— இவ் விருத்திக்கு, மந மெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:— நிச்சய மின்றித், தீபச் சுவாலையின் பரம்பரை போல, மேலு மேலும் சங்கற்ப விகற்ப மாத்திரமாக மநநஞ் செய்கின்றமையி னென அறிக. (233)

234. வினா:— மநம், வாயு வல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- மந மாகிய விருத்தியில், ஆகாயம், அக்கிநி, அப்பு, பிருதிவி, பூதங்களின் தருமங்களான இடங் கொடுத்தல், விளக்குவித்தல், இழுத்தல், அபிமாநித்த லாதிகள் காணப்படாமையால் அல்ல வென அறிக. (234)

(பதம்) அக்கிநியி னம்சம்—

(பொருள்) அக்கிநி பூதத்தின் சத்துவாம்சம்,

(பதம்) கூடியதற் கடையாளம்—

(பொருள்) சேர்ந்திருப்பதற்கு அறிகுறியாவது,

(பதம்) அந்தக் கரணமும்—

(பொருள்) சத்துவாம்ச சமட்டி யாகிய அகக் கரணமும்,

(பதம்) அக்கிநியைப் போல—

(பொருள்) அக்கிநி, விஷயங்களைப் பிரகாசிப்பது போல,

(பதம்) ஈ தின்ன தென்று—

(பொருள்) இது இன்னது, என்பதாக விஷயங்களை,

(பதம்) விளக்குவிக்கின்றது—

(பொருள்) பிரகாசிப்பிக்கின்றது,

(பதம்) இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்கு—

(பொருள்) இப்படிப் பிரகாசிப்பிக்கின்ற அந்தக்கரண பரிணாம மாகிய விருத்திக்கு,

(பதம்) புத்தி யென்று பெயர்—

(பொருள்) புத்தி யென்று நாம மாம்.

235. வினா:- இவ் விருத்திக்குப் புத்தியெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- புத்தி யென்பது அறிவு, விஷயா வரணங்களை நீக்கி, விஷயங்களை இஃதின்னதென நிச்சயாத்மகமாக அறிகின்ற ஞாந ரூபமாக இருத்தலி னென அறிக. (235)

236. வினா:- புத்தி, அக்கிநி யல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- புத்தி விருத்தியில், ஆகாயம், வாயு, அப்பு, பிருதிவி பூதங்களின் தருமங்க ளான இடங் கொடுத்தல், சலித்தல், இழுத்தல், அபிமாநித்த லாதிகள் காணப்படாமையின் அல்ல வென அறிக. (236)

(பதம்) அப்புவி னம்சம்—

(பொருள்) அப்பு பூதத்தின் சத்துவாம்சம்,

(பதம்) கூடியதற் கடையாளம்—

(பொருள்) சேர்ந்திருப்பதற்கு அறிகுறி யாவது,

(பதம்) அந்தக் கரணமும்—

(பொருள்) சத்துவாம்ச சமட்டி யாகிய அகக் கரணமும்,

(பதம்) அப்புவைப் போல—

(பொருள்) அப்பு, சார்ந்த பதார்த்தங்களை யிழுப்பது போல,

(பதம்) விடயங்களைப் பற்றி—

(பொருள்) முன்னிட்ட விஷயங்களைப் பொருந்தி,

(பதம்) இழுக்கின்றது—

(பொருள்) அவதாநஞ் செய்கின்றது,

(பதம்) இப்படி இழுக்கின்ற—

(பொருள்) இங்ஙனம் அவதாநிக்கின்ற,

(பதம்) விருத்திக்கு—

(பொருள்) அந்தக் கரண பரிணாம மாகிய விருத்திக்கு,

(பதம்) சித்த மென்று பெயர்—

(பொருள்) சித்த மென்று நாம மாம்.

237. வினா:- இவ் விருத்திக்குச் சித்த மெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- விடயங்களைப் பற்றி மென் மேலுஞ் சிந்திக்கின்றதே சொரூப மாக இருத்தலி னென அறிக. (237)

238. வினு:- சங்கற்பித்தல், சிந்தித்த லென்னு மிரண்டிற்கும் நினைத்த லெனப் பொருள்படுகின்ற மையால், நினைத்த லென்னும் ஒரே தொழிலை யுடைய அந்தக் கரண விருத்தியை, ஒரே பெயரிட்டு ஓரே தத்துவமாகக் கூருமல், மநமென்றும், சித்த மென்றும், இரண்டு பெயரிட்டு, இரண்டு தத்துவங்க ளாக கூறிய தென்னை யெனின்?

விடை:- சங்கற்பித்த லென்பதற்கும், சிந்தித்த லென்பதற்கும், நினைத்த லெனப் பொரு ளொன்ரு யிருக்கினும், மநதின் தொழில், நிச்சய மின்றி யொன்றை நினைத்தலும், அதனை விடுத்து மற் ருென்றை நினைத்தலு மாகப் பலவற்றினுஞ் செல்லும் நினைப் பாகும். சித்தத்தின் தொழில், மநதால் நினைக்கப்பட்ட ஓர் விஷயத்தைப் புத்தியால் நிச்சயிக்கப்பட்ட பின்னர், அஃ தொன்றையே, உள்ளத்திற்றங்கும்படி மேலு மேலும் நிச்சய சகித மாக ஆவிருத்தி செய்வ தாகிய நினைப் பாகும். ஆதலால், வேறு பெயரிட்டுப் பிரித்துக் கூறிய தென அறிக. (238)

239. வினு:- சித்தம், அப்பு வல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- இவ் விருத்தியில், ஆகாயம், வாயு, அக்கிநி, பிருதிவி பூதங்களின் தருமங்க ளான இடங் கொடுத்தல், சலித்தல், விளக்குதல், அபிமாநித்த லாதிகள் காணப்படாமையின் அல்ல வென அறிக. (239)

(பதம்) பிருதிவியி னம்சம்—

(பொருள்) பிருதிவி பூதத்தின் சத்துவாம்சம்,

(பதம்) கூடியதற் கடையாளம்—

(பொருள்) சேர்ந்திருப்பதற்கு அறி குறியாவது,

(பதம்) அந்தக் கரணமும்—

(பொருள்) சத்துவாம்ச சமட்டி யாகிய அகக் கரணமும்,

(பதம்) பிருதிவியைப் போல—

(பொருள்) பிருதிவி பூதம் கடிந மாக இருப்பது போல,

(பதம்) கடிந மாக நின்று—

(பொருள்) உரப் பாக இருந்துகொண்டு,

(பதம்) நா னென் றபிமாநிக்கின்றது—

(பொருள்) தேகாதிகளை யக மென் றபிமாநிக் கின்றது.

(பதம்) இப்படி யபிமாநிக்கின்ற—

(பொருள்) இங்ஙனம் அபிமாநத்தைச் செய்கின்ற,

(பதம்) விருத்திக்கு—

(பொருள்) அந்தக் கரண பரிணும மாகிய விருத்திக்கு,

(பதம்) அகங்கார மென்று பெயர்—

(பொருள்) அகங்கார மென்று நாம மாம்.

**240.** வினு:- இவ் விருத்திக்கு அகங்கார மெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:— தேகாதிகளில் யா னென தென்னும் அகந்தை மமதை வடிவ அபிமாநமாக நிற்றலி லென அறிக. (240)

**241.** வினு:- அகங்காரம், பிருதிவி யல்லாத மற்றைய பூதாம்சங்களில் ஒன் றல்லவோ வெனின்?

விடை:- இவ் விருத்தியில், ஆகாயம், வாயு, அக்கிநி, அப்புப்பூதங்களின் றருமங்க ளான இடங் கொடுத்தல், சலித்தல், விளக்குவித்தல், அவதாநித்த லாதிகள் காணப் படாமையின் அல்ல வென அறிக. (241)

242. விஞ:—அந்தக் கரணம், பூதங்களின் இராஜஸ தாமஸங்க ளல்லவோ வெனின்?

விடை:—கிரியா சாதநங்க ளாக இராமல், அறிவ தாகிய ஞாந சாதநங்க ளாக இருத்தலால் அல்ல வென அறிக. (242)

243. விஞ:-அந்தக் கரணம், * வியட்டி யல்லவோ வெனின்?

விடை:—வியட்டியாஞல் ஒன் றறிந்ததை மற்றை யவைக ளறியாமலும், ஒன்று கெட்டால் மற்றை யவைகள் கெடாமலு மிருக்கவேண்டும் அங்ஙன மின்றி, ஒன் றறிந்ததை மற்றைய விருத்திகளு மறிகின் றமையிஞனும், ஒரு விருத்தி கெட்டால், மற்றைய விருத்திகளுங் கெட்டுப் போகின்றமை யிஞனும் அல்ல வென அறிக. (243)

244. விஞ:- விருத்தி சப்தங்களுக் கருத்தங்க ளௌவை யெனின்?

விடை:- விடயங்களைப் பிரகாசிப்பிக்கிற தாகிய அவித்தை அந்தக் கரணங்களின் ஞாந ரூப பரிணு மங்களாகும். குரோத சுகாதிகள், அவித்தை அந்தக் கரணங்களின் பரிணுமங்க ளாக இருக்கினும், அவை கள் விடயங்களைப் பிரகாசிப்பிக்கும் ஞாந ரூப மாக இராமையால், விருத்தி சப்தத்துக்கு அருத்தங்க ளாகா வாம். இவைகளின் விரிவையறிய விரும்பில், விருத்திப் பிரபாகர மென்னும் நூலிற் காண்க. (244)

* வியட்டி—கூட்டமா யுள்ளவைகளி லொன்று.

245. விஞ:—சட மாகிய அவித்தை அந்தக் கரணங் களில் ஞாந ரூப விருத்திக ளுதய மாவது எதனு லெனின்?

விடை:- அப்பிரகாசப் பொரு ளாகிய தருப் பணம், பிரகாச மாகிய சூரியப் பிரதிவிம்பத்தைப் பெற்றிருத்தலால், அதன் பால் பிரகாச மாகிய கிரணங்க ளுதய மாவது போல, அவித்தை அந்தக் கரணங்கள், சடங்க ளாக இருக்கினும், ஞாந மய மாகிய பிரஹ்மப் பிரதிவிம்பத்தைப் பெற்றிருத்த லால், அவற்றின்பால் ஞாந ரூப விருத்திக ளுதய மாயின வென அறிக. (245)

246. விஞ:- விக்ஷேப சத்தியும், அதன் காரிய மான பஞ்ச பூதங்களும், பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றற் கான யோக்கியத் திரவியங்க ளல்லனவா யிருக்க, அவைகளின் காரிய மாகிய அந்தக் கரணம் பிரதி விம்பந் தோன்றற் கான யோக்கியத் திரவிய மாகியது எதனு லெனின்?

விடை:— சூரியப் பிரதிவிம்ப யோக்கியதை யின்றிய சேற்றைப் பிழிந்து அதி லுள்ள நீரை வேறு பிரிக்கில், அந்நீர் சூரியப் பிரதிவிம்பந் தோன்றற் கான யோக்கியத் திரவிய மாவது போல, தமசிற் சத்துவம், தமசில் ரஜசு, தமசிற் றம சென்னும் முக் குண சொரூப மாகிய விக்ஷேப சத்தியும், அதன் காரிய மாகிய பஞ்ச பூதங்களும் பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றற் கான யோக்கியத் திரவியங்க ளல்லன வாயினும், அவைகளி லுள்ள இராஜத தாமத குணங் களை நீக்கிச் சத்துவ குணத்தை மாத்திரம் வேறு படுத்திவைக்கப்பட்டது, அந்தக் கரண மானமையின், பிரஹ்மப் பிரதிவிம்பந் தோன்றற் கான யோக்கியத் திரவியமாயிற் றென அறிக. (246)

247. வினா:- அந்தக் கரணத்துக்கு அதி தேவதைக ளெவை யெனின்?

விடை:- உள்ளத்துக்குச் சதா சிவனும், மநதுக்குச் சந்திரனும், புத்திக்குப் பிரஹ்மனும், சித்தத்துக்கு வாசு தேவனும், அகங்காரத்துக்கு உருத்திரனு மென அறிக. (247)

(நூல் பிரிவு-13)

பின்னும் ஆகாய மாதிய பஞ்ச பூதங்களின் சாத்வீ காம்சத்திலே பூதத்திற் கொவ் வொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைக்கப் பட்டது, சுரோத்திராதி ஞாநேந்திரியங்க ளென்று சொல்லப்படும். இவைகளில், சுரோத்திரம் ஆகாசத்தின் அம்ச மானபடியால், ஆகாசத்தின் குண மான சத்தத்தை மாத்திர மறியும். துவக்கு வாயுவி னம்ச மானபடியால், வாயுவின் குண மான பரிசத்தை மாத்திர மறியும். சட்சு அக்கிநியி னம்ச மானபடியால் அக்கிநியின் குண மான ரூபத்தை மாத்திர மறியும். சிங்நுவை அப்புவி னம்ச மானபடியால், அப்புவின் குண மான இரசத்தை மாத்திர மறியும். ஆக்கிராணம் பிருதிவியி னம்ச மானபடியால், பிருதிவியின் குண மான கந்தத்தை மாத்திர மறியும். இப்படி ஐந்தும் ஒன்றோ டொன்று கூடாதபடியால், ஒன்று மற் றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக் கரணம் ஐந்தும், ஒன் றாகக் கூடிய தானமையால், ஐந் திந்திரியங்களினாலும் ஐ ந் து விடயங்களை யு மறியும், அந்தக் கரணம் (5) ஞாநேந்திரியம் (5) ஆகிய பத்தும் சத்துவாம்ச மானபடியால் ஞாந சாதந மாயின.

(பதம்) பின்னும் ஆகாய மாதிய பஞ்ச பூதங்களின் சாத்வீகாம்சத்திலே பூதத்துக்கொவ் வொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைக்கப்பட்டது சுரோத்திராதி ஞாநேந்திரியங்களென்று சொல்லப்படும்—

(பொருள்) வெளி.

(பதம்) இவைகளிற் சுரோத்திரம்—

(பொருள்) இவ் விந்திரியங்களிற் சுரோத்திரேந்திரியமானது,

(பதம்) ஆகாயத்தி னம்சமானபடியால்—

(பொருள்) ஆகாய பூத சத்துவாம்சமானமையால்,

(பதம்) ஆகாயத்தின் குண மான—

(பொருள்) ஆகாய பூதத்தின் சுபாவ குணமாகிய,

(பதம்) சத்தத்தை மாத்திர மறியும்—

(பொருள்) ஒலியை மாத்திர மறியும்.

248. வினா:– சத்தங்க ளெத்தனை விதமா மெனின்?

விடை:- தொநி ரூப, வருண ரூபங்க ளென இரண்டு விதமா மென அறிக. (248)

249. வினா:– தொநி ரூப சத்தங்க ளெவை யெனின்?

விடை:- தம்புரு, வீணை, பிட்டில், சாரந்தா, சுரபத்து முதலிய நரம்புக் கருவிகளினின்றும், நாக சுரம், புல்லாங் குழல், முக வீணை, திருச் சின்னம், எக் காளம், வாங்கா, கொம்பு, சங்கு முதலிய துளைக் கருவிகளினின்றும், வெண் கலத்தா லாகிய தாள மாதிய

கஞ்சக் கருவிகளினின்றும், பேரிகை, டங்கா, டவண்டை, தவில், மிர்தங்க மாதிய தோற் கருவி களினின்றும், மேகம், மலை யருவி, மழை, சமுத்திரம், அக்கிநி, காற்று, இடி, வெடி, அடி, வெட்டாதி களினின்றும் எழாநின்ற சுர ராக தாள மாதிய ஒலிக ளாம். இவைகளும், உபாதி பேதத்தால் அநந்த விதமாகு மென அறிக. (249)

250. வினு:- வருண ரூப சத்தங்க ளெவை யெனின்?

விடை:- வருண ரூப சத்தம், லௌகீகம் வைதீக மென்னும் பேதத்தா லிரு வகை யாம். அவைகளில், ஆரியம் திராவிட மாதிய பதி னெண் பாஷைகளாற் செய்யப்பட்ட விநோதாதி சரித்திரப் பிரசங்கங்களி லெழாநின்ற சத்தங்கள் லௌகீக சத்தங்க ளாகும். வேதாகம சாஸ்திர புராண படநங்களினும், பிரணவ பஞ்சாக்கர அஷ்டாக்ஷர சடாக்ஷராதிய மந்திரோச் சாரணங்களினும், பகவத் சங்கீர்த்தந மாதிய தேவதா தோத்திரங்களினும் நின் றெழாநின்ற சப்தங்கள் வைதிக சப்தங்க ளாகும். இவ் வைதீக சப்தங்களும், வியாவகாரிக தத்துவ போதக வாக்கிய சப்தங்கள் பாரமார்த்திக தத்துவ போதக வாக்கிய சப்தங்க ளென இரு வகைத் தாம். பிரஹ்மத்துக்கு அந்நிய மாகிய யாவும் வியாவகாரிக தத்துவங்க ளானமை யால், அவைகளைப் போதிக்கும் வாக்கியங்களினின் றெழாநின்ற சப்தங்கள் வியாவகாரிக தத்துவ போதக வாக்கிய சப்தங்க ளாம். பிரஹ்ம மாத்திரம், பாரமார்த்திக தத்துவ மானமையால், அதனைப் போதிக்கும் வாக்கியங்களின்றும் எழாநின்ற சப்தங்கள் பாரமார்த்திக தத்துவ போதக வாக்கிய சப்தங்க ளாம். இச் சப்தங்களும் அவாந்தர வாக்கிய சப்தம், மகா வாக்கிய சப்தம் என இரண் டாம். இவ் விரண்டில், சச்சி தாநந்தம் பிரஹ்ம மெனத் தத் பதார்த்த சொரூபத்தை, அல்லது, இருதயத்தினுட் சுயம்பிரகாசமா யுள்ள புருட னெனத் துவம் பதார்த்த

சொரூபத்தை யறிவிக்கும் வாக்கியங்களினின்றும் எழாநின்ற சப்தங்கள், அவாந்தர வாக்கிய சப்தங்களாகும். சச்சிதாநந்த பரிபூரணப் பிரஹ்மமே இருதயத்தினுட் சுயம்பிரகாசமா யுள்ள ஆத்மா, இருதயத்தினுட் சுயம்பிரகாசமா யுள்ள ஆத்மாவே சச்சிதாநந்த பரிபூரணப் பிரஹ்ம மெனத் தத் பதார்த்த துவம் பதார்த்தங்களின் அபேதத்தை அறிவிக்கும் தத்துவமசி மகாவாக்கியங்களினின் றெழாநின்ற சப்தங்கள், மகா வாக்கிய சப்தங்க ளாகும். இவைகளும், உபாதி பேதத்தால் பலவித மாகு மென அறிக. (250)

251. வினா:- இச் சப்த பேதங்களை சுரோத்திரம் தனியே யறிகிறதோ, அல்லது, மற்றையவைகளின் சகாயத்தா லறிகிறதோ வெனின்?

விடை:- சுரோத்திரம். சப்தத்தைப் பிரத்தியக்ஷமாக அறியும் போது, அந்தக் கரணத்தின் ஆபாச சகித விருத்தி, சுரோத்திர மூல மாக வெளிப்பட்டுச் சப்த சமாநாகாரத்தை யடைகிறது. அதில், விருத்தி பாகம், சப்தத்தின் ஆவரணத்தைப் பங்கம் செய்கிறது; ஆபாச பாகம், சப்தத்தைப் பிரகாசிப்பிக்கிறது; ஆதலால், தனியே யறிகிற தில்லை; ஆபாச சகித விருத்தி சகாயத்தா லறிகிற தென அறிக (251)

252. வினா:- சுரோத்திரம் ஆகாய மல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- ஆகாய குண மாகிய சப்தத்தை யன்றி, மற்றைப் பூதங்களின் குணங்க ளாகிய பரிச ரூப இரத கந்தங்களை யறியாமையால் அல்ல வென அறிக, (252)

(பதம்) துவக்கு —

(பொருள்) துவக் கிந்திரிய மானது.

(பதம்) வாயுவி னம்ச மானபடியால்—

(பொருள்) வாயு பூத சத்துவாம்ச மானமை யால்,

(பதம்) வாயுவின் குண மான—

(பொருள்) வாயு பூதத்தின் சுபாவ குண மாகிய,

(பதம்) பரிசத்தை மாத்திர மறியும்

(பொருள்) ஊறை (ஊறு என்னும் பரிசத்தை) மாத்திர மறியும்.

253. வினா:– பரிசங்க, ளெத்தனை வித மெனின்?

விடை:– வெம்மை தண்மை மென்மை வன்மை திண்மை நொய்மை *சீர்மை † சர்ச்சரை யென எட்டு வித மாம். இவைகளும் தொழிற் பேதத்தால் ஒவ்வொன்றும் ஊன்றல் கட்டல் குத்தல் தடவல் தட்டல் தீண்டல் பற்றல் வெட்ட லென எட்டு வித மாகு மென அறிக. (253)

254. வினா:– இப் பரிச பேதங்களைத் துவக்குத் தனியே யறிகிறதோ, அல்லது, மற்றையவைகளின் சகாயத்தா லறிகிறதோ, வெனின்?

விடை:- துவக்குப் பரிச குணத்தையும், அதற் காசிரய மான கடாதிகளையும், பிரத்தியக்ஷ மாக அறியும் போது, அந்தக் கரணத்தின் ஆபாச சகித விருத்தி சரீரத்தை விட்டு வெளியே செல்லுகிற

---

*சீர்மை-என்பது ஒ ப் ப ர வு, அதாவது, நிலமுதலிய வற்றின் சமத்துவம்.

†சர்ச்சரை யென்பது-ஒப்பர வின்மை, அதாவது, நில முத லியவற்றின் சமத்துவ மின்மை, அல்லது, சுரசுரப்பு.

தில்லை; சரீர மான கோளகத் திலேயே யிருக்கிறது; ஆனால், சரீர மான கோளகத்துடன் சம்பந்தப்பட்ட கடாதி விஷயாகாரத்துக்கும். விஷயங்களை யாசிரயித் திருக்கும் கடிநாதி பரிசாகாரத்துக்கும் சமாநா காரத்தை யடைகிறது. அதில், விருத்தி பாகம், விஷயம் விஷயத்தை யாசிரயித்த பரிசங்களின் ஆவரணத்தைப் பங்கஞ் செய்கிறது. ஆபாச பாகம், விஷயத்தையும் விஷயத்தை யாசிரயித்திருக்கும் கடிநாதி பரிசத்தையும் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால், த்னியே யறிகிற தில்லை; ஆபாச சகித விருத்தியின் சகாயத்தா லறிகிற தென அறிக. (254)

255. வினு:- துவக்கு, வாயு வல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- வாயுவின் குண மான பரிசத்தை யன்றி, மற்றைப் பூதங்களின் குணங்க ளாகிய சப்த ரூப இரத கந்தங்களி லொன்றையு மறியாமையால், அல்ல வென் அறிக. (255)

(பதம்) சட்சு—

(பொருள்) சட்சு விந்திரிய மானது,

(பதம்) அக்கிநியி னம்ச மான படியால்—

(பொருள்) அக்கிநி பூத சத்துவாம்ச மானமையால்,

(பதம்) அக்கிநியின் குண மான—

(பொருள்) அக்கிநி பூதத்தின் சுபாவ குண மாகிய,

(பதம்) ரூபத்தை மாத்திர மறியும்—

(பொருள்) உருவத்தை மாத்திர மறியும்.

261. வினு:- சிங்நுவை இந்திரியம், அப்பு வல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- அப்புவின் குண மான இரதத்தையன்றி, மற்றைப் பூதங்களின் குணங்க ளாகிய சப்த பரிச ரூப கந்தங்களை யறியாமையால் அல்ல வென அறிக. (261)

(பதம்) ஆக்கிராணம்—

(பொருள்) ஆக்கிராணேந்திரியமானது,

(பதம்) பிருதிவியி னம்ஸ மானபடியால்—

(பொருள்) பிருதிவி பூத சத்துவாம்ச மானமையால்,

(பதம்) பிருதிவியின் குண மான—

(பொருள்) பிருதிவி பூதத்தின் சுபாவ குண மாகிய,

(பதம்) கந்தத்தை மாத்திர மறியும்—

(பொருள்) வாசனையை மாத்திர மறியும்,

262. வினு:- கந்தங்க ளெத்தனை விதமா மெனின்?

விடை:- நற் கந்த துர்க் கந்தங்க ளென இரண்டுவித மாம். இவ்விரண்டில் மல்லிகை-முல்லை பாரிசாதம் சண்பகம் பங்கஜம்-பாதிரி யாதிய மலர்களினும், வெட்டி வேர், விலாமிச்சை வேர், மருக் கொழுந்து, பன்னீர், அத்தர், புனுகு, சவ்வாது, சந்தந மாதிகளினும் உள்ள கந்தங்கள், நற் கந்தங்க ளாகும். மல மூத்திர சாக்கடைநீராதிகளினும், மது மாமிசப் பிரேதாதிகளினு முள்ள கந்தங்கள், துர்க் கந்தங்க ளாகும். இவைகளும், கலப்பினுனும், உபாதி பேதங்களினுனும் பல விதமாகு மென அறிக. (262)

(பதம்) அப்புவி னம்ச மானபடியால்—

(பொருள்) அப்புப்பூத சத்துவாம்ச மானமையால்,

(பதம்) அப்புவின் குண மான—

(பொருள்) அப்புப் பூதத்தின் சுபாவ குண மாகிய,

(பதம்) இரசத்தை மாத்திர மறியும்—

(பொருள்) சுவையை மாத்திர மறியும்.

259. வினு:– இரதங்க ளெத்தனை வித மெனின்?

விடை:– உவர்ப்பு கைப்பு கார்ப்பு துவர்ப்பு புளிப்பு தித்திப்பு என ஆறு வித மாம். இவைகளும், கலப்பினுனும், உபாதி பேதத்தினுனும், பல விதமா மென அறிக. (259)

260. வினு:– இவ் விரத பேதங்களைச் சிங்ஙுவை தனியே யறிகிறதோ, அல்லது, மற்றையவைகளின் சகாயத்தா லறிகிறதோ வெனின்?

விடை:- சிங்ஙுவை யிந்திரியம், இரதங்களைப் பிரத்தியக்ஷ மாக அறியும் போது, அந்தக் கரணத்தின் ஆபாச சகித விருத்தி, சிங்ஙுவை யாகிற கோளகத்தை விட்டு வெளியே செல்லுகிற தில்லை. ஆனுல், சிங்ஙுவையுடன் சம்பந்தப்பட்ட இரதங்கட்குச் சமாநாகாரத்தை யடைகிறது. அதில், விருத்தி பாகம், இரதங்களின் ஆவரணத்தைப் பங்கம் செய்கிறது. ஆபாச பாகம், இரத விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிறது. ஆதலால், தனியே யறிகிறதில்லை. ஆபாச சகித விருத்தியின் சகாயத்தா லறிகிற தென அறிக. (260)

261. வினு:- சிங்நுவை இந்திரியம், அப்பு வல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- அப்புவின் குண மான இரதத்தையன்றி, மற்றைப் பூதங்களின் குணங்க ளாகிய சப்த பரிச ரூப கந்தங்களை யறியாமையால் அல்ல வென அறிக. (261)

(பதம்) ஆக்கிராணம்—

(பொருள்) ஆக்கிராணேந்திரியமானது,

(பதம்) பிருதிவியி னம்ஸ மானபடியால்—

(பொருள்) பிருதிவி பூத சத்துவாம்ச மானமையால்,

(பதம்) பிருதிவியின் குண மான—

(பொருள்) பிருதிவி பூதத்தின் சுபாவ குண மாகிய,

(பதம்) கந்தத்தை மாத்திர மறியும்—

(பொருள்) வாசனையை மாத்திர மறியும்,

262. வினு:- கந்தங்க ளெத்தனை விதமா மெனின்?

விடை:- நற் கந்த துர்க் கந்தங்க ளென இரண்டுவித மாம். இவ்விரண்டில் மல்லிகை முல்லை பாரிசாதம் சண்பகம் பங்கஜம் பாதிரி யாதிய மலர்களினும், வெட்டி வேர், விலாமிச்சை வேர், மருக் கொழுந்து, பன்னீர், அத்தர், புனுகு, சவ்வாது, சந்தந மாதிகளினும் உள்ள கந்தங்கள், நற் கந்தங்க ளாகும். மல மூத்திர சாக்கடைநீ ராதிகளினும், மது மாமிசப் பிரேதாதிகளினு முள்ள கந்தங்கள், துர்க் கந்தங்க ளாகும். இவைகளும், கலப்பினுனும், உபாதி பேதங்களினுனும் பல விதமாகு மென அறிக. (262)

263. வினு:- இக் கந்த பேதங்களை ஆக்கிராணம், தனியே யறிகிறதோ, மற்றையவைகளின் சகாயத்தா லறிகிறதோ வெனின்?

விடை:- கிராணேந்திரியம், கந்தங்களைப் பிரத்தியக்ஷமாக அறியும் போது, அந்தக் கரணத்தின் ஆபாச சகித விருத்தி, நாசி யாகிற கோளகத்தி லிருந்து, நாசி யாகிற, கோளகத்துடன் சம்பந்தப் படும் புட்பாதிகளின் கந்தங்கட்குச் சமாந மான ஆகாரத்தை யடைகிறது. அதில் விருத்தி பாகம், கந்தத்தின் ஆவரணத்தைப் பங்கஞ் செய்கிறது. ஆபாச பாகம், கந்தத்தைப் பிரகாசிக்கிறது. ஆதலால், தனியே யறிகிற தில்லை. ஆபாச சகித விருத்தியின் சகாயத்தா லறிகிற தென அறிக. (263)

264. வினு:- ஆக்கிராணேந்திரியம் பிருதிவி யல்லாத மற்றைப் பூதாம்ஸங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- பிருதிவியின் குண மான கந்தத்தை யன்றி, மற்றைப் பூதங்களின் குணங்க ளாகிய சப்த பரிச ரூப இரதங்களி லொன்றையு மறியாமையால், அல்ல வென அறிக, (264)

265. வினு:- இவ்வைந் திந்திரியங்களும் பாஹிய விஷயங்களை யறிவது போல, ஆந்தர விஷயங்களையு மறிவனவாமோ வெனின்?

விடை:- செவிகள் மூடிய போது, உள் ளிரைச்சலும், அந்நாதிகளைப் புசிக்கும் போது, சீதோஷ்ணங்களும், கண்களை மூடிய போது, உள் ளிருட் டாதிய வருணங்களும், வாந்தி பண்ணும் போது, புளிப் பாதிய இரதங்களும், ஏப்பமிடும் போது, நற் கந்த துர்க் கந்தங்களும் அறியப்படுகின்றமையால், ஆந்தர விஷயங்களையும் அறிவனவா மென அறிக. (265)

266. வினா:-இவ் விந்திரியங்கள் *சமட்டி யல்லவோ வெனின் ?

விடை:- ஒன் றறிந்ததை மற்றைய நான்கு மறியாமலும், ஒன்று கெட்டால் மற்றைய நான்குங் கெடாமலுமிருத்தலால் அல்ல வென அறிக. (266)

267. வினா:— ஞானேந்திரியங்கள் பூதங்களின் இராஜ தகுணாம்சங்க ளல்லவோ வெனின்?

விடை:— வசநாதிக் கிரியா சாதநங்க ளாக இரா மல், ஞாந சாதநங்க ளாக இருத்தலின், அல்ல வென அறிக. (267)

268. வினா:— இவ் விந்திரியங்கட்கு, முறையே சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராணம் என்னும் பெயர்கள் வந்தது எதனா லெனின்?

விடை:— சுரோத்திர மாகிய காது, துவக் காகிய தோல், சட்சு வாகிய கண், சிங்நுவை யாகிய நா, ஆக்கிராண மாகிய மூக்கு என்னும் ஐந் துறுப்புக்களை யும் ஐந்திந்திரியங்களும் இட மாகப் பொருந்தி யிருத்தலால், இவைகட்கு இடவாகு பெய ராக முறையே அப்பெயர்கள் வந்தன வென அறிக. (268)

269. வினா:- செவி யாதி ஐந் துறுப்புகளும், ஐந் திந்திரியங்க ளல்லவோ வெனின்?

விடை:- மரண மூர்ச்சை சமாதிகளில், இவ் வுறுப் புக்க ளிருந்தும், சப்தாதி விஷயங்களை யறியாமை யினாலும், இவைகள், ஓரிந்திரியத்துக்கு விஷய மாகிய தூல சரீரத்தின் அவயவங்க ளானமையினா னும் அல்ல வென அறிக. (269)

270. வினா:- பூதங்களின் சத்துவ குணாம்ச மான அந்தக் கரணத்தில், சேதநப் பிரதிவிம்பந் தோன்றி

* பகுக்கத் தக்கதா யுள்ள கூட்டம்— சமட்டி.

யது போலச், சத்துவ குணம்ச மான ஞாநேந்திரியங் களினுந் தோன்றுதது எதனு லெனின்?

விடை:- பல சலாணுக்கள் சேர்ந் திருப்ப தாகிய கடசலத்திற் சந்திரப் பிரதிவிம்பந் தோன்றுதிறது. அணு அணுவாகப் பிரிவுபட்டிராநின்ற சலாணுக்க ளாகிய பணியாதிகளில் பிரதிவிம்பம் அணு மாத்திர மாக இருக்கினும், தோன்றுகிற தில்லை. அது போல, அந்தக் கரணமும், ஞாநேந்திரியங்களும், சத்துவாம் சங்க ளாக இருக்கினும், அவ் வம்சங்கள், சமட்டி யாகச் சேர்ந்திருப்பது அந்தக் கரண மானமையால், அதிற் சேதநப் பிரதிவிம்பந் தோன்றுகிறது. சமட்டி யாகச் சேராமல், வியட்டி யாகப் பிரி வுற்றிருப்பவை, ஞாநேந்திரியங்க ளானமையால், அவைகளிற் சேதநப் பிரதிவிம்பங்கள், அற்ப மாக இருக்கின்றன. ஆதலால், தோன்ற வில்லை யென அறிக. (270)

271. வின:- ஞாநேந்திரியங்களிற் சேதநப் பிரதிபிம் பங்கள் அற்ப மாக இருக்கினும், அப் பிரதிபிம்பங் களுக்குத் தக்க தாக அதிட்டாந சேதநப் பிரகாச சம்பந்தமும், விஷயப் பிரஞ்ஞை, விருப்பு, வெறுப்பு, கருத்துருத்துவாதி ஜீவத்துவம், பந்த மோக்ஷ மாதி களும் உள்ளன வாகும். ஆதலால், அவைகளையும் ஜீவர்க ளாகக் கொண்டு, ஒரு சரீரத்தில் ஆறு ஜீவர்க ளிருக்கிற தாகக் கூறுத தென்னை யெனின்?

விடை:- ஞாநேந்திரியங்களில் சேதநத்தின் ஆபாசங்க ளுள்ளன வாயினும், எந்த ஆபாசத்துக்கு விருத்தி சம்பந்த முண்டோ, அதற்கு, விஷயப் பிரஞ் ஞையாதிகளுண்டாகும். எந்த ஆபாசத்துக்கு விருத்தி சம்பந்த மில்லையோ, அதற்கு விஷயப் பிரஞ்ஞை யாதிக ளுண்டாகாவாம். ஆதலின் அந்தக் கரணத் துக்கு விருத்தி ரூப பரிணம யோக்கியதை யிருக் கிறது போல, ஞாநேந்திரியங்கட் கில்லாமையால்,

அவைகளி லுள்ள, ஆபாசங்களுக்கு விஷயப் பிரஞ்ஞை, விருப்பு, வெறுப்பு, கருத்திருத்துவ மாதிய ஜீவத்துவம், பந்த மோக்ஷங்க ளுண்டாக வில்லை. ஆனது பற்றி, அவைகளைச் சீவர்க ளாகக் கூறவில்லை யென அறிக. (271)

272. வினு:– அந்தக் கரணமும், ஞானேந்திரியங்-களும், பூதங்களின் சத்துவாம்சங்க ளாகவே யிருப்பது மன்றிச் சேதநப் பிரதிவிம்பங்களை யுடையன வாகவு மிருக்க, விருத்தி ரூப பரிணமங்களை யடைதற் கான யோக்கியதை, அந்தக் கரணத்துக் கிருப்பதும், ஞானேந்திரியங்கட் கில்லாததும் எதனு லெனின்?

விடை:– பூதங்களின் சூட்சும மாகிய தாமதாம் சங்கள் ஐந்தும் பஞ்சீகரண முற்று அதாவது கலப் புற்று ஒன்று சேர்ந்தமை பற்றி, யவைகளுக்குத் தூலிகரிக்கும் யோக்கியதை யுண்டாகியது போல; பூதங்களின் சத்துவாம்சங்கள் ஐந்தும் கலப் புற்று ஒன்று சேர்ந்தது அந்தக் கரண மானமை பற்றி, அதற்கு விருத்தி ரூப பரிணம யோக்கியதை யுண்டா கியது. ஞானேந்திரியங்கள் ஒன்று சேராமல், வேறு வே ருக இருப்பன, வானமை பற்றி, அவைகளுக்கு விருத்தி ரூப பரிணம யோக்கியதை யுண்டாக வில்லை யென அறிக. (272)

273. வினு:– ஞானேந்திரியங்கள் ஐந்தினிடத்தும், விஷயக் கிரகணத்துவம் காணப்படுகிறதே யெனின்?

விடை:– அதுவும் சத்துவாம்சச் சேர்க்கை யான அந்தக் கரண விருத்தி சம்பந்தித்த போது, அதன் சேர்க்கை விசேடத்தாற் காணப்படுமே யன்றி, மற்றைப் போது காணப்படா தென அறிக. (273)

274. வினு:- அற்றேல், சப்த பரிச மாதிய விஷய ஞானம், கேவலம் அந்தக் கரண விருத்திக்கே யுண்டு, இந்திரியங்களுக் கில்லை யெனலா மெனின்?

விடை: -அங்ஙன மாயின், அந்தக் கரண விருத்தி இந்திரிய சகாய மின்றி விஷயங்களை யறிய வேண்டும். அல்லது, ஓ ரிந்திரியத்தைப் பற்றிக் கொண்டாவது, ஐந்து விடயங்களையு மறிய வேண்டும். அங்ஙன மின்றி, ஓ ரோரிந்திரியத்தைப் பற்றிக் கொண்டு ஒ ரோ ர் விடயத்தை மாத்திர மறிவது அநுபவ மானமையினானும், சுருதிகளில், இவ் விந்திரியங்கட்கு ஞானேந்திரியங்க ளெனப் பெயர் கூறுகின்றமையினாலும், விடய ஞானம் விருத்தி சம்பந் தத்தால் இவ்விந்திரியங்கட்குச் சொற்ப முண் டென்றே சொல்ல வேண்டும். விருத்திக்கு மாத்திர முண் டென்று சொல்லப் படாதென அறிக. (274)

275. வினா:- விடயங்களை, இந்திரியங்ளும், அந்தக் கரண விருத்தியுஞ், சேர்ந்து மாத்திர மறிகின்றன வோ, இவைகளோடு வேறு தத்துவங்களுஞ் சேர்ந் தறிகின்றனவோ வெனின்?

விடை:- இந்திரியங்களும், அந்தக் கரண விருத்தியும், விருத்தியி லுள்ள ஆபாசனும், இவை களுக் கதிட்டாந மாகிய சாட்சியுஞ் சேர்ந் தறிகிற தென அறிக. (275)

276. வினா:- அற்றேல், ஓர் விடயத்தை யறியும் போது, நிகழ்ப்படும் இந்திரியத்தின் செயல் யாது? அந்தக் கரண விருத்தியின் செயல் யாது? அதி லுள்ள ஆபாசன் செயல் யாது? இவைகளுக் கதிட்டாந மாய், அந்தக் கரண விருத்தியிலாரூடமா யுள்ள சாட்சியின் செயல் யா தெனின்?

விடை:- விடயத்தின் பொருட் டன்மை தோன்றாத, பேதத் தோற்றரவை மாத்திரம் நிகழச் செய்வது, இந்திரியத்தின் செயல்; விஷயத்தை மறைத் திருந்த ஆவரணத்தைப் பங்கஞ் செய்வது,

அந்தக் கரண விருத்தியின் செயல்; ஆவரண பங்க மாகிய விஷயத்தை லோகாந்த குந்தம் போல, விருத்தியில் நின்றும் இன்னதென்னச் சுட்டுதல்; ஆபாச ஞகிய ஜீவன் செயல்; இவைகளை நிருவி காரமா யிருந்து சூரியனைப் போல், விளக்கி வைப்பது சாட்சியின் செய லென அறிக. (276)

277. வினு:- இவ் விந்திரியங்கட்கு அதிதேவதைக ளெவை யெனின்?

விடை:- சுரோத்திரத்துக்குத், திக்கும், துவக்குக்கு, வாயுவும், சட்சுவுக்குச், சூரியனும், சிங்ஙு வைக்கு, வருணனும், ஆக்கிராணத்துக்கு, அசுவிநி குமாரரும் அதிதேவதைக ளென அறிக. (277)

(பதம்) இப்படி ஐந்தும் ஒன்ருேடொன்று கூடாதபடியால், ஒன்று மற்ருென்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக் கரணம் ஐந்தும், ஒன்ருகக் கூடிய தானமையால், ஐந் திந்திரியங் களினுலும், ஐந்து விடயங்களையும் அறியும். அந்தக் கரணம் (5) ஞாநேந் திரியம் (5) ஆகிய பத்தும் சத்துவாம்ச மானபடியால் ஞாந சாதநம் ஆயின-

(பொருள்) வெளி.

## (நூல் பிரிவு - 14.)

பின்னும், ஆகாய மாதிய ஐந்து பூதங்களி னிராஜ தாம்சங்களிற், பூதத்துக்கோரொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைக்கப்பட்டவை, வியாநாதி பஞ்ச வாயுக்க ளாம். இவைகளில், வியாந வாயு, ஆகாயத்தினம்ச மானபடியால், ஆகாயத்தைப்

போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராண வாயு, வாயுவி னம்ச மானபடியால் வாயுவைப் போல, இருதயத்தி லிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். அபாந வாயு, அக்கிநியி னம்ச மானபடியால், அக்கிநியைப் போல, சாடராக்கிநியாக உஷ்ணித்துக் கொண்டு, குதத்தைப் பற்றிநின்று உண்ட அந்த பாநாதிகளைச் சீரணிப்பிக்கும், சமாந வாயு, அப்புவி னம்ச மானபடியால், சரீர நடுவான நாபி ஸ்தாநத்தி னின்று, உண்ட அந்த ரசங்களை அப்புவைப் போல, இழுக்கும். உதாந வாயு, பிருதிவியி னம்சமான படியால், கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப் போல கடிநமாக நின்று உண்ட அந்த பாநாதிகளைக் கடையும். இந்த ஐந்து வாயுக்களையு மல்லாமல், வாந்திபண்ணுவிக்கின்றது, நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது, கூர்மனென்றும், குறு குறுத்துத் தும்முவிக்கின்றது, கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளுவிக்கின்றது, தேவ தத்தனென்றும், வீங்குவிக்கின்றது, தநஞ்சயனென்றும், வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவர். இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் வேறல்ல.

(பதம்) பின்னும் ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சங்களில் பூதத்துக்கு ஓரொரு மாத்திரையெடுத்துஒன்றுகக் கூட்டி வைக்கப்பட்டவை வியாநாதி பஞ்ச வாயுக்கள் ஆம்—

(பொருள்) வெளி.

(பதம்) இவைகளில், வியாந வாயு—

(பொருள்) இப் பஞ்ச வாயுக்களில், வியாந வாயுவானது,

(பதம்) ஆகாயத்தி னம்ச மானபடியால்—

(பொருள்) ஆகாய பூத விராஜதாம்ச மானமை யால்,

(பதம்) ஆகாயத்தைப் போல—

(பொருள்) ஆகாய பூதம், சகல பூதங்களினும் வியாபித்திருப்பது போல,

(பதம்) சர்வாங்கமும்—

(பொருள்) சிர சரணுதியசகல அங்கங்களினும்,

(பதம்) வியாபித்திருக்கும்—

(பொருள்) வியாபித்துத் தாங்கிக்கொண்டிருக் கும்.

278 வினு:- இவ் வாயுவுக்கு, வியாந னெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:-வியாந மென்பது, நான்கு முழ அளவின் பெயர். இவ் வாயு நான்கு முழ அள வாகச் சரீரத்தில் வியாபித்திருப்பது பற்றி, இதற்கு அளவையாகு பெய ராக, வியாந னெனப் பெயர் வந்த தென அறிக. (278)

279. வினு:- வியாந வாயு வல்லாத மற்றைய வாயுக்கள், சரீரத்தைத் தாங்காவோ வெனின்?

விடை:- புகைக் கூண்டில் நிரம்பிய புகை, கூண்டைத் தூக்கும், அல்லது, தாங்குமே யன்றி, குறைவாயுள்ள புகையால், தூக்கவும், அல்லது, தாங்கவு மாகாதது போலச், சரீர முழுவதும் வியாபித்து நிரம்பி யுள்ள வியாந வாயு, சரீரத்தைத் தாங்குமே யன்றி, சரீரத்தில் ஏக தேசமாகிய இருதய ஸ்தாநம், குத ஸ்தாநம், நாபி ஸ்தாநம் கண்ட ஸ்தாநங்களிற், பிந்ந பிந்ந மாகக் குறைவுற் றிருப் பவைகள், மற்றைய வாயுக்க ளானமையால், அவைகள், சரீரத்தைத் தாங்கா வென அறிக. (279)

280. வினா:- வியாந வாயு, ஆகாய மல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- இவ் வாயுவினிடத்து ஆகாயத்தைப் போல சரீரத்தில் வியாபித்துத் தாங்குத லாகிய கிரியை யன்றி மற்றைப் பூதங்களுக் குள்ள, சலித்தல், தகித்தல், இழுத்தல், கடிநமாக நின்று கடைதல்க ளாகிய கிரியைகளி லொன்றேனுங் காணப்படாமை யின் அல்ல வென அறிக (280)

(பதம்) பிராண வாயு—
(பொருள்) பிராண வாயு வானது,
(பதம்) வாயுவி னம்ச மானபடியால்-
(பொருள்) வாயு பூத விராஜதாம்ச மானமை யால்,
(பதம்) வாயுவைப் போல—
(பொருள்) வாயு சதா சலித்துக்கொண் டிருப்பது போல,
(பதம்) இருதயத்தி லிருந்து—
(பொருள்) இருதய ஸ்தாநத்தி லிருந்து,
(பதம்) நாசிகாதி பரியந்தம்—
(பொருள்) மூக்கி னடிவரையில்,
(பதம்) அலையும்—
(பொருள்) சலித்துக்கொண் டிருக்கும்.

281. வினா:- இவ் வாயுவுக்குப், பிராண வாயு வெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:- பிராண மென்பது, பலத்தின் பெயர். இவ்வாயு, சரீரத்துக்குப் பலத்தைச் செய்துகொண்டு, பலரூபமா யிருப்பது பற்றி, இதற்குப் புண் பாகு

பெய ராகப் பிராண னென்னப் பெயர் வந்ததென அறிக. (281)

282. வினு:- பிராண வாயு, வாயு வல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன்றல்லவோ வெனின்?

விடை:- இவ் வாயுவினிடத்தில், வாயுவின் கிரியை யாகிய சலித்த லன்றி, மற்றைப் பூதங்களுக் குள்ள, தாங்கல், தகித்தல், இழுத்தல், கடைதல்க ளாகிய கிரியைகள் காணப்படாமையால், அல்லவென அறிக. (282)

(பதம்) அபாந வாயு—
(பொருள்) அபாந வாயு வானது,

(பதம்) அக்கிநியி னம்ச மானபடியால்—
(பொருள்) அக்கிநி பூத விராஜதாம்ச மானமை யால்,

(பதம்) அக்கிநியைப் போல—
(பொருள்) அக்கிநி கிட்டியவைகளைத் தகிப்பது போல,

(பதம்) சாடராக்கிநி யாக—
(பொருள்) உதராக்கிநி (மூலாக்கிநி)யாக,

(பதம்) உஷ்ணித்துக் கொண்டு—
(பொருள்) உஷ்ணகார மாகி,

(பதம்) குதத்தைப் பற்றி நின்று—
(பொருள்) மல வாயிலைப் பொருந்திநின்று,

(பதம்) உண்ட அந்நபாநாதிகளை—
(பொருள்) புசித்த அந்நம்பாநம்முதலியவற்றை,

(பதம்) சீரணிப்பிக்கும்—

(பொருள்) சமிப்பிக்கும்.

283. விஞ:- இவ் வாயுவுக்கு, அபாந வாயு வெனும் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை:- அபாந மென்பது, குதம். குத மாகிய அபாந ஸ்தாநத்தைப் பொருந்தி யிருத்தலா லிதற்கு, இடவாகு பெய ராக அப் பெயர் வந்த தென அறிக. (283)

284. விஞ:- அபாந வாயு, அக்கிநி யல்லாது, மற்றைப் பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:- இவ் வாயுவினிடத்து அக்கிநியைப் போலத் தகித்த லன்றி, மற்றைப் பூதங்களுக் குள்ள, தாங்கல், சலித்தல், இழுத்தல், கடைதல்க ளாகிய கிரியைகள் காணப்படாமையின் அல்ல வென அறிக. (284)

(பதம்) சமாந வாயு –

(பொருள்) சமாந வாயு வானது,

(பதம்) அப்புவி னம்ச மானபடியால்—

(பொருள்) அப்பு பூத விராஜதாம்ச மானமை யால்,

(பதம்) சரீர நடு வான—

(பொருள்) சரீர மத்தி யாகிய,

(பதம்) நாபி ஸ்தாநத்தினின்று—

(பொருள்) உந்தி யாகிய விடத்தி லிருந்து,

(பதம்) உண்ட அந்ந ரசங்களை—

(பொருள்) புசிக்கப்பட்ட அந்த சாரங்களை
(பதம்) அப்புவைப் போல—
(பொருள்) அப்பு பதார்த்தங்களை யிழுப்பது போல,
(பதம்) இழுக்கும்—
(பொருள்) சகல நாடிகளினு மிழுத்து சம்படுத்தும்.

285. வினா:- இவ் வாயுவுக்குச், சமாந வாயு வெனப் பெயர் வந்தது எதனு லெனின்?

விடை: சமாந மென்பது ஒப்பு. (அதாவது சமம்) புசிக்கப்பட்ட, பக்ஷிய, போஜ்ஜிய, சோஷிய, லேகிய ரூபமான நாலு வகை யாஹாரங்களையும், சாடராக்கி நியினுல் பாகஞ் செய்த பின், அவைகளின் தூல பாக மாகிய மலசலங்களை, மல சலக் குழியிற் றள்ளி, சூட்சும மான ரச பாகங்களைச் சகல அவயவங் களினும், சகல நாடிகளினும், இழுத்துச் சமப் படுத்துவ தாகிய தொழில் பற்றி, இதற்குத் தொழி லாகு பெயராக, அப் பெயர் வந்த தென அறிக. (285)

286. வினா:- பக்ஷிய போஜ்ஜிய சோஷிய லேகிய மென்னும் நால்வகை யாஹாரங்க ளெவை யெனின்?

விடை:- பற்களாற் கடித்துச் சாப்பிடத் தக்க, காய் கிழங்கு முதலிய வஸ்துக்கள், பக்ஷிய மென்னப் படும். நாக்கினுல் மென்று குதப்பிச் சாப்பிடத் தக்க, அந்ந முதலிய வஸ்துக்கள், போஜ்ஜிய மென்னப்படும் வாயினு லுறிஞ்சிச் சாப்பிடத் தக்க, பாயசம் பால் முதலிய வஸ்துக்கள், சோஷிய மென்னப்படும். நாக்கினுல் நக்கி, அல்லது, தடவிச் சாப்பிடத் தக்க, துவையல் முதலிய வஸ்துக்கள் லேகிய மென்னப்படு மென அறிக (286)

287. வினா:- சமாந வாயு, அப்பு வல்லாத மற்றைப் பூதாம்சங்களி லொன்றல்லவோ வெனின்?

விடை:- இவ் வாயுவினிடத்து அப்புவைப் போலிழுத்த லன்றி, மற்றைப் பூதங்களுக் குள்ள, தாங்கல், சலித்தல், தகித்தல், கடைதல்க ளாகிய கிரியைகள் காணப்படாமையால் அல்ல வென அறிக. (287)

(பதம்) உதாந வாயு—
(பொருள்) உதாந வாயு வானது,
(பதம்) பிருதிவியின் அம்ச மானபடியால்—
(பொருள்) பிருதிவி பூத விராஜதாம்ச மானமையால்,
(பதம்) கண்டத்தைப் பற்றி—
(பொருள்) கண்ட ஸ்தாநத்தைப் பொருந்திப்,
(பதம்) பிருதிவியைப் போல—
(பொருள்) பிருதிவி கடிநமா யிருப்பது போல,
(பதம்) கடிந மாக நின்று—
(பொருள்) கடுமை யாக இருந்து,
(பதம்) உண்ட அந்ந பாநாதிகளை—
(பொருள்) புசிக்கப்பட்ட அந்ந பாந முதலியவைகளை,
(பதம்) கடையும்-
(பொருள்) கடைந்து தள்ளும்.

288. வினா:- இவ் வாயுவுக்கு உதாந மெனப் பெயர் வந்தது எதனா லெனின்?

விடை:- *உத்தாந மென்பது இசைப்பு (அதாவது

*உத்தாநம் என்பது—உதாந மென மருவியது.

கலப்பு) உண்ட அந்நபாநாதிகளைக் கடைந்து கலத்தலும், சுழுத்தியில், சகல இந்திரியங்களையும் அஞ்ஞாநத்திற் கலந்தொடுங்கச் செய்தலும்; சாக்கிரத்தில் அவைகளைத் தத்தமிடங்களிற் சேர்த்து நிலைபெறச் செய்தலும்; இஃதன்றி, உத்தாநமென்பது, எழும்புதல் மரண காலத்தில் சகல இந்திரியங்களையும், சேர்த்துக் கொண்டு லோகாந்திரங்களையடைதற் கெழும்புதலு மாகிய தொழில்களுடைய தானமையின், இதற்குத் தொழிலாகு பெயராக அப் பெயர் வந்ததென அறிக. (லகு (சுருக்க) வாசு தேவமனனம் 8ஆம் வருணகம்) (288)

289. வினு:- உதாந வாயு, பிருதிவி யல்லாத மற்றைய பூதாம்சங்களி லொன் றல்லவோ வெனின்?

விடை:– இவ் வாயுவினிடத்தில் பிருதிவியைப் போல், கடிந மாக நின்று கடைதலன்றி, மற்றைப் பூதங்களுக்குள்ள, தாங்கல் சலித்தல் தகித்தல் இழுத்தல்க ளாகிய கிரியைகள் காணப் படாமையால், அல்ல வென அறிக. (289)

290. வினு:- இப் பஞ்ச வாயுக்களும், இந்திரியங்கள் போல, வியட்டி யல்லவோ வெனின்?

விடை:- இந்திரியங்கள், ஒன்று கெட்டு, மற் றொன் றிருத்தல் போல, வாயுக்கள் ஒன்று கெட்டு, மற் றொன் றிராமையால் வியட்டி யல்ல வென அறிக. (290)

291. வினு:- அந்தக் கரணமும், வியாநாதி வாயுக்களும், பஞ்ச பூதங்களின் காரிய மாகவும், சமட்டி யாகவு மிருக்க, அந்தக் கரணத்திற் பிரதிபலித்த சேதநம், வியாநாதி வாயுக்களில் பிரதிபலிக்காதது எதனுலெனின்?

விடை:—தருப்பணமும், ஓடும், மண்ணின் காரியமாகவும், பல அணுக்கள் சேர்ந்த தாகவு மிருக்கினும், சூரியன் பிரதிபலித்தற்குத் தருப்பணம், ஸ்வச்சத் திரவிய மானமையால், யோக்கியதை யுள்ளதும், ஓடு மலிநத்திரவிய மானமையால், யோக்கியதை யில்லதுமா யிருத்தல் போல, அந்தக் கரணமும், வியாநாதி வாயுக்களும், பஞ்ச பூத காரியங்களாகவும், சமட்டியாகவு மிருக்கினும், சேதநம் பிரதிபலித்தற்கு, அந்தக் கரணம் நின்மல மாகியசத்துவகுணம்ச மானமையால், யோக்கியதை யுள்ளதும், வியாநாதி வாயுக்கள், மலிந மாகிய இராஜதாம்ச மானமையால், யோக்கியதை யில்லனவு மானமையினென அறிக. (291)

292. வினா:— இப் பஞ்ச வாயுக்களுக்கும், அதிதேவதைகளெவை யெனின்?

விடை:—வியாநனுக்கு, விசுவ யோநியும், பிராணனுக்கு, விசிஷ்டனும், அபாநனுக்கு, விசுவ கர்த்தாவும், சமாநனுக்குச், சயனும், உதாநனுக்கு, அசனும், அதிதேவதைகளென அறிக. (292)

(பதம்) இந்த ஐந்து வாயுக்களையும் அல்லாமல், வாந்தி பண்ணுவிக்கின்றது, நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது, கூர்மனென்றும், குறு குறுத்துத் தும்முவிக்கின்றது, கிரிகரனென்றும், கொட்டாவி கொள்ளுவிக்கின்றது, தேவ தத்தனென்றும், வீங்குவிக்கின்றது, தநஞ்சயனென்றும், வேறே ஐந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவர். இவ் வைந்தும் பிராணனுடைய தொழி லானபடியால் வே றல்ல.

(பொருள்) வெளி.

(நூல் பிரிவு – 15.)

பின்னும் ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சத்திற், பூதத்துக் கோ ரொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைக்கப்பட்டவை, வாக்காதி கன்மேந் திரியங்க ளென்று சொல்லப்படும். இவைகளில், ஆகாயத்தினிட மாக வாக்கு வச நிக்கும். வாயுவி னிட மாகப் பாணி யிடுத லேற்றல் செய்யும். அக்கிநியி னிட மாகப் பாதம் நடக்கும். அப்புவி னிட மாகப் பாயுரு மல சலங்களை வெளியிற் றள்ளும். பிருதிவியி னிட மாக வுபத்தம் சுகத்தைப் பண்ணும். இவ் வைந்திந் திரியங்களும், தனித் தனியே யிருக்கின் றமையால், ஒன்று மற் றொன் றின் தொழிலைச் செய்யமாட்டாது. வியாநாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன் ருகக் கூடிய தானமை யால், கன்மேந்திரியம் ஐந்தின் வழியினும் ஐந்து தொழிலையும் செய்து முடிக்கும். இவ் வாயுக்கள் (5) கன்மேந்திரியங்கள் (5) ஆகிய (10)ம் இராஜ தாம்ச மானமையால், கிரியா சாதந மாயின.

(பதம்) பின்னும், ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் இராஜதாம்சத்தில், பூதத்துக் கோ ரொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைக்கப்பட்டவை, வாக் காதி கன்மேந் திரியங்க ளென்று செல்லப்படும்.

(பொருள்) வெளி.

(பதம்) இவைகளில்—

(பொருள்) இவ் வைந்திந்திரியங்களில்,

(பதம்) ஆகாயத்தி னிட மாக—

(பொருள்) ஆகாயத்தைப் பற்றிக் கொண்டு,

(பதம்) வாக்கு—

(பொருள்) அட்ட தாநங்களைப் பொருந்தி, வாக்கிந்திரிய மானது,

(பதம்) வசநிக்கும் —

(பொருள்) அக்ஷராதி பதசமூக வாக்கிய வுச்சாரணக்கிரியைகளைச் செய்யும்.

293. வி:- வாக் கிந்திரியம், ஆகாயத்தைப் பொருந்தி வசநக் கிரியைகளைச் செய்யு மென்றது யாதினா லெனின்?

விடை:- தனக்குக் காரண மாயும், சப்த குண முடைய தாயு மிருத்தலி னென அறிக. (293)

294. வி:- வாக் கிந்திரியம் வசநித்தற்குச் சகாய மாகிய அட்ட தாநங்க ளெவை யெனின்?

விடை:- நா நுனி, தாலு மூலம், மே லுதடு, கீ ழுதடு, இருதயம், கண்டம், தந்தம், பிரம ரந்திர மாகிய உச்சித்துவாரம் ஆகிய எட்டு மென அறிக. (294)

(பதம்) வாயுவி னிட மாக—

(பொருள்) வாயுவைப் பற்றிக்கொண்டு,

(பதம்) பாணி—

(பொருள்) பாணி யிந்திரியம் கைகளி லிருந்து,

(பதம்) இடுத லேற்றல் செய்யும்—

(பொருள்) தாந ஆதாநக் கிரியைகளைச் செய்யும்.

295. வி:- பாணி யிந்திரியம், வாயுவைப் பொருந்தித்தாநாதாநக் கிரியைகளைச் செய்யு மென்றது யாதினா லெனின்?

விடை:- வாயு, தனக்குக் காரண மாயும், சலித்தலுடைய தாயும், தாநாதாநங்கட் கான பலத்தைத் தருவதாயு மிருத்தலா லென அறிக. (295)

(பதம்) அக்கிநியி னிட மாக—

(பொருள்) அக்கிநியைப் பற்றிக் கொண்டு,

(பதம்) பாதம்—

(பொருள்) பாதேந்திரியம் கால்களி லிருந்து,

(பதம்) நடக்கும்—

(பொருள்) கமந ஆகமநக் கிரியைகளைச் செய்யும்.

296. வினு:- பாதேந்திரியம், அக்கிநியைப் பொருந்தி கமநாகமநக் கிரியைகளைச் செய்யு மென்றது யாதினு லெனின்?

விடை:- அக்கிநி, தனக்குக் காரண மாயும், ஊர்த்துவ முக மாக எழும்புத லுடையதாயு மிருத்தலி னென அறிக. (296)

(பதம்) அப்புவி னிட மாக—

(பொருள்) அப்புவைப் பற்றிக் கொண்டு,

(பதம்) பாயுரு—

(பொருள்) பாயுரு விந்திரியம், குதத்தி லிருந்து,

(பதம்) மல சலங்களை—

(பொருள்) மல மூத்திரங்களை,

(பதம்) வெளியிற் றள்ளும்—

(பொருள்) வெளியில் விசர்ச்சநஞ் செய்யும்.

297. வினு:- பாயுரு விந்திரியம், அப்புவைப் பொருந்தி விசர்ச்சநக் கிரியைகளைச் செய்யு மென்றது யாதினு லெனின்?

விடை:- அப்பு தனக்குக் காரண மாயும், பற்றியதை இழுத்துச் செல்லுத லுடைய தாயு மிருத்தலினென அறிக. (297)

(பதம்) பிருதிவியி னிட மாக—

(பொருள்) பிருதிவியைப் பற்றிக் கொண்டு,

(பதம்) உபத்தம்—

(பொருள்) உபத்தேந்திரியம் யோநியி லிருந்து,

(பதம்) சுகத்தைப் பண்ணும்—

(பொருள்) இந்திரிய விசர்ச்சநத்தாலின்பத்தைச் செய்யும்.

298. வினு:- உபத்தம், பிருதிவியைப் பொருந்தி, யின்பக் கிரியைகளைச் செய்யு மென்றது யாதினுலெனின்?

விடை:- பிருதிவி, தனக்குக் காரண மாயும், தான் விறைப்புறுதற் கேது வான கடிந சுபாவ முடைய தாயு மிருத்தலி னென அறிக. (298)

299. வினு:- இவ் வைந்திந்திரியங்களும், பூதங்களின் சத்துவாம்சங்க ளல்லவோ வெனின்?

விடை:- ஞாந சாதநங்க ளாக இராமல், கிரியா சாதநங்க ளாக இருத்தலால், அல்ல வென அறிக. (299)

300. வினு:- இவ் விந்திரியங்கள், சமட்டி யல்லவோ வெனின்?

விடை:- ஒன்றின் கிரியையை மற்றைய நான்கும் செய்யாமையினுனும், ஒன்று கெட்டால், மற்றைய நான்கும் கெடாதிருத்தலினுனும், அல்ல வென அறிக. (300)

301. வினு:– இவைகட்கு, வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்த மெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:– வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்த மென்னும் உறுப்புக்களை யிட மாகப் பொருந்தி யிருத்தலால், இவ் விந்திரியங்கட்கு, இட வாகு பெய ராக, முறையே அப் பெயர்கள் வந்தன வென அறிக. (301)

302. வினு:- இவ் வைந் துறுப்புக்களும், ஐந் திந்திரியங்க ளல்லவோ வெனின்?

விடை:- இவ் வுறுப்புக்கள், சுழுத்தி மூர்ச்சை மரண காலங்களி லிருந்தும், வசநாதிக் கிரியைகளைச் செய்யாமையினுனும், இந்திரியங்களால் பிரத்தியக்ஷ மாக அறியப்படுவ தாகத்; தூலீகரித் துள்ள தூல சரீரத்தின் அவயவங்களாக இருத்தலினுனும், அல்ல வென அறிக. (302)

303. வினு:– இவ் விந்திரியங்கட்கு, அதிதேவதைக ளெவை யெனின்?

விடை:- வாக்குக்கு, அக்கிநியும், பாணிக்கு, இந்திரனும், †பாதத்துக்குச், சூரியனும், பாயுருவுக்கு, மிருத்தியுவும், உபத்தத்துக்கு, பிரஜாபதியும் அதி தேவதைக ளென அறிக. (303)

(பதம்) இவ் வைந்து இந்திரியங்களும், தனித் தனியே இருக்கின்றமையால் ஒன்று, மற் ருென்றின் தொழிலைச் செய்ய மாட்டாது. வியாநாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன்ருகக் கூடியுதான மையால், கன்மேந் திரியம் ஐந்தின் வழியினுனும், ஐந்து தொழிலையும்

†பாதத்துக்கு அதிதேவதை யாக, பைங்களோப நிஷத்திலும், வாசுதேவ மநநத்திலும், உபேந்திரனையும், வேதாந்த சூடாமணியிற் சூரியனையும் சொல்லப்பட்டுள்ளது.

செய்து முடிக்கும். இவ் வாயுக்கள் (5) கன்மேந்திரியங்கள் (5) ஆகிய (10)ம் இராஜதாம்ச மானமையால் கிரியா சாதந மாயின-

(பொருள்) வெளி.

304. வினு:- கன்மேந்திரியங்க ளைந்தும், ஒன்று மற்றென்றின் தொழிலைச் செய்யமாட்டா தெனின், தன் தன் தொழிலைச் செய்யு மென்பது துணிபா யிருக்க, வியாநாதி வாயுக்க ளைந்தும், கன்மேந்திரியம் ஐந்தின் வழியினுனும், ஐந்து தொழிலையுஞ் செய்து முடிக்கு மெனக் கூறில், கன்மேந்திரியங்கட்கு அதி வியாப்தி தோடம் வருமே யெனின்?

விடை:- வாயுக்களால் பிரேரிப்பிக்கப்பட்டுக் கன் மேந்திரியங்கள், தன் தன் தொழிலைச் செய்யுமே யன்றிச், சுதா வாகச் செய்யமாட்டா வென்பது பற்றி, அங்ஙனம் கூறினமையால், கன்மேந்திரியங்கட்கு அதிவியாப்தி தோடம் வரா தென அறிக. (304)

305. வினு:- வாயுக்களும், இந்திரியங்களைப் போல, சடப் பொருள்க ளானமையால், அவைகள், மற்றென்றைப் பிரேரிப்பிக்கு மென்பது அசம்பாவித மெனின்?

விடை:- அக்கிநி, சடமா யிருக்கினும், சட மாகிய கந்தகம், உப்பு, கரித்தூள்க ளாகிய வெடி மருந்துடன் சம்பந்தித்து, பீரங்கியினுள் கெட்டிக் கப்பட்டிராநின்ற இருப்புக் குண்டை வெளியிற் சென்று தூரத் திருப்ப தாகிய சதுரங்க சேனைகளை நாசஞ் செய்யும்படி யேவுதல் போல, வாயுக்கள்

சடமா யிருக்கினும், கன்மேந்திரியங்களைப் பிரேரிப் பிக்கக் கூடும்; ஆதலின், அசம்பாவித மல்ல வென அறிக. (305)

306. வினு:- சட வஸ்துக்களுக்கும், பிரேரக சத்தி யிருக்கு மாயின், பிரேரக கருத்தா வெனச் சுருதி களிற் கூறப்படுகிற ஈசுவரனுக்கு அதிவியாப்தி தோடம் வருமே யெனின்?

விடை:- சகல சத்திகட்குங் காரண மாகிய மாயா சத்தியை யுடையவன், ஈசுவர னனமையால், சகல சத்திகளும், ஈசுவர னுடைய சத்திகளே யாகும்; ஆதலின், ஈசுவரனுக்கு அதிவியாப்தி தோடம் வரா தென அறிக. (306)

(நூல் பிரிவு - 16)

அந்தக் கரணம் (5) ஞானேந்திரியம் (5) வாயுக்கள் (5) கன்மேந்திரியம் 5) ஆகிய (20) தத்து வங்களும் சூட்சும சரீரம் என்று சொல்லப்படும். இச் சூட்சும சரீரத்தைமாயாப் பிரிதிவிம்ப ராகிய ஈசுவரன், அவித்தியாப் பிரதி விம்ப ராகிய ஜீவர்கள் அநேக ரானமையால், ஒவ் வொருவருக்கும், ஒவ் வொரு சரீர மாகச் சிருஷ்டித் தளித்தான். இப்படிச் சூட்சும சரீர கற்பனை சொல்லப்பட்டது.

இதன் பொருள் வெளி.

307. வினு:—ஞானேந்திரியங்களில் சரோத்திர சட்சு ஆக்கிராணங்களும், கன்மேந்திரியங்களில் பாணி பாதங்களும் முறையே இரண்டு செவிகளினும், இரண்டு கண்களினும், இரண்டு நாசிகளினும், இரண்டு கைகளினும், இரண்டு கால்களினும், இரண் டிரண் டாகவே யிருப்பது, அவ் விந்திரியங் களின் காரியங்களாற் றனே காணப்படுகிறதா யிருத்தலால் (25) தத்துவம் சூட்சும சரீர மெனக்

கூறுமல், (20) தத்துவம் சூட்சும சரீர மெனக் கூறிய தென்னை யெனின்?

விடை:— ஒரு மரம், மே லிரண்டு கவராகப் பிரிவுற்று வளர்ந்து, தனித் தனியே பத்திர புட்ப பலாதிகளைத் தரினும், அது, இரண்டு மர மாக எண்ணப்படாமல், ஒரு மரமாகவே எண்ணப்படுவது போல, சிரசின் மத்திய லிருந்து சுரோத்திரம் சட்சு ஆக்கிராண மென்னும் மூன்றும், முகக் கமலத்தி லிருந்து பாணி பாத மென்னும் இரண்டு மாகிய ஐந் திந்திரியங்களில், ஒவ் வொ ரிந்திரியமும் இரண் டிரண்டு கவரா கப் பிரிவுற்று நீண்டு, முறையே இரண்டு காது, இரண்டு விழி, இரண்டு நாசி, இரண்டு கை, இரண்டு கால்களினு மிருந்து, சப்த ரூபகந்தங்களை யறியினும், தா நா தாந கமநாக மநங்களைச் செய்யினும், அவைகள், இரண் டிரண் டாக எண்ணப்படாமல், ஒன் றொன் றாகவே யெண்ணப்படும். ஆதலால் (20) தத்துவம் தான் சூட்சும சரீர மாகு மென அறிக். (307)

பிருஹத் (விரிவு) வாசுதேவமன்னம் ஒன்பதாவது சரீரத்திரய விலக்ஷண நிருபகம்)

308. வினா:- சில சாஸ்திரங்களிற் சூட்சும சரீர தத்துவங்கள் (19) எனவும், சில சாஸ்திரங்களிற் (17) எனவும் கூறுகின்றன; அது, இந் நூலுக்கு விரோத மல்லவோ வெனின்?

விடை:— சில சாஸ்திரங்களில், அந்தக் கரணம் (5) ல் உள்ளத்தைச் சித்தத்தி லடக்கி (19) எனவும், சில சாஸ்திரங்களில், உள்ளம் சித்தம் அகங்கார மாகிய மூன்றையும், மநம் புத்தி யென்னு மிரண்டி லடக்கி (17) எனவும் கூறியிருத்தலால், விரோத மல்ல வென அறிக. (308)

309. வினு:- இரு பது தத்துவங்கட்கும் சூட்சும சரீர மென்ப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- தூல சரீரம் போல, இந்திரியங்கட்கு விஷயமாகத் தூலிக்ரித்துத் தோன்ருமல், அநுமாநத்தா லறியத் தக்க தாக இருத்தலி னென அறிக. (309)

310. வினு:- பிராண் வாயுவும், அபாந வாயுவும் நாசி வாயி லாகவும், குத வாயி லாகவும், சப்த பரிசங்கள் தோன்ற வெளிப்படுத லாதிகள், ச்ரோத்திரேந்திரியத்தாலும், துவக்கிந்திரியத்தாலும், பிரத்தியக்ஷ மாக அறியப்படுகின்றமையால், சூட்சும சரீர தத்துவம் (2( )ம் அநுமாநத்தா லறியத் தக்க தென்ல் பொருந்தா தெனின?

விடை:—நாசி வாயிலாகவும், குத வாயிலாகவும் சப்த பரிசங்கள் தோன்ற வெளிப்படும் வாயுக்கள், சூட்சும சரீர தத்துவங்களிற் சேர்ந்த பிராண் அபாந னென்னும் வாயுக்க ளன்ரும். இவைகளுக் கந்நிய மாய் அநுமாநத்தா லறியத் தக்க தாகவே, அவ் வாயுக்க ளிருக்கின்றன. ஆதலால், அங்ஙனங் கூறுதல் பொருந்து மென அறிக. (310)

311. வினு:- அற்றேல், சப்த பரிசங்கள் தோன்ற வெளிப்படும் வாயுக்க ளெவை? இவைகளுக் கந்நியமா யுள்ள பிராணுபாந வாயுக்க ளெவை யெனின்?

விடை:- மூங்கிற் கழி, நாணற் கழிகளின் புரை வெளிகளில், தூல பூத மாகிய வாயு பொருந்தி யிருப்பது போல, தூல சரீரத்தில் இருதய முதல் நாசி பரியந்த முள்ள புரை வெளிகளிலும், குடர் மலக் குழி யாதிய புரை வெளிகளிலும், பொருந்தி யிருப்ப

தாய்ப், பிராண வாயுவாற் றள்ளப்பட்டு, நாசி வாயி லாகவும், அபாந வாயுவாலும், பாயுருவாலும், தள்ளப்பட்டுக் குத வாயிலாகவும், சப்த பரிசங்கள் தோன்ற வெளிப்படும் வாயுக்கள், தூல வாயுக்களா கும். இவ் வாயுக்களில், இருதய முதல், நாசி பரியந்தமுள்ள வாயுவை. வெளியிற் றள்ளிக் கொண்டு வருதலும், உள்ளே யிழுத்துக் கொண்டு போதலு மாகிய கிரியா சத்தியை யுடையதா, யிந்திரியங்கட்கு விஷய மாகாமல், சூட்சும மாக இருப்பது, பிராண வாயு வாகும். குடர் மலக் குழி யாதிய புரை வெளிகளி லுள்ள வாயுவை, அதோமுக மாக வெளியிற் றள்ளுவதும். உண்ட அந்நபாநாதி களைத் தகிப்பது மாகிய கிரியா சக்தியை யுடைய தாய், இந்திரியங்கட்கு விஷய மாகாமற் சூட்சும மாக இருப்பது, அபாந வாயு வாகும், ஆதலால், பிராணனும், அபாநனும், பிரத்தியக்ஷ மாக அறியத் தக்க தல்ல வென அறிக. (311)

312, வினா:- கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப் படலத்தில், "வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்கா, லெறிபிரா ணனும்நீ யல்லை" எனவும், சந்தேகந் தெளிதற் படலத்தில், "துருத்திபோ லூதும் மூச்சைச் சுகமுட னடக்கில் நிற்கும்" எனவும் வேதாந்த சூடாமணி திரிசிய விவேகத்தில்,"நின்றிதயந்தனையடைந்து பிராணனுச வாச நிசுவாச மியற்று" மெனவும், மற்றைய சாஸ்திரங்களினும், பிராணன் மூச்சு சுவாசமென்னும் பெயருடையதாய், நாசி மார்க்கமாகச் சலிக்கும் வாயு வெனவும் கூறப்படுகிறதே யெனின்?

விடை:- அங்ஙனம், சாத்திரங்கள் கூறுகின்றன வெனப் பொருள் கொள்ளுதல் ஆராய்வுக் குறைவே யன்றிவே றல்ல; அச் சாத்திரங்களை நன்கு யாராயு மிடத்து, கைவல்லிய நவநீதம் தத்துவ விளங்கப்

படத்தி லுள்ள, "வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்காலெறிபிரா ணனும்நீ யல்லை" யென்னும் வாக்கியத்துக்கு, மூக்கினல் காற்றை விடுவதாகிய துருத்தியும், அதனல் விடப் படுவ தாகிய காற்றும், உபமாநமும், மூக்கின் வழி யால் காற்றை யெறிவதாகிய பிராணனும், அதனல் யெறியப் படுவதாகிய காற்றும், உபமேயமும் ஆகின்றன. இப்படியே, சந்தேகந் தெளிதற் படலத்தி லுள்ள, "துருத்திபோ லூதும் மூச்சைச் சுகமுட ணடக்கில் நிற்கும்" என்னும் வாக்கியத்துக்கு, ஊதுந் தொழிலை யுடைய துருத்தியும், அதனல் ஊதப்படுவ தாகிய தூல வாயு வான காற்றும், உப மாநமும், ஊதுந் தொழிலை யுடைய மூச் சென்னும் பிராணனும், அதனு லூதப்படுவ தாகிய காற்றும் உபமேயமும் ஆகின்றன. இதல்லாமல், தொழிற் செய்வது பிராண வாயு வெனவும், தொழிற்படுவது தூல வாயு வெனவும், இவ் வாக்கியங்கள் கூறுகின்ற படியே, வேதாந்த சூடாமணி திரிசிய விவேகத்தி லுள்ள, "நின்றியந் தனையடைந்து பிராணனுசு வாச நிசுவாச மியற்றும்" என்னும் வாக்கியமும், பிராண னனது இருதயத்தைப் பொருந்தி நின்று, சுவாச மென்னுந் தூல வாயுவை மேலும் கீழும் செல்லும்படி வெளியிற் றள்ளுதலும், உள்ளி விழுத்தலு, மாகிய தொழிலைச் செய்யு மெனக் கூறுகின்றமையால், தொழிற் செய்வது பிராண னெனவும், தொழிற்படுவது தூல வாயு வெனவும் பொருள்படுகின்றன. இச் சாத்திரங்க ளல்லாத மற்றைச் சத்திரங்களின் வாக்கியங்களையும், உய்த்து நோக்குமிடத்து இங்ஙனமே பொருள்படும். அற் றன் றெனின், இருபது தத்துவங்களும் அநுமாநத்தா லறியத் தக்க சூட்சும சரீர மாகு மெனக் கூறும் சகல சாஸ்திரங்கட்கும், அப்பிரமாணத்துவம் வரு மென அறிக். (312)

313. வினா:- இதனைச் சரீர மென்றது யாதினாலெனின்?

விடை:- சுழுத்தியினும், பிராரப்த க்ஷயத்தினும், சீரணிக்குந் தன்மையு தாதலி னென அறிக. (313)

314. வினா:- இதனைத் தேக மென்றது யாதினாலெனின்?

விடை:- சதா தாபத் திரய துக்கங்களாற் றகிக்கப் படுகின்றமையி னென அறிக. (314)

315. வினா:- தூல சரீரத்தை யன்றிச், சூட்சும சரீரம் பிரத்தியக்ஷ மாகக் காணப்படாமையால், அஃதுண் டென்றெங்ஙனம் அறியலா மெனின்?

விடை:- காரிய மாகிய புகையைக் கொண்டு காரணமாகிய அக்கினி யுண் டென் றறிவது போல், (20) வித காரியங்களை கொண்டு, (20) தத்துவ மாகிய சூட்சும சரீர முண் டென் றறியலா மென அறிக. (315)

316. வினா:- இருபது வித காரியங்களும், தூல சரீர முள்ளபோ தன்றி, மற்றைப் போதிற் காணப்படாமை யால், அக் காரியங்களைத் தூல சரீர காரியங்க ளெனக் கூறலாமே யெனின்?

விடை:- சுழுத்தி மூர்ச்சை மரண காலங்களில், தூல சரீர மிருந்தும், ஒரு வித காரியங்களுங் காணப் படாமையால், அங்ஙனங் கூற லாகா தென அறிக. (316)

317. வினா:- அற்றேல், தூல சரீரத்தை யன்றிச், சூட்சும சரீரம் ஒரு காரியமும் செய்கிற தாகக் காணப் படாமையால், சூட்சும சரீர காரியங்க ளென்று தான் எங்ஙனம் கூறலா மெனின்?

விடை:- தூல சரீர மின்றிய சொப்பநாவத்தையில், சூட்சும சரீர காரியங்கள் காணப்படுகின்றன. இஃதன்றி, அக்கிநி காஷ்டத்தை யநுசரித்துக் கொண்டு, தகந பாகக்கிரியைகளைச் செய்யினும், அக்கிரியைகள் அக்கிநியின் கிரியைகளே யாவது போல, சூட்சும சரீரம், தூல சரீரத்தை யநுசரித்துக் கொண்டு, இருபது வித காரியங்களைச் செய்யினும், அக்காரியங்கள், சூட்சும சரீர காரியங்களே யாகும்; ஆதலின். அங்ஙனங் கூறலா மென அறிக. (317)

(நூல் பிரிவு-17)

இனித்தூலபூத உற்பத்தி சொல்லப்படுகிறது.

மிஞ்சிய தாமதாம்ச மாக இருக்கின்ற ஐந்து பூதங்களையும், ஒவ்வொன்றை, இரண் டிரண் டாகப் பகுத்து, முதற் பாதி யைந்தையும், ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து, இரண்டாம் பாதி யைந்தில், தன் னம்சத்துடன் கூட்டாமல். மற்றைய நான்கு பூதங்களுடனும், பூதத்துக்கு அரைக்கால் அரைக்கால் மாத்திரை யாகச் சேர்க்கின்றது, பஞ்சீகரண மென்று செல்லப்படும்,

(பதம்) இனித் தூல பூத உற்பத்தி—

(பொருள்) மேலே தூல பூதங்களின் உற்பத்தி,

(பதம்) சொல்லப்படுகிறது—

(பொருள்) கூறப்படுகிறது

(பதம்) மிஞ்சிய—

(பொருள்) சத்துவ இராஜதாம்சங்கள் நீங்கி மீதியாகிய,

(பதம்) தாமதாம்ச மாக இருக்கின்ற—

(பொருள்) தமோம்சமா யிரசநின்ற.

(பதம்) ஐந்து பூதங்களையும்—

(பொருள்) பஞ்ச பூதங்களையும்,

(பதம்) ஒவ் வொன்றை—

(பொருள்) ஒவ்வொரு பூதத்தையும்,

(பதம்) இரண் டிரண் டாகப் பகுத்து—

(பொருள்) இரண் டிரண்டு பூத மாகப் பாகித்து,

(பதம்) முதற்பாதி ஐந்தையும்—

(பொருள்) முதற் பாதி யாகிய ஐந்து பூதத்தையும்,

(பதம்) ஒவ் வொன்றை—

(பொருள்) ஒவ் வொரு பூதத்தை,

(பதம்) நான்கு நான்காகப் பகுத்து—

(பொருள்) நான்கு நான்கு பாக மாகப் பாகித்து

(பதம்) இரண் டாம் பாதி ஐந்தில்—

(பொருள்) பிற்பாதி யாகிய ஐந்து பூதங்களில், ,

(பதம்) தன் னம்சத்துடன் கூட்டாமல்—

(பொருள்) தன் தன் னம்சத்துடன் சேர்க்காமல்,

(பதம்) மற்றைய நான்கு பூதங்களுடனும்—

(பொருள்) ஏனைய நான்கு பூதங்களோடு,

(பதம்) பூதத்துக்கு அரைக்கால் அரைக்கால் மாத்திரை யாக—

(பொருள்) ஒவ்வொரு பூதத்துக்கு அரைக்கால் அரைக்கால் பங்கு மாத்திரமாக,

(பதம்) சேர்க்கின்றது—

(பொருள்) ஒன்றுபடுத்துகிறது.

(பதம்) பஞ்சீகரண மென்று சொல்லப்படும்—

(பொருள்) கலத்த லென்று கூறப்படும்.

318. வினு:- ஒவ் வொரு பூதங்களும் பஞ்சீகரணத் தால், ஐந்து வித பூதங்க ளாயினது எங்ஙன மெனின்?

விடை:- ஐந்து சிநேகர்கள், பலகாரக் கடையில், ஒருவன் அப்பமும், ஒருவன் அதிரசமும், ஒருவன் மோதகமும், ஒருவன் வடையும், ஒருவன் தோசையும் வாங்கிப் புசிக்க எத்தநித்தபோது, ஒவ் வொருவனும், தன் தன் பலகாரத்தை இரண் டிரண்டு பாக மாக்கித், தனக்கு ஒரு பாதியை வைத்துக் கொண்டு, மற்றொரு பாகத்தை நான்கு பாக மாக்கி, மற்றைய நால்வருக் கும் ஒவ் வொரு பாக மாகக் கொடுக்க, ஒவ் வொரு வனிடத்தும் ஐந்து வித பலகாரங்களுஞ் சேர்ந்தது போலு மென அறிக.

பிரமாணம்

(கைவல்லிய நவநீதம் தத்துவவிளக்கப்படலம் 41 ஆம் கவி)

"ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி, நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்குங் கூட்ட வந்தன தூல பூதம்" (318)

319. வினு:- சூட்சும பூதங்கள் கலத்தலினுற் றூல பூதங்க ளாயின வெங்ஙன மெனின்?

விடை:- சூட்சும மாகிய பாலும், சூட்சும மாகிய மோரும், கலத்தலினுற் றூலமாகிய தயி ராவது போ லென அறிக. (319)

320. வினு:- இப் பூதங்கட்குத், தூல பூதங்க ளெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- இந்திரியங்கட்கு விஷய மாகத் தூலி கரித்திருத்தலி னென அறிக. (320)

(நூல் பிரிவு - 18)

இங்ஙனம், பஞ்சீகரிக்கப்பட்ட தூல பூதங்களில், ஆகாயத்திற், பரிச ரூப ரச கந்தமாகிய நான்கு குணங்களும் வியாப்பிய மானமையால், அதிரிசிய மாம்; நிச குணமாகிய சப்தம் திரிசிய மாம். வாயுவில், ரூப ரச கந்த மாகிய மூன்று குணங்களும் வியாப்பிய மானமையால், அதிரிசியமாம்; காரண குணமாகிய சப்தமும், நிச குணமாகிய பரிசமும், திரிசியமாம் அக்கினியில் ரச கந்த மாகிய இரண்டு குணங்களும் வியாப்பிய மானமையால், அதிரிசிய மாம்; காரண குணங்களாகிய சப்த பரிசமும், நிச குணமாகிய ரூபமும் திரிசிய மாம். அப்புவியில் கந்த குணம் வியாப்பியம் ஆனமையால், அதிரிசியமாம்; காரண குணங்களாகிய சப்த பரிச ரூபமும். நிச குண மாகிய ரசமும் திரிசிய மாம். பிருதிவியில், காரண குணங்களாகிய சப்த பரிச ரூப ரசமும், நிச குண மாகிய கந்தமுந் திரிசியமாம்.

இதன் பொருள் வெளி.

321. வினா:- கலத்த லின்றிய சூட்சும பூதங்களின் தனித்தனி குணங்கள், கலப்புற்ற தூல பூதங்களில், எங்ஙனந் தோன்றுகிற தெனின்?

விடை:- தூலமாகிய ஆகாயத்தில், சத்தம், பிரதித் துவநி யாகத் தோன்றும், வாயுவில், சத்தம் சீறு சீறெனவும், பரிசம் சீதோஷ்ண விலக்ஷண மாகவும் தோன்றும். அக்கினியில், சத்தம் திகு திகு புகு புகு எனவும், பரிசம் உஷ்ண மாகவும் ரூபம் உலோகிதப் பிரகாச மாகவும் தோன்றும். அப்புவில், சத்தம், சள சள, கள கள, கொள கொள வெனவும்

பரிசம் சீதள மாகவும் ரூபம் சுக்கிலமாகவும் இரதம் கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு எனச் சடுவிதமாகவும், தோன்றும், பிருதிவி யில், சத்தம் கடினமாகக் கட கட வெனவும், பரிசம், வன்மை திண்மை சர்ச்சரை (சுரசுரப்பு) ஆகவும், ரூபம் வெண்மை யாதிய பஞ்ச வருணமாகவும், இரதம், கைப்பு கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு எனச் சடுவிதமாகவும், கந்தம் நற்கந்த, துர்க்கந்த மிசிரகந்த மாகவுந்தோன்றுமென அறிக. (321)

322. வினா:- மலர்ச் சோலையிற் படிந்து செல்லும் வாயுவினிடத்து, நற்கந்தமும், மலக் குழியாதி மார்க்கமாகச் செல்லும் வாயுவினிடத்துத், துர்க் கந்தமும், சந்தநாடவியிற் பற்றி யெரியும் அக்கிநி யிடத்து, நற் கந்தமும், உரோமங்களிற் பற்றி யெரியும் அக்கிநியினிடத்துத், துர்க் கந்தமும், அத்தர் பன்னீராதிய அப்புவினிடத்து, நற்கந்தமும், சாக்கடையில் நிற்கும் அப்புவினிடத்துத் துர்க்கந்த மும் காணப்படுவதாயிருக்க. பிருதிவியில் மாத்திரம் கந்தகுணம் திரிசியமா மென்ற தென்னை யெனின்?

விடை:- மலர்களும், மல மாதிகளும், அக்கிநி பற்றி யெரியாநின்ற சந்தந விருக்ஷமும் உரோமமும், பன்னீராதிகளிற் சேர்த்துள்ள வாசநாத் திரவியங் களும், சாக்கடை நீராதிகளிற் கலந்துள்ள சேருதி களும், பிருதிவியி னம்ஸமாகவே யிருப்பது பற்றி, அவைகளில், கந்த குணங்களுள்ளன வாகும். அக்குணங்கள், தாமே விரிந்து வெளிப்படுவன வாயும், வாயுவா லிழுக்கப்படுவனவாயு மிருக்கும். இக்கந்த குணங்களைப் பிருதிவியின் குணங்களாக அறியாமல் வாயு அக்கிநி அப்புவின் குணங்களாக அறிதல் ஆராய்வுக் குறைவாம்: அற்றன்று குணம் குணியை விட்டுப் பிரியா தெனின்? பிருதிவியின் அணுக்கள்

வாயுவினிடத்தும், அக்கினியினிடத்தும், அப்புவினிடத்தும் கலந்திருப்பது பற்றி, கந்த குணங்கள் தோன்றுகிறதெனச் சொல்ல வேண்டும். அங்ஙனம் சொல்லப்படாதெனின், கீழ்ப் பூதங்களின் குணம், மேற்பூதங்களிற் றிரிசியமாகத் தோன்ருதென்னும் சகல சாஸ்திரங்கட்கும் அப்பிரமாணத்துவம் வருமென அறிக. (322)

323. வினு:- சமமாகக் கலப்புற்ற தூல பூதங்களில், பிருதிவியில், ஐந்து குணங்களுந் தோன்றுவது போல, மற்றைய நான்கு பூதங்களினுந் தோன்ருமல், சில சில குணங்கள் குறைவுற்றிருப்பதற்குக் காரணமென்னை யெனின்?

விடை:- தாய் தேகத்துக்குப் பிள்ளை தேகம், சிறியதாக இருப்பதுபோல. ஆகாய மாதிய ஐந்து பூதங்களின் காரண பூதத்துக்குக் காரிய பூதம், பத்திலொரு பங்காகக் குறைவுற்றிருத்தலின், மிகுதியாகிய பத்துப் படி பாலில், ஒரு படி ஜலஞ் சேரில், மிகுதியாகிய பால் தோன்றுவதும் குறைவாகிய சலந் தோன்ருததுமா யிருப்பதுபோல, ஒவ்வொரு பூதங்களினும் காரண பூத குணங்களும், சுய குணங்களும், தோன்றுவனவாகவும் காரிய பூத குணங்கள் தோன்ருதனவு மாயின வென அறிக.

பிரமாணம்

(ஸ்ரீ இராமகவி சுவாமிகளால் இயற்றப்பெற்ற)

(அத்துவிதானுபவம்)

(2 ஆவது அத்தியாரோப அபவாத லக்ஷணம்)

கவி 1.

"தாங்கியசத் துவமிரா சதந்தமோ குணமூன்றுஞ் சமமா கும்போ, தோங்கியது பிரளயமா

மதுமாயை பின்பு ஜகத்துதிக்குங் காலந், தூங்கி
வெளி யநிலமநல் சலம்பாருண் டாய்ப்பின்பார்
தொட்டொவ் வொன்றுக் காங்கதுவே பத்துமடங்
கதிகமெனக் கடைமுதலாய் லயமுண்டாமே.''
(323)

324. வினு:- ஆகாய மாதிய ஐந்து பூதங்களின்
தருமங்களெவை யெனின்?

விடை:- முறையே, நிராகாரம், சலநம், வெப்பம்,
நெகிழ்ச்சி, கடிநமென அறிக. (324)

325. வினு:- ஆகாயம் ஆதிய ஐந்து பூதங்களின்
தொழில்கள் எவை எனின்?

விடை:- முறையே யிடங்கொடுத்தல், உலர்த்தல்,
தகித்தல், பிண்டீகரித்தல், பொறுத்தல் ஆகிய ஐந்து
மென அறிக. (325)

326. வினு:- ஆகாய மாதிய ஐந்து பூதங்கட்கும்
அதிதேவதைகளெவை யெனின்?

விடை:- முறையே சதாசிவன், மகேசுவரன்,
உருத்திரன், விஷ்ணு, பிரமன் ஆகிய ஐந்துமென
அறிக. (326)

(நூல் பிரிவு - 19)

சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்கள்
தோன்றினாற் போலப், பஞ்சீகரிக்கப்பட்ட தூல பூதங்
களினின்றும், ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்
பாய், மூவகைச் சாதியா யிருக்கின்ற தூல சரீரங்கள்
தோன்றின. இவற்றுள் ஆறு தத்துவங்களாவன:
சருமம், உதிரம், மாம்சம், சநாயு, அஸ்தி மச்சை
யாகிய இவைகளாம். நால்வகை பிறப்புக்களாவன,

சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் ஆகிய இவ்வகளாம். மூவகைச் சாதிகளாவன: இகலோக பரலோக புத்தியைத் தருகின்ற மானுட சரீரங்கள் உத்தம சாதியாம். பரலோக புத்தியை மறைத்து இகலோக புத்தியை மாத்திரந் தருகின்ற, பசுபக்ஷியாதிய சரீரங்கள், மத்திம சாதியாம், இருவகைப் புத்தியையு மறைத்திருக்கின்ற மரங் கொடி செடியாதிகள் அதம சாதியாம்.

(பதம்) சூட்சும பூதங்களினின்றுஞ் சூட்சும சரீரங்கள் தோன்றினாற் போல, பஞ்சீகரிக்கப்பட்ட தூல பூதங்களினின்றும் ஆறு தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியா யிருக்கின்ற தூல சரீரங்கள் தோன்றின—

(பொருள்) வெளி.

(பதம்) இவற்றுள்—

(பொருள்) (6) தத்துவம் (4) வகைப் பிறப்பு (3) வகைச் சாதிகளாகிய இவ்வகளினுள்,

(பதம்) ஆறு தத்துவங்களாவன—

(பொருள்) (6) தத்துவ மென்று சொல்லப்பட்டவைகள்,

(பதம்) சருமம், உதிரம், மாம்சம், சநாயு, அஸ்தி, மச்சை ஆகிய இவ்வகளாம்—

(பொருள்) தோல், இரத்தம், மேதசு, நரம்பு, எலும்பு, மூளைகள் ஆகிய இத் தத்துவங்களாம்,

(பதம்) நால் வகைப் பிறப்புக்களாவன—

(பொருள்) (4) வித ஜநந மென்று சொல்லப்பட்டவைகள்,

(பதம்) சராயுஜம்—

(பொருள்) பையுள் கட்டுப்பட்டிருந்து தோன்றுவன.

(பதம்) அண்டஜம்—

(பொருள்) முட்டையி லிருந்து தோன்றுவன;

(பதம்) சுவேத ஜம்—

(பொருள்) வேர்வையினின்றுந் தோன்றுவன;

(பதம்) உத்பிஜ் ஜம்—

(பொருள்) வித்து வேர் கிழங்காதிகளினின்றுந் தோன்றுவன,

(பதம்) ஆகிய இவைகளாம்—

(பொருள்) ஆகிய இச் சநநங்களாம்.

327. வினா:- எழு வகைத் தோற்றமும், நால் வகைப் பிறப்பி லடங்கி யுள்ளனவோ வென்னின்?

விடை:— தேவரும், மனிதரும், நடப்பன வென்னும் நாற்கால மிருகங்களும், ஜராயுஜத்திலும்; பறப்பனவும், ஊர்வனவும் நீர் வாழ்வனவும்; அண்டஜத்திலும்; சில பறப்பனவும், சில ஊர்வனவும், சுவேதஜத்திலும்; இருப்பன உத்பிஜ்ஜத்திலும் அடங்கும். இவைகளில், தேவர், மனிதர், நான்கு காலால் நடக்கும், யானை, புலி, கரடி, குதிரை, மாடு, நாய், ஆடு முதலியன நடப்பனவாகும். கருடன், அந்நம், கிளி, குயில், காகம், கொக்கு முதலியனவும், விட்டில், கொசுகாதியவைகளும், பறப்பன வாகும். பாம்பு பல்லி யாதிகளும், கிருமி கீடம் பேனாதிகளும், ஊர்வன வாகும். திமிங்கிலம் திமிங்கில கிலம், மகரம், கெண்டையாதிகள், நீர் வாழ்வன வாகும். கற்பகம், பாரிசாதம்,

தெங்கு, கமுகு முதலிய மரங் கொடி செடிகள், இருப்பன வாகு மென அறிக. (327)

328. வினா:- ஒவ் வொரு தோற்றத்தின் பேதங்க ளெத்தனை யெனின்?

விடை:- தேவர்களின் பேதம், (14) லக்ஷம், மனிதர்களின் பேதம், (9) லக்ஷம், விலங்குகளின் பேதம், (10) லக்ஷம், பறவைகளின் பேதம், (10) லக்ஷம், நீர் வாழ்வன பேதம், (10) லக்ஷம், ஊர்வன பேதம், (11) லக்ஷம், தாவர பேதம், (20) லக்ஷம், ஆகப் பேதங்கள் (84) லக்ஷமென அறிக.

பேதங்கள் (84) லக்ஷம் என்பதற்குப் பிரமாணம்.
(நிகண்டு)

"ஊர்வன பதினொன் றுகு மொன்பான்மா னிடர்தம் பேதம்,
நீரினில் விலங்கு புள்ளும் பப்பத்தா நெடிய தேவர்,
சாருமீ ரேழ்நா லைந்தே தாபர யோநி பேத,
மாருமெண் பானான் கோடே யமைந்தநூ ருயி ரங்கள்." (328)

329. வினா:- இவைகளில், அசுர ராதிய பேதங்களை யேன் கூற வில்லை யெனின்?

விடை:- தேவர்களின் பேதத் தொகையில், அசுர ராதிய பேதங்கள் சேர்ந்திருக்கின்றமையி னென அறிக. (329)

330. வினா:- ஏழு வகைத் தோற்றங்க ளாகிய உயிர் களும், சம அறிவுள்ளனவோ, அல்லனவோ, வெனின்?

விடை:- சில ஓ ரறிவும், சில ஈ ரறிவும், சில மூ வறிவும், சில நா லறிவும், சில ஐ யறிவும், சில ஆ றறிவு முள்ளனவா யிருத்தலின், சம அறிவுள்ளன அல்ல வென அறிக. (330)

331. வினா:— ஓ ரறி வுயிர்க ளெவ்வ யெனின்?

விடை:- மெய்யினுற் பரிசத்தை மாத்திர மறிவ தாகிய, புல், செடி, கொடி, மர மாதிகளி லுள்ள உயிர்க ளென அறிக. (331)

332. வினா:— ஈர றி வுயிர்க ளெவை யெனின்?

விடை: — மெய்யோடு நாவினுனும், பரிசத் தோடு இரதத்தையும், அறிவ தாகிய இப்பி சங்காதிகளி லுள்ள உயிர்க ளென அறிக. (332)

333. வினா:— மூவறி வுயிர்க ளெவை யெனின்?

விடை:— மெய் நாக்கோடு மூக்கினுனும், பரிச இரதங்களோடு கந்தத்தையு மறிவ தாகிய கறையான் எறும்பு முதலிய உயிர்க ளென அறிக. (333)

334. வினா:— நா லறி வுயிர்க ளெவை யெனின்?

விடை:— மெய் நாக்கு மூக்கோடு கண்ணினுனும், பரிச இரத கந்தத்தோடு ரூபத்தையும் அறிவன வாகிய தும்பி வண்டு முதலிய உயிர்க ளென அறிக. (334)

335. வினா:— ஐ யறி வுயிர்க ளெவை யெனின்?

வினா:— மெய் நாக்கு மூக்குக் கண்ணோடு செவியினுனும், பரிச இரத கந்த ரூபத்தோடு சப்தத்தையு மறிவ தாகிய விலங்கு பறவை முதலிய உயிர்க ளென அறிக. (335)

336. வினா:- ஆ றறி வுயிர்க ளெவை யெனின்?

விடை:- மெய் நாக்கு மூக்குக் கண் செவியோடு சித்தத்தினனும், பரிச இரத கந்த ரூப சப்தத்தோடு நன்மை தீமைகளைப் பகுத் தறிவ நாகிய மக்கள் தேவ ராதிய உயிர்க ளென அறிக. (336)

(பதம்) மூவகைச் சாதிக ளாவன—

(பொருள்) மூன்று வித சாதிகளெவை யெனின்,

(பதம்) இக லோக புத்தி—

(பொருள்) இக லோக போக விருப்பப் புத்தியை யும்,

(பதம்) பர லோக புத்தியைத்—

(பொருள்) பர லோக போக விருப்பப் புத்தி யையும்

(பதம்) தருகின்ற மாநுட சரீரங்கள்

(பொருள்) கொடுக்கின்ற மாநுட சரீரங்கள்,

(பதம்) உத்தம சாதி யாம்—

(பொருள்) முதன்மைச் சாதி யாகும்

337. வினா:— இக லோக போக விருப்பப் புத்தி யாதெனின்?

விடை:- பூ லோகத்தி லுள்ள தயில ஸ்நாந ஆடை ஆபரண போசந தாம்பூல பரிமள மாலை சந்தந ஸ்திரீயாதிய போக விஷயங்களை யடைய வேண்டு மெனக் கருதிப் பிரவிர்த்திக்கப்பட்ட புத்தி யென அறிக. (337)

338. வினா:— பர லோக போக விருப்பப் புத்தி யாதெனின்?

விடை:- சுவர்க்காதி லோகங்களி லுள்ள அரம்பா ஸ்திரீ அமிர்தாதி போக விஷயங்களை யடைய வேண்டுமெனக் கருதி, யாகம் தாநம் தவ மாதியவை களிற் பிரவிர்த்திக்கும் புத்தியென அறிக. (338)

(பதம்) பரலோக புத்தியை மறைத்து இகலோக புத்தியை மாத்திரந் தருகின்ற பசு பக்ஷி யாதிய சரீரங்கள், மத்திம சாதியாம்.—

(பொருள்) வெளி.

339. வினு:- பசு பக்ஷியாதிகளுக் குள்ள இக லோக போக விருப்பப் புத்தி யாவது யாதெனின்?

விடை:- ஆகார நித்திரை மைதுநங்களை மாத்திரம் விரும்பிப் பிரவிர்த்திக்கும் புத்தி யென அறிக. (339)

(பதம்) இரு வகைப் புத்தியையு மறைத்திருக் கின்ற மரங் கொடி செடி யாகிய சரீரங்கள், அதம சாதியாம்—

(பொருள்) வெளி.

340. வினு:- சத்துவ குண சூட்சும பூத காரிய மாயும், சேதந சம்பந்தத்தால் ஞாந ரூபமாயும், உள்ள அந்தக் கரண விருத்தியாகிய புத்திக்குத், தாமத குண தூல பூத காரியங்களாயும், சடங்களாயு, முள்ள தூல சரீரங்கள், போகாதிகளின் விருப்பங் களைத் தரு மென்ப தெங்ஙன மெனின்?

விடை:- மேகத்தினின்று விழும் சூட்சும மாகிய சுத்த சலத்துக்குத், தூல மாகிய நெய்த லாதிய நிலங்கள் தத்தம் வேறுபாட்டுக்குத் தக்க கைப்பாதிய பேத ரசங்களைத் தருவது போல, சூட்சும மாகிய

அந்தக் கரண விருத்திக்குத் தூல சரீரங்கள், தத் தம் வேறுபாட்டுக்குத் தக்கதாகப் புத்தியைத் தருகின்றன வென அறிக. (340)

(நூல் பிரிவு-20)

இப்படிப் பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் றோற்றுகின்றது போல, அப்பு, அக்கிநி, வாயு ஆகாய மென்னப்பட்ட தத்துவங்களாய், நிர னிரையே யிருக்கின்ற பிதிர்லோக, தேவலோக, யக்ஷ கந்தர்வலோக, சித்தர் லோகங்களினும், சந்திரன் நட்சத்திரமாகத் தோற்றுகின்ற பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், யக்ஷகந்தருவர்கள், சித்தர்கள், சரீரங்கள் உத்தம சாதியாம். காமதேநு, ஐராவதம், அந்நம், கருடனுதிய சரீரங்கள், மத்திம சாதியாம், கற்பக விருக்ஷம், பாரி ஜாத மாதிய சரீரங்கள், அதம சாதியாம்.

இப்படிப் பிரகிருதி முதற் றூலசரீர மீருயுள்ள தத்துவங்களின் தோற்றங்கள் சொல்லப்பட்டன.

இதன் பொருள் வெளி.

341. வினு:- இச் சரீரங்களைத் தூல மென்றது யாதினு லெனின்?

விடை:- சூட்சும மாக இராமல், தூல பூத காரியமாய்ச், சருமாதியாறு தத்துவமாய்ச், சட் பாவ விகார முளதாய்ச், சட் கோசாத்மக மாய்க், கர சரணுதி யவயவாகாரமாய், காஷ்ட குட்டியம் போற், சடமாய், நான்கு முழ மட்டாய்ப், பிரத்தியக்ஷமாய் அறியத் தக்கதாய், ஸ்தம்பம் போல், தூலிகரித் திருத்தலி னென அறிக (341)

342. வினு:- சட் பாவ விகாரங்க ளெவை யெனின்?

விடை :- கருவாகத் திரளுதல், சநித்தல், வளர்தல், பருத்தல், குறைதல், மரித்தல், ஆகிய இவைகளென அறிக. (342)

343. வினு:- தூல சரீரத்தைச் சட் கோசாத்மக மென்றது யாதினு லெனின்?

விடை:- ஆறு தத்துவங்களும், ஒவ்வொன்றை, ஒவ்வொன்று, மறைத்திருத்தலினென அறிக. (343)

344. வினு :- சருமம் உதிரத்தையும், உதிரம் மாம்ஸத்தையும், மாம்ஸம் சநாயுவையும், சநாயு அஸ்தியையும், அஸ்தி மச்சையையும், மறைத் திருப்பதுபோல, மச்சையொன்றையு மறைத்திராமை யால், தூல சரீரம் சட்கோச மாகா தெனின்?

விடை:- மச்சையுஞ் சுக்கிலத்தை மறைத்திருத்த லால் *சட் கோச மாகுமென அறிக. (344)

345. வினு:- அற்றேல், இந்நூல் தூல சரீரத்தை (7) தத்துவமாகக் கூருமல் (6) தத்துவமாகக் கூறிய தென்னை யெனின்?

விடை:- சில நூல்கள் சுக்கிலத்தையுஞ் சேர்த்து (7) தத்துவங்களாக வுள்ளது, தூல சரீரமெனக் கூறு கின்றன. இந்நூல் மச்சைக்கும் சுக்கிலத்துக்கு முள்ள, மிகுந்த ஒற்றுமை பற்றி, சுக்கிலத்தை மச்சையில் அடக்கி (6) தத்துவமாகக் கூறிற்று. இங்ஙனம் பல நூல்களுங் கூறுகின்றன வென அறிக. (345)

---

* உரோமத்தால் சருமமும், சருமத்தால் உதிரமும், உதிரத்தால் மாம்ஸமும், மாம்ஸத்தால் சநாயுவும், சநாயுவால் அஸ்தியும், அஸ்தியால் மச்சையும் மறைக்கப்பட்டிருத்தலால் சட் கோச நாமம் தூல சரீரத்துக் குண்டாகிய தென்பாரு முளர்.

346. வினு:– இதற்குத் தேகமெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:– பூதாக்கிநியினுற் றகிக்கப்படுகின்ற மையினென அறிக. (346)

347. வினு:– பொய்யாகிய தேகத்துக்கு மெய்யெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- விளக் கிருத்தற்குத் தாநமாகிய தண்டி னுக்கு, விளக்கெனப் பெயர் வந்தது போல, மெய்ப் பொருள் விளங்குதற்குத் தாநமாகிய தேகத்துக்குத் தாநியாகு பெயராக, மெய்யெனப் பெயர் வந்த தாகும். இது நிற்க, காராட்டிற்கு வெள்ளாடெனப் பெயர் வந்தது போல, வந்த தெனினும் அமையு மென அறிக. (347)

348. வினு:– இதற்குச் சரீரமெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:– அந்நாதி யாகாரக் குறைவினுனும், வியாதியாதிகளினுனும், முதுமையினுனும், சீரணித் துப் போகின்றமையி னென அறிக. (348)

349. வினு:- தூல சரீரங்கள் மரிக்கில், அவைகளி லிருந்த ஜீவர்கள், வேறு சரீரங்களை யடையுங் கிரமம் எங்ஙன மெனின்?

விடை:- ஜீவர்கள் சரீரங்கள் மரிக்கில், சூட்சும காரண சரீரங்களோடு வெளிப்பட்டு ஆகாயத்திற் கலந்து, பின் வாயுவிலும், பின் அக்கிநியிலும், பின் புகையிலும், பின் மேகத்திலும், பின் வருஷ சல தாரை யிலுங் கலந்து, அதனுேடு பூமியிலிறங்கிச் சமுத்திரம் நதி தடாக கூபாதிய சலங்களிலும், வித்து வேர் கிழங்காதிகளினும், புல், பூடு, கொடி, செடி, மரம்,

காய், கனி யாதிகளினும், நெல் உழுந்து கடலை யாதிய தாநியங்களினும், பிரவேசித்து அந்நமய மாவர்கள். இவர்களிற், புண்ணிய பல முடையார் இச் செந்மங்களையும், இச் செந்மங்களுக்குரிய சுக துக்கங்களையு மடையாதவர்க ளாய், இச் செந்ம சம்பந்த மாத்திர முடையவர்களா யிருந்து, பின்பு அந்ந சல மார்க்க மாகவே மாநுட சரீரங்களிற் பிரவேசித்து, மாநுட சரீரங்களை யெடுப்பார்கள். சில பாப பல முடையார், மிருகம், பட்சி மச்ச மாதிய சரீரங்களிற் பிரவேசித்து, யானை, குதிரை, புலி, பசு வாதிய மிருக சரீரங்களையும், கருட னாதிய பட்சி சரீரங்களையும், மகர மாதிய மச்ச சரீரங்களையும், சில பாவ பல முடையார், புற் பூடாதிய தாவர சரீரங்களையும் அடைந்து, கன்ம தாரதம்மியப்படி சுக துக்கங்களை யநுப விப்பார்கள். பாவ பல முடைய இரு திறத்தார்களும், பாவம் குறைந்து, புண்ணியம் அதிகரித்த போது, அந் தந்தத் தேகங்களை விடுத்து, முன் போலவே வந்து, அந்ந மார்க்க மாகவே மாநுட சரீரங்களை யெடுப்பர்க ளென அறிக. (349)

350. வினா:- மாநுட சரீரத்திற் ஜீவ சம்பந்த மாய்ப் பிரவேசித்த அந்நம், சரீராகார மாகிப் பூமியிற் சநிக்குங்கிரம மெங்ஙன மெனின்?

விடை:- சரீரத்துட் பிரவேசித்த அந்நம், பிரதமத்தில் ரச மாய், பின் புதிர மாய், பின்பு மேத சாய், பின்பு அஸ்தி யாய், பின் மச்சை யாய், பின் சுக்கில மாய்ப் பரிணமித் திருக்கும். புருடனும், ஸ்திரீயும், புணரும் போது, பாலும் மோரும் கலந்து தடித்துத் தயிராவது போலப், புருட தேகத்திலிருந்து வெளிப்படும் சுக்கிலமும், ஸ்திரீயினிட மாக இருந்து பெருகுஞ் சுரோணிதமும், கலந்து ஸ்திரீயின் வயிற்றி லுள்ளகருப்ப கோளகத்திற் கருப்ப மாகத்தடிப் புற்று, முதன் மாதத்திற் குழம் பாகும். இரண்டா மாதத்திற்

கருப்ப வாயுவும், மூலாக்கிநியும், பட்டுக், கருப்ப மிறுகி மாமிச பிண்ட மாகும். மூன்ரு மாதத்தில் பிண்டம் விருத்தியாகி, யதிற் கர சரணுதி யவயவங்கள் அங்குரிக்கும், நான்கா மாதத்தில் அவயவங்களோடு சரீரம் விருத்தி யடைந்து, அதனுல் கருப்பஞ் சலித் தசையும். ஐந்தா மாதத்தில் அதிகரித் திருந்தது சுக்கில மானுல் ஆண் குறியோடும், சுரோணித மானுல் பெண் குறியோடும், இரண்டும் சமமா யிருந்தால் அலிக் குறியோடும், மநாதி தத்துவங்களும், பிராண சலந மாதிய காரியங்களுந் தோன்றும். ஆரு மாதத்தில், அறி வுதய மாவதோடு, மாதாவுக் குள்ள பசி தாகங்கள், புசிக்கும் ஆகாரங்கள் சிசுவுக்கும் உள வாம். இஃதன்றிச் சிசு கருப்பாசயப்பை யுறுத்தல், அதிற் சலம் பூரித்தல், உதராக்கிநியினுல் வேவுதல் முதலியவற்ருற் றுன் புறும். ஏழா மாதத்திற், பூர்வ ஞாந முதய மாகி, முன் பெடுத்த, அநந்த சநந மரணங்களும், சநந மரண நரகாதிகளால் அளவின்றித் துக்கங்களை யநுபவித்ததுந் தோன்றும். எட்டா மாதத்தில், நரகத்தை யநேக கோடி காலம் அநுபவித் தாலும் அநுபவிக்கலாம்; கருப்ப வேதனையை ஒரு கண மேனும் அநுபவிக்க முடியாது; ஆதலின், பூமியிற் சநித்த வுடனே துறந்து குருவை யடைந்து, அவர் கிருபையால் ஞான மடைந்தா லன்றிச் சநந மரணுதி துக்கங்கள் நிவிர்த்தி யாகாவா மென்னும் நிச்சயத்தால், பூமியிற் சநிக்கும் நாளென்ருே வெனத் தீவிர மான சிந்தனையோ டிருக்கும். ஒன்பதா மாதம் பத்தா மாதங்களில் மலைமேலிருப்பவனைத் தலை கீழாகத் தள்ளுவது போலும், குடத்துட் பருத்த பூசணிக் காயை வெளிப்படுத்துவது போலும், சிசுவைப் பிரசூத வாயு அதோமுக மாக யோநி ரந்த்ர வழியாய்த் தள்ளி வெளிப்படுத்தும். அப்போது சிசு ஆலையில் நெருக் குண்ட இளங் கரும்பு போல், நெருக் குண்டு சகிக்க முடியாத துக்கத்தால்

மூர்ச்சித்துப் பூர்வ ஞாநத்தையு மறந்து பூமியில் விழும். விழுந்த பின்னர், மூர்ச்சை தெளியும் போது, பூர்வ ஞாந முதய மாகாத வண்ணம் விஷ்ணு மாயை யாகிய வாயுவால் மூடப்பட்டுப், பூர்வம் போல, அஞ்ஞாந வச மாகவே யிருக்கு மென அறிக. (350)

351. விஞ:— சுக்கில சுரோணிதங்களே ஆறு தத்துவங்க ளாயின வெனின், சுக்கில பரிணாம தத்துவங்க ளெவை? சுரோணித பரிணாம தத்துவங்க ளெவை யெனின்?

விடை:— சநாயு, அஸ்தி, மச்சை யாகிய மூன்றும், சுக்கில பரிணாம மாகும். சருமம், உதிரம் மாம்ஸ மாகிய மூன்றும், சுரோணித பரிணாம மாகு மென அறிக. (351)

352. விஞ:- பஞ்ச பூதமே தூல சரீர மானால், தூல சரீரத்தில், பூதங்களின் அம்ஸங்கள் காணப் படுகிறதோவெனின்?

விடை:- ஆகாய முதலிய ஐந்து பூதங்களின் அம்ஸங்களும், தூல சரீரத்தில், முறையே வெளி, சலநம், உஷ்ணம், திரவம், கடிந மாகக் காணப் படுகிற தென அறிக. (352)

353. விஞ:- தூல சரீரங்களிற் சேர்ந்துள்ள ஐந்து பூதாம்ஸங்களி லொன்று குறைவுபடு மாயின், அதனை யெதனு லறியலா மெனின்?

விடை:— சரீரத்தில் மடிப்புக்க ளுண்டாயின், பிருதிவி பூதாம்ச சத்தியும்; நரை யுண்டாயின், அப்புப் பூதாம்ச சத்தியும்; பசியும், அழகுங் குறையின், அக்கிநி பூதாம்ச சத்தியும்; நடுக்க லுண்டாயின், வாயுபூதாம்ச சத்தியும்; சரீரஞ் சீவியாது மரிக்கு மானால், ஆகாய பூதாம்ச சத்தியும் குறைந்த தென அறியலா மென அறிக.

பிரமாணம்

(வராகோபநிஷத்து 5 ஆவது அத்தியாயம்)

"சரீரத்திற் பிருதிவி மண்டலங் குறைந்தால், மடிப்புக ளுண்டாகின்றன. ஜல பாகங் குறைந்தால், கிரம மாக நரை யுண்டாகிறது. அக்கினி பாகங் குறைந்தால், பசியுங், காந்தியுங் குறைகிறது. வாயு பாகங் குறைந்தால், எப்போதும் நடுக்க லுண்டா கிறது, ஆகாச பாகங் குறைந்தால், ஜீவித் திருக்கிறதே யில்லை. (353)

354. வினா:- இத் தத்துவங்களின் றோற்றங்களைச் சுருதிகள் கூறியது யாது நிமித்த மெனின்?

விடை:- மண்ணிற் றோன்றிய கடாதிகள் மித்தை யெனவும், மண்ணே சத்திய மெனவும், அறிவது போலப், பிரஹ்மத்திற் றோன்றிய (35) தத்து வங்களும் மித்தை யெனவும், பிரஹ்மமே சத்திய மெனவும், அதுவே தாமெனவும். அறிந்து முமுட்சுக்கள் பந்த நிவிர்த்தர்க ளாகும் நிமித்த மென அறிக. (354)

355. வினா:- சுருதிகள் கூறிய தத்துவோற்பத்திக் கிரமங்க ளெத்தனை? அக் கிரமங்களில் எந்தக் கிரம வாயி லாக, இந் நூல் உற்பத்தி யாதிய கிரமங்களைக் கூறிற் றெனின்?

விடை:- ஏக ஜீவ வாதம், அநேக ஜீவ வாத மென இரண்டாம் இவ்விரண்டில், மந்தாதிகாரிகளை நோக்கி, ஏக ஜீவ வாதத்தை விடுத்துத், தூலாருந்ததி நியாயம், சாகா சந்திர நியாய மாகப், முன்னர்க் காரியப் பிரபஞ்சத் தோற்ற முரைத்துப்,

பின்னர் அப் பிரபஞ்சம், காரண மாகிய பிரஹ்ம மத்துக்கு அந்நிய மாக இல்லை யென அபவாதித்து, இருப்பது பிரஹ்மமே யெனத் தெரிவிக்கின்ற அநேக ஜீவ வாதக் கிரம மாக இந் நூல் கூறிற் றென அறிக. (355)

356. வி௵:- அற்றேல், இந் நூற்கு அநேக ஜீவ வாதக் கட்டளை யெனப் பெயர் கூருமல், நாநா ஜீவ வாதக் கட்டளை யெனப் பெயர் கூறியது யாதி௵ லெனின்?

விடை:- ஜீவர்க ளநேக ராயினும், ஒரு ஜீவனைப் போல், மற்றொரு ஜீவனு மிராமல், கன்ம பேதத் தால் நாநா வித பேத தருமங்களைப் பொருந்தி யுள்ளார்க ளென்பதையும், ஒவ் வொரு ஜீவனிடத் திலு மிருக்கின்ற நாநா வித ஜீவத்துவங்களை வாதிக்கும் கிரமங்களையும் தெரிவிக்கின்றமையி னென அறிக. (356)

357. வி௵:-அற்றேல், பிரபஞ்சோற்பத்திக் கிரமத் தைச் சுருதிகள், ஒரே பிரகார மாகக் கூருமல், நாநாப் பிரகாரமாகக் கூறியது யாதி௵ லெனின்?

விடை:- பிரபஞ்சம் சத்திய மாயின், அதன் உற்பத்திக் கிரமங்களைச் சுருதிகள் ஒரே பிரகார மாகக் கூறும். அங்ஙன மின்றி, மலடி மகன், கயிற் றரவு, கானற் சலம், சொப்பனப் பிரபஞ்சம் போல, மித்தை யானமையால், மூலைத் தாதிகள், பாலகர் கட்கு மலடி மக னுற்பத்தி யாதிய சரித்திரங்களை நாநாப் பிரகார மாகக் கூறுதல் போலக், கூறின வென அறிக. (357)

358. வி௵:-பிரபஞ்சம் மித்தை யென்பதற்கு, மலடி மகன், கயிற் றரவு, கானற் சலம் சொப்பனப் பிரபஞ்

-சங்கள் என்பவற்றில், ஏதேனும் ஓர் திருட்டாந்தங் கூறுதல் போதுமானதா யிருக்க, நாலு திருட்டாந்தங் கூறுதல் மிகை யன்றோ வெனின்?

விடை:-பிரபஞ்சம் பொரு ளாக யிராமல், பெயர் மாத்திர மாக வுள்ள மித்தை யென்பதற்கு, மலடி மகனும்; மலடி மகன் போல், பெயர் மாத்திர மாக இராமல், உருவ மாகவுந் தோற்றுகிறதே யென ஆசங்கை வரின், அதனை நிராகரித்தற்குப் பொரு ளாக இன்றிப் பெயரினோடு உருவ மாகவுந் தோன்றா நின்ற கயிற் றரவும்; கயிற் றரவு விசாரிக்குங் கால் தோற்ற மின்றிக் கெடுவது போலப், பிரபஞ்சம் விசாரிக்கினுங் கெடாமற் றோற்றுகிறதே யென ஆசங்கைவரின், அதனை நிராகரித்தற்கு, விசாரித்து மித்தை யென அறியினும் கெடாமற் றோன்றுவ தாகிய கானல் சலமும்; கானற் சலம் தோன்றினும் அநுபவத்துக்கு வரா திருப்பது போ லன்றிப் பிரபஞ்சம், சப்த பரிச, சுக துக்காநுபவத்துக்கு வருகின்றதே யென ஆசங்கை வரின், அதனை நிரா கரித்தற்கு, பொரு ளல்லாததாயும், தோற்ற மாத்திர மாயும், சப்த பரிச சுக துக்காநுபவத்துக்கு வருவ தாகிய சொப்பனப் பிரபஞ்சமும்; திருட்டாந்த மாகும். ஆதலின், மிகையன் றென அறிக. (358)

359. வினா:-மித்தை யாகிய பிரபஞ்சத்துக்கு, உற்பத்திக் கிரமந் தான் யாதுக்குக் கூறிற் றெனின்?

விடை:- மாங் கொட்டை காலிற் கௌவச் சர்ப்பந் தீண்டிய தெனவும், அதனால், விட மேறிய தெனவும், பிராந்திமேற் பிராந்தியை யுற்றுக் கலங்கா நின்ற பிராந்தனுக்கு, உண்மை கூறிற் றெளிவுறா னென அறிந்த ஆப்தனானவன், அவன் புத்தியை யநுசரித்து விடந் தீர்ப்ப தாக வேப் பிலை யாதிகளா லடித்து மந்திரிப்பது போல, மித்தையாப் பிர

பஞ்சத்தைச் சத்திய மாகக் கருதிக் கலங்காநின்ற கால கன்ம வாசனையோடுகூடிய பிராந்தனுக்கு, ஆப்த வாக்கிய மாகிய சுருதிகள், பிரஹ்மமே யுள்ளது; அதுவே நீ; வேறு பொரு ளின் றென உண்மை கூறிற் றெளிவுரு னென அறிந்து, தூலாருந்ததி நியாயம், சாகாசந்திர நியாயமாகத் தெரிவிக்க வேண்டும் எனக் கருதி, முன் காரியப் பிரபஞ்சத் தோற்ற முரைத்து, அப் பிரபஞ்சம், காரணமாகிய பிரஹ்மத்துக்கு அந்நிய மாக இல்லை; யென அபவாதித்து, அத்வைதப் பிரஹ்மத்தைத் தரிசிப்பிக்கும் நிமித்தம் கூறிற் றென அறிக. (359)

360. வினு:- சுருதிகள் - கால, கன்ம வாசநாப் பிராந்தனிமித்தம் பிரபஞ்சோற்பத்திகள் கூறினும், ஒன்றற் கொன்று முரணுந் தன்மை நோக்காமற் கூறிய தென்னை யெனின்?

விடை:- மாசித் திங்களிற் சிற் சிலரால் கொண்டாடப்படு மதன் பண்டிகையில், மதன் சிவ பெருமான் நுதல் விழியா லெரிந்த சரிதையை யுருவகப் படுத்தித் தெரிவிக்கும் நிமித்தம், மூங்கிற் சிம்பாதிகளால் மத னுருவங்களை யமைப்பவர்களுக்கு, அவ் வுருவங்களை அக்கினியினுற் கொளுத்தி விடுவதில் அபிப்பிராயமே யன்றி, யொழுங் குற அமைத்து வைத்து, ஆராதிப்பதில் அபிப்பிராய மின்மையால், அதனுருவம் ஒருவ ரமைத்தது போலவே யமைக்க வேண்டு மெனவும், அத னவய வங்கள் சாமுத்திரிகா லக்ஷணங்கட்கு விரோத மாக இராமல், பொருத்த மாகவே யிருக்க வேண்டு மென வும், எண்ணும லமைப்பது போலச் சுருதியாதிகட்கு அத்வைதப் பிரஹ்மத்தைத் தரிசிப்பிக்கும் நிமித்தம் இரச்சுவிற் சர்ப்பம் போற், பிரஹ்மத்திற் கற்பித மாகிய பிரபஞ்சத்தை, மித்தை யென நிஷேதஞ் செய்வதில் அபிப்பிராயமே யன்றிச், சத்திய மென நிலைநிறுத்தற்கு அபிப்பிராய மின்மையால், பிரபஞ்

சோற்பத்திகளை யொன்றற் கொன்று முரணும் வழி நோக்காமற் கூறிற் றென அறிக. (360)

2. அத்தியாரோப நிருபகம் முற்றிற்று.
சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

உ

சிவமயம்

ஓம் பரப் பிரஹ்மணே நம:

சிதம்பர தேசிகன் றிரு வடி வாழ்க.

நாநா ஜீவ வாதக் கட்டளை வியாக்கியானம்.

## 3. *திதி நிருபகம்.

*அவதாரிகை.*

பிரஹ்மத்திற் றேன்றிய சரீரத் திரயங்களின் நிலைமைகளும், ஜீவேசுரர்கட்குச் சாக்கிராதி யவத்தைகளால் வரும் நாமங்களும், தூல சரீராதிகளைப் பற்றியெழாநின்ற விவகாரங்கட்குக் கூடுந் தத்துவங்களும், இவைக ளெனத் தெரிவிப்பான் றெடங்கி, முன்னர் சரீரத் திரயங்கள், ஐந்து கோசங்களா யிருக்கும் நிலைமைகளை நிருபிக்கின்றார்.

(நூல் பிரிவு-21)

தூலசரீரமே அந்நமய கோசம், சூட்சும சரீரம் மூன்று கோசங்களா யிருக்கும். எங்ஙன மெனின்? பிராண வாயுவுங் கன்மேந்திரியங்களுங் கூடிப் பிராணமய கோசம். மநதும், ஞாநேந்திரியங்களுங் கூடி மநோமய கோசம். புத்தியும் ஞாநேந்திரியங்களுங் கூடி விஞ்ஞாநமய கோசம். காரண சரீரமே ஆநந்தமய கோசம். இப்படிப் பஞ்ச கோசங்கள் சொல்லப்பட்டன.

---

*திதி நிருபகம் - நிலைமை விளக்கம் கூறுதல்.

(பதம்) தூல சரீரமே—

(பொருள்) ஆறு தத்துவ மாகிய தூல சரீரமே,

(பதம்) அந்நமய கோசம்—

(பொருள்) அந்நமய மறைப்பாம்.

1. வினா:- தூல சரீரத்தை அந்நமய மென்றது யாதினா லெனின்?

விடை:— மட்சுவர் மண்ணாற் றோன்றி, மட் பூச்சாற்றிதி பெற்று, மண்ணே சொரூபமா யிருத்தல் போல, மாதா பிதாக்க ளுண்ட அந்ந சார மாகிய சுக்கில சுரோணிதங்களே மாதா கருப்பத்திற் பிண்ட மாகி, மேலும் மாதா வுண்ட அந்ந சாரங்களை யருந்திக் கர சரணாதிய அவயவா கார மாகிப் பூமியிற் சநித்த பின்னரும், அந்ந சார மாகிய பாலையும், அந்நத்தையுமே யுண்டு, வளர்ந்து பருத்துச் சீவித்து அந்நக் குறைவால் மரித்து, நாய் நரி கழுகாதிகளுக்கு அந்ந மாவது மன்றி, அந்ந காரண மாகிய பிருதிவி யிற் றானே லயமாகின்றமையி னென அறிக.

பிரமாணம்

(சாம வேதம் மைத்திராயணி யோப நிஷத்து 6-ஆவது பிரபாடகம்)

"பிருதிவியை ஆசிரயித்திருக்கிற பிரஜைகள், அந்நத்தினா லுண்டாகிறார்கள். அந்நத்தினால் ஜீவிக் கிறார்கள், முடிவில், அந்த சொரூப மான பூமியிலேயே லய மடைகிறார்கள்." (1)

2. வினா:- தூல சரீரத்தைக் கோச மென்றது யாதினா லெனின்?

விடை:— கத்தியை யுறை மறைத்தல் போல, நான் மனுஷ்யன், நான் பிராஹ்மணன், நான் பிரஹ்மசாரி, நான் பருத்தே னிளைத்தே னென அகந்

சத்தார்த்த மாகிய ஆத்மாவை, மறைத்துக் கொண்டி ருத்தலி னென அறிக. (2).

3. வினு:- கூட்டினுள் குருவியிருப்பது போலத், தூல சரீரத்தினுள் ஆத்மா வென வோர் பொரு ளிருக்கு மாயின், அதனைத், தூல சரீரம் மறைக்கு மெனல் பொருந்தும். தூல சரீரங்களைப் பிளந்து தோ லிரத்தாதிகளை வேறு வே ருகப் பிரித்துப் பார்க்கில், ஆத்மா வென ஓர் பொருள் காணக் கிடையாமையால், தூல சரீரமே ஆத்மா வாகும். ஆதலின், தூல சரீரத்துக்கு வேருக ஆ த் ம ா வுண் டெனலும், அதனைத் தூல சரீர மறைக்கிற தெனலும், அசம் பாவித மெனின்?

விடை:- கடத்துள் ளிருக்கும் பதார்த்தங்களையும், துவார வாயி லாக வெளியி லிருக்கும் பதார்த்தங் களையும், கடத்துள் ளிருந்து விளக்குவிக்கின்ற தீப மானது, கடத்துக் கந்நியமாகப் பிரகாசித்துக் கொண்டிருப்பது போலத் தூல சரீரத்தினுள் ளிரா நின்ற மநாதி தத்துவங்களையும். இந்திரிய வாயி லாக வெளியி லிருக்கும் விஷயங்களையும், அறியா நின்ற ஆத்மா, சரீரத்தினுள் அறி வாக விளங்கிக் கொண்டிருப்பதைப், பகலிற் சூரியனை யறியாத கோட்டான் பட்சியைப் போல, அறியாமல், தூல சரீரத்தினுள் ஆத்மா இல்லை யென்பதே அசம்பா விதமும், சுருதி யுத்தி யநுபவங் கட்கு விரோதமுமா மென அறிக. (3).

4. வினு:- தூல சரீரம் ஆத்மா வென்பதற்கு விரோதந மதா நுசார மான பல சுருதிக ளிருத்த லினுனும், அரசனுள்ள போது இராச்சிய விவகாரம் நடக்குதல் போலத் தூல சரீர முள்ள போது இடுத லேற்ற லாதி விவகாரங்கள் நடக்குத லாதிய யுத்திக ளிருத்தலினுனும், அக விருத்திக்கு விஷயமா யுள்ளது ஆத்மா வென்னும் சுருதிகட் கேற்க,

நான் மனுஷ்யன் நான் பருத்தே னிளைத்தே னென, அக விருத்திக்குத் தூல சரீரம் விஷயமாகின்ற அநுபவ மிருத்தலினுனும், தூல சரீரத்தை ஆத்மா வெனல் சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மில்லையே யெனின்?

விடை:- சுழுத்தி மூர்ச்சை சமாதிகளிற் றூல சரீர மிருந்தும், இடுத லேற்ற லாதி விவகாரங்கள் நடவாதிருக்கத், தூல சரீர முள்ள போது இடுத லேற்ற லாதி விவகாரங்கள் நடக்கின்றன வெனலும்; எது மமதா விருத்திக்கு விஷயமோ, அது அக விருத்திக்கு விஷய மல்ல வென்பது துணிபா யிருக்க, என் தேக மென, மமதா விருத்திக்கு விஷயமாகின்ற தூல சரீரத்தை, அக விருத்திக்கு விஷயமாகிய ஆத்மா வெனலும்; அத்தியாசமே யாம். இஃதன்றிச், சர்வஞ்ஞ ஞகிய ஈசுரனல் வெளியிட்டருளிய நான்கு வேதங்களும், அவைகளை முன் னூல்க ளாகக் கொண் டொழுகும் பிரஹ்ம சூத்திர முதலிய வழி நூல்களும், சார்பு நூல்களும், சுருதிக ளாகும். அச் சுருதிகளுக்கு அவிரோதமாகிய திருட்டாந்தங்கள் யுத்திக ளாகும். இவ் விரண்டிற்கு மொத்த அநுபவம் அநுபவ மாகும். அவைகளை விடுத்து, அஞ்ஞாநத்தாற் சநந மரணதி சம்சாரத்திற் சுழலும் பிராந்தர்க ளாகிய விரோச நாதியர் கூறிய நூல்களைச் சுருதிக ளெனவும்; இவ் வாபாச நூல்களுக் கநுசார மாகிய குயுத்திகளை யுத்திக ளெனவும்; இவ் விரண்டிற்கும் ஒத்த தாகக் கானலைச் சல மென் றறிந்தது போல, அநாத்மாவை ஆத்மா வென்றறிந்த அத்தியாசாநுபவத்தை யதார்த்தாநுபவ மெனவும் மயங்கி, ஆத்ம இலக்கணம் அற்பமேனு மின்றி, அநாத்ம இலக் கணங்களே யமையப் பெற்ற தூல சரீரத்தை ஆத்மா வெனக் கூறுதல், உண்மை யாகிய சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மென்பதே சித்தாந்த மென அறிக. (4)

5. வினா:- ஆத்ம இலக்கணங்க ளெவை? அநாத்ம இலக்கணங்க ளெவை யெனின்?

விடை:- இறப் பெதிர்வு நிகழ்வு என்னும் முக் காலத்தினு முள்ள தாகிய (சத்து), சகலத்தையு மறிவ தாகிய (சித்து), பரமப் பிரீதிக்கு விஷய மாகிய (ஆநந்தம்), கண்டப்படாத தாகிய (அகண்டம்), விகார மின்றிய தாகிய (நிருவிகாரம்), அந்நியப் படாமல் தா னுகவே யுள்ள (அநந்நியம்), ஆதிய இலக்கணங்கள், ஆத்ம இலக்கணங்களாம். இவ் விலக்கணங்கட்கு மாருக வுள்ள, அசத்து, சடம், துக்கம், கண்டம், விகாரம், அந்நியம், ஆதிய இலக் கணங்கள், அநாத்ம இலக்கணங்க ளாகு மென அறிக. (5)

6. வினா:- நான் சென்ற வருடம் இராமேசுரத்தி லிருந்தேன், இவ் வருடம் சிதம்பரத்தி லிருக்கிறேன், வருகிற வருடம் வாரணசியி லிருப்பேன் எனத் தூல சரீரத்தை மூன்று காலத்தினு முள்ள தாக விவகரிக் கின்றமையால் (சத் திலக்கணமும்), தன்னைப் பற்றிய பதார்த்தங்களையும், சீதோஷ்ணுதிகளையுந், தூல சரீர மறிந் தநுபவிக்கையால் (சித் திலக்கணமும்), மனைவி புத்திர தந தாநியாதிகள் தூல சரீரத்துக் குபகாரமா மேல், அவைகளிற் பிரியமும், அல்லன வாயின், வெறுப்புஞ், சநிக்கின்றமையினுனும், தயிலோதக மஞ்சநம், கிருத குள பாயச பவ லக்ஷண போசநங் களால் சகலரும் தூல சரீரத்தையே யுபசரித் தலினுனும், பரமப் பிரீதிக்கு விஷயமா யுள்ள (ஆநந்த இலக்கணமும்), கர சரணுதி அவயவங்கள் வேறு வேருகக் கண்டப்பட்டிராமல், ஒரு சரீர மாகவே யிருத்தலால் (அகண்ட இலக்கணமும்), மனுஷ்ய னென்பது மாறுபடாம லிருத்தலால் (நிருவிகார இலக்கணமும்), நான் மனுஷியன், நான் பிராஹ்மண னெனத் தா னுகவே வழங்கப்படுகின்றமையால்

(அநந்நிய இலக்கணமும்) ஆகிய ஆத்ம இலக்கணங்கள், தூல சரீரத்தினிடமாகக் காணப்படுகின்றமையால், தூல சரீரத்தை ஆத்மா வாகிய தானெனக் கூறலா மெனின்?

விடை:- சென்ற வருடம், இவ் வருடம், வருகிற வருட மாகிய மூன்று வருடங்களும், நிகழ் காலத்துள்ளும், அற்ப காலத்தினும் அற்ப கால மாதலால், இவ் வற்ப காலத் துள்ளது சத் திலக்கண மன்ரும். சிருட்டிக்கு முன்னுள்ள பூத காலமும் மகாப் பிரளயத்துக்குப் பின் னுள்ள பவிஷியத் காலமும், சிருட்டிக்கும், பிரளயத்துக்கும், மத்தியி லுள்ள வர்த்தமாந காலமு மாகிய மூன்று காலத்தினு முள்ளது, சத் திலக்கண மாகும். இவ் விலக்கணம் அற்பமேனுமமையப் பெருமல், கருவா யுதித்தற்கு முன்னரும், மரண முற்றலழலிற் கொளுத்தப்பட்ட பின்னரும், சுழுத்தி மூர்ச்சை சமாதி காலங்களினும், இல்லாததுந் தவிர, சாக்கிர காலத்தினும், கடத்தை மண்மய மாக அபவாதிக்கிற் கடத்துக்குச் சொரூப மில்லாதது போலத், தூல சரீரத்தைப் பஞ்ச பூதமய மாக அபவாதிக்கில், அது சொரூப மின்றிய அபாவப் பொருளே யாகின்றமையால் (அசத் தாயும்); தன்னைச் சூழ்ந்த பதார்த்தங்களையும், சீதோஷ்ணுதிகளையும், சரீரத்துக்கு வே ருகிய ஆத்மா அறிகிறதே யன்றிச், சரீர மறிவ தன்ரும், அறியு மெனின், சுழுத்தி மூர்ச்சை சமாதி மரண காலங்களினும், தூல சரீரம் தன்னைப் பற்றிய பதார்த்தங்களையும், சீதோஷ்ணுதிகளையும், அறிய வேண்டும்; அங்ஙன மறியாமையாற் (சட மாயும்); மா வானது வெல்லத்தோடு கூடிய போது, மதுர மாயும், கூடாத போது மதுர மின்மையதாயு மிருப்பது போல, ஆந்மா, தூல சரீரத்தோடு கூடிய போது ஆநந்த ரூபமாயும், கூடாத போது துக்க ரூப மாயு மிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிச், சாக்கிரத்தில் கூடியிருக்கும் போது

துக்கானுபவியாயும், சுழுத்தி சமாதியில் கூடா திருக்கும்போது சுகானுபவியாயு மிருக்கிறது; வெல்ல மானது மாவுடன் கூடிய போதும், கூடாத போதும், மதுரமாகவே யிருப்பது போலத், தூல சரீரம் ஆத்து மாவுடன் கூடிய போதும், கூடாத போதும், பிரியத்துக்கு விஷயமாகவே யிருக்க வேண்டும், அங்ஙன மின்றி ஆந்மாவுடன் கூடியிருக்கும் போது, நரை திரை மூப்பு வியாதிகளினும், மரண மாகி ஆந்மா நீங்கிய போது, பிரேதமாய் வீங்கி வெடித்து நாறுதலினும். பிரியத்துக்கு விஷயமாகாமல், வெறுப்புக்கே விஷயமாதலால், (துக்க மாயும்); கர சரணாதி அவயவங்கள் பிரிந்திராமல் சேர்ந்திருப்பது அகண்ட இலக்கண மன்றும்; ஓர் காலத் துள்ளதாய், மற்றோர் காலத் தில்லாததா யிராமல், எல்லாக் காலங்களினும், ஓர் தேசத் துள்ள தாய் மற்றோர் தேசத் தில்லாததா யிராமல், எல்லாத் தேசங்களினும், ஓர் வஸ்துவி லுள்ள தாய், மற்றோர் வஸ்துவி லில்லாததா யிராமல், எல்லா வஸ்துக்களினும் வியாபித்திருப்பதே, அகண்ட இலக்கண மாகும்; இவ் விலக்கணம் அற்பமேனு மமையப் பெறுமல், ஜீவிக்குங் காலத்திருந்து, சநித்தற்கு முன்னரும், மரித்த பின்னரும், இராமையால், காலத்தினும், காசியி லிருக்கும் போது, இராமேசுரத்தினும், கருப்பத்தி லிருக்கும் போது, வெளியினும், வெளியி லிருக்கும் போது, கருப்பத்தினு மில்லாமையால், தேசத்தினும், தூல வஸ்துக்களி லொன்று யிருந்து, சூட்சும சரீர தத்துவங்களி லொன்று யிராமையால், வஸ்துவினும் பின்னப்பட்டு, நான்கு முழ மட்டா யிருத்தலால் (கண்ட மாயும்); மநுஷிய னென்பது மாறுபடாம லிருப்பது நிருவிகார இலக்கண மன்றும்; சநித்தல் மரித்த லாதி விகாரங்க ளின்றி யிருப்பதே, நிருவிகார இலக்கணமாகும்; இவ் விலக்கணம் அற்பமேனு மமையப் பெறுமல், கருப்பத்திற் குழம்பா யிருந்து, பிண்ட மாகத் திரளுதல், அவயவாகார

மாகுதல், சநித்தல், வளருதல், பருத்தல், இளைத்தல், மரித்த லாதிகளைப் பொருந்துதலால் (விகார மாயும்), அத்தியாசத்தால் அகம் புத்தி செய்யப்படுவது, அநந்நிய இலக்கண மன்றும்; ஓர் காலத்தினும் மமதா விருத்திக்கு விஷய மாகாமல், எப் போதும் அக விருத்திக்கே விஷயமா யிருப்பது, அநந்நிய விலக்கண மாகும். இவ் விலக்கணம் அற்பமேனு மமையப் பெறுமல், என் சரீரம் பருத்தது இளைத்தது என மமதா விருத்திக்கு விஷயமாகின்றமையால் (அந்நிய மாயும்); பஞ்ச பூத காரியமானமையால் (உற்பத்தி யுடைய தாயும்); நியம மின்றி நீர்க் குமிழி போ, லழிவதா யிருத்தலால் (அநித்திய மாயும்); உள்ளிற் சார்ந்த கிருத குள பாயசம், வெளியிற் சார்ந்த புட்ப சந்தநாதி பரிமள வஸ்துக்களையும், துர்க்கந்த வஸ்துக்களாகச் செய்தலு மன்றி, நவத் துவாரங் களினும் மல மூத்திர கோழையாதிகளை யொழுக்கிக் கொண்டிருத்தலால், (அசுத்த மாயும்); இது தேக மெனக் கடம் போல; அறியப் படுதலால் (திரிசிய மாயும்); உள்ள, அநாத்ம இலக்கணங்களைப் பொருந்திய அந்நமய கோச மாகிய தூல சரீரத்தை, ஆத்மா வெனல், தாணுவைப் புருட னெனல் போல. மயக்க மா மென அறிக. (6)

7. வினு:— அந்நமய கோசம், ஆத்மா வல்ல வென்பதற்குச் சுருதி யுத்தி அநுபவங்க ளெவை யெனின்?

விடை:— (கவி) ''என்னுடைய புந்தியினு லெண்ணினேனு னிச்சகநா னல்லமல வுடல்நா னல்ல'' என்னும் (வாசிட்டமும்) (கவி) ''இடையுறு மென்பினை நரம்பி னார்த்திடாப், புடையுறு மிறைச்சியாற் பொதிந்து போக்கற, மிடைதரு தோலினுல் வேயப் பட்டதோ, ருடலினை யானென வுரைக்க வொண்ணுமோ.'' என்னும் (பாகவதமும்), (கவி)

''திரிசியமாய்ச் சிதைகின்ற வுடல் நானல்ல'' என்னும் (ரிபு கீதையும்), (கவி) ''மேதைதொக் கத்தியாதி மேவிய கூட்டமான, ஏதமாந் தேகம் நானென் றெண்ணுவன் மூடனுனேன்''. என்னும் (விவேக சூடாமணியும்), (கவி) ''பிறிவதெப்படி யென்றக்கால் பிணமாகுமுடல் நானென்னும், அறிவினைக் கொல்லல் வேண்டு'' மென்னும் (கைவல்லிய நவநீதமும்), (கவி) ''அறிகின்ற பொருளென்றும் அறிவானில் வேறே யானுலிவ் வூனுக நானென்னலாமோ, செறிகின்ற புள்ளல்லவே கூடிவ் வகையே செடமான வுடல்நின்னில் வேறென்று தெளியே'' என்னும் (சுசிவன்ன போதமும்) சுருதிகளாகும். விளக்கப்படு பொருளாகிய கடபடாதிகள், விளக்கும் பொருளாகிய தீபத்துக் கந்நியமாவது போல, அறியப்படு பொரு ளாகிய அந்நமயகோசம், அறியும் பொருளாகிய ஆத்மாவுக் கந்நிய மென்பதும், பல வேடந் தரித்துத், தாள தார தம்மியப்படி நடிக்குங் கூத்தன், கூத்தைப் பார்க்கும் பிரபுவுக்கு அந்நியமாவது போல பால்ய கௌமாராதிய பல பருவங்களையடைந்து, கன்ம தார தம்மியப்படிநடிக்கும் அந்நமயகோசம், அதனையறிந்து கொண்டு சாட்சி மாத்திரமாக இருக்கின்ற ஆத்மாவுக் கந்நிய மென்பது யுத்திகளாகும் அந்நியமாக இராநின்ற வஸ்திரத்தை, என் வஸ்திர மென்பது போல, வியட்டியாகிய, 'என் சிரம், என் மார்பு, என் கா'லென்பதும், சமட்டியாக 'என் தேக' மென்பதும் அநுபவமாகு மென அறிக. (7)

8. வினு:— அந்நமய கோசம், அக மென்னும் புத்தியை விடுவதால் வரும் பலன் யாதெனின்?

விடை:- அதற்குள்ள சநந, மரண, நரை திரை, மூப்பு, வியாதிகளும், அவைகளாற் றேன்றுந் துக்கங்களுந் தனக் கில்லாமற் போவதென அறிக. (8)

(பதம்) சூட்சும சரீரம் மூன்று கோசங்களா யிருக்கும். எங்ஙன மெனின்?—

(பொருள்) வெளி.

(பதம்) பிராணனும், கன்மேந்திரியமுங், கூடிப் பிராண மய கோசம்.

(பொருள்) பிராணவாயுவும், கன்மேந்திரியங் களுஞ் சேர்ந்து, பிராண பய மறைப்பாம்

9. வினு:- பிராண னல்லாத கன்மேந்திரியங்களையும் பிராண மயமென்றது யாதினு லெனின்?

விடை:- பிராண மென்பது, பெலம். பெல மயமாகச் சலிக்கின்ற பிராண வாயுவின் பெலத்தை, கன்மேந்திரியங்கள் பெற்றே, தத் தந் தொழில்களைச் செய்கின்றவைகளாக இருத்தல் பற்றியென அறிக. (9)

10. வினு:- இவைகளைக் கோச மென்றது யாதினு லெனின்?

விடை:- வீணையைக் கௌசனை (மூடி = உறை) மறைத்தல் போல, 'நான் பலவான், பலவீநன், நான் வசநித்தேன். கமநித்தே' னென அகஞ் சத்தார்த்த மாகிய ஆத்மாவை மறைக்கின்றமையினென அறிக. (10)

11. வினு:- பிராணனுக் கந்நியமாக ஆத்மாவென வோர் பொருளிருக்கு மாயின். அதனைப் பிராணமய கோச மறைக்கிற தெனல் பொருந்தும். அவைகளைச் சோதிக்கில், பிராணுதி கன்மேந்திரியங்களைத் தவிர ஆத்மா வெனவோர் பொருள் காணக்கிடையாமை

யால், பிராண கன்மேந்திரியங்களே, ஆத்மாவாகும். அவைகட் கந்நியமாக, ஆத்மாவுண் டெனலும், அதனைப் பிராணாதிகள் மறைக்கிற தெனலும் அசம்பாவித மெனின்?

விடை:- வீட்டினுளிருந்து வெளியே போதலும் உள்ளே வருதலுமாக இராநின்ற குழந்தையைப், பார்த்துக் கொண்டிராநின்ற பிதாவானவன், அக் குழந்தைக் கந்நியமாக இருப்பது போல, இருதயத் திருந்து, இடைகலை பிங்கலை மார்க்க மாகத் தூல வாயுவை வெளியிற் றள்ளுதலும், உள்ளி லிழுத்தலு மாகச் சலித்துக் கொண்டிரா நின்ற பிராணனை அறியா நின்ற ஆத்மா, பிராணனுக் கந்நியமாக விளங்கிக் கொண்டிருப்பதை, நாவிலுள்ள வெல்லத் தின் சுவையை யறியாத சுர ரோகியைப் போ, லறியாமல், பிராணாதி கன்மேந்திரியங்களுக் கந்நிய மாக ஆத்மா இல்லையெனலே அசம்பாவிதமும், சுருதி யுக்தி யநுபவங்களுக்கு விரோதமுமா மென அறிக. (11)

12. வினா:- பிராணன் ஆத்மா வென்பதற்கு இரணிய கருப்ப வுபாசிகள் மதாநுசாரமான பல சுருதிக ளிருத்தலினானும், பிராண னடங்கிய போது தேகம் பிணமாதல், சகலமு மடங்கிய சுழுத்தியில், பிராணன் ஜீவிதமா யிருத்தல், காற்றுள்ள போது கப்பலோடுந் தொழில் நடக்குதல் போலப், பிராண னுள்ள போது சரீராதிகளின் தொழில் நடக்குதல் முதலிய யுத்திக ளிருத்தலினானும், அக விருத்திக்கு விஷயமா யுள்ளது ஆத்மா வென்னுஞ் சுருதிகட் கேற்ப, 'நான் பலவான், நான் பலவீநன், நான் வசநித்தேன், கொடுத்தேன்' னெனப் பிராணாதி கன் மேந்திரியங்கள், அகவிருத்திக்கு விஷயமாகின்ற அநுபவ மிருத்தலினானும், பிராண மயகோசத்தை, ஆத்மா வெனல், சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மில்லையே யெனின்?

விடை:— சமாதி மூர்ச்சைகளிற் பிராண னடங்கியபோது, தேகம் பிணமாகாதிருத்தலும், பிராணன் தோன்று தடங்கியிரா நின்ற விருக்ஷங்கள் ஜீவித்தலும், காணப்படுகின்றமையால், பிராண னடங்கியபோது, தேகம் பிணமாகு மென்றது, மீகாமன் கப்பலை நடத்த முயற்சியாதபோது, காற்றிருந்தும் கப்பலோடுந் தொழில் நடவாதது போல மநமடங்கிய சுழுத்தியில், பிராண னிருந்தும் சரீராதிகளின் தொழில் நடவாதிருக்கின்றமையால், பிராணனுள்ள போது, சரீராதிகளின் தொழில் நடக்கிற தெனலும், எது மமதா விருத்திக்கு விஷயமோ அது அகவிருத்திக்கு விஷயமல்ல வென்பது துணிபானமையின், 'என் பிராணன், என் வாக்கு, என் கை, காலென' மமதா விருத்திக்கு விஷயமாகின்ற பிராண மய கோசத்தை, அகம் விருத்திக்கு விஷயமா யுள்ள ஆத்மா வெனலும் அத்தியாசமே யாம். இஃதன்றி, இயற்கை ஞாந பரனுகிய ஈசுவரனுல் வெளியிட்டருளிய வேதாதிகளும், அவைகட்கொத்த திருட்டாந்தங்களும், அவ்விரண்டினுக்கு மொத்த அநுபவமும், சுருதி யுத்தி யநுபவங்களாகும். அவை களையன்றி, அஞ்ஞாநத்தாற் சநநமரண சமுசாரத்திற் சுழலும் இரணிய கருப்ப வுபாசிகள் கூறும் ஆபாச நூல்களைச் சுருதிக ளெனவும், இவ்வாபாச நூல்களுக் கநுசாரமாகக் கூறும் குயுத்திகளை யுத்திக ளெனவும், இவ் விரண்டிற்கு மொத்ததாகத் தாணுவைப் புருட னுகக் கண்டதுபோற் கண்ட அத்தியாசாநுபவத்தை யதார்த்தாநுபவ மெனவும், மயங்கி ஆத்ம இலக்கணம் அற்பமேனு மமையப் பெறுமல், அநாத்ம இலக்கணங் களே யமையப் பெற்ற பிராணமய கோசத்தை, ஆத்மா வெனக் கூறுதல், உண்மையான சுருதி யுத்தி அநுபவங்கட்கு விரோத மென்பதே சித்தாந்தமென அறிக. (12)

13. வினு:- பிராணனைச், சச்சிதாநந்தாதி யிலக்கணங்களுடைய தல்ல வென்பது யாதினு லெனின்?

விடை:-பிராணனைச் சத்தெனின், முக்காலத்தினு முள்ளதா யிருக்கவேண்டும்: அங்ஙனமின்றி, யுதித்தற்கு முன்னரும், நசித்தற்குப் பின்னரும் இல்லாததுந் தவிர, மத்திய காலத்தினும் காரிய மாகிய பூடணத்தைக் காரணமாகிய பொன் மயமாக அபவாதிக்கில், பூடணம் அபாவப் பொருளாவது போல, அதன் காரண மாகிய பூத மய மாக அபவாதிக்கிற், பிராணன் அபாவப் பொருளே யாகின்றமையால், அசத்தாயும், சித்தெனின், சகலத்தையும் அறியும் அறி வாகவே யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிச் சுழுத்தியில் மூக்கி லுள்ள நகை கழற்றலையும், இன்ன இடத்தி லிருந்து இன்ன வழி யாக இயங்குகிறே மென்பதையு மறி யாமையால், சட மாயும், ஆநந்த மெனின், பிரியத்துக்கு விஷய மாக இருக்கவேண்டும்; அங்ஙன மின்றிப் பசி தாக மூச் சடைப்பு மூச் செறி வாதிகளால் வெறுப்புக்கு விஷயமா யிருத்தலால் துக்க மாயும், அகண்ட மெனின், கண்டப் படாம லிருக்கவேண்டும்; அங்ஙன மின்றி, நான்கு முழ அள வாகிய சரீரத்துள் மாத்திரம் இயங்குகின்றமையால், கண்ட மாயும், நிருவிகார மெனின், விகாரப்படாம லிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, சூட்சும பூதத் திருந்துண்டாதல், கெடுதல், பலம், பல மின்மையாதிகளை யுறுதலால், விகார மாயும். அநந்நிய மெனின், அக விருத்திக்கே விஷயமா யிருக்கவேண்டும்; அங்ஙன மின்றி, 'என் பிராண' னென மமதா விருத்திக்கு விஷயமாகின்றமையால், அந்நிய மாயும், அநாதி யெனின், உற்பத்தி ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, சூட்சும பூத காரிய மானமையால், உற் பத்தி யுள்ள தாயும், நித்திய மெனின், நாச

ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, விதேக முத்தியில் நாச மடைவதால், அநித்திய மாயும், சுத்த மெனின், அசுத்த மின்றி யிருக்கவேண்டும்; அங்ஙன மின்றி, ஏப்ப முதலியவற்றால், அசுத்தமாயும், அதிருசிய மெனின், அறியப்படாம லிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, இடைகலை பிங்கலை வழியா யியங்குதல் வசநித்த லாதி தொழில்கள் அறியப் படுகின்றமையால், திருசியமாயு முள்ள, அநாத்ம இலக்கணங்களைப் பொருந்திய பிராண மய கோசத்தை, ஆத்மா வெனல் மயக்கமா மென அறிக. (13)

14. வினா:- பிராணன் ஆத்மா வல்ல வென்பதற்குச் சுருதி யுத்தி யநுபவங்க ளெவை யெனின்?

விடை:- (கவி) "பிரிவுபெறும் நாநாவா முயிர்நானல்ல" என்னும், ரிபு கீதையும்; (கவி) "உன்னிய வாயு வைப்போ லுள்ளிலும் வெளியி லும்போ, யின்னதின் விகார மாகி யெங்குமே யிட்டா நிட்டம், அன்னியந்தனதீ தென்ன அணுவுமே யறியா தத்தால், பின்னரும் பரவ சத்தால் பேசுமீ தாந்மா வாகா" என்னும், விவேக சூடாமணியும்; (கவி) "பிராணனு மல்லதுஞ்சி லறிவின்மையா" லென்னும் சசிவன்ன போதமும்; (கவி) ஊசுமு டலிலுழல்கின்ற காற்றையு ணர்வென்பரே, யேசுமு றக்கத்தி யங்கியு மிங்கறி வேதுமற்று, வீசும்பி ராணனை யாந்மா வலவென்று வேதஞ்சொல்லும், பேசு மனிதர் பொருளறி யாமற்பி தற்றுவரே." என்னும் அறிவாநந்த சித்தியும்; சுருதிக ளாகும். இலாயத் திருந்து வெளியிலும் உள்ளிலுஞ் செல்லுத லுடைய குதிரையைப் பார்த்துக் கொண்டிருக்கின்ற புருடனுக்குக் அக் குதிரை அந்நிய மாவது போலப், பிராணன் இருதயத்தி லிருந்து நாசி மார்க்க மாக வெளியிற் போதலும், வருதலு மாக இருப்பதை

யறிந்து கொண்டிருக்கின்ற ஆத்மாவுக்கு, அப் பிராணன் அந்நிய மென்பது யுத்தி யாகும். 'என் கஜம், என் பரி,' என்பது போல, 'என் பிராணன், என் வாக்கு' என்பது அநுபவ மாகு மென அறிக. (14)

15. வினா:- பிராண மய கோசம், அக மென்னும் புத்தியை விடுவதால் வரு மிலாபம் யா தெனின்?

விடை:- பசி, தாகம், பலம், பல மின்மையாதிகளும், வசநாதிகளும், அவைகளால் வரும் துக்கங்களு மில்லாமற் போவ தென அறிக. (15)

(பதம்) மநதும், ஞாநேந்திரியங்களும் கூடி மநோமய கோசம்—

(பொருள்) வெளி.

16. வினா:- மந மல்லாத ஞாநேந்திரியங்களையும், மநோ மய மென்றது யாதினா லெனின்?

விடை:- சுரோத்திராதி ஞாநேந்திரியங்கள், சங்கற்ப விகற்பாத்மக மாகிய மநதின் செயலைப் பெற்று, தத் தம் விடயங்களைப் பற்றுகின்றன வாக இருக்கின்றனவே யன்றித், தனியே பற்றுகின்றன வாக இராமையி னென அறிக. (16)

17. வினா:- இவைகளைக் கோச மென்றது யாதினா லெனின்?

விடை:- புருடனைச் சட்டை மறைத்தல் போல, ஆத்மாவை, 'நான் சங்கற்பித்தேன், விகற்பித்தேன், நானிராகி, துவேஷி, நான் கண்டேன், கேட்டே' னென மறைக்கின்றமையி னென அறிக. (17)

18. வினா:- மநதுக் கந்நிய மாக ஆத்மா வென்றொரு பொரு ளிருக்கு மாயின், அதனை மநது மறைக்கிற தெனல் பொருந்தும். மநதைச் சோதிக்கில், அதனை யன்றி யாத்மா வென வோர் பொருள் காணக்கிடையாமையினால், மநதே ஆத்மா வாகும். ஆதலின், அதற் கந்நிய மாக ஆத்மா வுண்டெனலும், அதனை மநது மறைக்கிற தெனலும், அசம்பா வித மெனின்?

விடை:- ஆரணியத்துள்ள, ஓர் மரத்தி லிருந்து மற்றோர் மரத்தைப் பாய்ந்து பற்றுதலும், அதனை விடுத்து, மற்றோர் மரத்தைப் பாய்ந்து பற்றுதலு மாகச் சஞ்சரிக்கின்ற வாநரத்தைப் பார்த்துக் கொண்டிராநின்ற முநீசுவரன், அவ் வாநரத்துக் கந்நிய மாக இருப்பது போல, ஓர் விஷயத்திலிருந்து மற்றோர் விஷயத்தைப் பற்றுதலும், அதனை விடுத்து, மற்றோர் விஷயத்தைப் பற்றுதலு மாகச் சலிக்கின்ற மநதை யறிந்து கொண்டிராநின்ற ஆத்மா, மநதுக் கந்நியமா யிருப்பதைக் கோடையிடிச் சப்த மறியாத செவிடன் போ லறியாமல், மநதுக் கந்நிய மாக ஆத்மா இல்லை யெனலே அசம்பாவிதமும், சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோதமு மா மென அறிக. (18)

19. வினா:- மநது ஆத்மா வென்பதற்கு, உபாசகராதிய மதாநுசார மான பல சுருதிக ளிருத்தலினாலும், சூத்திரதாரியுள்ள போது, பதுமையின் நடநத் தொழில் நடக்குதல் போல, மந முள்ள போது, சரீராதிகளின் தொழில் நடக்குதல், முதலிய யுத்திக ளிருத்தலினாலும், அக விருத்திக்கு விஷயமா யுள்ளது ஆத்மா வென்னுஞ் சுருதிகளுக் கேற்க, 'நான் சங்கற்பவான், விகற்பவான், நா னிராகி, துவேசி, நான் கண்டேன், கேட்டேன்,' என அக

விருத்திக்கு விஷயமாகின்ற அநுபவ மிருத்தலி னுனும், மநதை ஆத்மா வெனல் சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மில்லையே யெனின்?

விடை:-கூத்தைப் பார்க்கும் எஜமான னில்லாத போது, கூத்த னிருந்தும் கூத்தின் தொழில் நடவாதது போலப், புத்தி நிச்சய மில்லாத போது, மந திருந்தும் சரீராதிகளின் தொழில் நடவாதிருத்த லால், மந துள்ள போது, சரீராதிகளின் தொழில் நடக்கு மெனலும், எது மமதா விருத்திக்கு விஷய மாகிறதோ, அது, அக விருத்திக்கு விஷய மல்ல வென்பது துணிபானமையின், 'என் மனது சஞ்சலப் படுகிறது. என் காது செவிடாய் விட்டது, என் கண் குருடாய் விட்டது' என, மமதா விருத்திக்கு விஷயமாகின்ற மநோ மய கோசத்தை, அக விருத்திக்கு விஷயமாயுள்ள ஆத்மா வெனலும், அத்தியாசமே யாகும். இஃதன்றி, ஈசுவரனுல் வெளியிட்டருளிய வேதாதிகளும், அவைகட் கொத்த திருட்டாந்தங்களும், இவ் விரண்டிற்கு மொத்த சுவாநுபவமுமே, சுருதி யுத்தி யநுபவங்க ளாகும். அவைகளை யன்றி, அஞ்ஞாநத்தாற் சநந மரண சமுசாரத்திற் சுழலும் பிராந்தர்க ளாகிய உபாசக ராதியர் கூறும் நூல்களைச், சுருதிக ளெனவும், இவ் வாபாசச் சுருதிகட் கநுசார மாகக் கூறும் குயுத்திகளை யுத்திக ளெனவும், இவ் விரண்டிற்கு மொத்த தாக இப்பியை வெள்ளி யென் றறிந்தது போல, அநாத் மாவை ஆத்மா வென் றறிந்த அத்தியாசாநுப வத்தை யதார்த்தாநுபவ மெனவும், மயங்கி ஆத்ம இலக்கணம் அற்பமேனும் அமையப் பெருமல், அநாத்ம இலக்கணங்களே யமையப் பெற்ற மநோ மய கோசத்தை ஆத்மா வெனக் கூறுதல், மெய்மை யாகிய சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மென்பதே சித்தாந்த மென அறிக. (19)

20. வினா:- மநோ மய கோசத்தைச், சச்சிதாநந் தாதியிலக்கணங்களை யுடைய தல்ல வெனக் கூறுவது யாதினா லெனின்?

விடை:- மநோ மய கோசத்தைச் சத் தெனின், முக் காலத்தினு முள்ளதா யிருத்தல் வேண்டும்; அங்ஙன மின்றி, சுழுத்தி மூர்ச்சை சமாதி காலங்களி னும், சங்கற்ப மய மாக வுதித்தற்கு முன்னரும், நீங்கிய பின்னரு, மில்லாததுந் தவிர, மத்தியினும், கடத்தை, யதன் காரண மாக அபவாதிக்கிற், கடம் அபாவப் பொருளாவது போல, அதன் காரண மாகிய சூட்சும பூதங்க ளாக அபவாதிக்கில், அபாவப் பொருளே யாகின்றமையால், அசத்தாயும்; சித் தெனின், சகலத்தையும் அறியு மறிவாகவே யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிப் புத்தி விருத்தி யொன்றி லழுந்தி யிருக்கும் போது, சத்த மாதிகளை யறியா மையால், சட மாயும்; ஆநந்த மெனின், பிரியத்துக்கு விஷயமாகவே யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிக், காமக் குரோதாதிகளை யுற்று, வெறுப்புக்கு விஷயமா யிருக்கின்றமையால், துக்க மாயும்; அகண்ட மெனின், கண்டப்படாததா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, அந்தக் கரண விருத்திகளி லொன்று யிருத்தலால், கண்ட மாயும்; நிருவிகார மெனின், விகார மின்றியதா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றித், தோன்றல், திரிதல், கெடுத லாதி விகாரங்களை யுறுவதால், விகாரமாயும்; அநந்நிய மெனின், எப்போதுந் தா னாகவே யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, 'என் மனம் என் னிந்திரிய' மென, மமதா விருத்திக்கு விஷயமாகின்றமையால், அந்நிய மாயும்; அநாதி யெனின், உற்பவ ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, பஞ்ச பூத காரியமா யிருத்தலால், உற்பவ முள்ள தாயும்; நித்திய மெனின், நாச ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன

மின்றி, சுழுத்தி மூர்ச்சை சமாதிகளில் நாச முறுவதால், அநித்திய மாயும்; சுத்த மெனின், அசுத்த மின்றியதா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிக் காமாதிகளை யுறுதலால், அசுத்த மாயும்; அதிருசிய மெனின், திருசியமாகாதிருக்க வேண்டும்: அங்ஙன மின்றி, 'இது மந' மென அறியப்படுதலால்; திருசிய மாயும்; உள்ள அநாத்ம இலக்கணங்களைப் பொருந்திய மநோ மய கோசத்தை, ஆத்மா வெனல் மயக்கமே யென அறிக. (20)

21. வினு:- மநோமய கோசம் ஆத்மா வல்ல வென்பதற்குச் சுருதி யுத்தி யநுபவங்க ளெவை யெனின்?

விடை:- (கவி) ''பிறந்துநசிக் கின்றமந முதனு னல்ல'' என்னும் (ரிபு கீதையும்); (கவி) ''பரவியே யொடுங்க லாலும் பரிணமி யாத லாலும், விரிதுயர் வடிவ தாலும் விடய மாந் தன்மை யாலும், உரைமநோ மயகோ சந்தா னுணர்வுரு வாந்மா வாகா'' என்னும் (விவேக சூடாமணியும்); (கவி) ''கரணமா மநது புத்தி கருத்தாவா மவையாந்மா வோ'' வென்னும் (கைவல்லிய நவநீதமும்); (கவி) இனமுற வெண்ண வுள்ள கரணத்தி லொன்றி தென லாலி தென்ன தெனலால், மனமுன மன்ன மென்ற வதனுலு மல்ல'' வென்னும் (சசி வன்னபோதமும்) சுருதிக ளாகும். தீபத்தைப் பார்க்கின்ற கண்ணுக்குத் தீபம் அந்நிய மாவது போல, விடயாகார மாக மேலு மேலும் உதிக்கின்ற மநதை, யறிந்து கொண்டிருக்கின்ற ஆத்மாவுக்கு, மநது அந்நிய மென்பது யுத்தி யாகும். அந்நிய மாகிய மனைவி மக்களை, 'யென் மனைவி, யென் மக்க' ளென்பது போல, 'என் மநம், என் செவி 'என்மநம் எம்செவி' யென்பது அநுபவ மாகு மென அறிக. (21)

22. வினா:- மநோமய கோசத்தி லுள்ள அகம் புத்தியை விடுவதால் வரும் பலம் யா தெனின்?

விடை:- இராகம், துவேஷம், பயம், செவிடு, குருடு ஆதிய தருமங்களும், அவைகளா லுண்டாகுந் துக்கங்களு மில்லாமற் போவ தென அறிக. (22)

(பதம்) புத்தியும், ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞாந மய கோச மாம்.

(பொருள்) வெளி,

23. வினா;— புத்தியை விஞ்ஞாந மய மென்றது யாதினாலெனின்?

விடை:— விசேட ஞான மென்னும் அறிவை யுடையதா யிருத்தலி னென அறிக. (23)

24. வினா:— புத்தியல்லாத சுரோத்திர மாதிய ஞானேந்திரியங்களையும், விஞ்ஞான மய மென்றது யாதினா லெனின்?

விடை:— சுரோத்திர மாதிய ஐந் திந்திரியங் களும், விஞ்ஞாந மயமா யுள்ள புத்தி விருத்தி சம்பந்தித்த போது தான், தத் தம் விடயங்களை யறியுஞ் செய லுள்ளன வாகின்றமையி னென அறிக.

இது நிற்க, பிராண மயம் மநோ மயம், விஞ்ஞாந மய மென்பவற்றில், முறையே கன்மேந்திரியங்களைப் பிராணமய மொன்றதற்குழ் ஞானேந்திரியங்களை மநோ மயம் விஞ்ஞாநமய மென்றதற்கும், வேறு காரணங் கூறுதலு முளது, அது இந் நிருபகத்தில் மேல் வரும் 31-வது விடையி லெழுதப்பட்டிருக்கிறது. ஆண்டுக் கண்டு கொள்க. (24)

25. வினா:— விஞ்ஞாந மயத்தைக் கோச மென்றது யாதினா லெனின்?

விடை:- புளியம் பழத்தைத், தோடு மறைப்பது போல, ஆத்மாவை, ''நானிச்சயவான், யூகவான், நான் கண்டேன், கேட்டே'' னென மறைக்கின் றமையி னென அறிக. (25)

26. வினா:— விஞ்ஞாந மயத்துக் கந்நிய மாக ஆத்மா வெனவோர் பொருளிருக்கு மாயின், அதனை விஞ்ஞாந மய மறைக்கு மென்பது பொருந்தும். விஞ்ஞாந மயத்தைச் சோதிக்கில், அதனையன்றி ஆத்மா வெனவோர் பொருளும் காணக்கிடையாமையால், விஞ்ஞாந மயமே ஆத்மா வாகும். அதற் கந்நிய மாக ஆத்மா வுண் டென்பதும், அதனை விஞ்ஞாந மய மறைக்கு மென்பதும் அசம்பாவித மெனின்?

விடை:— கட படாதிகளை மறைத்திரா நின்ற அந்த காரத்தை நிவிர்த்திக்கின்ற தீபத்தையும், தீப மவிந்த போது, அத னபாவத்தையும், பார்க்குங் கண், தீபத்துக் கந்நிய மாக இருப்பது போலச், சாக்கிரத்தில் விடயங்களை மறைத்திரா நின்ற ஆவரணத்தைப் பங்கஞ் செய்கின்ற விஞ்ஞாந மய மாகிய புத்தி விருத்தியின் விகாசத்தையும், சுழுத்தியில், அதன் சங்கோசத்தையும், அறியா நின்ற ஆத்மா, அவ் விஞ்ஞாந மயத்துக் கந்நிய மாக விளங்கிக்கொண்டிருப்பதைப், பூரண சந்திரனை யறியாத பிறவிக் குருடன் போ லறியாமல், விஞ்ஞாந மயத்துக் கந்நியமாக ஆத்மா இல்லை யெனலே அசம்பாவிதமும், சுருதி யுத்தி யநுபவங்களுக்கு விரோதமு மா மென அறிக, (26)

27. வினா:— விஞ்ஞாந மயமே ஆத்மா வென்பதற்கு க்ஷணிக விஞ்ஞாந வாதிகளான பௌத்த மதாநுசார மான பல சுருதிக ளிருக்கின்றமையினும், உபாத்தி யாய ருள்ள போது பள்ளிப் பிள்ளைகள் படிக்கும் விவகாரங்கள் சரியாக நடக்குதல் போல, புத்தி யுள்ள போது இந்திரிய விவகாரங்கள் சரியாக நடக்குதல் முதலிய யுத்திக ளிருப்பது மல்லாமல், அக விருத்திக்கு விஷயமா யுள்ளது ஆத்மா வென்னுஞ் சுருதிக் கேற்க " நா னிச்சயவான், யூகவான், நான்,

கண்டேன், கேட்டே'' னென விஞ்ஞாந மயத்தை யக விருத்திக்கு விஷய மாக விவகரிக்கும் அநுபவ மிருத்தலினுலும், விஞ்ஞாந மயத்தை ஆத்மா வென்பது சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மில்லையே யெனின்?

விடை:— சூரிய கிரண சம்பந்த மில்லாத தருப்பணத்துக்குத், திரண மாதிகளைத் தகிக்குஞ் சக்தி யில்லாதது போல, ஆத்மப் பிரதிபலிந சம்பந்த மில்லாத புத்திக்கு, இந்திரியங்களைத் தத் தந் தொழில்களிற் செலுத்துஞ் சக்தி யில்லையாம். இஃதன்றிப், பக்ஷ வாதம், திமிர் வாதம், முக வாத முதலிய வியாதிகள் மேலிட்ட போது புத்தி யிருந்தும் பாத, பாணி, வாக்காதி யிந்திரிய விவகாரங்கள் சரியாக நடவாதிருக்கின்றன. ஆதலின், புத்தி யுள்ள போது இந்திரியாதி விவகாரங்கள் சரியாக நடக்கு மென்பதும், எது, மமதா விருத்திக்கு விஷயமோ, அது, அக விருத்திக்கு விஷய மல்ல வென்பது துணிபானமையின், ''என் புத்தி தெளிவா யிருக் கிறது, அல்லது, மயங்கிவிட்டது. என் செவி சத்த மறிய வில்லை. என் கண் குருடாய்விட்டது'' என மமதா விருத்திக்கு விஷயமா யுள்ள விஞ்ஞாந மய கோசத்தை ஆத்மா வென்பதும், அத்தியாசமே யாகும். இஃதன்றி, ஈசுவரனால் வெளியிட்டருளிய வேதாதிகளும், அவைகட் கொத்த திருட்டாந்தங் களும், அவ் விரண்டினுக்கு மொத்த சுவாநுபவமுமே சுருதி யுக்தி யநுபவங்களாகும், அவைகட்கு மாருக அஞ்ஞாநத்தாற் சநந மரண சம்சாரத்திற் சுழலும் பிராந்தர்க ளாகிய பௌத்த ராதியர் கூறும் நூல் களைச் சுருதிக ளெனவும், அவ் வாபாச நூல்களுக் கநுசார மாகக் கூறும் குயுத்திகளை யுத்திக ளென வும், அவ் விரண்டினுக்கு மொத்த தாக இரச்சுவைச் சர்ப்பமாக அறிந்தது போல, அநாத்மாவை ஆத்மா வாக அறிந்த அத்தியாசாநுபவத்தை யெதார்த்தா

நுபவ மெனவும், மயங்கி ஆத்ம இலக்கணம் அற்ப மேனு மமையப் பெருமல், அநாத்ம இலக்கணங்களே யமையப் பெற்ற விஞ்ஞாந மய கோசத்தை ஆத்மா வென்பது, மெய்ம்மை யாகிய சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மென்பதே சித்தாந்த மென அறிக. (27)

28. வினு:— விஞ்ஞாந மய கோசத்தை, சச்சிதாநந்தாதி யிலக்கணங்களை யுடைய ஆத்மா வல்ல வென்பது யாதினு லெனின்?

விடை:- விஞ்ஞாந மய கோசத்தைச் சத்தெனின், முக் காலத்தினு முள்ளதா யிருக்கவேண்டும்; அங்ஙன மின்றிச் சுழுத்தி, மூர்ச்சை காலங்களினும், சாக்கிரத்தில், நிச்சயாத்மக மாகத் தோன்றற்கு முன்னரும், பின்னரு மில்லாதது மன்றி, மத்திய காலத்தினும் அலை நுரையாதிகளைக், காரண மாகிய சல மாக அபவாதிக்கில், அலையாதிகள் அபாவப் பொருளே யாவது போல, அதன் காரண மாகிய சூட்சும பஞ்ச பூத மாக அபவாதிக்கில் விஞ்ஞாந மய கோசம் அபாவப் பொருளே யாகின்றமையால், அசத்தாயும்; சித் தெனின், சகலத்தையும் அறியும் அறி வாகவே யிருக்க வேண்டும். அங்ஙன மின்றிப் பிரிய மில்லாத விடயங்களைச் சரி யாக அறியாமை யால், சட மாயும்; ஆநந்த மெனின், பிரியத்துக்கு விஷய மாகவே யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, ஒன்றை மற் ருென்ருக நிச்சயித்து வருந்துதல் பற்றி, வெறுப்புக்கு விஷய மாதலால், துக்க மாயும்; அகண்ட மெனின், கண்டப்படாம லிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, அந்தக் கரண விருத்திகளி லொன்ரு யிருத்தலால், கண்ட மாயும்; நிருவிகார மெனின், விகார மின்றி யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிப் பூதங்களினின்றும் தோன்றல் திரிதல் கெடுதலாதிய விகாரங்களை யுறுதலால், விகார மாயும்; அநந்நிய

மெனின், அக விருத்திக்கே விஷயமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, 'என் புத்தி என் னிந்திரிய' மென மமதா விருத்திக்கு விஷய மாகின்றமையால், அந்நிய மாயும்; அநாதி யெனின், உற்பத்தி ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிப் பூதகாரிய மானமையால் உற்பத்தி யுள்ள தாயும்; நித்திய மெனின், நாச ரகிதமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, சுழுத்தி மூர்ச்சைகளில், அல்லது, விதேக முத்தியில் நாச முறுதலால், அநித்ய மாயும்; சுத்த மெனின், அசுத்தமுரு திருக்க வேண்டும்; அங்ஙன மின்றிக், காமக் குரோதாதி வாசனைகளைப் பொருந்தி யிருத்தலால், அசுத்த மாயும்; அதிருசிய மெனின், திருசிய மாகாதிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, 'இது புத்தி' யென அறியப்படுதலால், திருசிய மாயும்; உள்ள அநாத்ம இலக்கணங்களைப் பொருந்தி யிருக்கின்ற விஞ்ஞாந மய கோசத்தை ஆத்மா வெனல் மயக்கமா மென அறிக. (28)

29. வினு:— விஞ்ஞாந மயம் ஆத்மா வல்ல வென்ப தற்குச் சுருதி யுத்தி யநுபவங்க ளெவை யெனின்?

விடை:- (கவி) "துன்னுபொறி களுமல்ல மனமு மல்ல தொடர்புந்தி யல்ல அகங் காரமல்ல" வென்னும் (வாசிட்டமும்); (கவி) "இனமுற வெண்ண வுள்ள கரணத்தி லொன்றி தெனலாலி தென்ன தெனலால், மனமுன மன்ன மென்ற வதனுலு மல்ல மதியல்ல வந்த வகையே" யென்னும் (சசிவன்ன போதமும்); (கவி) "ஓதும் விஞ் ஞாந கோச முண்மையா மாந்மா வாகாது" என்னும் (விவேக சூடாமணியும்) சுருதிக ளாகும். சூரியப் பிரதிவிம்பத்தைப் பொருந்நி ஆந்தரக் கிரகத்தை விளக்குவிக்கின்ற தருப்பணத்தைப் பிரகாசிப் பிக்கின்ற விம்ப சூரியனுக்கு, அத் தருப்பணம்

அந்நிய மென்பது போல, ஆத்மப் பிரதி விம்பத்தைப் பொருந்தி விஷயங்களை விளக்குவிக்கின்ற விஞ்ஞாந மய கோசத்தை, யறிந்துகொண்டிருக்கின்ற ஆத்மாவுக் கந்நிய மென்பது, யுத்தி யாகும். அந்நிய மாகிய மனைவி மைந்த ராதியரை, 'என் மனைவி, என் புத்திர ராதிய' ரென்பது போல, 'என் புத்தி, என் செவி, என் கண்' ணென்பது அநுபவ மாகு மென அறிக. (29)

30. வினா:- தனக்கு, மனைவி மைந்த ராதியர் பிரிவு பட்டுத் தனியே யிருப்பது போல, ஆத்மாவில் நின்றும் புத்தி பிரிவு பட்டு, ஓர் காலத்திலேனும் தனித் திருப்பதை யறிந்த அநுபவ மிருந்தா லன்றோ, புத்தி வே றென்பதற்கு, 'என் புத்தி' யென்பது அநுபவ மாகும். தீபப் பிரகாசமும், ஆகாயமும், காய்ச்சிய இரும்பும் அக்கிநியும் போல, விஞ்ஞாந மய மாகிய புத்தியும், ஆத்மாவும், வேறுபடாமல் ஒன்ருகிய ஞாந ரூப மாகவே பிரகாசித்துக் கொண் டிருக்கின்றமையால், அதனை, வே றென்பதற்கு, 'என் புத்தி' யென்பது வாக்கு மாத்திரமே யன்றி யநுபவ மாகா தெனின்?

விடை:— தீபப் பிரகாசமும், ஆகாயமும், அபிந்ந மாகத் தோற்றினும், ஒளி மாத்திரமாயுள்ளது தீபப் பிரகாச மெனவும், பிரகாசத்துக்கு இடங் கொடுத்துக் கொண்டு வெளியா யிருப்பது ஆகாய மெனவும், அறிவது போலும், காய்ச்சிய இரும்பும், அக்கிநியும், அபிந்ந மாகத் தோற்றினும், அகல நீள கடிநமா யிருப்பது இரும் பெனவும், உஷ்ணப் பிரகாச மாத்திரமா யிருப்பது அக்கிநி யெனவும், அறிவது போலும், புத்தியும், ஆத்மாவும், அபிந்ந மாக விளங்கினும், விருப்பு வெறுப்பு அபிமாந நிச்சயாத்மக மாகவும், சுழுத்தியி லடங்கி விரிவதாகவு மிருப்பது, புத்தி யெனவும், அறிவுமய மாகப் பிரகாசிப்பதும்,

சுழுத்தியாதிகளி லடங்கி விரியாததது மா யிருப்பது ஆத்மா வெனவும், விவேகத்தால் பிரித் தறிய லாகும். இங்ஙன மறிந்த அநுபவ சம்ஸ்கார பலத்தினுலும், சுழுத்தியில் புத்தி அஞ்ஞாநத்தி லடங்கி யதன் மய மாகிய போது, ஆத்மா வாகிய தானும் அஞ்ஞாநத்தி லடங்கி யதன் மய மாகி விடாமல் அஞ்ஞாநத்துக்குச் சாட்சி மாத்திர மாகச் சேடித்து விளங்கிக்கொண்டிருக்கின்ற அநுபவ சம்ஸ்கார பலத்தினுலும், புத்தியை வேறு படுத்தி 'யென்புத்தி' யெனக் கூறுகின்றமையால், அது, அநுபவ மென்பதற் கைய மின் றென அறிக. (30)

31. வினு:— விஞ்ஞாந மய கோசத்தி லுள்ள அகம் புத்தியை விடுவதால் வரு மிலாப மியா தெனின்?

விடை:- விஞ்ஞாந மயத்தின் விருப்பு வெறுப்பு கருத்திருத்துவ முதலிய தருமங்களும், அவைகளின் பல மாகிய ஜநநமரணுதி துக்கங்களு மில்லாமற் போவ தென அறிக. (31)

32. வினு:- பிராணனேடு கன்மேந்திரியங்களும், மநதோடும், புத்தியோடும். ஞாநேந்திரியங்களுஞ் சேர்ந்து மறைக்கின்றமையால், அவ் விந்திரியங்களுஞ் தோன்றப் பிராண கன்மேந்திரிய மய கோசம், மந ஞாநேந்திரியமய கோசம், புத்தி ஞாநேந்திரியமய கோச மெனக் கோச நாமங் கூறுமல், 'பிராணமய கோசம், மநோமய கோசம், விஞ்ஞாநமய கோச' மெனப் பிராணன், மநம், புத்திகட்கு மாத்திரம் கோச நாமங் கூறியது நியாய விரோத மா மெனின்?

விடை:— சாத்திரங்களி லுள்ள வாக்கியங்களின் பொருள்களைக் கிரகிப்பதற்கு, 'இலக்கணு விருத்தி, குண விருத்தி, முக்கிய விருத்தி,' யென விருத்திகள் மூன் றுள. அவைகளில், முற் சொல்லிய இரண்டு விருத்திகளானும், பொருள் கொள்ளாமல், பிற் சொல்லிய முக்கிய விருத்தியால், பிராணமய கோசம்

மநோமய கோசம், விஞ்ஞாநமய கோச மென்னும் வாக்கியங்கட்குப் பொருள் கொள்ளில் நியாய விரோத மல்ல வென அறிக. (32)

33. வினா:– இலக்கண விருத்தி, குண விருத்தி, முக்கிய விருத்தி யென்பவை யெவை, அவைகளில், முக்கிய விருத்தியால் எங்ஙனம் பொருள் கொள்வ தெனின்?

விடை:— இலக்கண விருத்தியைப் பற்றிப் பின் வரும் தத்துவ விவேசந நிரூபகத்தில் 82-வது வினாவிற்குக் கூறும் விடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஆண்டுக் கண்டு கொள்க. நீலோற்பல மென்னும் வாக்கியத்துக்கு, நீலம், புட்ப மெனப் பிந்ந மாகப் பொருள் கிரகிக்காமல், நீல வருண முள்ளது புட்ப மெனப் பொருள் கிரகிப்பதும், அப்படியே அக்கிநி மாணவக னென்னும் வாக்கியத்துக்கு, அக்கிநி பிரஹ்மசாரி யெனப் பிந்ந மாகப் பொருள் கிரகிக்காமல், அக்கிநியைப் போல, சொலித்துக் கொண்டிருக்கிற பிரஹ்மசாரி யெனப் பொருள் கிரகிப்பதும், குண விருத்தியாகும். அரச னுனவன் மந்திரி பிரதாநி முதலிய பரிசநங்களோடு மார்க்கத்திற் செல்வதை, தூரத் திருந்து பார்த்த ஒருவன், மத்தியி லுள்ள ஒருவனை அழைத்து, அங்குச் செல்பவர்கள் யாவர்க ளென வினவ, மத்தியி லுள்ளவன் அரசன் செல்லுகிரு னெனக் கூறக் கேட்டு, அவன் கூறிய தற்கு, அரச னுனவன் மந்திரி பிரதாநி முதலியவர் கட்குப் பிரதாந (முக்கிய) னு யிருப்பது பற்றி, அவர்களை யரசனில் அடக்கி யரசன் செல்லுகிரு னெனப் பொருள் கிரகிப்பது, முக்கிய விருத்தி யாகும். இது போல, பிராண மய கோசம், மநோ மய கோசம், விஞ்ஞாந மய சோசம் என்னும் வாக் கியங்கட்கு, கன்மேந்திரியங்கட்குப் பிராணன்

பிரதாந (முக்கய) மாயும், இன மாயும், ஞாநேந்திரியங்கட்கு மநமும், புத்தியும், பிரதாந (முக்கிய) மாயும், இன மாயு மிருப்பது பற்றிக், கன்மேந்திரியங்களைப் பிராணனி லடக்கிப் பிராண மய கோச மெனவும், ஞாநேந்திரியங்களை மநதினும், புத்தியினு மடக்கி, மநோ மய கோசம், விஞ்ஞாந மய கோச மெனவும், முக்கிய விருத்தியால் பொருள் கொள்ளத் தக்க தென அறிக. (33)

34. வினு:- கன்மேந்திரியங்கட்குப் பிராணனும், ஞாநேந்திரியங்கட்கு மநமும், புத்தியும், பிரதாநமும் இனமு மாகு மென்பது யாதினு லெனின்?

விடை:- பிராணனை யன்றிக் கன்மேந்திரியங் கட்கு இயக்கங் கூடாமையால், கன்மேந்திரியங் கட்குப் பிராணன் பிரதாநமும்; பிராணனுங் கன்மேந்திரியங்களும், இராஜதாம்சமானமையா லினமும்; மநதையும், புத்தியையு மன்றி, ஞாநேந் திரியங்கட்கு விஷயங்களை யறியுந் தன்மை கூடாமையால், ஞாநேந்திரியங்கட்கு மநமும், புத்தியும், பிரதாநமும்; மநமும், புத்தியும், ஞாநேந்திரியங்களும், சத்துவாம்ச மானமையால் இனமு மென்ற தென அறிக. (34)

(பதம்) காரண சரீரமே ஆநந்த மய கோசம். இப்படிப் பஞ்சகோசங்கள் சொல்லப் பட்டன. —

(பொருள்) வெளி.

35. வினு:-காரண சரீர மென்பது யா தெனின்?

விடை:- ஜீவாசிரயமா யுள்ள அஞ்ஞாந மென அறிக. (35)

36. வினு:-அஞ்ஞாநத்தின் செயல் யா தெனின்?

விடை:- ஆத்மாவை மறைவு செய்து கொண் டிருப்ப தென அறிக. (36)

37. வினா:—அஞ்ஞாநம், ஆத்மாவை யெங்ஙனம் மறைவு செய்துகொண் டிருக்கிற தெனின்?

விடை:- 'அகம் அஞ்ஞாநி' யெனும்படி ஆத்மாவின் சாமாந்யாம்சத்தை மறையாமல், விசேட அம்சத்தை மறைவு செய்து கொண் டிருக்கிற தென அறிக. (37)

38. வினா:- சாமாநிய அம்சம் யாது? விசேட அம்சம் யா தெனின்?

விடை:- எது, பிராந்தி காலத்திற் றோன்றுகிறதோ, எது வன்றியில் பிராந்தி தோன்றுகிற தில்லையோ, எது, அதிக தேசங்களினும், அதிக காலங்களினு மிருக்கிறதோ, அது, சாமாநிய அம்சமாகும். எது, பிராந்தி காலத்திற் றோன்றுகிற தில்லையோ எது, தோற்றுவதால் பிராந்தி நிவிர்த்தியாகிறதோ, எது, சொற்ப தேசங்களினும், சொற்ப காலங்களினு மிருக்கிறதோ, அது, விசேட அம்சமாகும். சாமாந்ய அம்சம் ஆதார மெனவும், விசேட அம்சம் அதிட்டாந மெனவும் சொல்லப்படு மென அறிக. (38)

39. வினா:— ஆத்மாவுக் குள்ள சாமாந்ய அம்சம் யாது? விசேட அம்சம் யா தெனின்?

விடை:- 'நான் அகர்த்தா, நான் அசங்கன், நான் ஆநந்த வியாபகப் பிரஹ்ம' மென்பவற்றில், 'நான் நா' னென்பது சாமாநிய அம்சமும்; 'அகர்த்தா, அசங்கன், ஆநந்த வியாபகப் பிரஹ்ம' மென்பவை விசேட அம்சமுமா மென அறிக. (39)

40. வினா:— சாமாந்ய அம்சம் அதிக தேச, அதிக காலங்களினும், விசேட அம்சம் சொற்ப தேச, சொற்ப காலங்களினும், உள்ள தென்றது யாதினா லெனின்?

விடை:— 'நான் கர்த்தா, நான் மநுஷன், நான் ஜீவன், நான் அகர்த்தா, நான் அசங்கன், நான் ஆநந்த வியாபகப் பிரஹ்ம, மென்பவற்றி லுள்ள, 'நான் நா' னென்னும் சாமாநிய அம்சம், அஞ்ஞாநி ஞாநிக ளாகிய இருவர்களிடத்தினும், அஞ்ஞாந காலம், ஞாந கால மாகிய இரண்டு காலங்களினும் காணப்படுகின்றமையால், அதனை, அதிக தேசம், அதிக காலங்களி லுள்ள தெனவும்; கர்த்தா, மநுஷன், ஜீவ' னென்னும் விசேடாம்சம் அஞ்ஞாநி யிடத்தினும், அஞ்ஞாந காலத்தினு மாத்திர மன்றி, ஞாநியிடத்தினும் ஞாந காலத்தினும் காணப் படாமையினுனும், அகர்த்தா, அசங்கன், ஆநந்த வியாபகப் பிரஹ்ம மென்னும் விசேடாம்சம் ஞாநியிடத்தினும், ஞாந காலத்தினு மாத்திர மன்றி, அஞ்ஞாநியிடத்தினும், அஞ்ஞாந காலத்தினுங் காணப்படாமையினுனும், அதனைச், சொற்ப தேசம், சொற்ப காலங்களிலுள்ள தெனவுங் கூறிய தென அறிக. (40)

41. வினு:— அஞ்ஞாநம், ஆத்மாவின் சாமாநியாம் ஸத்தை மறையாமல், விசேடாம்சத்தை மாத்திரம் மறைத்திருப்ப தெங்ஙன மெனின்?

விடை:- மந்தாந்தகார மானது, இரச்சுவிற் சர்ப்பந் தோன்றுதற் கேது வாக, இரச்சுவின் இது வென்னும் சாமாந்யாம்சத்தை மறையாமல், இரச்சு வென்னும் விசேடாம்சத்தை மறைத் திருப்பது போல, அஞ்ஞாந மானது, ஆத்மாவிற் கர்த்திருத்து வாதி ஜீவத்துவங்கள் தோன்றுதற் கேது வாக, நா னென்னும் ஆத்மாவின் சாமாந்யாம்சத்தை மறையாமல், அகர்த்தா, அசங்கன், ஆநந்த வியாபகப் பிரஹ்ம மென்னும் விசேடாம்ஸத்தை மாத்திரம் மறைத்திருக்கிற தென அறிக. (41)

42. வினு:- அஞ்ஞாநம் எதை ஆசிரயித் திருந்து கொண்டு ஆத்மாவை மறைக்கிற தெனின்?

விடை:- அந்தகாரம், ஓர் கிரகத்தை ஆசிரயித் திருந்து கொண்டு, அக் கிரகத்தையே மறைப்பது போல, அஞ்ஞாநம், ஆத்மாவை யாசிரயித் திருந்து கொண்டு, ஆத்மாவையே மறைக்கிற தென அறிக. (42)

43. வினு:- இதனை ஆநந்த மய மென்றது யாதினு லெனின்?

விடை:- ஆநந்த சொரூப மாகிய ஆத்மப் பிரதிபலிநத்தை யுடைய தாயும், பிரிய மோதப் பிரமோத விருத்திகளுதித் தடங்குதற்கு ஸ்தாநமாயு மிருத்தலி னென அறிக. (43)

44. வினு:- பிரிய மோதப் பிரமோத விருத்திக ளெவை? அவைக ளெந்தக் காலத்தி லுதிக்கின்றன, எந்தக் காலத்திலடங்குகின்றன வெனின்?

விடை:- இட்ட விடய தரிசநத்தால் உதயம் ஆவது பிரிய விருத்தி. இட்ட விடய லாபத்தா லுதய மாவது மோத விருத்தி. இட்ட விடயாநுபவத்தா லுதய மாவது, பிரமோத விருத்தி யாம். இவைகள், சாக்கிரத்திலும், சொப்பனத்திலும், புண்ணிய கன்ம பல போகாநுபவ காலங்களில் உதய மாகின்றன. புண்ணிய கன்ம பல போகம் நிவிர்த்தியாகும் போது, நித்திரை வடிவ மாக அடங்குகின்றன வென அறிக.

45. வினு:- இவ் வாநந்த மயமாகிய அஞ்ஞாநத்தைக் கோச மென்றது யாதினு லெனின்?

விடை:- பசலிப் பூச்சியைத், தோடு மறைப்பது போல 'நான் பிரியன், நான் மோதன், நான் பிரமோதன், நா னறிவேன், அறியே' னென, அகஞ் சத்தார்த்த மாகிய ஆத்மாவை மறைக்கின்றமையின் என அறிக. (45)

46. வினு:- ஆநந்த மயத்துக் கந்நிய மாக ஆத்மா வென ஓர் பொரு ளிருக்கு மாயின், அதனை, ஆநந்த மயம் மறைக்கு மென்பது பொருந்தும். அதனைச் சோதிக்கில், அதற் கந்நிய மாக ஆத்மா வென் றொரு பொருள் காணக்கிடையாமையினுல் ஆநந்த மய மாகிய அஞ்ஞாநமே ஆத்மா வாகும். அதற் கந்நிய மாக ஆத்மா வுண் டென்பதும், அதனை, அஞ்ஞாநம் மறைத்திருக்கிற தென்பதும், அசம்பாவித மெனின்?

விடை:- சந்திரனை மறைத்திருக்கின்ற களங்கத்தைச் சந்திரன் விளக்குவித்துக் கொண்டு, அதற் கந்நிய மாக இருப்பது போல, ஆத்மாவை மறைத்திருக்கின்ற ஆநந்த மய மாகிய அஞ்ஞாநம், சுழுத்தியினும், புண்ணிய கன்ம பல போகாநுபவ காலங்களினும், ஆநந்தப் பிரதிபலநத்துடனே கூடிப் பின் நட்டமாவதை யறிந்து கொண்டு, அதற் கந்நிய மாகச் சாட்சி மாத்திர மாகப் பிரகாசிப்பதைப், பூரண சந்திரனை யறியாத பிறவிக் குருடன் போ லறியாமல், ஆநந்தமயத்துக் கந்நிய மாக ஆத்மா இல்லை யெனலே அசம்பாவிதமும், சுருதி யுத்தி யநுபவங் கட்கு விரோதமு மா மென அறிக. (46)

47. வினு:- ஆநந்த மயமே ஆத்மா வென்பதற்குப் பட்டர் மதாநுசார மான அநந்த சுருதிக ளிருத்தலி னும், பிரிய முள்ள போது, காயைக் கனி யாகச் செய்யுந் தொழில் நடக்குதல் போலப், பிரிய முள்ள போது புத்தி நிச்சயாதிதொழில் நடக்குத லாதிய யுத்திகளிருத்தலினுலும், அகவிருத்திக்கு விஷயமா

யுள்ளதுஆத்மா வென்னுஞ் சுருதிகளுக் கேற்க, 'நான் பிரியன், நான் மோதன், நான் பிரமோதன், நான் அறிவேன், நான் அறியே' னென அகம் விருத்திக்கு ஆநந்த மய கோசம் விஷயமாகின்ற அநுபவ மிருத்தலினுலும், ஆநந்த மய கோசத்தை ஆத்மா வென்பது சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மில்லையே யெனின்?

விடை:- பாம்பு, புலி, கரடி, அல்லது, திருடரைக் கண்டு பிரிய முதியாமல், துவேஷாதிக ளுதய மாகிய போதும், அப் பாம்பு முதலியவைகளைச் சம்மரித்தற் கான புத்தி நிச்சயாதி தொழில்நடக்கின்றமையால், பிரியமுள்ள போதுதான் புத்தி நிச்ச யாதி தொழில் நடக்கு மென்பதும்; எது, மமதா விருத்திக்கு விஷயமா யுள்ளதோ, அது, அகம் விருத்திக்கு விஷய மாயுள்ள ஆத்மா வல்ல வென்பது துணி பானமையால், என் னஞ்ஞாநம், என் ஜீவன், என் பிரிய மென மமதா விருத்திக்கு விஷயமாகின்ற ஆநந்த மயத்தை, அகம் விருத்திக்கு விஷயமா யுள்ள ஆத்மா வென்பதும் பிராந்தியே யாகும். இஃதன்றி, இயற்கை ஞாநபர ஞகிய ஈசுவரனல் வெளியிட்டருளிய வேதாதிகளும், அவைகட் கொத்த திருட்டாந்தங்களும், அவ் விரண் டினுக்கு மொத்த சுவாநுபவமும், சுருதி யுத்தி யநுப வங்களாகும். இவைகளை யன்றி, அஞ்ஞாநத்தாற் சநந மரண சம்சாரத்திற் சுழலும் பிராந்தர்க ளாகிய பட்ட ராதியோர் கூறும் ஆபாச நூல்களைச் சுருதிக ளெனவும்; அந் நூல் களுக் கொத்த திருட்டாந்தங்க ளாகிய குயுத்திகளை யுத்திகளெனவும்; அவ் விரண் டிற்கு மொத்த தாகச் சொப்பன வுலகைச் சத்திய வுலக மாக அறிந்தது போல, அநாத்மாவைஆத்மா வாக அறிந்த, அத்தியாசாநுபவத்தை யதார்த்தா நுபவ மெனவும்; மயங்கி, ஆத்ம இலக்கணம் அற்ப மேனும் அமையப் பெருமல், அநாத்ம இலக்கணங் களே யமையப் பெற்ற ஆநந்தமய மாகிய

அஞ்ஞானத்தைந, ஆத்மா வெனக் கூறுதல் உண்மை யாகிய சுருதி யுத்தி யநுபவங்கட்கு விரோத மா மென அறிக. (47)

48. வினா:- ஆநந்தமய கோசத்தைச், சச்சிதாநந் தாதி இலக்கணங்களை யுடைய தல்லவென்பது யாதினா லெனின்?

விடை:- ஆநந்த மய கோசத்தைச் சத் தெனின், முக் காலத்திலு முள்ளதா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, நிருவிகற்ப சமாதியி லில்லாததுந் தவிர, ஆகாயத்திலுள்ள நீல வருணாதிகளை விசாரிக்கு மிடத்து, ஆகாயத்தை யன்றி யோர் பொரு ளாக நிலைபெறாமல், அபாவப் பொருளே யாவது போல, ஆநந்த மய கோசத்தை விசாரிக்கு மிடத்து, ஆத் மாவை யன்றி, யோர் பொரு ளாக நிலைபெறாமல், அபாவப் பொருளே யாகின்றமையால், அசத்தாயும்; சித் தெனின், அறிவா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, அறியாமையே வடிவமா யிருத்தலால், சட மாயும்; ஆநந்த மெனின், சுக சொரூபமா யிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, அறியாமையினால் வருந் துதலால், துக்க மாயும்; அகண்ட மெனின், கண்டப் படாமலிருக்கவேண்டும்; அங்ஙன மின்றிப் பிரகிருதி யின் முக்குணங்களி லொன்றாயிருத்தலால், கண்ட மாயும்; நிருவிகார மெனின், விகார மில்லா திருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, ஆத்ம ஞாநத்தாற் கெடுத லாகிய விகார முறுதலால், விகார மாயும்; அநந்நிய மெனின், சதா அகம் விருத்திக்கே விஷய மாயிருக்கவேண்டும்; அங்ஙன மின்றி, 'என் னஞ்ஞாந' மென மமதா விருத்திக்கு விஷயமாகின்றமையால், அந்நிய மாயும்; அநாதி யெனின், வாஸ்தவ அநா தியா யிருக்கவேண்டும்; அங்ஙன மின்றி, நாச மாவ தாகிய கற்பித அநாதியாயும், இஷ்ட விடய தரிசந்

சாமீப்பிய சையோகங்களால், பிரிய மோதப் பிரமோத ரூப மாக உதிப்பதாயு மிருத்தலால், உற்பத்தி யுடைய தாயும்; நித்திய மெனின், நாச மில்லாத தாயிருக்க வேண்டும்; அங்ஙன மின்றிப், புண்ணிய கன்ம பல போக நிவிர்த்தியினானும், தத்துவ ஞாநத்தினானும், நட்டமாவதால், அநித்திய மாயும்; சுத்த மெனின், அசுத்த மில்லா திருக்க வேண்டும்; அங்ஙன மின்றிச், சீவர்கள் பந்தப்பட்டு வருந்துதற்குக் காரணமா யிருத்தலால், அசுத்த மாயும்; அதிருசிய மெனின், திருசியமாகாதிருக்க வேண்டும்; அங்ஙன மின்றி, அறி வறியாமை, பிரிய மோதப் பிரமோதங்கள் அறியப்படுகின்றமையால், திருசிய மாயு மிருக்கின்ற அநாத்ம இலக்கணங்களைப் பொருந்திய ஆநந்தமய கோசத்தை ஆத்மா வெனல் மயக்க மாமென அறிக. (48)

49. வினா:- ஆநந்தமய கோசம் ஆத்மா வல்லவென்பதற்குச் சுருதி யுத்தி யநுபவங்களைவை யெனின்?

விடை:- (க வி) "இருள்வடிவா மஞ்ஞாந வுருநானல்ல" என்னும் (ரிபு கீதையும்); (கவி) "வரமுறு துயிலா நந்த மயனையும் நானென் றேதே, விரவிய தமவஞ் ஞாந விருத்தியின் விகார மாமே" என்னும் (கைவல்லியமும்); (கவி) "காரணசூக் குமதூல தேக மூன்றும் கண்டறியி லந்நியமாயிருக்கையாலே" என்னும் (பரமாநந்த தீபமும்);(கவி) "பரவுசோ பாதியாலும் பகுதியின் விகாரத் தாலும்,கருதிய புண்ணி யத்தின் காரிய மாதலாலும், தரமுறு விகாரக் கூட்டந் தன்னிலுட் பட்ட தாலும், மருவுமா நந்த கோசம் மா

சிலா வாந்மா வாகா'' என்னும் (விவேக சூடா மணியும்); சுருதிக ளாகும். சூரியனை மறைத்திருக் கின்ற மேகம், அதனை விளக்குவித்துக் கொண்டிருக் கின்ற சூரியனுக் கந்நிய மென்பது போல ஆத்மாவை மறைத்திருக்கின்ற ஆநந்த மய கோசம், அதனைச் சாட்சி மாத்திர மாக அறிந்துகொண்டிருக்கின்ற ஆத்மாவுக் கந்நிய மென்பது யுத்தி யாகும். கூப குள வநாதிகளை, 'என் கூபம், என் குளம், என் வந' மென்பது போல, 'என் னஞ்ஞாநம், என் ஜீவன், என் பிரிய' மென்பது அநுபவ மாகு மென அறிக. (49)

50. வினா:- ஆநந்தமய கோச மாகிய அஞ்ஞாநம், ஆத்மாவை யாருக்கு அறியவொட்டாமல் மறைத் திருக்கிற தெனின்?

விடை:- அவித்தை அந்தக் கரணங்களின் பிரதி பிம்பனாகிய ஜீவனுக் கென அறிக. (50)

51. வினா:- கட சலத்திற் பிரதிவிம்பித்த சூரியப் பிரதிவிம்பம் போல, அவித்தை அந்தக் கரணங்களிற் பிரதிவிம்பமாக வுள்ள ஆத்மப் பிரதிவிம்பமே சீவ னெனச் சாத்திரங்கள் கூறுகின்றமையால், சூரியன் மேகத்தால் மறைபட்ட போது, கட சலப் பிரதிவிம்ப மில்லாமற் போவது போல, ஆத்மா அஞ்ஞாநத்தால் மறைபட்ட போது, ஆத்மப் பிரதிவிம்ப னாகிய சீவ னில்லாதவ னாகிறான். இங்ஙன மில்லாத சீவனுக்கு, ஆத்மாவை அஞ்ஞாநம் மறைத்திருக்கிற தெனல், வந்தியா சுதனுக்குச் சூரியனை மேக மறைத்திருக்கிற தெனல் போ லசங்கத மாகு மெனின்?

விடை:- அஞ்ஞாநம், ஆத்மாவின் விசேடாம் சத்தை மாத்திரம் மறைத்துச், சாமாந்யாம்சத்தை

மறையாமையால், சீவன் வந்தியா சுதன் போல், அத்தியந்த மில்லாதவ னல்ல. ஆதலின், சீவனுக்கு அஞ்ஞாநம் ஆத்மாவை மறைத்திருக்கிற தெனல் அசங்கத மல்ல வென அறிக. (51)

52. வினா:– ஆநந்த மய கோசத்தி லுள்ள அகம் புத்தியை விடுவதால் வரும் லாபம் யா தெனின்?

விடை:- அறி வறியாமை, பிரிய மோதப் பிரமோ தாதிகளும், அவைகளாற் றேன்றுஞ் சநந மரண சம்சாரங்களு மில்லாமற் போவ தென அறிக. (52)

53. வினா:- பஞ்ச கோசங்கட்கும், ஆத்மாவுக்கு முள்ள சம்பந்தம் யா தெனின்?

விடை:- இப்பிக்கும், வெள்ளிக்கும், கட்டைக்கும், கள்வனுக்கும், ஆகாயத்துக்கும், நீல வருணத்துக்கு முள்ள சம்பந்தம் போல, அத்தியாச சம்பந்த மென அறிக. (53)

54. வினா:- ஆத்மாவுக்கும், பஞ்ச கோசங்கட்கு முள்ள சம்பந்தம், சம்யோக மாகவேனும், சமவாய மாகவேனு மிராதோ வெனின்?

விடை:– திரவிய மாகிய பேரிகைக்கும், குறுந் தடிக்கும், விஷயத்துக்கும் இந்திரியத்திற்கு முள்ள சம்பந்தம் சம்யோக சம்பந்த மாகும். ஆத்மா, ஓர் திரவிய மல்லாமையால் சம்யோக சம்பந்தமும்; அவயவத்துக்கும், அவயவிக்கும், குணத்துக்கும், குணிக்கு முள்ள சம்பந்தம் சமவாய சம்பந்த மாகும், ஆத்மா நிரவயவ நிர்க்குண சொரூப மாதலால், சமவாய சம்பந்தமு மல்ல வென அறிக. (54)

55. வினா:- அந்ந மயாதி ஐந்து கோசங்களையும், ஆத்மா வன்றென வேறுபடுத்திப் பார்க்கும் போது,

யா மாகிய சூநியமே சேடிக்கிறது. ஆதலின், சூநியந் தானே ஆத்மா வாகு மெனின்?

விடை:- ஒன்பது பெயரை யெண்ணிப் பத்தாமவ னில்லை யெனக் கவலை யுற்ற ஒருவ னாகிய தானே, பத்தாமவ னுவது போல, ஐந்து கோசங்களையும் அவைகட் கப்பாலுள்ள சூநியத்தையு மறிந்த அறி வாகிய தானே, ஆத்மாவாகும். ஆதலின், அறியப் படுவ தாகிய சூநியம், அறியும் பொரு ளாகிய ஆத்மா வாகா தென அறிக. (55)

56. வினா:- ஐந்து கோசங்கட்கும் வேறாக இரா நின்ற ஆத்மாவுக்குச், சச்சிதாநந்தாதி இலக்கணங்க ளைந்துள்ளனவோ வெனின்?

விடை:- மண், கடாதிகள் தோன்றற்கு முன்னும், அழிந்த பின்னும், மத்தியினுங் கெடாமல் அவைகட் காதாரமா யிருப்பது போல, ஆத்மா, அவத்தாத் திரயப் பிரபஞ்சந் தோன்றற்கு முன்னும், அழிந்த பின்னும், மத்தியினும், கெடாமல் அவைகட் காதார மா யிருத்தலால், சத்திலக்கணமும்; சூரியன் தீபாதி சாதநாந்தரங்களை யபேக்ஷியாமல் தானும் பிரகாசமா யிருந்து கொண்டு, ரூப விஷயங்களை விளக்குவிப்பது போல, ஆத்மா, சூரியாதி யட்டப் பிரகாசங்களையும் அபேக்ஷிக்காமல், தானும் பிரகாச மாயிருந்து கொண்டு, அவத்தாத் திரயப் பிரபஞ்சங் களை விளக்குவிக்கின்றமையால், சித் திலக்கணமும்; திரவியம், புத்திரன், மனைவி, தேகம், இந்திரியம், சீவ னுகிய பிரிய வஸ்துக்களில் கால பேதத்தால் எதது கைவிடப்படினும், தான் கைவிடப்படாமல் பரமப் பிரீதிக்கு விஷயமா யிருத்தலால், ஆநந்த இலக் கணமும்; தேகாதிகளுக் குள்ள தோன்றல் திரிதல் கெடுத லாதி விகாரங்க ளின்றி யெப் போதும் அறிவு மயமாகவே யிருத்தலால், நிருவிகார இலக்கணமும்;

ஐந்து கோசங்களும் "என் தேகம், என் பிராணன், என் மனம், என் புத்தி, என் னஞ்ஞாநம்" என அந்நிய மாக அறியப்படுவது போல, ஆத்மா ஒன்றினலு மறியப்படாமல் எப்போதுந் தா னகவே விளங்கிக் கொண்டிருத்தலால் அ ந ந் நி ய இலக்கணமும்; மண்ணனது, கடாதிகள் தோன்றற்கு முன்னரும், அழிந்த பின்னரும், மத்தியிற் கடாதிகளனைத்தினும் இருப்பது போல, அவத்தாத் திரயப் பிரபஞ்சங்கள் தோன்றற்கு முன்னரும், அழிந்த பின்னரும், மத்தியிற் சகல பிரபஞ்சங்களினும், இருக்கிற திருக்கிற தென விளங்கிக்கொண்டிருத்தலால், நித்திய விலக்கணமும்; அவத்தாத் திரயப் பிரபஞ்சங்கட் குள்ள உற்பவ நாச மாதிய அசுத்தங்க ளின்றி, அநாதி நித்த சுயம் பிரகாசமாயிருத்தலால், சுத்த விலக்கணமும்; கட படாதிகளை விளக்குவிக்கின்ற சூரியனை, விளக்கு வித்தற்கு, வேறு சூரியனில்லாதது போல, அவத்தாத் திரயப் பிரபஞ்சங்களை விளக்குவிக்கின்ற ஆத்மாவை விளக்குவித்தற்கு வேறு பொரு ளில்லாமையால், அதிருசிய இலக்கணமும் ஆகிய இவைகளோடு சுருதி களிற் கூறப்படுஞ் சொரூப இலக்கணங்க ளனைத்தும் பூரண மாக அமைந் துள்ளன வென அறிக. (56)

(நூல் பிரிவு-22)

ஆறு தத்துவங்களா யுள்ள தூல சரீரத்தில், இருபது தத்துவங்களா யுள்ள சூட்சும சரீர மிருக் கின்றது. †அஃதெங்ஙனெனின்? கன்மேந்திரியங் களுள் வாக்கும், ஞாநேந்திரியங்களுள் சிங்ஙுவையும், வாயி லிருக்கும். உதாந வாயுவும், மநதுங், கண்டத்தி லிருக்கும், பிராண வாயுவும், புத்தியும், இருதயத்தி லிருக்கும், சமாந வாயுவும், சித்தமும், நாபியி லிருக்கும், அபாந வாயுவும், பாயுருவும், குதத்தி லிருக்கும், வியாந வாயுவும், துவக் கிந்திரியமும்,

† அஃதெங்ஙனெனின் = அஃதெவ் விடத் தெனின்.

அகங்காரமும், சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே யுள்ளமும், கரு விழி நுனியிலே சட்சுவிந்திரியமும், காதி னுள்ளே சுரோத்திரேந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும், கழுத்துக்கு மேல் தனித் தனியே யிருக்கும், கழுத்திற்குக் கீழே கை, கால், குய்யங்களில், பாணி, பாதம், உபத்தம் மூன்றுந் தனித் தனியே யிருக்கும். இப்படித் தூல சரீர தத்துவங்க ளாறு; அதிற் குடி புகுந்த சூட்சும சரீர தத்துவங்க ளிருபது; ஆகத் தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்ச பூதங்களின் காரியங்க ளானபடியினாலே ஒருமைப் பாடாகக் காரிய சரீர மென்று சொல்லப்படும். இதன் பொருள்வெளி

(நூல்பிரிவு-23)

அவித்தையிற் பிரதிவிம்பனு யுள்ள சிதாபாஸன்: சாக்கிரத்தில், இந்த இருபத் தாறு தத்துவங்களுடன் கலந்து நிற்கும் போது விசுவ னென்றும், வியாவகாரிக சீவ னென்றுஞ், சொல்லப்படுவன். சொப்பனத்தில், தூலசரீரத்தை விட்டு, அந்தக் கரணத்துடன் கூடிநின்றபோது, தைஜச னென்றும், பிராதிபாசிக சீவ னென்றும். சொப்பன கற்பித னென்றுஞ் சொல்லப்படுவன், சுழுத்தியில், காரிய சரீர தத்துவங்க ளிருபத் தாறையும் விட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும் போது, பிராஞ்ஞ னென்றும், பாரமார்த்திக சீவ னென்றுஞ், சொல்லப்படுவன். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவத்தைகளுஞ் சொல்லப்பட்டன.

(பதம்) அவித்தையிற் பிரதிவிம்பனு யுள்ள சிதாபாசன், சாக்கிரத்தில், இந்த இருபத் தாறு தத்துவங்களுடன் கலந்து நிற்கும் போது—

(பொருள்) வெளி,

57. வினா:— சாக்கிராவத்தை யாவது யா தெனின்?

விடை:- சொப்பந சுழுத்திக ளின்றிச் சகல இந்திரியங்களாலும், புத்தி, கர்த்திருத்துவாதி யாகார மாய் ஸ்திரமாகிய பாஹியார்த்த ஞாநத்தோடு வியவகரித்தற்கும், இந்திரிய ஜந்நிய ஞாநத்திற்கும், ஆதார மான காலமென அறிக. (57)

(பதம்) விசுவ னென்றும், வியாவகாரிக சீவ னென்றும், சொல்லப்படுவன்—

(பொருள்) வெளி,

58. வினா:— சாக்கிரத்தில், சிதாபாசனுக்கு விசுவ னெனப் பெயர் வந்தது யாதினா லெனின்?

விடை:- விசுவ மென்பது, உலகம். சாக்கிரத்தில், ஜீவன் உலகாபிமாநியா யிருத்தலி னென அறிக. (58)

59. வினா:— இச் சிதாபாசனுக்கு, வியாவகாரிக ஜீவனெனப் பெயர் வந்தது யாதினா லெனின்?

விடை:- சாக்கிரத்தில், வியாவகாரிக சத்தைக ளாகிய மனைவி தந புத்திராதிய விஷயாபிமாநி யாயும், தானும் வியாவகாரிக சத்தையாயு மிருந்து கொண்டு, பந்த மோக்ஷங்களைத் தருவ தாகிய, லௌகீக வைதீக வியவகாரங்களைக் கர்த்தா வாக விருந்து வியவகரிக்கின்றமையி னென அறிக. (59)

60. வினா:- அற்றேல், விசுவ னென்னும் நாமத்தை முன்னரும், வியாவகாரிக னென்னும் நாமத்தைப் பின்னரும், வைத்துக் கூறிய தென்னை யெனின்?

விடை:- பிரபஞ்சாபிமாந மின்றி, வியவகாரங் கூடாமையால், அபிமாநத்தால் வந்த நாமத்தை முன்னரும், அபிமாந பூர்வக மாக வுண்டாகிய வியவகாரத்தால் வந்த நாமத்தைப் பின்னரும் வைத்துக் கூறிய தென அறிக. (60)

61. வினு:- வியாவகாரிகசத்தை யாவது யா தெனின்?

விடை:- பிரஹ்ம ஞாந மன்றியில், பாத மாகாத தாயும், பந்த மோக்ஷ வியவகாரஞ் சித்திக்கச் செய்வ தாயுமுள்ள சேதநாசேதநப் பிரபஞ்சங்க ளென அறிக. (61)

(பதம்) சொப்பனத்திற், றூல சரீரத்தை விட்டு, அந்தக் கரணத்துடனே கூடி நின்ற போது—

(பொருள்) வெளி,

62. வினு:- சொப்பநாவத்தை யாவது யா தெனின்?

விடை:- இந்திரிய சம்பந்தமும், இந்திரிய கோசரமாகிய பாஹ்யார்த்த ஞாநமு மின்றி, வாசநா பூர்வக மாக மநது விஷயாகார மாகப் பரிணமித்து, அஸ்திர மாக வியவகரிக்குங் கால மென அறிக. (62)

(பதம்) தைஜச னென்றும், பிராதிபாசிக சீவ னென்றும், சொப்பந கற்பித னென்றுஞ் சொல்லப் படுவன்—

(பொருள்) வெளி.

63. வினு:- சொப்பநாவத்தையில், ஜீவனுக்குத் தைஜச னெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- தேஜோ மய மான அந்தக் கரண

விருத்தியோடு கூடித் தேஜோ மய மாக விளங்குகின் றமையினென அறிக. (63)

64. வினா:- இச் சிதாபாசனுக்குப் பிராதிபாசிக ஜீவ னெனப் பெயர் வந்தது யாதினா லெனின்?

விடை:- சொப்பநாவத்தையிற், பிராதிபாசிக சத்தை யாகிய விஷயாகார மா கத் தோன்றிக் கெடுகின்றமையினென அறிக. (64)

65. வினா:- பிராதிபாசிக சத்தை யாவது யா தெனின்?

விடை:- பி ர ா தி ப ா சி க மென்றால், பிரதீதி மாத்திரம்; சத்தை யென்றால், இருக்குதல்; பிரதீதி மாத்திர மாக இருப்பதாயும், பிரஹ்ம ஞாந மன்றிப் பாத மாவ தாயு முள்ள, சொப்பநப் பிரபஞ்சம், கயிற் றரவு, கானற் சலம், கட்டையிற் கள்வன், இப்பி வெள்ளி யாதிக ளென அறிக. (65)

66. வினா:- இவனைச் சொப்பந கற்பித னென்றது யாதினா லெனின்?

விடை:- நித்திரா சத்தியாற் றோன்றிச் சொப்பநத்தைக் கற்பிக்கின்றவ னதலி னென அறிக. (66)

(பதம்) சுழுத்தியிற் காரிய சரீர தத்துவங்க ளிருபத்தாறையும்விட்டுக் காரண சரீரத்தை மாத்தி ரம் பொருந்தியிருக்கும் போது—

பொருள்) வெளி.

67. வினா:- சு ழு த் தி யவத்தை யாவது யா தெனின்?

விடை:- பாஹ்யாந்தர வியவகாரங்களும், தேகேந்திரியாதிப் பிரஞ்ஞையு மின்றிப், புத்தி விருத்தி காரணாத்மகமாக அடங்கிச் சுக, கோசரமும், அவித்தியா கோசரமு மான கேவல அஞ்ஞாநத்தின் பரிணாம ரூப விருத்தி மாத்திர முள்ள கால மென அறிக. (67)

68. வின:- சகல நூலாசிரியர்களும், சாக்கிர சொப்பநங்கட்குக் காரண மாகிய சுழுத்தி யவத்தையை முன்னர் வைத்துக் கூறாமல், காரிய மாகிய சாக்கிராவத்தையை முன்னரும், சொப்பநாவத்தையை மத்தியினும், சுழுத்தி யவத்தையைக் கடையினும், வைத்துக் கூறியது யாது பற்றி யெனின்?

விடை:-சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யாகிய மூன் றவத்தைகட்கும் நிர னிரையே, தாநம், நேத்திரம், கண்டம், இருதயமும்; குணம், சத்துவம், இராஜதம், தாமதமும்; ஞாநம் ஸ்திரம், அஸ்திரம் மூலாஞ்ஞாநமு மாக இருக்கின்றன. இவைகளில், சாக்கிர மானது, நேத்திரத் தாநம், சத்துவ குணம், ஸ்திர ஞாநங்களைப் பொருந்தியிருத்தலினாலும், சாக்கிரத்திற் றானே தசமனுக் குண்டாகிய சப்தா வத்தைகள் போல ஜீவனுக் குண்டாகிய சப்தா வத்தைகள், அஞ்ஞாந சத்த பூமிகள், ஞாந சத்த பூமி களின் அநுபவங்களும், அநுபவ ஸ்மரணைகளு மாகிய விசேட ஞாநங்கள் தோன்றுகின்றமையினா னும், தாந, குண, ஞாந விசேடம் பற்றிச், சாக்கிரத்தை முன்னரும்; கண்டத் தாநம் இராஜத குணம் அஸ்திர ஞாந முடைய தாகிய சொப் பனத்தை மத்தியினும்; இருதயத் தாநம் தாமத குணம் மூலாஞ்ஞாந முடைய தாகிய சுழுத்தியைக் கடையினும் வைத்துக் கூறிய தென அறிக. (68)

69. வினு:– தசம னென்பவன் யாவன்? அவனுக் குண்டாகிய சப்தாவத்தைக ளெவை யெனின்?

விடை:–கங்கா நதி தீரத்தில் சாதந சம்பன்னர் களான பல சீடர்களோடு வசிக்கும் பிரஹ்ம நிஷ்டர்க ளாகிய யதீசுரர்கட்கு, அரசர் முதலாயினோர் பல பொருள்களைப் பாத காணிக்கை வைத்து உபசரிப் பதைப் பார்த்து; நாமும் யதீசுரர்கள் வேடந் தரித்துப் பல சீடர்களோடு கூடி யிருக்கில், நமக்கும் அரசர் முதலாயினோர் பாத காணிக்கை வைத்து உபசரிப்பர்க ளெனக் கருதி, யதீசுர வேடந் தரித்துச் சில முழு மூட சிகாமணிகளைச் சீடர்க ளாகச் சேர்த் துக்கொண் டிருந்த அவிவேக பூரண அநாசாரியன், தன் சீடர்களை நோக்கி அரசர் முதலாயினோர்க்கு நா மிருப்பது தெரியின், வெகு திரவியங்களைக் கொண்டு வந்து நமக்குப் பாத காணிக்கை யாக வைப்பர்கள், அவைகளைக் கட்டி வைப்பதற்குப் பல பைகள் தைத்து வைத்துக் கொள்ள வேண்டியிருத்த லால், நகரத்துட் சென்று வர்த்தகர்களிடத்தில், நமது பெருமையைக் கூறி, ஓர் ஊசியும் இரண்டு பலம் நூலும் மூன்று முழ வத்திரமும் வாங்கி வரத் தக்க புத்திமானுகிய சீடன் யா ரென வினவ, அவ் வுரை கேட்ட சீடர்கள் பதின்மர்களில் 'நானே புத்திமான், நானே புத்திமா' னென, ஒவ்வொரு வரும் தன் தன் மார்பைத் தட்டிக் காட்டிச் சொல்லிக் கொண்டு முன்பாக வந்து நின்றனர். அங்ஙனம் வந்துநின்ற முழு மூட சிகாமணிகளாகிய சீடரை அவிவேக பூரண அநாசாரியர் பார்த்து, நீங்கள் பதின்மர்களுஞ் சென்று வாங்கிக் கொண்டு வந்து சேருங்க ளெனக் கட்டளையிட்டனர். அக் கட்டளையின் படி பதின்மர்களும் நகரத்துட் சென்று ஓர் வர்த்தகனிடத்தில், ஆசாரியர் பெருமையையும், தங்கள் பெருமையையும். கூறி ஒருசியும், இரண்டு

பல நூலும், மூன்று முழ வத்திரமும் யாசிக்க, வர்த்தகன் இவர்கள் யாசிப்பது அற்ப மாகத் தானே யிருக்கிற தெனக் கருதி யாசித்தபடி கொடுக்க, அவைகளைப் பதின்மர்களும் நானே கொண்டு போவேன் நானே கொண்டுபோவே னென்று ஒருவர் கையி லிருப்பதை ஒருவர் பறித்துச் சண்டையிட்டுக் கொள்வதை வர்த்தகன் பார்த்து நகைத்து, ஐயா! நீங்கள் சண்டையிட்டுக் கொள்ள வேண்டாம்; ஊசியையும், வத்திரத்தையும், நூலினுல் நீண்ட மூங்கிலில் வைத்துக் கட்டித்தருகிறேன். பதின்மர் களுந் தூக்கிக் கொண்டு போகலா மெனக், கேட்டு வாங்கிக் கட்டிக் கொடுத்தான். அதனைப் பார்த்துப் பதின்மர்களும் சந்தோஷித்துச் சிநேக முடைய ராகித் தோளிற்றூக்கிக் கொண்டு செல்லும் போது மார்க்கத்தி லிருந்த சிறு நதியிற் சலம் வரக் கண்டு கலக்கத்தோடு சலத்தி லிறங்கி நதியைக் கடந்து கரை யேறினர். கரை யேறிய பதின்மர்களில், நம்மோடு வந்த யாவருங் கரை யேறினுர்களா? இல்லையா? எண்ணிப் பார்க்க வேண்டு மென முயற்சித்தவனே தசம னுகும். அவன் தன்னை விடுத்து மற்றையர்களை வரிசை யாக நிறுத்திக் கையை நீட்டி ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழு எட்டு ஒன்பது என எண்ணி, ஒன்பது பேர்களையு மெண்ணிய தானே பத்தாமவனென் றறியாமல் மயங்கிய மயக்கமே அஞ்ஞானம். பத்தா மவ னில்லை, யிருந்தால் எண்ணியதி லிரானு வெனலே ஆவரணம். பத்தாமவன் ஆற்ருேடே போய்விட்டா னெனக் கலக்க முற் றழுதலே விக்ஷேபம். அழுவதைப் பார்த்துக் கொண்டு மார்க்கத்தில் வந்த ஆப்தன், பத்தாமவ னிருக்கிறு னென்ற வார்த்தையை நம்புதலே பரோக்ஷ ஞானம், ஆப்தன், ஒன்பது பேர்களையும் கை நீட்டி யெண்ணிய நீயே பத்தாமவனென் றறிவிக்க அறிந்ததே அபரோக்ஷ ஞானம், பத்தாமவன்

ஆற்ருேடே போய்விட்டா னென்றழுத அழுகை நீங்கியதே துக்க நிவிர்த்தி. பத்தாமவனே தா னெனக் கண்ட சந்தோஷமே தடை யற்ற ஆநந்தம், ஆகிய இவைகளே தசமனிடத்திற் கண்ட சத்தா வத்தைகளென அறிக. (69)

70. வினு:-தசமனிடத்திற் காணப்படுவது போலச், சீவனிடத்திற் காணப்படும் சப்தாவத்தைக ளெவை யெனின்?

விடை:- சிதாபாசன் சுருதி விசாரத்துக்குப் பூர்வம் அநாதி சம்சாரத்தி லழுந்திப் பிரஹ்ம மாகிய பிரத்திய காத்மாவை, ஸ்மரியாதிருந்த அறியா மையே அஞ்ஞாநம். பிரஹ்மத்தைப் பற்றிய பிரசங்கம் நேர்ந்த போது, பிரஹ்ம மில்லை. இருக்கிற் பாந மாகாதா வெனலே அசத்வாபாதகம், அபாநா பாதக மென்னும் இருவித உட்பிரிவையுடைய ஆவரணம். நான் மனுஷ்யன் நான் கருத்துருத்து வாதிகளை யுடைய சீவ னெனத், தன்னைக் காண்டலே விக்ஷேபம். புராண வாக்கியத்தால் சுவர்க்காதிக ளுண், டென் றறிகுதல் போலக், குருவினு லுபதேசிக் கப்பட்ட சத்திய ஞாநாநந்தம் பி ர ஹ்ம மென்னும் அவாந்தர வாக்கியத்தால் பிரஹ்மம் உண் டென் றறிகுதலே, அசத்தாவரண நிவர்த்தக மான பரோக்ஷ ஞாநம். நீயே பிரஹ்ம மென்னும் மகா வாக்கியத்தால், தானே பிரஹ்ம மென்றறிகுதலே, அபாநாவரண நிவர்த்தக மான அபரோக்ஷ ஞாநம். தான் கருத்தா போக்தா அல்ல வென்று போனதே, துக்க நிவிர்த்தி, செய்யத் தக்கவை யனைத்துஞ் செய்து, அடையத் தக்கவை யனைத்தும் அடைந்தன, மென்னுஞ் சந்தோஷமே தடையற்ற ஆநந்தம், ஆகிய இவைக ளென அறிக. (70)

71. வினு:-அஞ்ஞாந சத்த பூமிக ளெவை யெனின்?

விடை:- பீஜ சாக்கிரம், ஜாக்கிரம், மகா சாக்கிரம். சாக்கிர சொப்பநம், சொப்பநம், சொப்பந சாக்கிரம், சுழுத்தி ஆகிய இவைக ளாம். இவைகளில், மாயா சபளித (கூடிய) சைதந்நியத்தி னின்றும் எழுகின்ற சிதாபாசத்தோடு கூடிய அறிவு மாத்திரமா யிருப்பது, பீஜ சாக்கிர மாம். அவ் வறி வின்கண், பூர்வ மில்லாத அகந்தை மமதைகள் அங்குரம் போல், சூட்சும மாக எழுகின்றது, சாக்கிர மாம். சநதங்கடோறும் அகந்தை மமதைகள் வளர்ந்து வளர்ந்து திடமாகத் தோன்றுவது, மகா சாக்கிர மாம். அந்தக் கரணத்தால் சாக்கிரத் தில், முன் தான் அறிந்ததாயினும், அறியாததாயி னும், அதன் மய மாய் மநோ ராச்சியஞ் செய்குதல், சாக்கிர சொப்பந மாம். நித்திரையில் அற்ப காலத்துள் அநேக கால வியாபார ரூப மான மநோ ராச்சியஞ் செய்வது, சொப்பந மாம். பூர்வஞ் சொப்பனங் கண்டு மறந்ததைத் திட மாக வெகு கால பரியத்தம் நினைப்பது, சொப்பந சாக்கிர மாம் மேல் அநுபவிக்கத் தக்க வாசனை கருமங்கள் நெருங்கியிருக்கும், அஞ்ஞான இருள்மூடிச் சடமா யிருப்பது சுழுத்தியாம் என அறிக.

(கைவல்லிய நவநீதம் - இரண்டாம் படலம்)

ஞாந சப்த பூமிகளி னியல்பைப் பின் னுள்ள ஜீவன் முத்தி நிருபகத்தில் 12ஆம் வினு-விடை முதல் எழுதி யிருக்கிறது. ஆண்டுக் கண்டு கொள்க.

(71)

(பதம்) பிராஞ்ஞ னென்றும், பாரமார்த்திக சீவனென்றுஞ் சொல்லப்படுவன். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன் றவத்தைகளுஞ் சொல்லப் பட்டன—

(பொருள்) வெளி.

72. விஞ:- சுழுத்தியில், சிதாபாசனுக்குப் பிராஞ்ஞ னெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- பிரஞ்ஞா ரூப சேதநங்களிற், பிரதாந ஞயும், பிரஞ்ஞாந கந மாகிய அஞ்ஞாநத்தை ஆசிர யமாகக் கொண்டிருப்பவ ஞயு மிருத்தலி னென அறிக. (72)

73. விஞ:- அஞ்ஞாநத்தைப் பிரஞ்ஞாந கந மென்றது யாதினு லெனின்?

விடை:- அநந்த மழைத் துளிக ளொரு தடாக சலத்தை யடைந்து, ஒரே ரூப மாக இருப்பது போல, சாக்கிர சொப்பநங்களில், ஸ்திர அஸ்திர மாக இராநின்ற ஞாநாகார மான அந்தக் கரணவிருத்திக ளனைத்தும், சுழுத்தியில், அஞ்ஞாநத்திற் சேர்ந்து, அஞ்ஞாந ரூப மாகவே யிருத்தலி னென அறிக, (73)

74. விஞ:- சுழுத்தி யவத்தைய ஞகிய சீவனுக்குப், பாரமார்த்திக சீவ னெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- மூன் றவத்தையினு மிருப்பவ ஞதலினு னும், விசுவன் தைசதனைக் குறித்து, எதார்த்த ஞனமையினுனு மென அறிக. (வேதாந்த பதார்த்த மஞ்சூஷா) (74)

(நூல் பிரிவு-24)

பிரஹ்ம சைதந்நியமும், சாக்கிரத்துக்குச் சாட்சியா யிருக்கும் போது, சீவாத்மா வெனவும், சொப்பநத்துக்குச் சாட்சியா யிருக்கும் போது, அந்த ராத்மா வெனவும், சுழுத்திக்குச் சாட்சியா யிருக்கும் போது, பரமாத்மா வெனவும், அவத்தாத் திரய சாட்சியா யிருக்கும் போது, ஞாநாத்மா வெனவும், கூடத்த ரெனவுஞ் சொல்லப்படும்.

(பதம்) பிரஹ்ம சைதந்நியமும், சாக்கிரத்துக்குச் சாட்சியா யிருக்கும் போது சீவாத்மா வெனவும்—

(பொருள்) வெளி.

75. வினு:- சாக்கிர சாட்சி யாகிய பிரஹ்மத்துக்குச், சீவாத்மா வெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- அயத்திற் கலந்து வியாபித்திரா நின்ற அக்கிநி, அயத்தின் அகல நீள கந மாதிகளையும், அடித்தல் உருக்குதலா லுண்டாகிய விகாரங்களையும், விளக்குவித்துக் கொண்டு, தான் அவ் விகாரங்களை யடையாம லிருப்பது போலச், சாக்கிராவத்தையிற் கலந்து வியாபித்திரா நின்ற பிரஹ்மமும், விசுவனுகிய சீவன், விஷய போகங்களைச் சகல கரண சாமக்கிரி-யையால் அநுபவிப்பதையும், அவ் வநுபவ காரிய மாகிய சுக துக்கங்களா லடையும் விகாரங்களையும், சாக்ஷி மாத்திர மாக அறிந்துகொண்டு, தா னொரு விகாரத்தையும் பொருந்தாமல், எப் போதும் நாச மின்றிய சீவிதப் பொருளா யிருத்தலி னென அறிக. (75)

(பதம்) சொப்பநத்துக்குச் சாக்ஷியா யிருக்கும் போது, அந்த ராத்மா வெனவும்—

(பொருள்) வெளி.

76. வினு:- சொப்பந சாக்ஷி யாகிய பிரஹ்ம சைதந்நி யத்துக்கு, அந்த ராத்மா வெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:— அந்தர மென்பது தனிமை. கமல பத்திரோதகமும் சேம்புப் பத்திரோதகமும், அப் பத்திரங்களைச் சேர்ந்திருந்தும், சேராமற் றனிமை யாகவே யிருப்பது போலப், பிரஹ்ம சைதந்நியமும், சொப்பநாவத்தையைச் சேர்ந்திருந்தும், அதிற் சம்பந்த மின்றித் தைசத னுகிய சீவன் சாக்கிர

வாசநா பூர்வக மாக வுதயமாகின்ற போகங்களை மந மெனுங் கரணத்தா லநுபவிப்பதையும், அவ் வநுபவ காரிய சுக துக்கங்களா லடையும் விகாரங்களையும், சாக்ஷிமாத்திர மாக அறிந்துகொண்டிருத்தலி னென அறிக. அல்லது, அந்தர், என்பது உள். பாஹ்ய மாகிய சாக்கிர விவகாரங்களைக் குறித்து உள்ளாகிய சொப்பந வியவகாரங்களுக்குச் சாக்ஷி மாத்திர மாக இருத்தலி னெனினும், அல்லது, அந்தர மென்பது மத்தி, சுழுத்தி சாக்கிர மாகிய இரண்டவத்தைக்கு மத்தியாவத்தை யாகிய சொப்பநாவத்தைக்குச் சாக்ஷி மாத்திர மாக இருத்தலி னெனினும் அமையு மென அறிக. (76)

(பதம்) சுழுத்திக்குச் சாக்ஷியா யிருக்கும் போது, பரமாத்மா வெனவும்—

(பொருள்) வெளி.

77. வினா:- சுழுத்திக்குச் சாக்ஷி யாகிய பிரஹ்ம சைதந்நியத்துக்குப், பரமாத்மா வெனப் பெயர் வந்தது யாதினா லெனின்?

விடை:- வெளியிற் சஞ்சரிக்குங் குஞ்சுகளைத் தன் பக்ஷங்களி லடக்கிக் கொண்டு, நித்திரை செய்யும் வாரணப் பக்ஷியைப் போல, சாக்கிர சொப்பநங்களில் விரிந் துள்ள காரியப் பிரபஞ்சங்களைச் சுழுத்தியிற் றன்னி லடக்கிக் கொண்டு சாக்கிர வாசநா சம்ஸ்கார சகித மாக இராநின்ற மூலாஞ்ஞாந மாகிய அவித்தையையும், பிரஞ்ஞாந கநனாகிய சீவன், அவித்தையில் மூழ்கி, விடய மின்மை குடும்ப நிவிர்த்தி காரண மாக ஒன்று மறியாமல் சுகத் துறங்கு வதையும், சாக்ஷி மாத்திர மாக அறிந்து கொண்டு, அவித்தையி லடங்காமல், சகலத்துக்கு மேலாய்ப் பிரகாசித்துக் கொண்டிருத்தலி னென அறிக. (77)

(பதம்) அவத்தாத் திரய சாக்ஷியா யிருக்கும் போது ஞாநாத்மா எனவும், கூடத்த ரெனவுஞ் சொல்லப்படும்—

(பொருள்) வெளி.

78. வினு:- அவத்தாத் திரய சாக்ஷி யாகிய பிரஹ்மத்துக்கு, ஞாநாத்மா வெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- அவத்தாத் திரயங்களையும், அவத்தாத் திரய வியாபாரங்களையும், அவத்தாத் திரய வாசிகளான விசுவனுதிய சீவர்களையும், சாக்ஷி மாத்திர மாக அறிந்து கொண்டு, நா னென்னும் அபிமாநத்துக் கிடமா யுள்ள புத்திர தாராதிகளை, என் புத்திர தாராதிக ளெனவும், நான் பருத்தேனிளைத்தே னெனத் தா னுகத் தோன்றுகின்ற தூல சரீரம், என் சரீர மெனவும், நான் கண்டேன் கேட்டேன் சிந்தித்தே னெனத் தா னுகத் தோன்றுகின்ற சூட்சும சரீரம், என் கண், என் காது, என் சித்த மெனவும், நா னறியேன் அறிவே னெனத் தா னுகத் தோன்றுகின்ற அவித்தையுஞ், சீவனும், என் னஞ்ஞாநம், என் சீவ னெனவும், வேறு பட்டுத் திருசிய மாகக் காணப் படுவன போலப், பிரஹ்மம் ஒரு காலத்திலேனும் வேறு பட்டுத் திருசிய மாகக் காணப்படாமல், எப்போதுந் தா னுகிய அறிவாகவே விளங்குகின்றமையி னென அறிக. (78)

79. வினு:- அவத்தாத் திரய சாக்ஷி யாகிய பிரஹ்ம சைதந்நியத்துக்குக் கூடத்த ரெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- கூட மென்பது, சம்மட்டி யடை கல். சம்மட்டி யடை கல்லைப் பற்றி, அய மாதிகள், ஈட்டி

பாலா, கத்தி யாதிய விகாரங்களை யடையினும், சம்மட்டி யடை கல், ஒரு விகாரத்தையு மடையா திருப்பது போலப், பிரஹ்மத்தைப் பற்றிக் கொண்டு, அவத்தாத் திரயப் பிரபஞ்சங்கள், தோன்றல், திரிதல், கெடுத லாதிய விகாரங்களை யடையினும், பிரஹ்மம் ஒரு விகாரத்தையு மடையாமல், அவை களை யறிந்து கொண்டு, நிருவிகாரமா யிருத்தலால் கூடத்தர். அல்லது, கூட மென்பது அறை; பஞ்ச கோச மாகிய அறையில் சாக்ஷி மாத்திர மாக விளங்குகின்றமையின் கூடத்தர். அல்லது, கூட மென்பது, மலையி னுச்சி. மலையி னுச்சியி லுள்ள தீபம் போலச், சுத்த சாந்த குண மாகிய மலையி னுச்சியில், சாக்ஷி மாத்திர மாக விளங்குகின்றமையின் கூடத்தர். அல்லது, கூட மென்பது பொய். பொய் யாகிய அவித்தை அந்தக் கரணங்களில் வளைபட்டிருத்தலின் கூடத்தர். அல்லது, கூட மென்பது இரகசியம். தன்னைத் தானன்றி மற் றெந்த வத்துக்களினும் அறிதற்குக் கூடாத இரகசியப் பொருளா யிருத்தலின், கூடத்தர் எனப் பெயர் வந்த தென அறிக. (79)

80. வினா:- இந்த விசாரத்துக்குப் பலம் யா தெனின்?

விடை:- சரீரத் திரய, அவத்தாத் திரய, அபிமாநித் திரயங்கள், தா னல்ல வென்றும், சாக்ஷி சைதந்நியமே தா னென்றும் அறிவ தென அறிக. (80)

(நூல் பிரிவு-25)

*ஈசுவரனுக்கு மூன்று சரீரங்களும் மூன் றவத்தைகளுஞ் சொல்லப்படுகின்றன.*

கற்பிதப் பிரபஞ்ச வடிவ மாகத் தோற்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும், அவற்றிற் றேன்றிய, மூன்று சாதிகளா யிருக்கின்ற தூல சரீர சமட்டியுங் கூடி

ஈசுர தூல சரீர மென்றும், விராட் டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்கிரா வத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசுவாநர னென்றும். இந்த இரு வகைக்கு மதிட்டாந சைதந் நியம், பிரஹ்மாவென்றுஞ் சொல்லப்படும். சூக்கும பூதங்க ளைந்தும், அவற்றிற் ரேன்றிய சூக்கும சரீர சமட்டியுங் கூடி, ஈசுர சூக்கும சரீர மென்றும், இரணிய கருப்ப மென்றுஞ் சொல்லப்படும். இத னுட னே கூடிச் சொப்பநாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்திராத்மா வென்றும், இந்த இரு வகைக்கு மதிட்டாந சைதந்நியம் விஷ்ணு வென்றுஞ் சொல்லப்படும். இந்தத் தூல சூக்குமமாகிய இரண்டின் வாசனையுடனே கூடி யிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீர மென்றும், அவ்வியாகிருத மென்றும், சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்திய வத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், அந்தரியாமி என்றும், இந்த இரு வகைக்கு மதிட்டாந சைதந்நியம் உருத்திர னென்றுஞ் சொல்லப்படும்.

(பதம்) ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும், மூன் றவத்தைகளுஞ் சொல்லப்படுகின்றன. கற்பிதப் பிரபஞ்ச வடிவ மாகத் தோற்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும், அவற்றிற் ரேன்றிய, மூன்று சாதிகளா யிருக்கின்ற தூல சரீர சமட்டியுங் கூடி, ஈசுர தூல சரீர மென்றும், விராட் டென்றுஞ் சொல்லப்படும் —

(பொருள்) வெளி.

81. வினு:- ஈசுர தூல சரீரத்துக்கு, விராட் டெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- நாநா வித விசித்திர அழகைப் பொருந்திப், பெரிய வடிவமா யிருத்தலி னென அறிக. (81)

(பதம்) இத னுடனே கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், வைசுவாநர னென்றும், இந்த இரு வகைக்கும் அதிட்டாந சைதந்நியம், பிரஹ்மாவென்றுஞ் சொல்லப்படும்—

(பொருள்) வெளி.

82. வினு:- விராட்டு சரீரத்துடன் கூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்கு, வைசுவாநர னெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- சாக்கிரப் பிரபஞ்ச மாகிய விசுவ வியாபகனுய், நரர் முதலிய சகலப் பிராணிக ளிடத்தினும் வசிப்பவனுதலி னென அறிக. (82)

(பதம்) சூக்கும பூதங்கள் ஐந்தும், அவற்றிற் றேன்றிய சூக்கும சரீர சமட்டியுங் கூடி, ஈசுர சூக்கும சரீர மென்றும், இரணிய கருப்ப மென்றுஞ் சொல்லப் படும்—

(பொருள்) வெளி.

83. வினு:- ஈசுர னுடைய சூக்கும சரீரத்தை இரணிய கருப்ப மென்ற தென்னை யெனின்?

விடை:- இரணிய மென்பது, பொன். பொன்னைப் போற் பிரகாசிப்ப தாயும், பிரகாசத் திரவியங்களனைத்தையும், தன் னுதரத்திற் கருப்ப மாக அடக்கி யிருப்ப தாயுமிருத்தலி னென அறிக. (83)

(பதம்) இத னுடனே கூடிச் சொப்பநாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்திராத்மா வென்றும், இந்த இரு வகைக்கும் அதிட்டாந சைதந்நியம், விஷ்ணு வென்றுஞ் சொல்லப்படும்—

(பொருள்) வெளி.

84. வினு:- இரணிய கருப்ப சரீரத்துடன் கூடிச் சொப்பநாவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்குச், சூத்திராத்மா வெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- பல மணிகளினும் சூத்திர மாகிய ஓர் நூல் கோத்திருப்பது போலச், சகல சூக்கும சரீரங்களி னுள் ளும் ஈசுரன் வியாபித்திருத்தலி னென அறிக. (84)

(பதம்) இந்தத் தூல சூக்கும மாகிய இரண்டின் வாசனையுடனே கூடியிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீர மென்றும், அவ்வியாகிருத மென்றுஞ் சொல்லப் படும்—

(பொருள்) வெளி.

85. வினு:- ஈசுர காரண சரீரத்துக்கு, அவ்வியாகிருத மெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- நாம ரூப விஷயாகாரமாக வெளிப்படா திருத்தலி னென அறிக. (85)

(பதம்) இத னுடனே கூடிச் சுழுத்தி யவத் தையைப் பொருந்துகின்ற ஈசுரன், அந்தரியாமி யென்றும், இந்த இரு வகைக்கும் அதிட்டாந சைதந்நியம், உருத்திர னென்றுஞ் சொல்லப்படும்—

(பொருள்) வெளி.

86. வினு:- அவ்வியாகிருத சரீரத்துடன் கூடிச் சுழுத்தி யவத்தையைப் பொருந்துகின்ற ஈசுரனுக்கு, அந்தரியாமி யெனப் பெயர் வந்தது யாதினு லெனின்?

விடை:- அந்தர் என்பது உள்; மறைவு. ஒருவன் ஙதுமையினுள் மறைவா யிருந்து கொண்டு, அதன்

அஸ்தபாத மஸ்தகங்களை யசைப்பித்தல் போல, சகலப் பிராணிகளிருதயத்தி னுள்ளும் மறைவா யிருந்து கொண்டு, பிராணிகள், தத் தங் கன்மங்கட்குத் தக்க தான போகங்களை யநுப விக்கும்படி யசைப்பிக்கின்றவ னுதலி னென அறிக. (86)

87. வினு:- வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி யென்னும் ஈசுரர்கட்குப், பிரஹ்மன் விஷ்ணு உருத்திர னென்னும் ஈசுரர்களை, யதிட்டாந சைதந்நியங்க ளாக இந் நூல் கூறியது ஆக்ஷேபனைக் கிடமா மெனின்?

விடை:-வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி நாம ஈசுரர்கட்கு, முறையே பிரஹ்மன் விஷ்ணு உருத்திரர்களை யதிட்டாந சைதந்நிய மென்பதற்கு, இலக்ஷணையால் பொருள் கொள்ளில், பிரஹ்மமே யாகின்றமையால், ஆக்ஷேபனைக் கிட மில்லை யென அறிக. (87)

88. வினு:- அற் றன்று; அந்தர்ப்பூத மென்பதை, அதிட்டாந மென, நூ லெழுதியவர்களா லிடையிற் பிறழ்ந் திருக்கக் கூடும், பிருஹத் (விரிவு) வாசு தேவமன்னம் என்னும் விவேக சாரம் அத்தியாரோபப் பிரகரணத்தில், விராட்டிற் பிரஹ்மனும், இரணிய கருப்பத்தில் விஷ்ணுவும், அவ்வியாகிருதத்தில் உருத்திரனும், அந்தர்ப் பூத மெனக் கூறியிருத்தலி னெனின்?

விடை:- இந் நூல் சரீரத்தையும், சரீரத்தோடு கூடிய ஈசுரனையுஞ் சுட்டி, இந்த இரு வகைக்கும் அதிட்டாந மெனக் கூறி யிருத்தலால், பிறழ்ந்த தெனல் பொருந்தாது. இஃ தன்றிப், பந்த ஏது வாகிய தூல சூக்கும வாசனைகளோடு கூடிய அவ்வியாகிருத சரீரத்தில், அநாதி முக்த சருவஞ்ஞ

ஞகிய ஈசுரன், அந்தர்ப்பூத மென்பது, இருளில் ஒளி. அந்தர்ப் பூத மென்பது போலும் பஞ்ச பூதங்களேயும். அவைகளின் காரியங்க ளாகிய சரீரங்களேயுஞ், சிருட்டித்துக் காப்பவர்க ளாகிய பிரஹ்ம விஷ்ணுக் களில், பிரஹ்மனே, விராட்டிலும், விஷ்ணுவை இரணிய கருப்பத்தினும். அந்தர்ப் பூத மென்பது. கடத்தைச் சிருட்டித்துக் காக்கின்ற குலாலனேக், கடத்தி லந்தர்ப் பூத மென்பது போலும் விரோத மா மென அறிக (88)

நூல் பிரிவு-26

சீவன், தன் மூன் றவத்தைகளினும், தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற (27) தத்துவங்களுடனும். நா னென்றும் கலந்து நிற்பது போல, ஈசுரனுந், தன் மூன் றவத்தைகளினும், தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற (32) தத்துவங்களுடனுங் கலந்து நிற்பன். சீவன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன்.

ஈசுரன் தன் சரீர மாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடுங் கலந்து நிற்பன். இந்த இரு வகைக்குஞ் சாக்ஷியா யிருக்கின்ற பிரஹ்ம சைதந்நியமும், சகல சரீரங்களினும் சகல பிரபஞ்சங் களினும் நிறைந்து, அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து எல்லேயற்றிருக்கும்.

இதன் பொருள் வெளி.

89. வின - சீவன் ஒரு சரீரத்தையும், ஈசுரன் சகல சரீங்களேயும் கலந்து வியாபித்திருப்பதும், பிரஹ்ம சைதந்நியம் சகல சரீரங்களினும், சகல பிரபஞ்சங் களினும், நிறைந்து அப்பாலும் அதிக்கிரமிரத்து எல்லேயற் றிருப்பதும், யாதின லெனின்?

விடை:- சீவன், ஒரு சரீரத்தை மாத்திரம் கலந்தி ருப்பது, பரிச்சிந்ந ஞனமையின், ஈசுரன், சகல

சரீரங்களையும். சகல பிரபஞ்சங்களையுங் கலந்திருப்பது, சீவனை யபேக்ஷித்து வியாபக னானமையின், பிரஹ்ம சைதந்நியம், சகல சரீரங்களினுஞ், சகல பிரபஞ்சங்களினும் நிறைந்து, அப்பாலும் அதிக்கிரமித்து எல்லையற் றிருப்பது, நிரபேக்ஷிக பூரண வியாபக மானமையி னென அறிக. (89)

90, வினா:– அங்ஙன மாயின், சீவனில் ஈசுரனும், சீவேசுர ரிருவரினும், பிரஹ்ம சைதந்நியமும் கலந்திருக்கவேண்டும். அஃதெப்படிக் கூடு மெனின்?

விடை:- தயிரில் வெண்ணெயும், தயிரிலும் வெண்ணெயிலும், நெய், அல்லது, ஆகாயமுங் கலந்திருப்பது போல, சீவனில், ஈசுரனும், சீவேசுரர்க ளிருவர்களினும் பிரஹ்ம சைதந்நியமுங் கலந்திருக்கக் கூடு மென அறிக. (90)

91. வினா:– சீவனில் ஈசுரன் கலந்திருக்கில், சீவனைப் போல, வெளி யாகத் தோன்ற வேண்டும். அங்ஙனம் தோன்றாமையால், சீவனில் ஈசுவரன் உண் டென் றெங்ஙனம் அறிகிறதெனின்?

விடை:- ஈசுவரன் பரோக்ஷம் ஆனமையால், சீவனைப் போல், வெளி யாகத் தோன்ற வில்லை. ஆயினும், ஈசுரன் சகல சீவர்களின் புத்திக ளுள்ளுமிருந்து வாசனைப்படி யாட்டுவிக்கிறதை, அநுமாநத்தாலும், ஈசுரன் சருவஞ்ஞன் அந்தரியாமி யென்னும் வேத வசநத்தாலும், சீவனில் ஈசுரனுண் டென் றறியலா மென அறிக. (91)

92. வினா:– சீவனில் ஈசுரன் கலந்திருக்கில், சீவனுக்குள்ள கிஞ்சிஞ்ஞத்துவம், ஈசுரனுக்கும்; சீவனிலும், ஈசுரனிலும், பிரஹ்ம சைதந்நியம் கலந்திருக்கில், சீவேசுரர்களுக் குள்ள கிஞ்சிஞ்ஞத்துவம், சர்வஞ்ஞத்துவம், பிரஹ்ம சைதந்நியத்துக்கும் உண்டாகுமே யெனின்?

விடை:- தயிரில் வெண்ணெய் கலந்திருக்கினும், தயிரின் புளிப்புத் தன்மை, திரவத் தன்மை, வெண்ணெய்க்கும்; தயிரினும், வெண்ணெயினும், நெய், அல்லது, ஆகாயங் கலந்திருக்கினும், தயிரின் புளிப்புத் தன்மையும், திரவத் தன்மையும், வெண்ணெயின் மதுரத் தன்மையும், கடினத் தன்மை யும், நெய் அல்லது, ஆகாயத்துக்கும் உண்டாகாதது போல, சீவேசுரர்களின் கிஞ்சிஞ்ஞத் தன்மை, சர்வஞ் ஞத் தன்மை, பிரஹ்மத்துக்கும் உண்டாகா தென அறிக. இதனைத் தெளிவாக அறிய விரும்பில் பிரஹ் மோபநிடதத்திற் காண்க, (92)

(நூல் பிரிவு-27)

சீவன் றன் தூல சரீர விவகாரத்திற்குக் கூடுந் தத்துவங்கள்: தூல சரீர தத்துவங்கள் (6), சூட்சும சரீர தத்து வங்கள் (20), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆக தத்துவங்கள் (31). சூட்சும சரீர விவகாரத்திற்குக் கூடுந் தத்துவங்கள்: சூட்சும சரீர தத்துவங்கள் (20) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆக தத்துவங்கள் (25). காரண சரீர விவகாரத்திற்குக் கூடுந் தத்துவங்கள்: சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5). சீவ விவகாரத்திற்குக் கூடுந் தத்து-வங்கள்: சீவன் ஈசுரன் பிரஹ்மம் (3). சாக்ஷி விவகாரத்திற்குள்ள தத்துவம் சாக்ஷி (1).

(பதம்) சீவன் றன்-

(பொருள்) சீவனானவன் தன்னுடைய,

(பதம்) தூல சரீர விவகாரத்திற்கு-

(பொருள்) சாக்கிராவத்தையிற் றூல சரீரத் தோடு கூடி விவகரிக்கும் விவகாரத் திற்கு,

(பதம்) கூடுந் தத்துவங்கள்—

(பொருள்) துணை யாகச் சேருந் தத்துவங்கள்,

(பதம்) தூல சரீர தத்துவங்கள் (6) சூட்சும சரீர தத்துவங்கள் (20) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆக தத்துவங்கள் (31)-

(பொருள்) வெளி.

93. விஞ:- சீவ னுடைய தூல சரீர விவகாரங்களெவை. அவைகளில், (31) த த் து வ ங் க ளுஞ் சேர்ந்துள்ளனவோ வெனின்?

விடை:- சாக்கிராவத்தையிற் கன்மேந்திரியங்கள் தொழிற்படும் விவகாரங்கள், தூல சரீர விவகாரங்க ளாகும். சிதாபாசன் சாக்கிராவத்தையில், வசந தாந கமந விசர்க்க ஆநந்த ஸ்நாந பாந போஜந ஆலிங்கந வாணிப யுத்த முதலிய விவகாரங்களைச் செய்தற்குக், கன்மேந்திரியங்கள் (5). கன்மேந்திரியங்கட்குச் சாதக மாக ஞாநேந்திரியங்கள் (5). இத் தசேந்திரியங்களு மிருத்தற்குத் தாந மாகத், தூல சரீர தத்துவங்கள் (6). தூல சரீரத்தைத் தாங்கற்கும், இந்திரியங்களைத் தொழிற்படுத்தற்கும், வியாநாதி வாயுக்கள் (5). இவைகள் தொழிற்படுதற்குக் காரண மாக விஷயங்களிற் பிரியாப்பிரியங்களை யுறுதற்கு, அந்தக் கரண தத்துவங்கள் (5). அந்தக் கரணம் சட மானமை பற்றி, விஷயங்களைச் சுட்டியறிதற்குச் சேதந மாகிய சீவன் (1). ஜீவன் தனியே இரா னைகலின், அவனுக்கு ஆசிரயமாகிய அவித்தை (1). சீவன் அ சு த ந் த ர னமையால், சீவனைப் பிரேரித்தற்கு ஈசுவரன் (1). ஈசுவரன் தனியே யிரா னமையால், ஈசுரனுக் காசிரய மாகிய மாயை (1). இவைக ளனைத்திற்கும் அதிட்டாந மாகிய பிரஹ்மம் (1). ஆகிய (31) தத்துவங்களுஞ் சேர்ந் துள்ளன வென அறிக. (93)

94. வினா:- அற்றேல், சபையில் நின்று கணிகையர் நடநஞ் செய்யும் விவகாரம் எந்த விவகாரம், அதிற் கூடியுள்ள தத்துவங்க ளெத்தனை யெனின்?

விடை:- நடநஞ் செய்வதில், கன்மேந்திரியங் களினிகழ்ச்சி காணப்படுகின் றமையால், அது, தூல சரீர விவகார மாகும். கணிகை யானவள் சபையிற் சென்று நிற்றற்கும், நட்டுவர் கொட்டுந் தாளப்படி நடித்தற்கும் பாதேந்திரியம் (1). பாதேந்திரியத்துக் குப் பூப் பரிசந் தோன்றா தாயின், தாளத்துக் கிணங்க நடித்தற்குக் கூடாது. ஆதலின், பூப் பரிச மறிதற்குத் தொக்கிந்திரியம் (1). தாளவொலியை யும், நட்டுவ ராதியோர் வாயில் நின்றுண்டாகும் சங் கீத மாதிகளையுங் கேட்டற்குச், சுரோத்திரேந்திரியம் (1) தானும் இராகாதி கீதங்களைப் பாடுதற்கு, வாக் கிந்திரியம் (1). கீதப் பொரு டோன்ற அபிநயஞ் செய்தற்குப் பாணியிந்திரியம் (1). சபையி லுள்ள பிரபுக்களைப் பார்த்தற்கும், தன் முக கமலத்தில் சிங்கார மாதிய நவ ரசங்களைத் தெரிவித்தற்கும் சக்ஷுயிந்திரியம் (1). இவ் வா றிந்திரியங்களு மிருத்தற்கு, இட மாகத் தூல சரீர தத்துவங்கள் (6). தூல சரீரம் பிரேதம் போல, வீழ்ந்து விடாமல் நிற்றற்கும், இருந்து எழும்பிக் குதித்து நெளிந்து நிமிர்தற்கும், இந்திரியங்களைத் தந் தந் தொழில் களிற் செலுத்தற்கும், தாங்குத லாதி தொழில்களை யுடைய வியாநாதி வாயுக்கள் (5) பிரயோசநத்தை யுத்தேசியாமல், எந்தப் பிரவிருத்தியு முண்டாகா தாதலின், நடநப் பிரவிருத்திக் கான பிரயோசநம் விருப்ப முறுதற்கும், வாயுக்களையும், இந்திரியங்களை யும், ஆட்டி அடக்கற்கும், அந்தக் கரணம் (5) இவைகள் சட மானமையால், சேதந சம்பந்த மின்றித் தாமே சேட்டித்தற்கும், மற் றொன்றைச் சேட்டிப்பித்தற்கும், விஷயங்களைச் சுட்டியறிதற்கும் கூடா வாம். ஆதலின், சேட்டித்தல், சேட்டிப்பித்தல்,

சபையைச் சுட்டி யறிதல், முதலியவைகட்கு ஏது வாகச் சேதந மான சீவன் (1). சீவன் ஆபாச ஞனமையால் தனியே யிரான். ஆதலின், சீவனுக் காசிரய மாகிய அவித்தை (1). சீவன் அசுதந்தர ஞனமையால், சீவனைப் பிரியாப்பிரிய விஷயங்களிற் பிரவிர்த்திப்பித்தற்கு ஈசுரன் (1). ஈசுரனும் ஆபாச ஞனமையால், தனியே யிரான். ஆதலின், ஈசுரனுக் காசிரய மாகிய மாயை (1). இரச்சு சர்ப்பம், இரச்சு வாகிய தன் அதிட்டாநத்தையன்றித் திதி பெருதது போல, இத் தத்துவங்க ளனைத்தும், தமக் கதிட்டாந மாகிய பிரஹ்மத்தை யன்றித் திதி பெருதன வாக இருத்தலால், இவைகட் கதிட்டாந மா யுள்ள பிரஹ்மம் (1). ஆக தத்துவங்கள் (27) என அறிக. இது போல, மற்றைய வியவகாரங்கட்கும் யூகிக்க. (94)

95. விஞ:- தூல சரீர விவகாரத்தில் (31) தத்துவங் களுஞ் சேர்வனவா மென்றபடி, தூல சரீர விவகார மாகிய நடந விவகாரத்திற் சேராமல் (27) தத்துவங் கள் மாத்திரஞ் சேர்ந்து ஞாநேந்திரியங்க ளாகிய சிங்நுவையும், ஆக்கிராணமும், கன்மேந்திரியங்க ளாகிய பாயுருவும், உபத்தமுஞ் சேராமற் குறைவுற்ற தென்னை யெனின்?

விடை:- (31) தத்துவங்களிற் றசேந்திரியங்கள் நீங்கலாக மற்றை (21) தத்துவங்களுந், தூல சரீர விவகாரங்களனைத்தினுஞ் சேர்வன வாகும். தசேந்திரியங்களிற், சில இந்திரியங்கள் தூல சரீர விவகாரங்களிற் சிலவற்றிற் சேர்வன வல்லன வாயினும், சிலவற்றிற் சேர்வனவே யாகும். ஆத லால், சிங்நுவை, ஆக்கிராணம், பாயுரு, உபத்த மாகிய நான் கிந்திரியங்களும், நடித்த லாகிய தூல சரீர விவகாரத்திற் சேர்வன வல்லனவா யிருக்கினும், போசந மல விசர்ச்சந மாதிய சில தூல

சரீர விவகாரங்களிற் சேர்வன வாகும். இஃ தன்றித், தூல சரீர விவகாரம் ஒன்றில் (31) தத்துவங்களுஞ் சேர்ந்து விவகரிக்கு மென்னும் நியம மில்லை யென அறிக. (95)

(பதம்) சூட்சும சரீர விவகாரத்திற்கு-

(பொருள்) சீவன் சொப்பநாவத்தையிற் சூக்கும சரீரத்தோடு கூடி விவகரிக்கும் விவகாரத்திற்கு,

(பதம்) கூடுந் தத்துவங்கள்-

(பொருள்) துணை யாகச் சேருந் தத்துவங்கள்,

(பதம்) சூட்சும சரீர தத்துவம் (20) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5) ஆகத் தத்துவங்கள் (25)-

(பொருள்) வெளி.

(பதம்) காரண சரீர விவகாரத்திற்கு-

(பொருள்) சீவன் சுழுத்தி யவத்தையிற், காரண சரீர மாகிய அவித்தையோடு கூடி விவகரிக்கும் விவகாரத்திற்கு,

(பதம்) கூடுந் தத்துவங்கள்—

(பொருள்) துணை யாகச் சேருந் தத்துவங்கள்,

(பதம்) சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5)—

(பொருள்) வெளி.

96. வினா:- சகல கரணங்களு மொடுங்கிய சுழுத்தி யவத்தையில், சீவனுக்கு விவகாரங் கூறுதல் பொருந்தா தெனின்?

விடை:- சுழுத்தி யவத்தையில் அவித்தையினது சூக்கும விருத்தியால், சீவன் பிரஹ்மாநந்த லேசத்தை யநுபவிக்கும் விவகார முடைய னுதலால், பொருந்து மென அறிக. (96)

(பதம்) சீவ விவகாரத்திற்கு—

(பொருள்) சீவனது துரியாவத்தையி லுள்ள விவகாரத்திற்கு,

(பதம்) கூடுந் தத்துவங்கள்—

(பொருள்) சேருந் தத்துவங்கள்,

(பதம்) சீவன் ஈசுவரன் பிரஹ்மம் (3) -

(பொருள்) வெளி,

97. வினு:— சீவனுக்குத், துரியாவத்தையி லுள்ள விவகாரம் யா தெனின்?

விடை:— சீவன், தன் நிச சொரூப மாகிய ஆத்மாவை யறிந்து, ஆத்மாநந்தத்தை யநுபவித்த லென அறிக. (97)

98. வினு:— துரியாவஸ்தையி லுள்ள சீவ விவகாரத்தில், அவித்தையும், மாயையுஞ், சேராதது யாதினு லெனின்?

விடை:— மறைப்பைச் செய்வ தாகிய அவித்தையும், நாம ரூபப் பிரபஞ்ச மாகப் பரிணமிக்கும் மாயையும், பிரஹ்மாத்மைக்ய ஞானத்தால் நாசமாய் விட்டமையினென அறிக. (98)

99. வினு:— துரியாவத்தையில், அவித்தையும், மாயையும், நாச மாய்விட்ட தென எதனுலறியலா மெனின்?

விடை:— சூரியப் பிரகாசத்தில் அந்தகாரமும், பிசாசின் தோற்றமு மில்லாதது போலச், சீவன் துரியாவத்தையில், பிரஹ்மத்திற் கலந்து, பிரஹ்மப் பிரகாசமயமாய் விளங்கும் போது, சொரூப மறைப்

பின்மையால், அவித்தையும், தேகாதிப் பிரபஞ்சத் தோற்ற மின்மையால், மாயையும், நாசமாய்விட்ட தென அறியலா மென அறிக. (99)

(பதம்) சாக்ஷி விவகாரத்திற்கு உள்ள—

(பொருள்) ஜீ வ ன், துரியாதீதாவத்தையில், சாக்ஷி மாத்திரமா யுள்ள, வி வ கா ர த் தி ற் கு இருக்கின்ற,

(பதம்) தத்துவம்—

(பதம்) பொருள் தத்துவமானது,

(பதம்) சாக்ஷி (1) —

(பொருள்) சாக்ஷி யாகிய கூடத்தர் (1),

100 வினா:— துரியாதீத மாகிய சாக்ஷி விவகார மாவது யா தெனின்?

விடை:— சாக்ஷி மாத்திர மா யுள்ள கூடத்த ராகிய தானே, பிரஹ்ம மெனவும், பி ர ஹ் ம மே கூடத்த ராகிய தானெனவும், அபேத மாக அறிந்து, திரி புடித் தோற்ற மின்றி, யதீதாநந்த மய மாகிப், பொரு ளெப்படியோ, அப்படி யிருத்த லென அறிக. (100)

(நூல் பிரிவு - 28)

ஈசுரன் தன் தூல சரீர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்; சமட்டி தூல சரீர தத்துவம் (6), சமட்டி சூட்சும சரீர தத்துவம் (20), சமட்டி சீவன் அவித்தை (2), தூல பூதம் (5), ஈசுவரன் வித்தை பிரஹ்மம் (3), ஆக (36), சூட்சும சரீர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்; சமட்டி சூட்சும சரீர தத்துவங்கள் (20), சமட்டி சீவன் அவித்தை (2), சூட்சும பூதம் (5), ஈசுரன் வித்தை பிரஹ்மம் (3),ஆக(30). காரண சரீர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்; ஈசுரன் வித்தை பிரஹ்மம் (3), ஈசுர வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்: ஈசுரன் பிரஹ்மம் (2), பிரஹ்ம வியவகாரத்துக்குள்ள தத்துவம் பிரஹ்மம் (1).

இதன் பொருள் வெளி.

101 வினா:— ஈசுரன், தூல சூட்சும வியவகாரங்களிற் பஞ்ச பூதங்களைச் சேர்த்துக் கூறியது யாதினா லெனின்?

விடை:— ஈசுரன், பஞ்ச பூதங்களின்றும் சீவர்கட்குத், தநு கரண புவந போகங்களை யுண்டு பண்ணிக் கொடுக்கின்றமையி னென அறிக. (101)

(நூல் பிரிவு-29)

இந்திரிய வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்; இந்திரியம் (1), தூல சரீர தத்துவங்கள் (6), அந்தக் கரணம் (5), வாயுக்கள் (5), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5), ஆக (22). மநோ ராச்சிய வியவகாரத்திற் கூடுந் தத்துவங்கள்; அந்தக் கரணம் (5), சீவன் ஈசுரன் அவித்தை வித்தை பிரஹ்மம் (5), ஆக (10). இப்படித் தத்துவங்களின் நிலை சொல்லப் பட்டது,

(பதம்) இந்திரிய + ஆக (10), -

(பொருள்) வெளி,

102 வினா:— இந்திரிய வியவகாரத்தில், ஓரிந்திரியத்தை மாத்திரஞ் சேர்த்து, மற்றைய இந்திரியங்களைச் சேர்க்காது விடுத்த தென்னை யெனின்?

விடை:— இந்திரிய வியவகார மென்றது, ஞானேந்திரிய வியவகாரமாகும், ஆதலின், ஞானேந்திரியங்களி லொன்றறிந்ததை, மற்றைய நான் கிந்திரியங்களும் அறியுஞ் சக்தி யில்லாதவைக ளானமையால், ஓரிந்திரியம், ஓர் விஷயத்தை யறியும் போது, அதற்குச் சாதக மாக, அறி கருவிக ளாகிய ஞானேந்திரியங்கள் நான்கும், தொழிற் கருவிக ளாகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும், வேண்டுவன வல்லாமையி னென அறிக. (102)

103. வினா:— அற்றேல், அறி கருவி யல்லன வாகிய தூல சரீர தத்துவங்க ளாறையும், வியாநாதி வாயுக்க ளைந்தையும், இந்திரிய வியவகாரத்துச் சாதக மாகச் சேர்த்துக் கூறிய தென்னை யெனின்?

விடை:— இந்திரியங்கட்குக் கோளகைக ளாகத் தூல சரீர தத்துவங்களும், தூல சரீரத்தைத் தாங்கி நிலைபெறச் செய்தற்கு, வியாநாதி வாயுக்களும், வேண்டி யிருத்தலி னென அறிக. (103)

104. வினா:- மநோ ராச்சிய வியவகாரத்தில், தூல சரீர தத்துவங்கள் (6)ம், வாயுக்கள் (5)ம், இந்திரியங்கள் (10)ம், சேராதது யாதினு லெனின்?

விடை:— வாசநா சம்ஸ்காரம் பற்றிச் சங்கற் பாகாரமாக எழாநின்ற மநதுக்கு, இவைகளின் சாதகங்கள் வேண்டுவ தில்லாமையி னென அறிக. (104)

(பதம்) இப்படி—

(பொருள்) இந்தப் பிரகாரம்,

(பதம்) தத்துவங்களின்—

(பொருள்) (36) தத்துவங்களி னுடைய,

(பதம்) நிலை சொல்லப்பட்டது—

(பொருள்) நிலை கூறப்பட்டது.

3. திதி நிரூபகம் முற்றிற்று.

*சிதம்பர தேசிகன் றிருவடி வாழ்க.*

---

உ

சிவ மயம்

ஓம் பரப் பிரஹ்மணே நம :

சிதம்பர தேசிகன் திரு வடி வாழ்க.

நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியாநம்.

---

## 4. * அபவாத நிரூபகம்.

### அவதாரிகை.

பிரஹ்மத்திற் றூல சரீர முதற் பிரகிருதி யீருக வுள்ள (35) தத்துவங்களும், ஒடுங்குத லாகிய அபவாதக் கிரமத்தை நிரூபிக்கின்றுர்:—

(நூல் பிரிவு-30)

இனித் தத்துவங்க ளொடுங்குகின்ற வழி சொல்லுகின்றேம்.

சகல சீவர்களிடத்தினு மிருக்கின்ற தூல சரீரங்க ளனைத்தும், தமக் காதார மான தூல பூதங்களில் மடிந்து, பூத மாத்திர மாக வொடுங்கும். இந்தத் தூல பூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத், தன் மாத்திரைக ளான தாமத குண பூதங்க ளாக மிஞ்சும். அப் போது கேவலம் இரணியகருப் பாவத்தை யென்று சொல்லப்படும்—

இதன் பொருள் வெளி.

---

* அபவாத நிரூபகம் — கற்பனை ஒடுக்கத்தின் விளக்கம் கூறுதல்.

1. வினு:- தூல பூதங்கள். சூட்சும பூதங்க ளாக மிஞ்சிய போது இரணியகருப் பாவத்தை யென்றது யாதினு லெனின்?

விடை:- இரணிய மென்பது பொன். பொன் பிரகாசமா யிருப்பது போல, அப்பிரகாச மாகிற தூலக் கலப்பின்றிப், பிரகாச மாகிய சூக்கும பூத சூக்கும சரீர மாத்திரமாய் நிற்றலி னென அறிக. (1)

(நூல் பிரிவு 31)

சூட்சும சரீர தத்துவங்கள் (20)ம், கட்டு விட்டுப் பூதங்களின் சாத்துவீக குணமும், இராசத குணமு மாக ஒடுங்கும். அஃ தெங்ஙன மெனின், சகல பிராணிகளிடத்தினு மிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதாந வாயுவும், உபத்தமும் பிருதிவியி லொடுங்கும். சித்தமும், சிங்ஙுவையும், சமாநனும், பாயுருவும், அப்புவி லொடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபாநனும், பாதமும், அக்கிநியி லொடுங்கும். மநதும், தொக்கும், பிராணனும், பாணியும், வாயுவி லொடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியாநனும், வாக்கும், ஆகாயத்தி லொடுங்கும். அப் போது பழையபடியே முக் குண பூதங்க ளாகும்—

இதன் பொருள் வெளி.

2. வினு:- ஒவ் வொரு பூதத்தினும், நான்கு நான்கு தத்துவங்க ளொடுங்கியது யாதினு லெனின்?

விடை:- ஒவ் வொரு பூதத்தின் சத்துவ குணத்தி லிரண்டும், இராஜத குணத்தி லிரண்டு மாக, நான்கு நான்கு தத்துவங்க ளுண்டாயினமையி னென அறிக. (2)

(நூல் பிரிவு 32)

இந்தச் சூட்சும பூதங்களும், பிருதிவி அப்புவிற் கரைந் தொடுங்கும். அப்புவும், அக்கிநியிற் சுவறி யொடுங்கும். அக்கிநியும், விளக்குப் போல, வாயுவி லணைந் தொடுங்கும். வாயுவும், ஆகாயத்தி லோய்ந் தொடுங்கும். ஆகாயமும், விக்ஷேப சத்தியி லொடுங்கும். ஆவரண சக்தியும், விக்ஷேப சக்தியும், மூலப் பிரகிருதியின் தமோ குண மாத்திர மாய் ஆல மரம் ஆல விதையில் ஒடுங்கினாற் போலப், பின்னு மொரு சிருட்டிக்கு வித் தாக, அவித்தையினும், மாயையினும், ஒடுங்கும்.

இதன் பொருள் வெளி.

3. வினா:- ஆவரண சக்தியும் விக்ஷேப சக்தியும், விரிந்த பிரகாரமே தமோ குண மாத்திர மாகிப், பிரகிருதி யாக ஒடுங்காமல், அவித்தையினும், மாயையினும், ஒடுங்கிய தென்னை யெனின்?

விடை:- பிரளய காலத்தில், பந்த நிவிர்த்தி யாகாத சீவர்கள் மேலுஞ் சந்மித்துக் கன்ம தாரா தம்மியப்படி சுக துக்கங்களை யநுபவிப்பதற் கேது வான மறைப்புக்கும், தநு கரண புவந போகங்கட்கும், பீஜ ரூப மாக அவித்தையினும், மாயையினும், ஈசுர நியமத்தால், ஒடுங்கிய தென அறிக. (3)

4. வினா:- ஆவரண சத்தி அவித்தையினும் விக்ஷேப சத்தி மாயையினும், பிரிந்தடங்கியது யாதினா லெனின்?

விடை:- ஆவரண சத்தி மறைப்புச் சத்தியாத லின்,அது சீவர்கட்கு மறைப்பு ரூபமா யுள்ள சீவ சத்தி யாகிய அவித்தையினும், விக்ஷேப சக்தி

ஈசுரன் சக சிருட்டி செய்யும் நிமித்தம் நினைத்தற்கு ஏது வாகிய நினைப்புச் சத்தியாதலின், அது, ஈசுர சத்தி யாகிய மாயையினும் அடங்கிய தென அறிக. (4)

5. வினு:- ஆவரண சத்தியும், மாயையி லடங்கி நிற்காதோ வெனின்?

விடை:- மாயை யானது, ஈசுரன் சர்வஞ்ஞ யிருத்தற் கேதுவா யுள்ள ஞாந சத்தியாதலால், அதில், ஒளியிலிரு ளடங்கி நிற்காதது போல, மறைப்பைச் செய்வ தாகிய ஆவரண சத்தி, யடங்கி நிற்கா தென அறிக. (5)

(நூல் பிரிவு-33)

இந்த மாயையும், அவித்தையும், அதிநுண்மை யான மூலப் பிரகிருதி யென்னும் விந்து தத்துவ மாக ஒடுங்கும். அவ் விந்து தத்துவமும், பாம்பு பழுதை மாத்திர மாக ஒடுங்கியது போலத், தனக் கதிட்டாந மான பிரஹ்ம சைதந்நிய மாத்திர மாக ஒடுங்கும்.

இதன் பொருள் வெளி.

6. வினு:- பிரஹ்மத்திற் பிரகிருதி யொடுங்கிய தற்குப், பழுதைப் பாம்பு திருட்டாந்தங் கூறியது, யாது நிமித்த மெனின்?

விடை:- பாம்பை விசாரிக்கு மிடத்துப், பழுதை யைப் போல, உள்ள தென்பதும், பழுதையி லொடுங்கிய தென்பதும், வாஸ்தவ மல்லாதது போலப், பிரகிருதியை விசாரிக்கு மிடத்துப், பிரஹ் மத்தைப் போ, லுள்ள தென்பதும், பிரஹ்மத்தி லொடுங்கிய தென்பதும், வாஸ்தவ மல்ல வென விளங்கும் நிமித்த மென அறிக. (6)

(நூல் பிரிவு-34)

இப்படித் தோற்றி யொடுங்கிய தத்துவங்கள் (35). அவை யாவன:- பூதங்கள் (5), தூல சரீர தத்துவங்கள் (6), சூட்சும சரீர தத்துவங்கள் (20), காரண சரீர மான மாயை அவித்தை (2), அவை களிற் பிரதிவிம்பமா யுள்ள, ஈசுரன் சீவன் (2), ஆகிய இவைக ளாம்.

இதன் பொருள் வெளி.

7. வினு:- மூலப் பிரகிருதியை ஓர் தத்துவ மாகச் சேர்க்காதது யாதினு லெனின்?

விடை:- மூலப் பிரகிருதி, மாயை, அவித்தை, யென்னும் பெயரால், இரண்டு தத்துவங்க ளாகச் சேர்க்கப்பட்டிருத்தலி னென அறிக. (7)

8. வினு:- அங்ஙன மாயின், முன் னுள்ள அத்தியா ரோப நிரூபகத்தில், மூலப் பிரகிருதி யென் றொரு சத்தி யுண்டெனக் கூறியபடியே, அதனை, ஒரே பெயரால், ஒரே தத்துவ மாகக் கூருமல், வெவ் வேறு பெயரா, லிரண்டு தத்துவங்க ளாகக் கூறியது யாதினு லெனின்?

விடை:- வெண்மை செம்மை, கருமையாகிய நூல்கள் பிரி வின்றிச் சேர்ந்து முறுகலா யுள்ள போது, கயி றெனும் பெயரைப் பொருந்தி யொன்ருகவும்; அவைகள் பிரிந்துநின்ற போது, வெண்மை நூல், செம்மை நூல், கருமை நூலெனும் பெயர்களைப் பொருந்திப் பல வாகவு மிருப்பது போல, மாயை யென்னுஞ் சத்துவ மாதிய குண சத்திகள், பிரி வின்றி யொன் ருய்ப் பிரஹ்மத்தி லடக்கமா யிருக்கும் போது, பிரகிருதி யென்னும் பெயரைப் பொருந்தி

ஓர் சத்தி யாகவும்; அவைகள், பிரிந்து விகாச மாகிய போது, மாயை, அவித்தை, ஆவரணம், விக்ஷேப மென்னும் பெயர்களைப் பொருந்திப் பலவாகவு மிருத்தலி னென அறிக. (8)

9. வினு:- அற்றேல், பிரகிருதி யாக இருந்து, விகாசமாகிய, ஆவரண விக்ஷேப சத்திகளைத், தத்து வங்க ளாகச் சேர்க்காதது யாதினு லெனின்?

விடை:- ஆவரண சத்தி, அவித்தையைப் போல, சீவர்கட்கு மறைப்பைச் செய்து கொண்டு, அவித்தையைப் பிரியாமல், ஒன்ரு யிருப்பது பற்றி, அவித்தையா தத்துவ மாகவும், விக்ஷேப சத்தி, ஈசுர வீக்ஷணியத்தால், ஆகாய மாகி விட்டமையால், ஆகாய தத்துவ மாகவும், கூறப்பட்டிருத்தல் பற்றி யென அறிக. (9)

10. வினு:- தத்துவங்களுக்கு ஒடுக்கங் கூறும் போது, இன்ன தத்துவத்தில், ஒடுங்கு மெனக் கூருது விடு பட்ட சீவேசுரர்கள், எந்தத் தத்துவத்தி லொடுங்கு வர்க ளெனின்?

விடை:- கட சலமும், மேக சலமும், ஒடுங்கிய போது, அவைகளி லுள்ள ஆரோபித மாகிய பிரதி விம்பாகாசங்கள், தமக் கதிட்டாந மான மகாகாசத்தி லொடுங்குவன போல, அவித்தையும், மாயையும், ஒடுங்கிய போது, அவைகளி லுள்ள பிரதிவிம்பர்க ளாகிய சீவேசுரர்கள், தமக்க திட்டாந மான பிரஹ்ம த்தில் ஒடுங்குவர்க ளென அறிக. (10)

11. வினு:- அதிட்டாந இலக்கண மாவது யா தெனின்?

விடை:- எது பிராந்தி காலத்திற் பிரதீதியாகிற தில்லையோ, மற்றும், எதனது பிரதீதியால், பிராந்தி

நிவிர்த்தியாகிறதோ, அது வாம். இஃதன்றி, எது நிருவிகார சொரூபமாகவும், அவித்தையால் செய்யப் பட்டகற்பிதகாரியங்கட்கு,ஆசிரயமாகவுமிருக்கிறதோ அது வெனினும் அமையு மென அறிக. (11)

12. வினு:- பிரஹ்மத்தை யதிட்டாந சொரூப மென்றது யாதினு லெனின்?

விடை:- இரச்சு சர்ப்பத் தோற்றரவில், இரச்சு அதிட்டாநம்; சர்ப்பம் ஆரோபிதம். ஆரோபித மான சர்ப்பத் தோற்றர வாகிய பிராந்தி காலத்தில், இரச்சு பிரதீதியாகிற தில்லை. இரச்சு ஞாநத்தால், சர்ப்பத்தோற்றர வாகிய பிராந்தி நிவிர்த்தியாகிறது. இது போல, ஆரோபித மான சகத் தோற்றர வாகிய பிராந்தி காலத்தில் பிரஹ்மம் பிரதீதியாகிற தில்லை. பிரஹ்ம ஞாநத்தால், ஆரோபித மான சகத் தோற்றப் பிராந்தி நிவிர்த்தியாகிறது. ஆதலின், பிரஹ்மம் சர்வாதிட்டாந சொரூப மென அறிக. (12)

13. வினு:- ஆரோபித இலக்கணம் யா தெனின்?

விடை:- பிராந்தி காலத்தில், பிரதீதி யுள்ள தாயும், அதிட்டாந ஞாந காலத்தில், பிரதீதி யில்லாததாயு மிருப்ப தென அறிக. (13)

14. வினு:- சகத்தை யாரோபித மென்றது யாதினு லெனின்?

விடை:- பிராந்தி காலத்திற் பிரதீதி யுள்ளதா யிருந்து, அதிட்டாந ஞாந காலத்தில் பிரதீதி யில்லாமற் போகின்றமையி னென அறிக. (14)

15. வினு:- இந் நூற் பிரதிகள் பலவினும், தோற்ற வொடுக்கங்களை யுடைய தத்துவங்கள் (36) எனவும்

அவைக ளிவைக ளெனவும், பிரஹ்மத்தையுஞ் சேர்த்துக் கூறியிருக்க; இங்கே பிரஹ்மத்தைச் சேர்க்காமல் மற்றைய (35) தத்துவங்களை மாத்திரம் தோற்ற வொடுக்கங்க ளுடையன வென்ற தெதனு லெனின்?

விடை:- தோற்ற வொடுக்கங்க ளுடைய தத்து வங்கள் (36) எனத் தொகுத்துக் கூறுவன வாகிய பிரதிகளும், (35) தத்துவங்கட்கு மாத்திரம் இன்ன இன்ன தத்துவம், இன்ன இன்ன தத்துவத்திற் றோன்றியது, இன்ன இன்ன தத்துவத்தி லொடுங்கிய தென, வகுத்துத் தோற்ற வொடுக்கங்கள் கூறினவே யன்றி, ஒரு பிரதியிலேனும் பிரஹ்மம் இன்ன தத்து வத்திற் றோன்றியது, இன்ன தத்துவத்தி லொடுங்கிய தெனத் தோற்ற வொடுக்கங்கள் கூறுமையினுனும், பழமை யாகிய ஓர் பிரதியில், தோற்றி யொடுங்கிய தத்துவங்கள் (35) எனப் பிரஹ்மத்தைச் சேர்க்காமல், வகுத்துக் கூறியபடியே, தொகுத்துங் கூறியிருந்த மையினுனும், சகல சுருதிகளும், பிரஹ்மத்தை அநாதி நித்திய மெனக் கீர்த்திக்கின்றமையினுனும், பிரஹ் மத்தைத் தோன்றி யொடுங்கிய தெனக் கூறுவ தாகிய பாட பேதங்கள், எழுதியவர்கள், புத்தி தோஷத்தாற் பிறழ்ந் தெழுதிய தா மெனஒதுக்கித், தோன்றி யொடுங்குவன வாகிய தத்துவங்களை மாத்திரம் வகுத்துந், தொகுத்தும் (35) எனக் கூறுவ தாகிய பாடப் பிரகாரங் கூறிய தென அறிக. (15)

16. வினு:- அற்றேல், மாணுக்கர்களுக்குச் சில ஆசிரியர்கள், தோன்றி யொடுங்கிய தத்துவங்கள் (36) எனக் கூறுவதாகிய பாட பேதப்படி, போதித்து வருதல், சுருதியாதிகட்கு விரோத மாமே யெனின்?

விடை:- ஆசிரியர்கள், தொய்தப் பிரதீதி யின்றிப் பொரு ளெப்படியோ, அப்படியேயிரா நின்ற அதீதா

வத்தையாகிய தங்கள் சுபாவ நிலையில், பிரஹ்ம மென்னும் நாம விகாரமும், 'நாம் பிரஹ்மமா யிருக்கிறோ' மென்னும் பிரஞ்ஞையு மில்லாமல், நழுவிப் போ யிருக்கின்ற அநுபவம் பற்றிப், பிரஹ்மம் தோன்றி யொடுங்கிய தென்பதற்குப், பிரஹ்ம மென்னும் நாம கற்பனை தோன்றி யொடுங்கிய தென்பதே, யிந் நூலின் அபிப்பிராய மெனப் பொருள் கொண்டு, அவ் வபிப்பிராயந் தோன்ற மாணுக்கர் கட்குப் போதித்து வருவார்க ளாயின், சுருதியாதி களுக்கு விரோத மாகா தென அறிக. (16)

**17.** விை:- பிரஹ்ம மென்னும் நாம கற்பனை யெதனுற் றோன்றி, யெதனு லொடுங்கிய தெனின்?

விடை:— ஓர் புருடனுக்குப் புத்திரனைக் குறித்துப் பிதா, மனைவியைக் குறித்து மணாளன், மருகனைக் குறித்து மாமன், சிறியவனைக் குறித்துப் பெரியவன் என்னும் நாம கற்பனைகள் தோன்றிப், புத்திர ராதியர் மரித்த பின்னர்ப், பிதா மணாளன் மாமன் பெரியவ னென்னும் நாம கற்பனைக ளில்லாமற் போவது போல, அநாதி நித்திய மா யுள்ள பொருளுக்குச் சிறியனவாகிய (35) தத்துவங்களைக் குறித்துப் பெரிதாகிய பிரஹ்ம மென்னும் நாம கற்பனை மாத்திரந் தோன்றிச், சிறியனவாகிய (35) தத்துவங்கள் ஒடுங்கியபோது, அவைகளைக் குறித்து வந்த பெரிதாகிய பிரஹ்ம மென்னும் நாம கற்பனை மாத்திர மொடுங்கியதாகும். இவ் வபிப்பிராயந் தோன்ற, இந் நூலானது முந்திய பிரஹ்ம விலக்கண நிருபகத்தில், சுத்தப் பிரஹ்மத்துக்கு, அதனிடத் தடங்கியிருந்த பராசத்தியி னுல்லாசத்தால், பரப் பிரஹ்ம மெனும் பெயர் தோன்றிய தெனக் கூறி, அச்சத்தி சங்கோசப்படில், அப்பெயர் நீங்கு மென்ப தையும், குறிப்பாக வெளிப்படுத்தி யிருக்கிறது.

ஆதலின், இந் நூலினுலும், நாம கற்பனைகள், பிரஹ்மத்துக்குத் தோன்றி யொடுங்கு மென்பதை யறியலா மென அறிக.

பிரமாணம்.

(சூத சம்மிதை பரசிவ சொரூப விசாரம்)

"மறைமுத றனக்கு நாம ரூபங்கள் மருவுத லில்லையே யெனினும், கறையற விளங்கு மாயையி னுலே கற்பிக்கப்பட்டன வாகும்"

(பாகவதம்.)

"கருதுசே யன்னைகா தலியிப் பாருளோர், பொருவருந் தாதைநற் புதல்வ னுயக, னரசனென் றரையநீ யடைதல் போலொரு, பிரமமே மாயையாற் பெயர்கள் பெற்றவே." (17)

18. வினு:- கட மென்னும் நாம மொடுங்கிய போது, அதனுற் குறிக்கப்படும் கடமும் ஒடுங்கிவிடுவது போலப், பிரஹ்ம மென்னும் நாம மொடுங்கிய போது, அதனுற் குறிக்கப்படும் பிரஹ்மமும் ஒடுங்காதது யாதினு லெனின்?

விடை:- பிரஹ்மம் கடத்தைப் போ லுற்பவ முடையதாக இராமல், அநாதியாக இருத்தலி னென அறிக. (18)

19. வினு:- அற்றேல், அவித்தை மாயை சீவன் ஈசுவரன் என்னுந் தத்துவங்களும், அநாதி யானமை யால், அவைகட்கு ஒடுக்கமாகிய நாசங் கூறியது பொருந்தா தெனின்?

விடை:- அவித்தையாதிகள், பிரஹ்மத்தைப் போல, வாஸ்தவ அநாதியாக இராமல், கற்பித அநாதியாக இருக்கின்றமையால், அவைகட்கு, நாசங் கூறியது பொருந்துமென அறிக. (19)

20. வினு:- கற்பித அநாதி யிலக்கணம் யாது? வாஸ்தவ அநாதி யிலக்கணம் யாது? அவித்தையாதி கள், கற்பித அநாதியும், பிரஹ்மம், வாஸ்தவ அநாதியு மா மென்றது யாதினு லெனின்?

விடை:- உற்பவ விகாரமாகிய காரியத் துட்படா தவைக ளனைத்தும் அநாதியே யாகும். ஆயினும், அவைகளில், உற்பவ விகாரமாகிய காரியத் துட்படா மல் மற்றைய விகாரங்களாகிய காரியங்களி னுட்படுவ தாயும், ஒன்றை ஆதாரமாக வுடைய ஆதேய மாயும், குண சகிதமாயும், சாவயவ மாயும் உள்ளது, கற்பித அநாதியாகும். உற்பவ விகார மாதி பல விகாரங்க ளாகிய காரியங்களி னுட்படாத தாயும், நிராதார மாயும், குண ரகிதமாயும் நிரவயவ மாயு முள்ளது, வாஸ்தவ அநாதியாகும். இவ்விரண்டில், அவித்தை மாயை சீவன் ஈசுர னென்பவை, உற்பவ விகார மாகின்ற காரியத் துட்படாதனவாக இருக்கினும், மற்றைய விகாரங்களாகிய காரியங்களி னுட்படுவன வாயும், பிரஹ்மத்தை ஆதாரமாகவுடைய ஆதேயங்க ளாயும், குண சகிதங்க ளாயும், சாவயவங்க ளாயு முள்ளன வானமையால், கற்பித அநாதிகளாகும், பிரஹ்மம், உற்பவ விகார மாதிய பல விகாரங்க ளாகிய காரியங்களி னுட்படாத தாயும், நிராதார மாயும், குண ரகிதமாயும், நிரவயவ மாயும் இருக் கின்றமையால், வாஸ்தவ அநாதியாகும் என அறிக. (20)

21. வினு:- சில மதஸ்தர்கள், பிரஹ்மம் போலச் சீவனு, மாயையும், நித்தியமெனக் கூறுகின்றனரே யெனின்?

விடை:- அற்றேல், சீவனும், மாயையும், பிரஹ்மத்துக்குச், சினை, குணம், தொழில்களாகிய தற் கிழமை, அல்லது, பொருளிடங் காலங்களாகிய பிறிதின் கிழமை யென்னும் இருவகைப் பொருள்களி லொரு வகைப் பொருள்களாக இருக்க வேண்டும். அவ்விரு வகையில் தற் கிழமைப் பொருள்க ளெனின், அவைகள், பூரணமாகிய பிரஹ்மத்தில், அபேதமாக இருக்கக் கூடும். அங்ஙன மிருக்கிற தெனின், விருக்ஷத்துக்குக் கிளையாகிய சினை, பசுமை நிறமாகிய குணம், அசைத லாகிய தொழில்க ளிருத்தல் போலப், பிரஹ்மத்துக்குச், சீவனும் மாயையும், சினையாக வேனும், அலலது, குணமாக வேனும், அல்லது, தொழிலாக வேனும் இருக்க வேண்டும். இருக்கலா மெனின், சினை யென்பது அவயவ மானமையின், அவயவ சகிதப் பிரஹ்ம மெனவும், குண சகிதப் பிரஹ்ம மெனவும், கிரியா சகிதப் பிரஹ்ம மெனவும் கூறவேண்டும். அங்ஙனம் கூறலா மெனின், பிரஹ்மத்தை, நிரவயவம் நிர்க்குணம் நிஷ்கிரிய மெனக் கீர்த்திக்கின்ற சுருதியாதிகட்கு விரோதமாம். இஃதன்றிப், பிரஹ்மத்துக்குச், சினையாகிய சீவனுக் குள்ள சுக துக்காதிகளும் வரும். ஆதலால், சீவனும், மாயையும், நித்திய மெனல், பொருந்தா தெண அறிக, (21)

22. வினு:- அற்றேல், சீவனும், மாயையும், பிரஹ்மத்துக்குப், பிறிதின் கிழமைப் பொருள்களாக வுள்ளன வெனலா மெனின்?

விடை:- விருக்ஷ மானது கண்ட மாயும், ஆதேய மாயும், உற்பவ முடைய தாயு மிருத்தலால், இதர விருக்ஷ மாகிய பொருளையும், இருத்தற்கு ஆதார மாகிய இடத்தையும், இறப்பு எதிர்வு நிகழ் வென்னுங் காலங்களையும் உடைய தாயிற்று. அது போலப்,பிரஹ்மம் கண்ட மாயும், ஆதேய மாயும்,

உற்பவ முடைய தாயு மிருக்கில், பொரு ளிடங் காலங்களாகிய பிறிதின் கிழமைப் பொருள்களை யுடைய தாகும், அங்ஙன மின்றிப், பிரஹ்மம், அகண்ட மாயும், சர்வாதார மாயும், காலாதீத மாயு முள்ள பொரு ளெனச் சுருதிகள் கூறுகின்றமையின், அதற்குச், சீவனும், மாயையும், பிறிதின் கிழமைப் பொருள்க ளாக வுள்ளன வெனலும், பொருந்தா தென அறிக. (22)

23. வினா:- சர்வாதார மாயும், காலாதீத மாயு முள்ள பிரஹ்மத்துக்குச், சீவனும், மாயையும், இட காலங்க ளாக இரா வென்பது சரியே. பிரஹ்மம், அகண்டப் பொரு ளாக இருக்கினும், அதன் வியாபகத்தில், சீவனும், மாயையும், பொரு ளாக இருக்கலா மெனின்?

விடை:- அற்றேல், சத் தாகிய பிரஹ்ம வியாபகத்திற், சீவனும், மாயையும், சத் தாக வுள் ளனவா? அல்லது, அசத் தாக வுள்ளனவா? அல்லது, சதசத் தாக வுள்ளனவா வென மூ வித ஆசங்கை நிகழும் நிகழுங் கால், முத லாசங்கைக்குச் சத் தாக வுள்ளன வென விடை கூறில், மகாகாய வியாப கத்திருக்கும், கடாகாயம், மகாகாயத்துக்கு வேறுகாமல், ஏகாகாய மாகவே நிலை பெறுதல் போலச், சத் தான பிரஹ்ம வியாபகத்திருக்கும், சத் தான சீவனும், மாயையும், பிரஹ்மத்துக்கு வேறுகாமல், பிரஹ்ம மாத்திர மாகவே நிலை பெறும். அல்லது, இரண்டாவ தாகிய மத்திய ஆசங்கைக்கு, அசத் தாக வுள்ளன வென விடை கூறில், அசத்து, சத்துக் கெதிர் மறை யாகிய இல் பொரு ளானமையின், பிரஹ்ம மொன்றே உள்ள பொரு ளாக நிலை பெறும் அல்லது, மூன்றுவ தாகிய இறுதி ஆசங்கைக்கு, சதசத் தாக வுள்ளன வென விடை கூறில், சத் தென்பது உள்ளது; அசத் தென்பது

இல்லது; உள்ளதும் இல்லதும் ஒன்றற் கொன்று எதிர்மறைப் பொருள்க ளானமையின், இரண்டு மொன்ரு யிருக்கு மெனல், ஒளியு மிருளும் ஒன்ரு யிருக்கு மெனல் போல, விரோத மாம். இஃ தன்றிச் சத்து உண்மைப் பொருளும், அசத்து இன்மைப் பொருளு மானமையால், முற் கூறிய படியே, நித்திய மாக வுள்ள பொருள், சத் தொன்ருகவே நிலை பெறும். ஆதலின், சீவன் மாயை யிரண்டையும் சத்து அசத்து சதசத் தென்னு மிலக்கணங் களில், எவ் விலக்கண முடையன வாகக் கூறினும், தொய்தஞ் சித்திக்கா-மையின், அவைகளைப் பிரஹ்மத்துக்கு, அந்நிய மாகிய பொருட்க ளெனல் அசம்பாவித மென அறிக. (23)

24. வினு:- பிரஹ்ம வியாபகத்திற், சீவனும் மாயையும் முதல் வினுவிற்குக் கூறிய விடைப்படி சசாதீய சத்தா யிருக்கிற், சத்துஞ் சத்தும் பின்ன முருமல், ஒரு பொருளே யாகும். அங்ஙன மின்றி, விசாதீய சத்தா யிருக்கிற் பிந்நமா யுள்ள நித்தியப் பொருள்க ளாகுமே யெனின்?

விடை:- சத்துச் சாதிக்கு, வேறு சாதி, அசத்துச் சாதியே யாகும். அது, இன்மைப் பொரு ளாய், முற் கூறிய படி அத்துவித மாகவே பிரகாசிக்கும். அற் றன்று; பிராமணனுக்கு, க்ஷத்திரியனும், வைசியனும், சாதித்துவத்திற் பேத மாக இருக்கினும், பொருட் டன்மையிற் சம மாக வுள்ளார் போலப், பிரஹ்மத்து க்குச் சீவனும், மாயையும் சாதித் துவத்திற் பேதமாக இருக்கினும் பொருட்டன்மையிற், சமமாக வுள்ளன வா மெனின், சத்தாகிய பிரஹ்மத்துக்கு அதிவியாப்தி தோடம் வருவது மின்றிக், கட மிருந்த, விடத்திற் படமும், பட மிருந்த விடத்திற் கடமு மில்லாதது போலப்,

பிரஹ்மம் சீவன் மாயை யாகிய மூன்றும் ஒன் றிருந்த விடத்தில், மற் றொன் றிராததே யாகும். ஆகுமாயின், பிரஹ்மத்துக்கு அபரிபூரணத்துவம் வரும். ஆதலின், பிரஹ்ம வியாபகத்திற், சீவனும், மாயை-யும், விசாதீய சத்தா யிருக்கிற தெனலும், அசம்பாவித மென, அறிக. (24)

25. விஞ:– ஆகாய வியாபகத்தில், வாயு வாதிக ளிருப்ப தால், ஆகாயம் பரிச்சிந்ந முறுதது போலப், பிரஹ்ம வியாபகத்திற், சீவனும், மாயையு, மிருப்பதால், பிரஹ்மம் பரிச்சிந்ந முறு தெனின்? ......

விடை:- விவர்த்த மாக, மண்ணி லடங்கி யிருந்த கட சத்தி, காரியப்பட்டுக் கட மாகத் தோற்றுவதால், காரண மாகிய மண் பரிச்சிந்த முறுதது போலக், காரண மாகிய ஆகாயத்தில், விவர்த்த மாக அடங்கி யிருந்த சலந சத்தி காரியப்பட்டு வாயு வாகத் தோற்றினும், ஆகாயம் பரிச்சிந்ந முறு தென்பது துணிபாம். அது போலப், பிரஹ்மம் காரண மெனவும், சீவனும், மாயையும், விவர்த்தமா யுள்ள காரிய மெனவும், முப் பொருளும் நித்திய மென்பா ரொப்பாமையால், ஆகாய வாயுத் திருட்டாந்தம் அவர்கள் கொள்கைக்குப் பொருந்தா தென அறிக.

ஆகாயத்தில் வாயு வுண்டானதற்குப் பிரமாணம்.

(சுக்கில யசுர் வேதம் பைங்களோபநிஷத்து

1-ஆம் அத்தியாயம்)

"அந்த ஆந்மாவினிடத்தி லிருந்து ஆகாய முண்டா யிற்று. (ஆந்மா வென்னுஞ் சொல்லுக்கும் பொருள் பிரஹ்மம்) ஆகாயத்தி லிருந்து வாயுவும், ஆயுவி லிருந்து அக்கிநியும், அக்கிநியி லிருந்து வப்புவும், அப்புவி லிருந்து பிருதிவியு முண்டாயின." (25)

26. வினா:— அற்றேல், ஞாயிற்றொளியோடு கண்ணொளி சேர்ந்து, விஷயத்தை விளக்கும் போது, கண்ணொளிச் சேர்க்கையில், ஞாயிற்றொளி பரிச்சிந்நமுருதது போலச், சீவன் மாயைச் சேர்க்கையால், பிரஹ்மம் பரிச்சிந்நமுரு திருக்கலாமெனின்?

விடை:- ஞாயிறுக்கொளியிருப்பது போலக், கண்ணுக்குமொளியிருக்கிறதெனல் பொருந்தாது. அற்றன்று; கண் விஷயங்களை விளக்குகின்றமையால், ஒளியுள்ளதெனின், கார்கால அமாவாசை நிசியந்தகாரத்துள்ள விடயங்களையும் விளக்கவேண்டும். மின்மினி செவ்வட்டையாதிகள் போல், அற்பப்பிரகாசமுடையதாதலின், அவைகளை விளக்கமாட்டாதெனின், மின்மினி செவ்வட்டைகள், தூரவிடயங்களை விளக்காவிடினும், சமீப விடயங்களைச் சொற்பமாகவேனும் விளக்குவதுபோலக், கண்ணும், அந்தகாரத்திற்றூர விடயங்களை விளக்காவிடினும், சமீபத்தில் நிமையருகே வைக்கப்பட்ட புத்தகாக்ஷரங்களைச் சொற்பமாகவேனும் விளக்கவேண்டும். அங்ஙனம் விளக்காமையினானும், மின்மினி செவ்வட்டைகள் போல, அந்தகாரத்தில், இதரர்களுக்குப் பிரகாசத் திரவியமாகக் காணப்படாமையினானும், கண், ஒளியில்லதாம். ஆதலின், கண்ணொளி ஞாயிற்றொளியிற் கலக்குமெனல், வெற்றுரையென அறிக. (26)

27. வினா:— தருப்பணத்தில், ஞாயிற்றொளிச் சம்பந்தமின்றிய போது, ஒளி தோன்றாமல் உள்ள போது தோன்றுதல் போலக், கண்ணில் ஞாயிற்றொளிச் சம்பந்தமின்றிய, போது ஒளி தோன்றாமல், உள்ள போது தோன்றி ஞாயிற்றொளியிற் கலக்கிறதெனின்?

விடை:- ஞாயிற்றொளிச் சம்பந்தத்தால், தருப்பணத்திலொளி தோன்றுவது போலக்,

கண்ணினும் ஒளி தோன்றுகிற தெனின், அவ் வொளி ஞாயிற்றி லுள்ள காரண வொளியா? அல்லது, அதனுற் றோன்றிய காரிய வொளியா வென ஆசங்கை நிகழும். அவ் வாசங்கைக்குக் காரண வொளி யெனிற், கடாகாய மடாகாயம் போல, இரண் டொளியும் ஏக வொளி யாகவே நிலைபெறும். காரிய வொளி யெனிற், காரிய மாகிய கடம், காரண மாகிய மண்ணைப் பரிசிந்நப்படுத்தாதது மன்றி, மண்ணுக் கந்நிய மாக ஓர் பொரு ளாகவும் நிலை பெருதது போலக், காரிய வொளி யாகிய கண் ணொளியும் காரண வொளி யாகிய ஞாயி றொளியைப் பரிச்சிந்நப்படுத்தாதது மன்றி, ஞாயி றொளிக் கந்நிய மாக வோ ரொளி யாகவும் நிலை பெருது. ஆதலின், ஞாயி றொளிச் சம்பந்தத்தாற், கண்ணுக் கொளி தோன்றுகிற தென்னும் பிராந்தர் மொழியை யொப்பினும், தொய்தஞ் சித்தித்த லின்றும். இஃதன்றி, ஞாயி றொளியாற் றோன்றிய தருப்பண வொளி, ஞாயி றுள்ள போது, உள்ள தாகவும், இல்லாத போ தில்லாத தாகவும், ஞாயி றொளி போற், சட வொளி யாகவு மிருப்பது போலக் கண் ணொளியும், ஞாயி றுள்ள போ துள்ள தாகவும், இல்லாத போ தில்லா தாகவும், ஞாயி றொளி போற், சடவொளி யாகவு மிருக்க வேண்டும். அங்ஙன மின்றி, ஞாயி றுள்ள போது, ஞாயிறையும், ஞாயிற்றின் ஒளியையும், ஞாயிறில்லாத போது, ஒளியின் அபாவ மாகிய இருளையும், அறிந்து கொண்டு, அவைகட்கு விலக்ஷண மாக இரண்டு காலத்தினு மிருக்கிறது. அது சித் தொளியே யாகும். ஆதலின், ஞாயிறின் சட வொளியால், சித் தொளி யாகிய கண்ணொளி தோன்று மெனல், இருளினுல் ஒளி தோன்று மெனல் போல், அசம்பாவித மென அறிக (27)

28. வினு:— கண்ணனது தருப்பணம் போல், பூத காரிய மாகிய சடமாதலின், அதனிடத்துச் சட

வொளி தோன்றுமே யன்றிச், சித் தொளி தோன்று தெனின்?

விடை:- புத்தி, பூத காரிய மாகிய சடமா யிருக்கினும், அதன்பாற் றோன்றிய அறிவு, சித்தின் சம்பந்தத்தாற் றோன்றிய தானமையின், சித் தொளியே யாவது போலக், கண் தருப்பணம் போல், பூத காரிய மான சடமா யிருக்கினும், தருப்பணம் போற்றுமத குணும்ச தூல பூத காரிய மாக இராமல், சத்வ குணும்ச சூட்சும பூத காரிய மாக இருத்தலின், அதன்பாற் றோன்றிய வொளி, புத்தி சம்பந்தத்தாற் றோன்றிய சித் தொளியேயாகும். அற் றன்று; சடத்தின்பா லுள்ளது சட வொளி தா னெனின், சட வொளி பூதாந்த காரத்தை யன்றி அஞ்ஞாநாந்தகாரத்தையும், சித் தொளி, அஞ்ஞாநாந்தகாரத்தை யன்றிப், பூதாந்தகாரத்தை-யும், நிவிர்த்திக்கா வென்னுந் துணிபுக் கேற்கக், கண்ணொளி பூதாந்தகாரத்தை நிவிர்த்திக்காமல், உருவ விஷயங்களை மறைத் துள்ள, அஞ்ஞாநாந்-தகாரத்தை நிவிர்த்திக்கிறது கண்கூடா யிருக்க; அதனைச் சட வொளி யென்பது, அறிவி லார் கூற் றும் இஃ தன்றிக் கண்ணுக்கு அறியுந் தன்மை யிருப்பது பற்றியே ,சகல சுருதிகளும் அதற்கு ஞாநேந்திரிய மெனப் பெயர் கூறுகின்றன. ஆதலின், கண் ணொளி ஞாயி றொளியாற் றோன்றிய தென்பது, யுக்திக்கும் அநுப வத்துக்கும், விரோதமாவது மன்றிச், சுருதிக்கும் விரோத மா மென அறிக. (28)

29. வினு:- கண் ணொளி, சித் தொளி யாயினும், ஞாயி றொளியோடு கலந்து விஷயங்களை விளக்கும் போது, கண் ணொளியால் ஞாயி றொளி பரிச்சிந்ந முறுதது போல், சீவன் மாயைக் கலப்பினுல், பிரஹமம் பரிச்சிந்ந முறு திருக்கலா மெனின்?

விடை:- இரச்சுவிற் றோன்றிய சர்ப்பங் கற்பித மான மையின், கற்பித சர்ப்பத்தால், இரச்சு பரிச்சிந்ந முறுதிருப்பது போலச், சித் தொளியில், ஞாயி றொளியாதிகள் கற்பித மானமையின், கற்பித மாகிய ஞாயி றொளியால், சித் தொளி பரிச்சிந்ந முறுதிருக்கு மென்பது பொருந்தும். அங்ஙனம், பிரஹ்ம வியாபகத்திற், சீவனும், மாயையும், கற்பிதப் பொருள்க ளாக வுள்ளன வென்பதை, முப் பொருளும் நித்திய மென்னும் பேத வாதிகள் ஒப்பு-வார்க ளாயின், சீவன் மாயைக் கலப்பினால் பிரஹ்மம் பரிச்சிந்ந முறுதிருக்கு மென்பது பொருந்தும். அங்ஙன மொப்பாமல், சத்தியப் பொரு ளாகவும் ஒப்பியிருக்கின்றனர். ஆதலின், சத்திய மாகிய சீவன் மாயை யிருப்பினால், பிரஹ்மம் கண்டப் பொருளே யாகும். அங்ஙன மாயின், பிரஹ்மம் அகண்ட மெனக் கீர்த்திக்கும் சுருதியாதிகட்கு அப்பிரமாணத்துவமும், அவைகளை உண்மை வாசக மென வெளியிட்டருளிய சருவஞ்ஞ னாகிய ஈசுரனுக்கு அசத்திய வாதித்துவமும் வரும். ஆதலின், சீவனும், மாயையும், நித்தியப் பொரு ளென்பார் கூற்றுக் கோ டின்றி வட்டாடும் அறிவிலார் கூற் றென்பதற் கைய மின் றென அறிக. (29)

30, வினா:- முந்திய (23) வது விடையில், விகற்பித்த இடை வினாவிற்குக் கூறிய அசத் தென்பது, இன்மைப் பொரு ளல்ல, முன் தோற்ற மின்றிக் காரணமா யிருந்து, காரிய மாகத் தோன்றிப் பின்னுங் காரண மாக ஒடுங்கிக், காரிய மாகத் தோன்றிநிற்கும் பொரு ளாகும். ஆதலின், அதனை நித்திய மெனலா மெனின்?

விடை:- அற்றேல், காரணங் கெட்டுக் காரிய மாகத் தோன்றிற்றா? அல்லது, காரணங் கெடாமற் காரிய மாகத் தோன்றிற்றா வென்னும் ஆசங்கைகள்

நிகழும். அதற்குப், பால் கெட்டுத் தயிராதல் போலக், காரணங் கெட்டுக் காரிய மாகச், சீவனும், மாயையுந், தோன்றின வெனின், காரணமாகிய பால் கெட்ட படியே, தயிருங் கெட்டு, மோ ராகி, அதுவுங் கெட்டு மற் ெறான் ருகப் போகுமே யன்றிக், காரண மாகிய பா லாக நிலைபெருதது போலக், காரணங் கெட்டபடியே காரிய மாகிய சீவனும் மாயையுங் கெட்டுப் போவனவே யன்றிக், காரண மாக வொடுங்கிப், பின்னுங் காரிய மாகத் தோன்ரு வாம். மண் கெடாமற், கடந் தோன்றுதல் போலக், காரணங் கெடாமற் காரிய மாகச் சீவனும். மாயையுந், தோன்றின வெனின், காரண மாகிய மண்ணை யன்றிக் காரிய மாகிய கடம், ஓர் பொரு ளாக நிலை பெருதது போலக், காரணத்தை யன்றிக், காரிய மாகிய சீவனும், மாயையும், ஓர் பொரு ளாக நிலைபெருமல், இன்மைப் பொருளே யாகும். ஆதலின், அசத் தாகச் சீவனும், மாயையும், நித்திய மாக வுள்ளன வெனல், வந்தியா சுதன், பூரணுயுலை யுடையவ னெனல் போல், மயக்க மா மென அறிக. (30)

31 வின:-கடை வினவிற்குக் கூறிய சதசத் தென்பது, சத்தும் அசத்தும் ஏக காலத் தொன்ரு யிருப்வ தெனின், விரோத மாம். அங்ஙன மின்றிச், சத்தோடு கூடிய போது சத் தாகவும், அசத்தோடு கூடிய போது அசத் தாகவு மிருப்ப தெனின், விரோத மில்லையே யெனின்?

விடை. சதசத் தானது சத்தோடு கூடிச் சத்தா யிருக்கு மெனின், சத்துஞ் சத்து மொன்ருய்த், திரி காலத்தினும் உள்ள தாகிய உண்மைப் பொருளே யாகும். அது பின்னர், அசத்தாகு மென்பதும், அசத்-தோடு கூடி அசத்தா யிருக்கு மெனின், அசத்தும் அசத்தும் ஒன் ருய்த் திரி காலத்தினு மில்லாத

இன்மைப் பொருளே யாகும். அது பின்னர்ச் சத்தாகு மென்பதும், ஒளியிரு ளாகும், இரு ளொளி யாகு மெனல் போல் அசங்கத மா மென அறிக. (31)

32. வினா:-சதசத் தென்பது, சத்தோடு கூடிச் சத்துப் போலி யாகவும், அசத்தோடு கூடி, அசத்துப் போலி யாகவுமிருப்பதே யன்றி, வாஸ்தவ சத் தாகவும், வாஸ்தவ அசத் தாகவுமிருப்ப தல்ல வாயின், அசங்கத மாகாதேயெனின்?

விடை:-சத்துப் போலி, சத்துக் கெதிர்மறை யாகிய அசத் தாகும். அது, அசத்துப் போலி யாகவும், அசத்துப் போலி, அசத்துக் கெதிர்மறை யாகிய சத் தாகும். அது சத்துப் போலி யாகவும் இருக்கு மென்பது, அசங்கதத்தினும் அசங்கத மாம். இஃ தன்றிச், சதசத் தானது, சத்தை விடுத்து, அசத்தை யடைதற்கும், அசத்தை விடுத்துச் சத்தை யடைதற்கும், மத்தியில் அதற் கியற்கை யிலக்கணம் சத் தாகவேனும், அல்லது, அசத் தாகவேனு மிருக்க வேண்டும். இவ் விரண்டிற், சத் தெனினும், முற் கூறியபடியே சத்துஞ் சத்தும் ஏக மாய்ப் பிரஹ்ம மொன்றே நித்திய மெனல் நிலைபெறும். அல்லது, அசத் தெனினும், அஃ தின்மைப் பொருளாய்ச், சத்தியமாகிய பிரஹ்மமொன்றே நித்திய மென நிலைபெறும். ஆதலின், சதசத்தாகவேனும், அல்லது, சதசத்துப் போலி யாகவேனும், சீவனும், மாயையும், நித்திய மென்பார் கொள்கை, பிராந்தர் கொள்கை யென அறிக, (32)

33. வினா:-பதி யிலக்கணம், பசுவையும், பாசத்தையும் நோக்கச் சத் தாகவும், தன் னிலையினுஞ் சத் தாகவும், உள்ள தெனவும், பசு விலக்கணம், பதியை நோக்க அசத்தாகவும், பாசத்தை நோக்கச் சத்

தாகவும், தன் னிலேயில் சதசத் தாகவும், உள்ள தெனவும், பாச விலக்கணம், பதியையும், பசுவையும், நோக்க அசத் தாகவும், தன்னிலேயில் சத் தாகவும், உள்ள தெனவும், சிலர் திரி பதார்த்த விலக்கணங் கள் கூறுகின் றமையால், அவைகளில், பசு, பாசத்தை நோக்கச், சத்தென்பதையும், பாசம், தன்னிலேயில் சத் தென்பதையும், ஒப்பிப், பசுவை யும், பாசத்தையும், நித்திய மாக வுள்ளன வெனலாமே யெனின்?

விடை:-பதி சத்து; பசு சதசத்து; பாசம் அசத்து என நிர்ணயித்துக் கூருநிற்பவர்க்குப், பசுவையும், பாசத்தையும் சத் தெனக் கூறுதல் முரணும். இஃ தன்றி, வாஸ்தவ புருடனை நோக்கக், கற்பித புருடர்க ளாகிய சொப்பந புருடன், வந்தியா சுத னென்னு மிருவர்களில், சொப்பந புருடன், வந்தியா சுதனையும், வந்தியா சுதன், தன்னையும் நோக்க, வாஸ்தவ புருட னுவனு? ஆகான்; ஆகான், அது போலச், சத்தா யுள்ள பதியை நோக்க, அசத்தா யுள்ள, பசு பாச மென்னு மிரண்டில், பசு, பாசத்தை நோக்கவும், பாசந், தன்னை நோக்கவும் சத்தாகுமா? ஆகாது; ஆகாது. யாதினு லெனின், அசத்தென்பது இல்லது, சத் தென்பது உள்ளது. இல்லது உள்ள தாகா, தென்பது சித்தாந்த மானமையி னென அறிக. (33)

34. வினு:-பிராகபாவ மாகிய கடம், பின் பாவ மாகத் தோன்று மென நையாயிகர்கள் கூறுகின்றபடி, பசுவும், பாசமும், முன் அசத்தா யிருந்து, பின் சத் தாகிய நித்தியப் பொருள்க ளாகுமே யெனின்?

விடை:-கட ரூப சத்தி, காரண மாகிய கபாலத் தில் அடங்கி யிருக்கும் போது, கடப் பிரதீதி அபாவமா யிருந்து, பின் கபால சையோகத்தால்

விகாச மாகிப் பாவமாகத் தோன்றியதே யல்லாமல், அத்தியந்தம் காரணமில்லா திருந்து தோன்றிய தல்ல. அற் றன் றெனின், வந்தியா சுதனும், ககநார விந்தமுந், தோன்ற வேண்டும். தோன்ருமையால், இன்மைப் பொருள், உண்மைப் பொருளாகு மெனல் மயக்க மாம். இஃ தன்றி, முன் அபாவமாக இருந்து பின் பாவ மாகத் தோன்றிய கடத்துக்கு, நையாயிகர் நாச மொப்பியது போல, முன் அசத்தா யிருந்து, பின் சத் தாகத் தோன்றின வெனக் கூறப் பட்ட பசு பாசங்கட்கும் நாச மொப்ப வேண்டும். ஆதலால், பதியைப் போல, பசுவும், பாசமும், நித்திய மென்னும் சத் கியாதிகள் கொள்கை அநுசித மென விடுத்துப், பிரஹ்ம மொன்றே நித்தியம், மற்றவைகள் அநித்திய மாகிய மித்தை யென்னும் அநிர்வசநீயக் கியாதிகள் கொள்கையே, உசித மெனக் கொள்ளற்பால தென அறிக. (34)

(நூல்பிரிவு-35)

இப்படித் தோற்றி யொடுங்கிய பொய்ப் பொருள்கள் யாவும், மெய்ப் பொரு ளொன்ருகவே யுளதெனவும், அதுவே, சுவபாவ சித்த மாகவும், நிச மாகவும், இருக்கின்ற தன் வடிவ மெனவும், அறிந்தவனே பிரஹ்ம ஞாநி யாகிய சீவன் முத்தனும். இங்ஙனம் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

இதன் பொருள் வெளி.

**35.** வினு:- பொய்ப் பொருள்கள், எங்ஙனம் மெய்ப் பொருள் ஆகு மெனின்?

விடை:-ஆரோப மாகிய இரச்சு சர்ப்பம், இப்பி வெள்ளி, குற்றி மகன் அபவாதத்தில் முறையே அவைகளுக்கு அதிட்டாந மாகிய இரச்சு, இப்பி,

குற்றிக் கந்நிய மாகாமல், இரச்சு, இப்பி, குற்றியே யாவது போல், ஆரோப மாகிய பிரகிருதி முதற் பௌதிக மீருகிய தத்துவங்க ளனைத்தும் அபவாதத் தில், அவைகளுக்கு அதிட்டாந மாகிய பிரஹ்ம மொன்றே யாகு மென அறிக.

பிரமாணம்,

(சிவபுராணம் ஞான சங்கிதை 18ஆம் அத்தியாயம்)

"குற்றியைக் கண்டு மா நுட னென்றும், கயிற்றைக் கண்டு பாம் பென்றும், இப்பியைக் கண்டு வெள்ளி யென்றும், சந்தேகித்து உண்மை யுணர்ந்த பிறகு, மாநுட னல்ல குற்றி யென்றும், பாம் பல்ல கயி றென்றும் வெள்ளி யல்ல இப்பி யென்றும், மநச், சந்தேகம் நீங்கித் திடப்படு மாறு, அஞ்ஞா நத்தால் சிவனுக் கிரண்டாவ தாகத் தோற்றும் பிரபஞ்ச முழுவதும் ஞாந முற்ற போது முக் காலத்தினும் சிவனே யென்று தெரியும்.

(விவேக சூடாமணி 445 ஆம்-கவி)

"அலைநுரை குமிழி மற்று மாகிய சுழலே யாதிப், பல பல உருவ மெல்லாம் பார்க்கிலோர் சலமே போல, அலைவுறு தேகமாதி யகங்கர மீரு யாவும் நி லை பெறு சித்தே யாகும் நிமலமாம் சித் த தொன்றே." (35)

4. அபவாத நிரூபகம் முற்றிற்று

சிதம்பர தேசிகன் றிரு வடி வாழ்க.

---

உ

சிவ மயம்

ஓம் பரப் பிரஹ்மணே நம:

சிதம்பர தேசிகன் திரு வடி வாழ்க

# நாநா சீவ வாதக் கட்டளை வியாக்கியாநம்.

## 5. தத்துவ விவேசந நிரூபகம்.

*அவதாரிகை.*

தத்துவம் (36)ல், சகலர்க்கும் பொதுவாகவும், பிருத்தக் காகவும், எப்போதுந் தானுகவும், எப்போது மந்நிய மாகவும், ஒரு காலத்திற் ருனுகவும், ஒரு காலத்திற் றனக் கந்நிய மாகவும் உள்ள, தத்துவங்கள் இவை யிவை யென நிரூபிக்கின்ருர்.

*(நூல் பிரிவு-36)*

தத்துவம் (36)ல், பூதம் (5), மாயை (1), மாயாப் பிரதிவிம்பரான ஈசுவரன் (1), பிரஹ்மம் (1), ஆகிய இந்த எட்டும் சகல பிராணிகட்குஞ் சமுதாய மாக அநுபவிக்கப்படும். எங்ஙன மெனின்? சகலர்க்கும் பிருதிவி இறக்கில் ஆதார மில்லை. அப்பு விறக்கில் குளிர்ச்சி யில்லை, தேயு விறக்கில் பாகமில்லை, வாயு விறக்கில் பிராண னியக்க மில்லை. ஆகாய மிறக்கில் அவகாசமில்லை, மாயையும், மாயாப் பிரதிவிம்பரு, மிறக்கில், சகல சமயங்கட்குந் தெய்வமில்லை. பிரஹ்ம மில்லையாயின், சகலர்க்கும் அறி வில்லை, ஆதலால் இந்த எட்டும் எல்லோருக்குஞ் சமுதாய மாம்.

(பதம்) தத்துவம் (36) ல், பூதம் (5). மாயை (1), மாயாப் பிரதிவிம்ப ரான ஈசுவரன் (1), பிரஹ்மம் (1), ஆகிய இந்த எட்டும் —

(பொருள்) வெளி.

(பதம்) சகல பிராணிகட்கும் சமுதாய மாக அநுபவிக்கப்படும்—

(பொருள்) சகல ஜீவர்கட்கும் பொது வாக அநுபவிக்கப்படும்.

ஏனைய பதப்பொருள் வெளி.

1. வினா:— இந் நூலாசிரியர் பஞ்ச பூதம் மாயை ஈசுவரன் பிரஹ்மம் ஆகிய எட்டுத் தத்துவங்களும், பொதுவாக அநுபவிக்கப்படு மெனக் கூறியபடி, பின்னர் அவைகளின் அநுபவங் கூறாமல், அநுபவ அபாவங் கூறியது முரணன்றோ வெனின்?

விடை:- வெதிரேக முக மாக, எங்குப் புகை யில்லையோ, அங்கு நெருப் பில்லை யென்பதும், அந்நுவய முகமாக, எங்கு புகை யுண்டோ, அங்கு நெருப் புண் டென்பதும், எளிதா யுணர்தற்பால தாவது போல, வெதிரேக முகத்தால் பஞ்ச பூதம் மாயை ஈசுவரன் பிரஹ்ம மாகிய எட்டுத் தத்துவங்களு மில்லன வாயின், முறையே ஆதாரம், சீதளம், பாகம், பிராண னியக்கம், அவகாசம், தெய்வம், அறிவு ஆகிய இவைகளில்லன வாகு மென்றபடி, அபாவ மாக இராமல், ஆதார மாகிய எட்டும் பாவ மாக இருக்கின்றமையால், பிருதிவி யாதிய எட்டுத் தத்து வங்களும், சகல ஜீவர்கட்கும், பொது வாகவே யிருந்து அநுபவிக்கப்படுகின்றன வென்பது, அந்நுவய முகத்தால் எளி தாக வுணர்தற்பால தாகும், எனக் கருதிக் கூறியிருக்கின்றனர். ஆதலின், முரணன் றென அறிக. (1)

2. வினா:- பிரமன், விஷ்ணு, உருத்திரன், சத்தி, கணேசன், குமரன், அக்கிநி, பாநு, சாத்தன், அருகன் முதலிய பல தெய்வங்களில், ஒவ்வொரு தெய்வங்களை, ஒவ்வொரு மதஸ்தர்கள், தெய்வ

மாகக் கொண்டிருத்தலு மன்றிப். புற்று, மூங்கில், அரசு, எருக்கு முதலிய சில அசர வஸ்துக்களையும், சில மதஸ்தர்கள் தெய்வ மாகக் கொண்டிருத்தலினால், மாயோபாதிக னான ஒரு ஈசுரன் இறக்கில், சகல சமயங்கட்கும் தெய்வ மில்லை யெனல் பொருந்தா தெனின்?

விடை:- சகல சீவர்களின் கன்மங்கட்கும் பல தாதா வாகிய ஈசுவரன் ஒருவனே யெனவும், சந்திரன், சூரியன், ஜீவன், ஆகாயம், வாயு, அக்கிநி, அப்பு, பிருதிவி ஆகிய எட்டும் அவ் வீச்சுரன் வடிவ மென வும், சுருதிகள் கூறுகின்றமையால், எந் தெந்தச் சமயிகள், எந் தெந்தப் பெயரிட்டு எந் தெந்த வடிவங் களை ஆராதிக்கிறார்களோ, அந்தந்த வடிவங்க ளாக விளங்கி யந் தந்தச் சமயிகட்குப் பலன்களைக் கொடுக் கும் ஈசுவரன் ஒருவனே யாகும். ஆதலின், பொருந்து மென அறிக. (2)

3. வினா:- பிரஹ்ம மில்லை யாயின், சகலர்க்கு மறி வில்லை யெனின்? சருவஞ்ஞ னாகிய ஈசுவரனுக்கும், அறிவில்லாமற் போமோ வெனின்?

விடை:- பிரதிவிம்ப சூரியனுக் கதிட்டாந மாகிய விம்ப சூரிய னில்லையாயின், பிரதிவிம்ப சூரியனும், பிரதிவிம்ப சூரியப் பிரகாசமு, மில்லாமற் போவது போல, ஈசுவரனுக் கதிட்டாந மாகிய பிரஹ்ம மில்லை யாயின், ஈசுவரனும், ஈசுவரனுடைய சருவஞ்ஞத்துவ மாகிய அறிவு மில்லாமற் போ மென்பதற் கைய மின் றென அறிக. (3)

4. வினா:- சூரிய னுள்ள பரியந்தம் பிரதிவிம்ப சூரியனுமிருப்பது போல, நித்திய மாகிய பிரஹ்ம முள்ள பரியந்தம் பிரஹ்மப் பிரதிபலிநர்க ளாகிய ஜீவேசுவரர்களு மிருப்பவர்கள். இங்ஙன மிராநின்ற ஜீவர்களையும் ஈசுவரனையும், அநித்தியர்க ளென்பது யாதினா லெனின்?

விடை:— பிரதிவிம்ப சூரியன், தனக் கதிட்டாநமாகிய விம்ப சூரியன், நாச மின்றி யிருக்கினும், ஆசிரய மாகிய சலம் நாச மாகும் போது. தானும் நாச மாவது போல, ஜீவேசுவரர்க் கதிட்டாந மாகிய பிரஹ்மம் நாச மின்றிய நித்தியமா யிருக்கினும், ஆசிரய மாகிய அவித்தையும், மாயையும் நாச மாகிய போது, ஜீவேசுவரர்களும் நாச மாய்விடுகின்றமையி னென அறிக. (4)

5. வினா:— அற்றேல், சில மதஸ்தர்கள், ஈசுவரனை நித்திய ராக வியவகரிப்பது சுருதிக்கு விரோதமல்லவோ வெனின்?

விடை:- அவர்கள் ஈசுவர சப்தத்துக்கு, அதிட்டாநம் ஆசிரயம் ஆபாசம் மூன்றுங் கூடிய தாகப் பொருள் கொள்ளாமல், சச்சிதாநந்த சிவ சொரூப மாத்திர மாகப் பொருள் கொண்டு வியவகரிப்பார்களாயின், விரோத மில்லை யென அறிக. (5)

(நூல் பிரிவு 37)

மற்றைய (28) தத்துவங்களும், அவ னவனுக்குப் † பிருதக் காக அநுபவிக்கப்படும். அஃதெதனாலெனின், ஒருவனுக்குத் தூல சரீர மிறக்கில், எல்லோருக்கு மிறவாத படியினனும், சூட்சும சரீரத்தில், ஒருவனுக்கு அங்க * வைகல்யம் வந்தால், எல்லோருக்கும் வராதபடியினனும், முத்தரா யிருந்த சுகர்

---

† பிருதக்கு - வேறு.

* வைகல்யம் (விகலம்) - குறைவு.

வாமதேவ ராதியர்கட்கு, அவித்தையும், சீவனும், இறந்துபோ யிருக்க, மற்றையோர்க் கெல்லாம் இற வாதபடியினாலும், இவ் விருபத் தெட்டுத் தத்துவங் களும், பிருதக் கென்பதிற் சந்தேக மில்லை.

இதன் பொருள் வெளி.

6. வினா:– ஒருவனுக்குத் தூல சரீர மிறக்கும் போது, மற்றையர்க்கு மிறவாதது யாதினா லெனின்?

விடை:– தூல சரீரங்களை யெடுத்தற்கு ஏது வாகிய கன்மங்கள், ஒன்று போ லொன் றிராமல், சில சொற்ப கால அநுபவங்கட்கும், சில நீண்ட கால அநுபவங்கட்கும் ஏது வாக இருத்தலி னென அறிக (6)

7. வினா:– ஞாநிக ளாகிய சுகர் வாமதேவ ராதி யோர் ஜீவர்க ளானமையால், அவர்கட்கு ஜீவ னிறந்துவிடின், அவர்களு மிறந்தவர்களே யாவர் கள். அவர்கட்கு இறந்த ஜீவ னுடைய அபாவா நுபவம் உள தென்பது, இறந்தவன் தன் னிழவு கொண்டாடுகிறு னென்பது போல, மயக்கமா மெனின்?

விடை:- அதிட்டாநம் ஆசிரயம் ஆபாச மாகிய மூன்றுஞ் சேர்ந் துள்ளது ஜீவ னாகும். ஜீவ னாகச் சேர்ந்துள்ளவைகளி லொன் றாகிய ஆபாசத்திற் றோன்றிய கர்த்திருத்துவாதிய ஜீவத்துவங்க ளிறந்த தையே, ஜீவ னிறந்த தென நூல்கள் கூறுகின்றன. ஆதலின், ஜீவத்துவங்களிறந் துள்ள சுத்த ஜீவன், அதிட்டாந மாகிய பிரஹ்மமே நா மென்னும் பிரஞ்ஞை மாறாமல், ஜீவத்துவ அபாவங்களை யறிந்து கொண் டிருப்பது பற்றி யங்ஙனங் கூறியது மய்க்க மன் றென அறிக. (7)

8. வினா:— சுகர் வாமதேவ ராதிய ஞாநிகட்கு அவித்தை யிறந்திருக்கில், அவித்தையின் காரிய மாகிய விக்ஷேபமு மிறந்திருக்க வேண்டும். அங்ஙன மிறந்து விட்ட தாகக் காணப்படாமையால், அவர் கட்கு அவித்தை யிறந்த தென்பது அசம்பாவித மெனின்?

விடை:- விக்ஷேபத்துக்குக் காரணம் அவித்தை கன்மம் என இரண்டாம், இரண்டில் ஓர் காரண மாகிய அவித்தை கெட்டும், மற்றோர் காரணமாகிய கன்மம் கெடாதிருப்பது பற்றி, விக்ஷேபம் பிராரத்த கன்மமுள்ள பரியந்தம் இருக்கும். ஆதலின் அவித்தை இறந்ததென்பது அசம்பாவிதம் அல்ல என அறிக. (8)

(நூல் பிரிவு 38)

இத்தத்துவங்கள் முப்பத்தாறில், எப்போதும் தானாகவே காணப் படுகிற தத்துவம் (1). எப்போதும் தனக்கு அந்நிய மாகவே காணப் படுகிற தத்து வங்கள் (7). தானாகவும், தனக்கு அந்நியமாகவும் அநுபவிக்கப் படுகிற தத்துவங்கள் (28).

இதன் பொருள் வெளி.

(நூல் பிரிவு-39)

அஃதெங்ஙனமெனின், அவத்தாத்திரய சாட்சியாகிய பிரஹ்ம சைதந்நியம், எல்லா அவத்தை களிலும் தானாகவே விளங்குகையினாலும், மற்றைத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாகக் காணப் படாத படியினாலும், பிரஹ்ம சைதந்நியம் ஒன்றுமே தானாகக் காணப்படுகிறது.

இதன் பொருள் வெளி.

9. வினா: பிரஹ்மம் தானாகவே காணப் படுகிற தெனின், அதனைக் காணுதற்கு வேறோர் வினை முதலாகிய சேதநம் வேண்டும். அற்றேல், பிரஹ்மம் திருசியப் பொருளாகுமே யெனின்?

விடை:- பிரஹ்மம் அசேதந மாகவும், அந்நிய மாகவும் இருக்கில், அதனை அறிதற்கு வினை முதலாகிய வேறோர் சேதநம் வேண்டும். அங்ஙனமின்றிச் சேதநமாகவும், தானாகவும் இருத்தலால், அதனை அறிதற்கு வேறு சாதநம் வேண்டுவ தின்றாம். ஆதலின், பிரஹ்மம் திருசியமாகா தென அறிக. (9)

10. வினா:- சேதநத்தை அறிதற்கு வேறோர் சேதநம் வேண்டுவதின்று என்பது எது போலும் எனின்?

விடை:- அப்பிரகாசமாகிய கடத்தை விளக்குவிப்பதற்குப் பிரகாசமாகிய சூரியன் வேண்டும். பிரகாசமாகிய சூரியனை விளக்குவிப்பதற்கு, வேறு சூரியன் வேண்டுவ தின்று என்பது போலும் என அறிக. (10)

(நூல் பிரிவு 40)

பஞ்சபூதம், மாயை, மாயாப் பிரதிவிம்பராகிய ஏழும் தன் தன் தொழிலான பொறுத்தல்-பிண்டீகரித்தல் - தகித்தல் - உலர்த்தல் - இடங்கொடுத்தல்-தசாவதாரம்-பஞ்ச கிருத்தியங்கள் ஒரு காலத்தினும் தன் தொழில்களாகக் காணப் படாமையால் தனக்கு அந்நியங்களே அல்லாமல் தானாக மாட்டா.

இதன் பொருள் வெளி.

11. வின:- இவ்வேழு தத்துவங்களின் தொழில்கள், தன் தொழில்களாகக் காணப்படாதென்றது யாதினு லெனின்?

விடை:- மற்றைத் தத்துவங்களில் நான் என்னும் அகம் புத்தி உண்டாவதுபோல, இவ்வேழு தத்துவங் களிலும், அஞ்ஞாந காலம் ஞாந காலமாகிய எந்தக் காலங்களிலும், அகம் புத்தி உண்டாகாமையின் என அறிக. (11)

(நூல் பிரிவு 41)

மற்றை (28) தத்துவங்களுள், நான் பிராமணன் ஆதிய வருணத்தன்; பிரமச்சரியமாதிய ஆச்சிரமி; நான் ஆண், பெண், கருவல், சிவலை, கட்டையன், நெட்டையன், நான் பருத்தேன், இளைத்தேன் என்று, தானாக வழங்கப்படுகிற தூல சரீரம் ஆறு தத்துவங்-களும், மற்றொரு வேளையில் தனக்குப் புறம்புபட்டு, ''என் மாடு, என் கன்று'' என்றாற் போல, என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற்று என்று, வேறாக வழங்கப் படுகின்றமையினாலும்; நான்கண்டேன், கேட்டேன், பரிசித்தேன், வசநித்தேன், கொடுத் தேன், நடந்தேன், சங்கற்பித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று, தானாக வழங்கப்படுகிற சூட்சும சரீரதத்துவம் (20)ம், மற்றொரு வேளையில் தனக்குப் புறம்புபட்டு, ''என் உடைமை, என் வீடு'' என்றாற் போல, என் கண், என்காது என் தொக்கு, என் வாக்கு, என் கை, என் கால், என் மநம், என் புத்தி, என் பிராணன் என்று வேறாக வழங்கப் படுகின்றமையினாலும்; நானறியேன், நானறிவேன் என்று தானாக வழங்கப் படுகிற அஞ்ஞாநமும், சீவனும் மற்றொரு வேளையில்

தனக்குப் புறம்புபட்டு என் அஞ்ஞாநம், என் சீவன் என்று வேருக வழங்கப் படுகின்றமையினுலும் இந்த இருபத் தெட்டுத் தத்து வங்களும் தானுகவும் தனக் கந்நியமாகவும் அநுபவிக்கப் படுகின்றனவாம்.

இதன் பொருள் வெளி.

(நூல் பிரிவு 42)

சங்கை:— இந்த (28) தத்துவங்களும் தானுல் சாக்ஷியைப் போல, ஒரு தன்மையாகத் தோற்ற வேண்டுமேயல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத் தனக்கு அந்நியமாகத் தோற்ற நியாயமில்லை. தனக் கந்நியமானுல் எப்போதும் புறம்பாகத் தோற்ற வேண்டுமே யல்லாமல், தானுக வழங்கற்கு நியாய-மில்லை. தானுமாய்த் தனக்கு அந்நியமு மாய் இருக்கும் எனல், இருட்டாதித்தியன் என்ருற் போலும், வெள்ளாள தீக்ஷிதன் என்ருற் போலும் விருத்தமாம் எனின்?

இதன் பொருள் வெளி.

(நூல் பிரிவு-43)

உத்தரம்:- பரமார்த்த மாகத் தான் என்கின்றது ஒரு வகையும், அத்தியாசத்தினுலே தான் என்கின்றது ஒரு வகையும் ஆக இரு வகையும் உண்டு. சாக்ஷி சைதந் யத்தைத் தான் என்கின்றது, பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல. தனக் கந்நிய மாகிய இருபத் தெட்டையும், தான் என்கின்றது, கட்டையைக் கள்ளன் என்ருற் போலும், பழுதையைப் பாம்பென்ருற் போலும், புத்திர தாராதிகளைத் தானென்ருற் போலும் அத்தியாசமே யன்றி, உண்மை யல்லாமையால் விருத்தமன்ரும்.

இதன் பொருள் வெளி.

12. வினா:- இருபத் தெட்டுத் தத்துவச் சேர்க்கையிலுள்ள ஜீவனாகிய ஞாநி, இருபத் தெட்டுத் தத்துவங்கட்கும் விலக்ஷணமாயுள்ள சாக்ஷி சைதந்நியத்தைத் தான் என்பதும் அத்தியாசம் அல்லவோ எனின்?

விடை:- ஜீவனுக்கு அதிட்டாநம், ஆரோபம் இரண்டும் சொரூபமாயிருக்கினும், ஆரோபத்துக்கு அதிட்டாநத்தைத் தவிரச் சொரூபம் இல்லாமையின், ஞாநியாகிய ஜீவன், உபாதி கற்பிதமாகிய ஆரோப சொரூபத்தை வாதித்து அதிட்டாந சொரூபமாக இருந்து கொண்டு சாக்ஷி சைதந்நியத்தைத் தான் என்பது எதார்த்தமே யன்றி அத்தியாசம் அல்ல என அறிக. (12)

13. வினா:- அத்தியாசமாவது யாதெனின்?

விடை:- தனது அபாவாதிகரணத்தில் தனது அவபாசம் அல்லது அதிட்டாந சத்தையினும் விஷம சத்தை உடையதின் அவபாசம் அல்லது பிராந்தி ஞானத்துக்கு விஷயமாயுள்ள மித்தையா வஸ்துவும் அதன் ஞானமும் என அறிக. (13)

14. வினா:- அத்தியாசத்துக்கு உபாதாந காரணம் யாது? நிமித்த காரணம் யாதெனின்?

விடை:- அதிட்டாநத்தின் விசேஷ ரூபத்துள்ள அஞ்ஞாநம், உபாதாந காரணமாம். சஜாதீய வஸ்து ஞாந ஜந்நிய சம்ஸ்காரம், லோப பயமாதிய பிரமாதா (அந்தக்கரண) தோடம், பித்த காமாலை யாதிய பிரமாண (நேத்திரேந்திரிய) தோடம், இரச்சுவில் பூப்பிளவுத்துவம், தீர்க்கத்துவம், திரிவலை யாகாரத்துவமும், சுத்தியில் சாகசிக்கியத்துவ (பிரகாசத்துவ) முமாகிய சாதிருசிய ரூபப் பிரமேய

(பிரமாணத்தால் அறிதற்கு யோக்கிய அதிட்டாந) தோடம், இது என்னும் சாமாநிய ரூபஞாநம் ஆகிய ஐந்தும் நிமித்த காரணம் என அறிக. (14)

15. வினா:— அத்தியாசத்துக்கு ஏது, சொரூபம், காரியம், அவதி, பலம் ஆகிய ஐந்தும் எவை எனின்?

விடை:- கீழே 14 ஆவது விடையில் கூறிய உபாதாந காரணம் நிமித்த காரணங்களே ஏது; அநாத்மாக்களாகிய அஞ்ஞாநம், அஞ்ஞாந தருமம், அகங்காரம், அகங்கார தருமம், இந்திரியம், இந்திரிய தருமம், தேகம், தேக தருமமாகிய இவைகளுக்கும் இவைகளைப் பிரகாசிப் பிக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தாதாத்மியம் சொரூபம்; பிரியாப்பிரிய மாதிய வியவகாரங்கள் காரியம்; புத்திராதிகளில் உள்ள ஆத்மப் பிராந்தி அவதி; சநநமரண சம்சாரங்கள் பலம் என அறிக. (15)

16. வினா:— அத்தியாசம் எத்தனை விதமாம் எனின்?

விடை:- காரணத்தியாசம், காரியாத்தியாசம் என இரண்டு விதமாம் என அறிக. (16)

17. வினா:- காரணத்தியாசமாவது யாதெனின்?

விடை:— காரியப் பிரபஞ்சத் தோற்றமாகிய அத்தியாசத்துக்குக் காரணமாயுள்ள அஞ்ஞாநத் தோற்றம் என அறிக. (17)

18. வினா:- பிரபஞ்சத் தோற்றத்துக்குக் அஞ்ஞாநம் காரணமாய் இருப்பது போல, அஞ்ஞாநத் தோற்றத்துக்குக் காரணமாக வேறு அஞ்ஞாநம் இல்லாமையால், அஞ்ஞாநத் தோற்றம் அத்தியாசம் எனல் பொருந்தா தெனின்?

விடை:- ரூப விஷயங்களை விளக்குவித்தற்குக் காரணமாய் உள்ள தீபம், தன்னையும் விளக்கு வித்தற்குக் காரணமாய் இருப்பது போல, பிரபஞ்ச அத்தியாசத்துக்குக் காரணமாயுள்ள அஞ்ஞானமே, தன் அத்தியாசத்துக்கும் காரணமாய் இருக்கின்ற மையால், அஞ்ஞானத் தோற்றமும் அத்தியாசமெனல் பொருந்தும் என அறிக. (18)

19. வினு:- காரியாத்தியாசமாவது யாதெனின்?

விடை:- காரணமாகிய அஞ்ஞானத்தால் தோன்றும் தேகாதிப் பிரபஞ்சங்கள் காரியங்களான-மையால், இவைகளின் தோற்றமாகிய அத்தியாசம் காரியாத்தியாசம் ஆகும். இவ்வத்தியாசமும் ஞானாத்தியாசம், அருத்தாத்தியாசம் என இரண்டாம். இவ்விரண்டில் ஒன்றில் மற்றொன்றின் பிரதீதி ஞானாத்தியாசம் ஆகும். ஞானாத்தியாசமும் பரோக்ஷம், அபரோக்ஷம் என்னும் பேதத்தால் இரண்டாம். இவ்விரண்டில் வந்நி சூநிய தேசத்தில் உண்டாகின்ற வந்நியின், அநுமிதி வடிவப் பிரம ஞானமும், வஞ்சகன் உரையால் உண்டாகின்ற வந்நியின் சப்தப் பிரம ஞானமும் பரோக்ஷப் பிரம ஞானமாம். பரோக்ஷப் பிரமஞானமுண்டாகிறவிடத்து அநிர்வசநீய விஷயத்தின் உணர்ச்சி அங்கீகாரம் இல்லை. ஆனால், அசத்தாகிய விஷயத்தின் உணர்ச்சி அங்கீகாரமாம். சுத்திரஜதம், ரச்சு சர்ப்பம் முதலியவைகளின் பிரதீதி அபரோக்ஷப் பிரம ஞானங்களாகும். இந்தப் பிரமஞானங்களுக்கு விஷயமாய் உள்ளவை அருத்தாத்தியாசங்களாகும் என அறிக. (19)

20. வினு:- அருத்தாத்தியாசங்கள் எத்தனை விதமா மெனின்?

விடை:– கேவல சம்பந்தாத்தியாசம், சம்பந்த விசிட்ட சம்பந்தி அத்தியாசம், கேவலதருமாத்தியாசம், தரும விசிஷ்ட தருமி அத்தியாசம், அந்நியோந்நியாத்தியாசம், அந்நியதராத்தியாசம் என்னும் பேதத்தால் ஆறுவிதமாம். அல்லது சொரூபாத்தியாசம் சம்சர்க்காத்தியாசம் என்னும் பேதத்தால் இரண்டு விதமாம். முற்சொல்லிய ஆறு அத்தியாசங்களுள் ஆந்மாவில், அநாந்மாவின் அத்தியாசங்கள் சொரூபாத்தியாசத்திலும், அநாந்மாவில் ஆந்மாவின் அத்தியாசம் சம்சர்க்காத்தியாசத்திலும் அடங்கும் என அறிக. (20)

21. வினு:– சொரூபாத்தியாசமாவது யாது? சம்சர்க்காத்தியாசமாவது யாதெனின்?

விடை:– யாதொரு பதார்த்தத்தின் சொரூபம் சுத்தியில் ரஜதம் போல, மற்ருென்றில் அநிர்வசநீயமாகத் தோன்றுமோ அது சொரூபாத்தியாசமாம். யாதொரு பதார்த்தத்தின் சொரூபம் வியாவகாரிகமாகவேனும் அல்லது பாரமார்த்திகமாக வேனும் எதிரில் இருக்க, தருப்பணத்தில் முகம் போல மற்ருென்றில் அதன் சம்பந்த மாத்திரம் அநிர்வசநீயமாகத் தோன்றுமோ, அது சம்சர்க்காத்தியாசம் என அறிக (21)

22. வினு:- சொரூபாத்தியாசத்திலும் சம்சர்க்காத்தியாசத்திலும் அடங்கும் என முற்கூறப்பட்ட ஆறத்தியாசங்களில், கேவல சம்பந்தாத்தியாசமாவது யா தெனின்?

விடை:- அநாந்மாவில் ஆந்மாவின் அத்தியாசம் என அறிக. (22)

23. வின:- இவ்வத்தியாசத்தைச் சம்பந்தாத்தியாசம் என்றது யாதினல்? இதற்கு உபமாநங்கள் எவை? இவ்வத்தியாச அநுபவம் எங்கே காணப்படுகிற தெனின்?

விடை:- ஆந்மா அத்தியஸ்தம் ஆகிறதில்லை, ஆந்மாவின் சம்பந்த மாத்திரம் அத்தியஸ்தம் ஆகிறது. ஆதலின் சம்பந்தாத்தியாசம் என்றதாகும். தருப்பண முகத் தோற்றரவில் தருப்பணமும் முகமும் யாதொரு சம்பந்தமும் இன்றி, தனித்தனியே இரண்டும் வியாவகாரிகமாக இருக்க, முகத்தின் தாதாந்மிய சம்பந்தம் தருப்பணத்திலும், சிவப்பு வஸ்திரம் என்னும் தோற்றரவில் குசும்பாத் திரவியத்திலுள்ள சிவப்பு நிறத்தின் தாதாந்மிய சம்பந்தம் வஸ்திரத்திலும், சிவப்புப் படிகம் என்னும் தோற்றரவில் செம்பரத்தம் புட்பத்திலுள்ள சிவப்பு நிறத்தின் தாதாந்மிய சம்பந்தம் படிகத்திலும் அநிர்வசநீயமாகத் தோன்றுதல் உபமாநங்களாகும். நான் இருக்கிறேன் அல்லது அறிகிறேன் என்னும் தோற்றரவில், நான் என்று எழுந்த அநாந்மாவாகிய அகங்காரத்தில் இருக்கிறது அல்லது விளங்குகிறது எனச் சத்துரூபம் அல்லது சித்துரூபம் அத்தியஸ்தம் ஆகாமல், சத்துரூப சித்துரூப தாதாந்மிய சம்பந்த மாத்திரம் அத்தியஸ்த மாகின்ற அநுபவமும், கடமிருக்கிறது, விளங்குகிற, தென்னுந் தோற்றரவில், அசேதந மாகிய கடத்தில், இருக்கிறது விளங்குகிற தென சேதந ஆந்மாவின் சத்து ரூபம், சித்து ரூபம், அத்தியஸ்த மாகாமல், அவைகளின் தாதாந்மிய சம்பந்த மாத்திரம் அத்தியஸ்தமாகின்ற அநுபவமுங் காணப்படுகிற தென அறிக. (23)

24. வின:- ஆந்மாவின் சொரூபம், அத்தியஸ்த மாகிறதில்லை யென்றது யாதின லெனின்?

விடை:— அத்தியஸ்த மாவ தாகிய வஸ்துக்க ளனைத்தும், பூர்வ மில்லாதவைகளும், ஞாநத்தாற் பாத மாகின்றவைகளும், பிராந்தி ஞாநத்துக்கு விஷய மாகின்றவைகளுமே யாகும். ஆந்மாவின் சொரூபம், அங்ஙன மின்றி, அநாதி யாதலால், பூர்வ முள்ளதும், நித்திய மாதலால், ஞாநத்தாற் பாத மாகாததும், சத் தாகவும், சித் தாகவுமுள்ள தானமையால், பிராந்தி ஞாநத்துக்கு விஷய மல்லா ததுமா யிருத்தலி னென அறிக. (24)

25. வினா:- அநாந்மாவில், ஆந்மாவின் சம்பந்த மாத்திரம் அத்தியஸ்த மாகிற தெனின், அதிட்டாந மாகிய அநாந்மா, வியாவகாரிக சத்தை யாக இருக்கிறது. அங்ஙனமே, ஆந்மாவின் சம்பந்தமும், வியாவகாரிக சத்தையாக விருக்கிறது. பிராதிபாசிக சத்தை யன்று. சம்பந்தம் பிராதிபாசிக சத்தையா மேல், பிரஹ்ம ஞாநத்தா லன்றிப் பாத மாக வேண்டும். அங்ஙன மாகாமையின், அநாந்மாவும், ஆந்மாவின் சம்பந்தமும், சம சத்தை யாகும். ஆதலால், அதிட்டாநத்தின் சம சத்தை யுடையதன் அவபாசம் அத்தியாச இலக்கண மாகா தெனின்?

விடை:— ஆந்மாவின் சம்பந்தம் அத்தியாச மென்றதற்குத் தாற்பரியம், சம்பந்த விசிட்டம் அத்தியாச மாம். விசேஷிய பாகத்துக்குப், பாரமார்த்திக சத்தை யிருத்தலால் விசிட்டத்துக்கும் பாரமார்த்திக சத்தை யுண்டு. ஆதலால், அதிட்டா நம் வியாவகாரிக சத்தையும் அத்தியஸ்தம் அதற்கு விஷம சத்தை யாகிய பாரமார்த்திக சத்தையு மாய், அத்தியாச இலக்கணம் சம்பவிக்கிற தென அறிக. (25)

26. வினா:- சம்பந்த விசிட்டத்தைச் சொருப திருஷ்டியால், பாரமார்த்திக சத்தை யாகக்

கொள்ளில், ஞானத்தாற் பாத மாகாத தாயும், அல்லது, வியாவகாரிக சத்தை யாகக் கொள்ளில், அதிட்டாந சத்தைக்கு விஷம சத்தை யல்லாத தாயு மிருத்தலின், இரண்டு சத்தைகளி லெந்தச் சத்தை யாகக் கொள்ளினும், அத்தியாச இலக்கணம் பொருந்தாமையால், ஆசங்கை நிகழுகிற தெனின்?

விடை;- ''சத்தியத்திற்குச் சத்தியம் பிராணன் கள் சத்தியம். அவற்றிற்கு இது சத்திய'' மென்று சுருதியிலெழுதப்பட்டிருக்கின்றமையால், சத்தை களில், அபகிருஷ (தாழ் வான) சத்தைகள், உத்கிருஷ (உயர் வான) சத்தைக ளென இரு வகை யுண்டு. சொப்பந பதார்த்தங்க ளாகிய பிராதிபாசிக சத்தைகளும், அபகிருஷ உத்கிருஷ மென இரு வகைச் சத்தைக ளாகும். இவ் விருவகையில், எவை சொப்பநத்திற் றானே பாத மாய் விடுகின்றனவோ, அவை அபகிருஷ சத்தைக ளாகும். எவை, சொப்ப நத்திற் பாதமாகாமல், சாக்கிரத்தில் பாத மாகின்றனவோ, அவை, உத்கிருஷ சத்தைக ளாகும். இங்ஙனமே, சாக்கிரத்திலுள்ள வியாவகாரிக சத்தைகளும், அபகிருஷ உத்கிருஷ மென இரு வகைச் சத்தைக ளாகும். அவைகளில், எவை, சாக்கிராவத்தையி லிருந்து சுழுத்தி யவத்தையில், தோற்றுமற் போகின்றனவோ, அவை, அபகிருஷ சத்தைகளாகும். எவை சாக்கிராவத்தையினும், சுழுத்தி யவத்தையினும், இருக்கின்றனவோ, அவை, உத்கிருஷ சத்தைகளாகும். அதிட்டாந மாகிய அகங்காரம் சாக்கிராவத்தையிலிருந்து சுழுத்தியவத்தையிற் றோன்றுமல் போகின்றமை யால், அபகிருஷ சத்தையும், சம்பந்த விசிட்ட மாகிய சீவன், சாக்கிராவத்தையினும், சுழுத்தி யவத்தை யினுமிருக்கின்றமையால், உத்கிருஷ சத்தையு மாகின்றன. ஆதலால், ஒன்றற் கொன்று விஷம சத்தைக ளாய் அத்தியாசம் சம்பவிக்கிற தென அறிக. (26)

27. * வினா:- சம்பந்த விசிட்ட சம்பந்தி யத்தியாச மாவது யா தெனின்?

விடை:- ஆந்மாவில், அநாத்மாவின் சம்பந்தமும், சொரூபமு மாகிய இரண்டும் அத்தியஸ்த மாவ தென அறிக. (27)

28. வினா;- இவ் வத்தியாசத்தின் அநுபவ மெங்கே காணப்படுகிற தெனின்?

விடை:- சுத்தி ரஜதத் தோற்றரவில், சுத்தியில் ரஜதத்தின் சம்பந்தமும், அதன் சொரூபமும், அநிர்வசநீய மாகத் தோன்றுதல் போல, நான் அஞ்ஞ னென்னுந் தோற்றரவில், அகஞ் சத்தார்த்த மாகிய சுத்த சைதந்நியத்தினிடத்தில், அஞ்ஞாநத்தின் சம்பந்தமும், அதன் சொரூபமும், அத்தியஸ்த மாகிற அநுபவங் காணப்படுகிற தென அறிக. (28)

29. † வினா:— கேவல தருமாத்தியாச மாவது யா தெனின்?

---

* விசிட்ட மெனினும் சகித மெனினும் பொருள் ஒன்று.

† பிரம நிஷ்ட ஸ்ரீபீதாம்பரஜீ யவர்களால் இந்துஸ்தானி பாஷையில் மொழி பெயர்க்கப்பட்ட பஞ்சதசி 7 வது பிரகரணம் திருப்தி தீபம் 189-ஆவது சுலோகத்துக்கு வரைந்த டிப்பணத்தில் நான் கர்த்தா, நான் போக்தா வென்பது முதலிய அந்தக் கரண தருமங்கள் சேதநத்தினிடத்தி லத்தியஸ்த மாவது, கேவல தருமாத்தியாச மென் றெழுதப் பட்டிருக்கிறது. இந்தப் பிரம நிஷ்ட ஸ்ரீபீதாம்பரஜீயவர்களே செய்தருளிய விசார சந்திரோதயம் 6-ஆவது கலையாகிய பிரபஞ்ச மித்தியா வர்ணநத்தில் உள்ள, அத்தியாசங்களுக் கெழுதிய டிப்பணத்தில், அந்தக் கரணத்தின் கர்த்திருத்துவாதி தருமங்களும், சொரூபமும், அத்தியஸ்த மாகின்றது. ஆகையால், இது தர்ம சகித தருமி யத்தியாச மென் றெழுதப் பட்டிருக்கிறது.

விடை:- ஆந்மாவில், அநாந்மாவின் சொரூபம், அத்தியஸ்த மாகாமல், அதன் தரும மாத்திரம் அத்தியஸ்தமாவ தென அறிக. (29)

30. வினு:- தரும மாவது யா தெனின்?

விடை:- சுதந்திர மாக இராமல், அந்நியாசிரிதமாக இருப்பது எதுவோ, அது வென அறிக. (30)

31. வினு:- கேவல தருமாத்தியாசத்தின் அநுபவமெங்கே காணப்படுகிற தெனின்?

விடை:- சருக்கரை கைக்கிற தென்னுந் தோற்றரவில், கைப்பினைத் தரும மாக வுடைய லவணந் தோற்றரவாகாமால், கைப் பாகிய தரும மாத்திரம் அநிர்வசநீய மாகக் காணப்படுகிறது போல, நான் நிச்சயித்தேன், நான் சிந்தித்தேன், நான் இச்சித்தேன் என்னுந் தோற்றரவில், நிச்சய மாதிய தருமங்களை யுடைய அந்தக் கரணம், நான் அந்தக் கரண மென அத்தியஸ்த மாகாமல், நிச்சய மாதிய தருமங்கள் மாத்திர மாகவும், நான் குருடு, நான் செவிடு, நான் கண்டேன், கேட்டேன், நான் பேசினேன், நான் நடந்தேன் என்னுந் தோற்றர வில், குருடு செவிடாதிய தருமங்களை யுடைய இந்திரியங்கள் 'நான் சக்ஷு, நான் சுரோத்திரம் நான் வாக்கு, நான் பாத' மென அத்தியஸ்த மாகாமல், குருடு செவிடாதிய தருமங்கள் மாத்திர மாகவும், அந்தக் கரண உபகித சேதநத்தினிடத்தில் அத்தியஸ்த மாவதும், 'நான் பருத்தேன், நான் இளைத்தேன், நான் கருப்பு, நான் சிவப்பு' என்னுந் தோற்றரவில், பருத்த லிளைத்த லாதிய தருமங்களை யுடைய தேக மானது, 'நான் தேக' மென அத்தியஸ்த மாகாமல், பருத்த லிளைத்த லாதிய தருமங்கள் மாத்திரம் தேக வுபகித சேதநத்தினிடத்தி லத்தியஸ்தமாவது மாகிய அநுபவங் காணப்படுகிற தென அறிக. (31)

32. வி௵:– தரும சகித தருமி யத்தியாச மாவது யாதெனின்?

விடை:— ஆந்மாவினிடத்தில், அநாந்மாவின் தருமமும், சொரூபமு மாகிய இரண்டும் அத்தியஸ்த மாவதென அறிக. (32)

33, வி௵:– இவ் வத்தியாசாநுபவ மெங்கே காணப் படுகிற தெனின்?

விடை;– 'நான் மனுஷ்யன் நான் பாலகன் நான் குமரன் நான் பிராமண' னென்னுந் தோற்றரவில், மனுஷ்யத்து வாதிய தர்ம சகித தேக மானது, அந்தக் கரண இந்திரியங்களின் உபகித சேதநத்தினிடத்திலே, அத்தியஸ்தமாகின்ற அநுபவங் காணப்படுகிற தென அறிக. (33)

34. வி௵:– அந்நியோந்நியாத்தியாச மாவது யா தெனின்?

விடை:- ஆந்மா அநாந்மாக்களுக்குப் பரஸ்பரம் உள்ள அத்தியாச மென அறிக. (34)

35. வி௵:- இவ் வத்தியாசாநுபவ மெங்கே காணப் படுகிற தெனின்?

விடை:- மேகத்திற் சந்திர னோடுகிறு னென்னுந் தோற்றரவில், மேகத்தின் தீவிர கதி சந்திரனினும்; சந்திரன் றன் மந்த கதி மேகத்தினும்; இது ரஜித மென்னும் சுத்திகா ரஜிதத் தோற்றரவில், ரஜிதத் தின் சொரூபம் சுத்தியினும்; 'இது' வென்னும் சுத்தி யின் சமாநிய தரும சம்பந்தம், ரஜிதத்தினும்; ஓடத் திருப்பவனுக்கு, ஓடத்தின் செல்லுகை, தீரத் திருக்கும் விருக்ஷ மாதிகளினும்; விருக்ஷ மாதிகளின் செல்லுகை யின்றிய நிலைமை, ஓடத்தினும்; தப்தாய

பிண்டத் தோற்றரவில், இரும்பின் அகல நீள கநம் அக்கிநியினிடத்தினும்; அக்கிநியின் பிரகாசாதிகள் இரும்பினும்; அநிர்வசநீய மாகத் தோன்றுதல் போல, 'யான் ருனறிகிறேன் நீ தானறிகின்ரு' யென்னுந் தோற்றரவில், 'யான் நீ யென்னுஞ் சொற் களின், பொருளாய், வியபிசாரியாயுள்ள சீவனது சொரூபம், தான் தானென் றெல்லாவற்றினு மிருக்கின்ற கூடத்தரிடத்தினும்; அறிகிற தாகிய கூடத்தரது சம்பந்தம், யான் நீயென்னும் ஜீவனிடத்தினும்; அத்தியஸ்த மாகின்ற அநுபவங் காணப்படுகிறது. இஃதன்றி அநாந்மாவின் தர்ம மாகிய ஜடத்துவம் துக்கத்துவம் துவைத சகிதத்துவங்க ளானவை, ஆந்மாவின் தர்மமாகிய சித்துத்துவம், ஆநந்தத்துவம் அத்துவிதத்துவங்களில், சொரூப மாக அத்தியஸ்த மாய்' அவற்றை மறைக்கின்றன. அதனுல், அகஞ் சத்தார்த்த மாகிய ஆந்மாவில், 'சித்து ரூபன் ஆநந்த ரூபன் அத்துவிதரூப' னென்னு ஞாந முண்டாகாமல், நான் சடன், துக்கி, நான் ஈசுராதிகளினும் வேரு யிருக்கிறே,' னென்னு ஞாந முண்டாகிறதும்; ஆந்மாவின் தர்ம மாகிய, சித்துத்து-வம், ஆநந்தத்துவம் அத்துவிதத்துவங்க ளானவை, அநாந்மாவின் தர்ம மாகிய ஜடத்துவம், துக்கத்துவம், துவைத சகிதத்துவங்களில், சம்பந்த வாயிலாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. அதனுல், நா னென் றெழா நின்ற அகங்காரமாகிய அநாந்மாவில், நான் ஜடனுயும், துக்கி யாயும், ஈசுராதிகளினும் வேருயு மிருக்கிறே னென்னும் ஞாந முண்டாகாமல், நான் விளங்குகிறேன், நான் சுகி, நான் ஏக னென்னும் ஞாந முண்டாகிறது-மாகிய அநுபவங் காணப்படுகிறது. இஃது மன்றிப் பிரஹ்மத்துக்கும், மாயாப் பிரதிவிம்ப ஞகிய ஈசுவரனுக்கும், பரஸ்பரம் அத்தியாச முண்டா கிறது. யாங்ஙன மெனின்? பிரஹ்மத்தின் சத்தியத் தன்மை, அவிசார திருஷ்டியில், சம்சர்க்க (சம்பந்த)

வாயிலாக ஈசுவரனிடத்தில், ஈசுவர னுண்டென அத்தியஸ்த மாகிறது மாயாப் பிரதிவிம்ப னாகிய, ஈசுவரனது ஜகத் காரணத் தன்மை பிரஹ்மத்தினிடத்தில் பிரஹ்மம் ஜகத் காரண மென அத்தியஸ்த மாகிற தென அறிக. (35)

36. வினா:- அந்நியதராத்தியாச மாவது யாதெனின்?

விடை:- ஒன்று, ஆந்மாவில் அநாந்மாவின் அத்தியாசமும், மற்றொன்று, அநாந்மாவில் ஆந்மாவின் அத்தியாசமுமாம். அநாந்மாவில், ஆந்மாவின் சொரூபம், அத்தியஸ்தம் ஆகிற தில்லை. ஆந்மாவில், அநாந்மாவின் சொரூபம், அத்தியஸ்த மாம். ஆதலின், இவ் விரண்டில் ஒன்றன் அத்தியாச மாம். இது சொரூபாத்தியாசத்தி லடங்கு மென அறிக. (36)

37. வினா:- அந்நியதராத்தியாசாநுபவ மெங்கே காணப் படுகிற தெனின்?

விடை;- யாதொரு உத்தேசமும், சத்தமு மின்றி, அகங்காரம் நா னென்றெழுகின்ற போது, அஞ்ஞாந உபகித சேதந மாகிய ஆந்மாவில், அநாந்மா வாகிய சாமாநிய அகங்காரம், அத்தியஸ்த மாகின்ற அநுபவங் காணப்படுகிற தென அறிக. (37)

38. வினா:- வேதாந்த சூடாமணியிற் கூறப்படுகிற, மித்தை—இதரம்- இதரேதரம்-சத்தியம்-நிருபாதிகம்-சோபாதிகம்-தத் தருமம்-சம்பந்த மாத்திர மென்னு மெட்டத்தி யாசங்களும், இவ்வாறத்தியாசங்களு ளடங்குமோ வெனின்?

விடை:- மித்தை-இதரம்-இதரேதரம்-சத்தியம்—ஆகிய நான்கும் தருமாத்தியாசத்தினும்,

சோபாதிகம்-தத்தரும மாகிய இரண்டும், தரும சகித தருமி யத்தியாசத்தினும், நிருபாதிகம்-அந்நிய-தராத்தியாசத்தினும், சம்பந்த மாத்திரம்-சம்பந்த சகித சம்பந்தி யத்தியாசத்தினு மடங்கு மென அறிக. (38)

(நூல் பிரிவு-44)

ஆகையால், அஞ்ஞாந காலந் தொடங்கி தா னல்ல வென்று காணப்பட்ட தத்துவங்கள் (7). இப்-படிப்பட்ட விவேகம் உண்டாகிய பின்பு, தா னல்ல வென்று காணப்பட்ட தத்துவங்கள் (28). ஆகிய இந்த (35) தத்துவங்களையும், அததற் குள்ள, குணங் குறிக ளுடனே கூட்டிக் காண்கின்ற அறி வானது, கடத்தைப் பார்க்கின்றவன் கடத்துக்குப் புறம் பாகவே யிருந்து கடத்தைப் பார்க்கின்றது போல, அவைகட் கந்நிய மாகவே யிருந்து, அவை-களை அறிகிற தென்றும்; முப் பத் தாருந் தத்துவ மாகிய அதுவே தா னென்றும்; தானே பரம சிவ மென்றுங் கலக்க மறத் தெளிந்தவனே சிவ தரிசந முடைய சீவன் முத்தனும்.

(பதம்) ஆகையால், அஞ்ஞாந காலந் தொடங்கித் தா னல்ல வென்று காணப்பட்ட தத்து வங்கள் (7). இப்-படிப்பட்ட விவேகம் உண்டாகிய பின்பு தா னல்ல வென்று காணப்பட்ட தத்துவங்கள் (28) ஆகிய (35) தத்து வங்களையும்-

(பொருள்) வெளி.

(பதம்) அத தற் குள்ள—

(பொருள்) அந் தந்தத் தத்துவங்களுக் கிருக்கின்ற,

(பதம்) குணங் குறிக ளுடனே—

(பொருள்) பண்புகள் அடையாளங்களோடு,

(பதம்) கூட்டிக் காண்கின்ற அறிவானது—

(பொருள்) சேர்த்துப் பார்க்கின்ற அறிவானது,

39. வினு:- (35) தத்துவங்களுங் குணங் குறிக ளுடையன வாயின், மாயைக்கும், அவித்தைக்கும், குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- மாயைக்கு வியாவகாரிக நாம ரூப பரிணமம், அகடித கடித சாமர்த்தியம் குணங்க ளாம். இவைகளோடு ஈசுராசிரயம், அநிர்வாச்சிய சொரூபம், குறிக ளாம், அவித்தைக்குப் பிராதிபாஸிக நாம ரூப பரிணமம், எதார்த்தத்தை மறைத்தல், குணங்க ளாம், இவைகளோடு ஜீவாசிரயம், அநிர்வாச்சிய சொரூபம், குறிக ளென அறிக, (39)

40. வினு:- ஈசுரனுக்கும், ஜீவனுக்கும், குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- ஈசுரனுக்குச் சருவஞ்ஞத்துவாதிகள், குணங்களாம். இவைகளோடு மாயோபாதிக சிற் சாயா மயமா யிருத்தல், குறிக ளாம். ஜீவனுக்குக் கிஞ்சிஞ்ஞத்துவ * கர்த்திருத்துவாதிகள், குணங்க ளாம். இவைகளோடு, அவித்தையோபாதிக சிற் சாயா மாத்திரமா யிருத்தல், குறிக ளென அறிக. (40)

* கர்த்திருத்துவம் - காரியத்தினுபாதாந ஞாநம், செய்யும் விருப்பம் முயற்சியாகிய தன்மை.

கர்த்திருத்துவாதிகள் - கர்த்திருத்துவம், போக்திருத்துவம், ஞாதிருத்துவம்.

41. வினா:- சூட்சும சரீர மாகிய (20) தத்துவங் களில், உள்ளம், மநம், புத்தி, சித்தம், அகங்கார மாகிய ஐந்து தத்துவங்கட்குங் குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- உள்ளத்துக்குச், சகல கேள்விகளுக்கு மிடங் கொடுத்தல், குண மாம். இதனோடு ஆகாய பூத சத்துவாம்சமாய் உச்சியி லிருத்தல், குறியாம். மநதுக்கு, இராகத்துவேஷ சங்கற்ப விகற்பாதிகள், குணங்க ளாம். இவைகளோடு வாயு பூத சத்துவாம்ச மாய்க் கண்டத் திருத்தல், குறி யாம். புத்திக்கு, விவேகம், அவிவேகம், இச்சை, பத்தி, சிரத்தை, நிச்சய மாதிகள், குணங்களாம். இவைகளோடு அக்கிநி பூத சத்துவாம்ச மாய் இருதயத் திருத்தல், குறி யாம். சித்தத்துக்கு, விடய சிந்தனைகள், ஏகாக்கிரம், குணங்க ளாம். இவைகளோடு அப்புப் பூத சத்துவாம்சமாய் நாபியி லிருத்தல், குறி யாம். அகங்காரத்துக்கு, அபிமாநம் குண மாம், இதனோடு பிருதிவி பூத சத்துவாம்சமாய் சர்வாங்கங்களிலு மிருத்தல், குறியா மென அறிக. (41)

42. வினா:- புத்திக்குக் குணங்க ளாகச் சொல்லிய இச்சை பத்தி சிரத்தை யென்பவை யெவை யெனின்?

விடை:- புத்தியில், சௌசாதிக் கிரியை செய்ய வேண்டு மென் றுதய மாவது, இச்சை யாம். குருவினிடத்தினும், ஈசுவரனிடத்தினும், உதய மாகின்ற பிரீதி, பத்தியாம். குரு வாக்கிய, வேத வாக்கியங்களி லுள்ள நம்பிக்கை, சிரத்தையா மென அறிக. (42)

43. வி௵:- சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்நுவை ஆக்கிராணம் என்னும் ஞாநேந்திரியங்க ளாகிய ஐந்து தத்துவங்கட்கும் குணங் குறிக ளெவை யெனின்?

விடை:—சுரோத்திரத்துக்குச், சத்த மறிதல், குண மாம். இதனோடு ஆகாய பூத சத்துவாம்ச மாய்க் கர்ண கோளகத் திருத்தல், குறி யாம். துவக்குக்குப், பரிச மறிதல், குண மாம். இதனோடு வாயு பூத சத்துவாம்ச மாய்ச் சர்வாங்கங்களினு மிருத்தல், குறி யாம். சக்ஷுவுக்கு, உருவ மறிதல், குண மாம். இதனோடு அக்கிநி பூத சத்துவாம்ச மாய்க் கரு விழி மத்தியிலிருத்தல், குறி யாம். சிங்நுவைக்கு, ரச மறிதல், குண மாம். இதனோடு அப்புப்பூத சத்துவாம்ச மாய் நாவி னுனியி லிருப்பது, குறி யாம், ஆக்கிராணத்துக்குக், கந்த மறிதல், குண மாம். இதனோடு பிருதிவி பூத சத்துவாம்ச மாய் நாசி நுனியி லிருப்பது, குறியா மென அறிக. (43)

44. வி௵:- வியாநன், பிராணன், அபாநன், சமாநன், உதாநன் என்னும் வாயுக்க ளாகிய ஐந்து தத்துவங்கட்கும் குணங் குறிக ளெவை யெனின்?

விடை:— வியாநனுக்குச், சரீரத்தைத் தாங்குதல், குணமாம். இதனோடு ஆகாய பூத இராசதாம்ச மாய்ச் சர்வாங்கங்களினும் வியாபித்திருத்தல், குறி யாம். பிராணனுக்குப், பலம் பல மின்மை, குணங்க ளாம். இவைகளோடு வாயு பூத இராசதாம்ச மாய் இருதயத்திற் சலந ரூபமா யிருத்தல், குறி யாம். அபாநனுக்கு, உண்ட அந்நாதிகளைச் சீரணிப்பித் தல், குண மாம். இதனோடு அக்கிநி பூத இராசதாம்ச மாய்க் குதத்தி லிருத்தல், குறியாம். சமாந வாயுவுக்கு, அந்ந சாரங்களை நாடிகளிற் சேர்ப்பித் தல், குண மாம். இதனோடு அப்புப்பூத இராசதாம்ச

மாய் நாபியி லிருத்தல், குறி யாம். உதாந வாயுவுக்கு, அந்நாதிகளை யுதப்பித் தள்ளுதல், குண மாம். இதனோடு பிருதிவி பூத இராசதாம்ச மாய்க் கண்டத்திருத்தல், குறியா மென அறிக. (44)

45. வினா:- வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்த மென்னுங் கன்மேந்திரியங்க ளாகிய ஐந்து தத்துவங்கட்குங் குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- வாக்குக்கு, வசநித்தல், குண மாம். இதனோடு ஆகாய பூத இராசதாம்ச மாய் வாயில், நா நுனியாதிய அட்ட தாநங்களையும் பற்றி யிருத்தல், குறி யாம். பாணிக்கு, இடுத லேற்ற லாதிகள், குணங்க ளாம். இவைகளோடு வாயு பூத இராஜதாம்ச மாய் உள்ளங் கைகளை ஆசியிரத் திருப்பது, குறி யாம். பாதத்துக்குக் கமநம் குண மாம். இதனோடு அக்கிநி பூத இராஜதாம்ச மாய்க் கால்களை யாசிரயித் திருப்பது, குறி யாம், பாயுருவுக்கு, மல ஜல விசர்ச்சநம், குண மாம். இதனோடு அப்புப்பூத இராஜதாம்ச மாய்க் குதத்தை ஆசிரயித் திருத்தல், குறி யாம். உபஸ்தத்துக்கு, இந்திரிய விசர்ச்சநம் ஆநந்தித்தல், குணங்களாம் இவைகளோடு பிருதிவி பூத இராஜதாம்ச மாய் யோநியை ஆசிரயித் திருத்தல், குறி யென அறிக. (45)

46. வினா:- ஆறு தத்துவ மாகிய தூல சரீரத்துக்குக் குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- பருத்த லிளைத்த லாதிகள், குணங்க ளாம். இவைகளோடு பஞ்ச பூத காரிய மாய்க் கர சரணாதி அவயவாகாரமா யிருத்தல், குறி யென அறிக. (46)

47. வி௵:- ஆகாயம், வாயு, அக்கிநி, அப்பு, பிருதிவி என்னும் பூதங்க ளாகிய ஐந்து தத்துவங்கட்கும், குணங் குறிக ளெவை யெனின்?

விடை:- ஆகாயத்துக்குச் சத்தம், குண மாம். விக்ஷேப சத்தியின் காரியமாய் வெளியா யிருப்பது, குறியாம். வாயுவுக்குப் பரிசம், குண மாம். இதனோடு ஆகாயத்தின் காரிய மாய்ச் சலந ரூபமா யிருப்பது, குறியாம். அக்கிநிக்கு, ரூபங் குண மாம். இதனோடு வாயுவின் காரியமாய் லோகிதப் பிரகாசமா யிருப்பது, குறி யாம். அப்புவுக்கு ரஸம் குண மாம். இதனோடு அக்கிநியின் காரியமாய்த் திரவ சுக்கில ரூபமா யிருப்பது, குறி யாம். பிருதிவிக்குக், கந்தம், குண மாம். இதனோடு அப்புவின் காரியமாய்க் கடிந மாக இருப்பது, குறியா மென அறிக. (4

(பதம்) கடத்தைப் பார்க்கின்றவன், கடத்துக்குப் புறம் பாகவே யிருந்து, கடத்தைப் பார்க்கின்றது போல —

(பொருள்) வெளி.

(பதம்) அவைகட்கு—

(பொருள்) முற் சொல்லிய (35) தத்துவங்கட்கு.

(பதம்) அந்நிய மாகவே யிருந்து—

(பொருள்) வே ருகவே யிருந்து,

(பதம்) அவைகளை அறிகிற தென்றும்—

(பொருள்) அந்தத் தத்துவங்களை அறிகின்றதெனவும்,

(பதம்) முப்பத்தாரூந் தத்துவ மாகிய அதுவே தா னென்றும்—

(பொருள்) முப்பத்தாருவது தத்துவமா யுள்ள அந்த அறிவே கூடத்த ராகிய தா னெனவும்.

(பதம்) தானே பரசிவ மென்றும்—

(பொருள்) கூடத்த ராகிய தானே மே லாகிய சிவ மெனவும்.

---

48. வினு:- சர்ப்பந் தோன்றுதற்கு இரச்சு ஆதார மும், முன் னுள்ளதுமா யிருப்பது போல, ஜக ஜீவ பரமாகிய (35) தத்துவங்களும், தோன்றற்குப் பிரஹ்மம் ஆதாரமும், முன் னுள்ளதுமா யிருத்தலால் அதனை முதற் றத்துவமாகக் கூருமல், இந் நூ லாசிரியர் (35) தத்துவங்கட்கும் பிற்பட்ட, முப் பத் தாருவது தத்துவ மாகக் கூறிய தென்னை யெனின்?

விடை:- சர்ப்பத்துக்கு இரச்சு ஆதாரமும், முன் னுள்ளது மாக விருக்கினும், முன்னர்த் தீபாதி சாத நங்களைக் கொண்டு சர்ப்பத்தை விசாரித்துப் பார்த்து, சர்ப்பங் காலத் திரயத்திலு மில்லை; மித்தை யாகத் தோன்றிய தென, அறிந்த பின்னர், இரச்சு தோன்றுதல் போலப், பிரஹ்மம், சகல தத்துவங் களுந் தோன்றற்கு ஆதாரமும், முன் னுள்ளது மாக இருக்கினும், முன்னர் அவிவேக தசையிற்றோற்ருமல், விவேக முதய மாகிய பின்னர், ஒவ் வொரு தத்துவ மாகத் தத்துவங்களின் சொரூபங்களை விசாரித்துப் பார்த்து, (35) தத்துவங்களையும் மித்தை யெனவும், தானல்ல வெனவும், நீக்கிய பின்னர், விளங்கத் தக்க தத்துவமாக இருத்தல் பற்றிக் கூறின ரென அறிக (48

(பதம்) கலக்க மற—

(பொருள்) சம்சய பாவனை அசம்பாவனை விபரீத பாவனைக ளாகிய குழப்பங்கள் நீங்கும்படி,

(பதம்) தெளிந்தவனே—

(பொருள்) சாக்ஷாத்கரித்தவனே (நேர்பட அநுபவித்தவனே),

(பதம்) சிவ தரிசந முடைய சீவன் முத்தனும்—

(பொருள்) சிவாநுபவமுடைய சீவன் முத்தனும்.

---

49. வினா:- சம்சய பாவனை அசம்பாவனை விபரீத பாவனைக ளெவை யெனின்?

விடை;- மார்க்கத்திற் செல்பவன், மந்தாந்தகாரம், அல்லது, தூர திருஷ்டியாதி தோடங்களால், மார்க்கத்தி லூர்த்தாகார மாக நிற்கின்ற தாணுவை, நாம முதலியவற்றுற் பிரித் தறியாமல், பொருளுண்மை மாத்திரம் நிருவிகற்பமாக அறிந்து, பின்னர் இது தாணுவோ? புருடனோ? வென, ஒன்றிற் றுணிபு பெறுமல், ஆராய்தல், சம்சய பாவனையாகும். இங்கே தாணு வரக் காரண மில்லை. வராது; வரினும் ஊர்த்தாகார மாக நிற்காது. நிற்கின்றமையால், தாணுவல்ல வென நினைத்தல், அசம் பாவனை யாகும். தாணுவாகிய அப் பொருளை அப் பொருளோ டொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கித், தாணு வல்ல புருடனே யென நிச்சயித்தல், விபரீத பாவனை யாகும். இப் பாவநாத்திரயங்கள், அநாத்ம கதமா யுள்ளவைகளானமையால், இவைகளையும், இவை போன்றவைகளையும்.

நிவிர்த்திக்க வேண்டு மென்பது அவசிய மில்லை. ஆத்ம கத சம்சய மாதி பாவநாத் திரயங்களையே நிவிர்த்திக்க வேண்டு மென அறிக. (49)

50. வினா:— அநாத்ம கத பாவநாத் திரயங்களை நிவிர்த்திக்க வேண்டு மென்பது அவசிய மில்லை யென்றது யாதினு லெனின்?

விடை:— இவைக ளிருக்கிற் பந்தம் நீங்காது, இவைகள் நீங்கிற், பந்தம் நீங்கு மென்ப, தில்லாமையி னென அறிக. (50)

51. வினா;- ஆத்மகத பாவநாத்திரயங்க ளெவை யெனின்?

விடை:— பிரமாணப் பிரமேயங்களைப் பற்றி யெழா நின்ற சம்சய அசம்பவ விபரீத பாவனைக ளென அறிக. (51)

52. வினா:— பிரமாண கத சம்சய பாவனை யாவது, யாதெனின்?

விடை:- பிரமாவுக்கு எது கரணமோ, அது பிர மாண மெனப்படுதலால், இங்கே வேதப் பிரதிபாதித மோக்ஷ மாதி பதார்த்தங்களின் எதார்த்தாநுபவ ரூப மாகிய யா தொரு சாப்திப் பிரமா வுண்டோ, அதன் கரண ரூப மாகிய உபநிடத ரூப சப்த மானது, பிரமாண சப்தத்துக் கருத்த மாகும். ஆதலின் உப நிடத ரூப மாகிய பிரமாணங்களைப் பற்றி, யிவ் வுப நிடத வாக்கியம், தொய்த மாகிய கன்மங்களைப் பிரதி பாதிக்கின்றதோ, அல்லது, அத்வைத மாகிய பிரஹ் மத்தைப் பிரதிபாதிக்கின்றதோ, அல்லது, அந்நிய அர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றதோ, வெனச் சடுவித லிங்க ரூப யுத்தி சகித வேதாந்த சிரவணத்துக்குப் பூர்வம் உதய மாகின்ற பாவனை யென அறிக. (52)

53. வினு:- பிரமாணகத அசம்பாவனையாவது, யா தெனின்?

விடை:- பிரஹ்மம் ஸ்வத சித்த வஸ்து வானமை யினும், பிரமாணுந்தரங்களினுல், பிருதிவி யாதி களைப் போல, அறியப்படாத தானமையினுனும், சுருதியாதிகள் பிரஹ்மத்தை யெங்ஙனம் பிரதி பர்திக்கும் பிரதி பாதிக்க மாட்டா தெனச் சித்தத்தி லுதய மாகின்ற பாவனை யென அறிக. (53)

54. வினு:- பிரமாணகத விபரீத பாவனை யாவது, யாதெனின்?

விடை:- பிரஹ்மந் தா னுகவே சித்தித் துள்ள பொருளானமையால், அதனைப் பிரதிபாதிக்கிறதில், சுருதிகட்கு அபிப்பிராய மிராது. அல்லது, பிரதி பாதிக்குமானுல், புருடர்க ளிடத்திற் பிரவிருத்தி நிவிர்த்தி போக்கு வரவு காணப்படாம லிருக்க வேண்டும். அங்ஙன மின்றிக், காணப்படுகின்றமை யால், அவைகட்குப் பிரயோசந மில்லா மற்போம். உலகில் பிரவிருத்தி பூர்வக மாகவே பிரயோசநங் காணப்படுகிறது. ஆதலின், சகல சுருதிகளும் பிரஹ் மத்தைப் பிரதிபாதிப்பன வல்ல, கர்மங்களையே பிரதி பாதிப்பனவா மென்னுந் திட பாவனை யென அறிக. (54)

55. வினு:- பிரமேய கத சம்சய பாவனை யாவது யாதெனின்?

விடை:- உபநிடத ரூப வேதாந்த வாக்கியங்க ளாகிய பிரமாணங்களால், அறிதற்கு யோக்கிய மாகிய மோக்ஷ முதலிய பதார்த்தங்க ளனைத்திற்கும், பிரமேய மென்று பெய ராம். அவைகளின் சொரூபங்

களைப் பற்றி யுண்டாகின்ற சம்சய விருத்தி யாகும். அதுவும், விஷய பேதத்தால் பல வா யிருக்கு மென அறிக. (55)

56. வினு:- பிரமேய கத சம்சய பாவனைகள் பல வாயிருக்கு மென்பது யாதினு லெனின்?

விடை:- மோக்ஷ மென்பது, (1) சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தியா? (2) அல்லது, சாங்கியர் மதத்திற் கூறுகின்றபடி, தாபத்திரய நாசமா? (3) அல்லது, நியாய மதத்திற் கூறியிருக்கின்றபடி, யிருபத் தொரு துக்கங்களின் நாசமா? (4) அல்லது, யோக மதத்திற் கூறியிருக்கின்றபடி, பஞ்சக் கிலேச நாசமா? (5) அல்லது, கர்மிஷ்டர்களின், அல்லது, உபாசகர்களின் மதங்களிற் கூறுகின்றபடி, சுவர்க்க வைகுண் டாதிய சுக லாபமா? என மோக்ஷத்தின் சொரூபத்தைப் பற்றி யுண்டாகின்றவைகள், பல ரூபப் பிரமேயகத சம்சயங்க ளாகும்.

இவைகளில், சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தியே, மோக்ஷ மென்றிருப்பினுல், அதற்கு,

(அந்த ரங்க சாதநம்) (1) மீமாம்சர் கர்மிஷ்டர் கள், மதத்திற் கூறுகின்றபடி, கர்மமா? (2) அல்லது, உபாசகர்கள் மதத்திற் கூறுகின்றபடி, உபாசனையா? (3) அல்லது, சமுச்சய வாதி பர்த்திருப் பிரபஞ்சர் மதத்திற் கூறுகின்றபடி, கர்ம உபாசனைகளோடு கூடிய ஞாநமா? (4) அல்லது, சாங்கியர் நையாயிகர் மதங்களிற் கூறுகின்றபடி, கேவல ஞாநமா? கேவல ஞாந மெனின், (5) அது, சாங்கிய ராதிய பேத வாதிகள் மதங்களிற் கூறுகின்றபடி, பேத ஞாநமா?

(6) அல்லது, சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, அபேத ஞாநமா? எனல் முதலியவைகள் மோக்ஷ சாதந ரூபப் பிரமேய கத சம்சயங்க ளாகும்.

மோக்ஷத்திற்குச் சாதநம், சித்தாந்தத்திற் கூறிய அபரோக்ஷ ஞாந மாகிய அபேத ஞாநமே யெனக் கொள்ளின், அபேத ஞாநத்திற்கு,

(அந்த ரங்க சாதநம்) (1) கருமமா? (2) உபா சனையா? (3) விவேக வைராக சமாதி ஷட்க சம்பத்தி முமுட்சுத்துவ மாகிய நான்குமா? (4) அல்லது, சிரவண மநந நிதித்தியாசந மாகிய மூன்றுமா? (5) அல்லது, பதார்த்த சோதனையா? (6) அல்லது, மகா வாக்கியோபதேசமா? மற்றும், அபரோக்ஷ ஞாநத்தின் பகிரங்க சாதநம் (7) சிரவணுதிகளா? (8) அல்லது, விவேகாதிகளா? (9) அல்லது, கரும முதலியனவா? என உண்டாகின்றவைகளும், சாதந ரூபப் பிரமேய கத சம்சயங்க ளாகும்.

அபரோக்ஷ ஞாநத்திற்கு மகா வாக்கியோப தேசமே முக்கிய அந்த ரங்க சாதநங்க ளெனவும், விவேகாதிகள் சிரவணுதிகள் பதார்த்த சோதந மாகிய எட்டும் அமுக்கிய அந்த ரங்க சாதநங்க ளெனவும், எஞ்ஞாதி கருமங்கள் பகிரங்க சாதநங்க ளெனவும் கொள்ளின்,

(அந்த ஞாநத்தின் விஷயம்) (1) சாங்கியர் நையாயிகர் முதலிய பேத வாதியர் மதங்களிற் கூறுகின்றபடி, பேதமா? (2) அல்லது, சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, அபேதமா? அபேத மெனினும், (3) உபநிடத சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, ஆத்மா வுக்கும், பிரஹ்மத்துக்கும், அபேதமா? (4) அல்லது, அகங் கிரக உபாசகர்கள் மதத்திற் கூறுகின்றபடி, அந்தக் கரண விசிட்ட சேதந வடிவ ஜீவனுக்கும், விராட்டு, அல்லது, இரணியகருப்பன், அல்லது,

அந்தரியாமி யென்னும் ஈசுவரனுக்கும், அபேதமா எனல் முதலிய ஞாந விஷயங்களைப் பற்றி யுண்டா கின்ற சம்சயங்களும், பிரமேய கத சம்சயங்க ளாகும்.

ஆத்மாவுக்கும், பிரஹ்மத்துக்கு முள்ள அபேத ஞாநத்துக்கு, விஷய மெனக் கொள்ளின்.

(முற் கூறிய ஆத்மா) (1) சகல ஆஸ்திகர்களின் மதங்களிற் கூறுகின்றபடி, தூல தேகத்திற்குப் பிந்நமா? (2) அல்லது, தேகாத்ம வாதிக ளாகிய சார்வாக லோகாயதர்கள் மதங்களிற் கூறுகின்றபடி, அபிந்நமா? பிந்ந மாயினும், அது, (3) நையாயிகர் பிரபாகரர் மதங்களிற் கூறுகின்றபடி, ஜடமா? (4) அல்லது, சித்தாந்த பக்ஷ சாங்கிய மத யோக மதங் களிற் கூறுகின்றபடி, சேதநமா? (5) அல்லது, பட்டர் மதத்திற் கூறுகின்றபடி, ஜட சேதந மென்னும் உபய வடிவமா? சேதந மெனினும், அது, (6) நியாய மதத்திற் கூறுகின்றபடி, கர்த்தா? போக்தாவா? (7) அல்லது, சாங்கிய வேதாந்தங்களிற் கூறுகின்றபடி, அகர்த்தா? அபோக்தாவா? அகர்த்தா அபோக்தா வெனினும், அது, (8) உபாசக ராதிய மதங்களிற் கூறுகின்றபடி, தேகாதிகளில், அகந்தா மமதா ரூப சங்க முடையதா? (9) அல்லது, சித்தாந்தியர் சாங்கியர் மதங்களிற் கூறுகின்றபடி, அசங்க முடையதா? அசங்க மாயினும், அது, (10) சில நையாயிகர் உபாசகர் மதங்களிற் கூறுகின்றபடி, பரமாணு பரிமாணமா (ரோமத்தில் ஆயிரத் தொரு பங்கு சூக்குமமா)? (11) அல்லது, நவீந நையாயிகர் திகம் பரர்களின் மதங்களிற் கூறுகின்றபடி, மத்திம பரிமாணமா (தேகத் தளவா)? (12) அல்லது, சித்தாந்தம் சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், பிரபாகரம், பட்ட மென்னும் மதங்களிற் கூறுகின்றபடி, மகத் பரிமாணமா (விபுவா)? மகத் பரிமாண முடையதா யிருக்கினும், அதற்கு, (13)

நையாயிக ராதிய பேத வாதியர் மதங்களிற் கூறு கின்றபடி, தத் பதார்த்தத்தோடு பேத மிருக்கிறதா? (14) அல்லது, சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, அபேத மிருக்கிறதா? வெனல் முதலிய துவம் பதார்த்தத்தைப் பற்றி யுதய மாகின்ற சம்சயங்களும், பிரமேய கத சம்சயங்க ளாகும்.

ஆத்மா, பதார்த்தங்களோடு அபிந்ந மாயினும் (அவ்வாத்மா) (15) அகங் கிரக உபாசகர் மதத்திற் கூறுகின்றபடி, தத் பத வாச்சியார்த்த வடிவ ஈசுவரனோடு அபிந்நமா? (16) அல்லது, சித்தாந்தத் திற் கூறுகின்றபடி, அவ் வீசுவரனுக் கதிட்டாந தத் பத லக்ஷியார்த்த வடிவ சுத்தப் பிரஹ்மத்தோடு அபிந்நமா? இலக்ஷியார்த்த சுத்தப் பிரஹ்மத்தோடு அபிந்ந மாக யிருக்கினும்,

(ஜகத்துக்குக் காரணம்) (1) சாங்கியராதியர் மதங்களிற் கூறுகின்றபடி, பிரதாநாதிகளா? (2) அல்லது, வேதாந்திகள் நையாயிகர் மதங்களிற் கூறு கின்றபடி, தத் பத வாச்சியார்த்த னாகிய ஈசுவரனா? ஈசுவர னானாலும்,

(அவ் வீசுவரன்) (1) சில உபாசகர் மதங்களிற் கூறுகின்றபடி, ஏக தேச †வர்த்தி யாகிய பரிச்சிந்நனா? (2) அல்லது, நியாய யோக வேதாந்தங்களிற் கூறு கின்றபடி, வியாபகனா? வியாபக னாயினும், (3) வல்லபாசாரியின் மதத்திற் கூறுகின்றபடி, *கோ லோக முதலிய லோகங்களில், லீலா விக்கிரகதாரியா யுள்ள வியாபகனா? (4) அல்லது, சித்தாந்தத்திற் கூறுகின்றபடி, ஏக ரச வியாபகனா? ஏக ரச வியாபக னாக இருக்கினும், அவன், (5) சில உபாசகர் மதங்

† வர்த்தியாகிய-இருப்புடைமையாகிய.

* கோ லோகம், கிருஷ்ண லோகம்.

களிற் கூறுகின்றபடி, ஜகத்துக்கு உபாதாந காரணனு? அல்லது, (6) நியாயம் யோக முதலிய மதங்களிற் கூறுகின்றபடி, நிமித்த காரணனு? (7) அல்லது, சித்தாந்த பக்ஷமும், வல்லப ராதியோர் மதங்களும், கூறுகின்றபடி, சிலந்திப் பூச்சி, அல்லது, சொப்பந ஏது சாக்ஷி போல, அபிந்ந நிமித்தோபாத்ர்ந காரணனு? அபிந்ந நிமித்தோபாதாந காரணனு யிருக்கினும், அவன், (8) பக்த ஜந மதங்களிற் கூறுகின்ற ஜீவர்களின் கருமாபேக்ஷா ரகித் சிருட்டி கருத்தா வாகிய விஷம காரித்துவ நிர்த்தயாளத்துவ முதலிய தோட சகிதனு? (9) அல்லது, வேதாந்திகள் மதத்திற் கூறுகின்றபடி, கர்மாபேக்ஷா சகித சிருட்டி கர்த்தாவாகிய விஷம காரித்துவ நிர்த்தயாளத்துவ முதலிய தோட ரகிதனு? கர்மாபேக்ஷயால், சிருட்டி செய்வ னுதலால், விஷமகாரித்துவ மாதிய தோட ரகித னுயினும், அந்த, ஈசுவரன், (10) உபார்சகர் முதலியோர் மதங்களிற் கூறுகின்றபடி, பரமார்த்த மாக மாயா சக்தி, யதன் தர்மமாகிய சருவஞ்ஞத்து வாதிகள், அவற்றின் கன்ம மாகிய, சிருட்டி யாதிக ளென்னும் கற்பனைகளின் சகிதரா? (11) அல்லது, சித்தாந்த பக்ஷத்திலும், யோக மதத்திலுங் கூறு கின்றபடி, அக் கற்பனைகளின் ரகிதரா? ரகித ராயினும், பூர்வஞ் சொல்லிய ஆத்மாவுக்கு, (12) யோக மதத்திற் கூறுகின்றபடி, பிந்நரா? (13) அல்லது, சித்தாந்த பக்ஷத்திற் கூறுகின்றபடி, அபிந்நரா? எனல் முதலிய தத் பதார்த்தத்தைப் பற்றி யுண்டாகின்ற சம்சயங் களும்,

தத் பத லக்ஷியார்த்த மாகிய சுத்தப் பிரஹ்மம், துவம் பத லக்ஷியார்த்த மாகிய ஆத்மாவுக்கு அபிந்ந மாயினும்,

அந்தப் பிரஹ்மாத்மாவினது ஏகத்துவ மானது, (1) பர்த்திருப் பிரபஞ்சர் (பிராசீந விருத்திகாரர்

களின்) மதத்திற் கூறுகின்றபடி, மோக்ஷ காலத்தி லுண்டாகிறதா? (2) அல்லது, சித்தாந்த பக்ஷத்திற் கூறுகின்றபடி, எப்போது மிருக்கிறதா? எப்போது மிருக்கிற தெனின், அவ் வேகத்துவம், (3) பேத வாதிக ளனைவரும் அங்கீகரியாத தாகிய, சச்சிதா நந்த ஐசுவரிய மின்றியதா? (4) அல்லது, அபேத வாதிக ளாகிய வைதிக ரனைவரும் அங்கீகரிப்ப தாகிய, சச்சிதாநந்த ஐசுவரிய முடையதா? சச்சிதா-நந்த ஐசுவரிய முடையதா யிருக்கினும், அச் சச்சிதா நந்த முதலியன, (5) நையாயிக ராதிய ஆத்மாவின் சடத் தன்மை வாதிகள் மதங்களிற் கூறுகின்றபடி, குண வடிவமா? (6) அல்லது, சித்தாந்திகள் முதலி-யோர் பக்ஷங்களிற் கூறுகின்றபடி, பிரஹ்மாத்மாவின் சொரூபமா? சொரூபமா யினும், அவைக ளொன்றற் கொன்று பேத முள்ளனவா யிருத்தலின், அப் பேதம் வாஸ்தவமா? அல்லது, கற்பிதமா? வெனல் முதலி-யன தத் பதார்த்தத்திற் கபிந்த மான துவம் பதார்த் தங்களைப் பற்றியுண்டாகின்ற சம்சயங்களும் பதார்த்த ரூபப் பிரமேய கத சம்சயங்களாகும். இதனுல், பிரமேய கத சம்சயங்கள் பலவிதமாமென்றதென அறிக. (56)

57. வினு:- பிரமேய கத அசம்பாவனை யாவது யா தெனின்?

விடை;- ஜகத்துக்குப் பிரஹ்மம், அந்நிய மாயும், விலக்ஷண மாயு மிருத்தலால், ஜகத்துக்குப் பிரஹ்மம் காரணமல்ல வெனவும், கர்த்திருத்துவாதி தரும சகிதனுயும், பரிச்சிந்ந னுயும், ஜநந மரணுதி விவகாரங்களோடு கூடியிருப்பவ னுயுமுள்ள தனக்குப் பிரஹ்ம சொரூபத்துவ மெப்படிக் கூடும், கூடா தெனவுமுள்ள பாவனைகளென அறிக. (57)

58. வினு:- பிரமேய கத விபரீத பாவனை யாவது யாதெனின்?

விடை:- காரிய காரணமா யுள்ள வஸ்திரம், நூலிரண்டற்கும் சமாந ரூபத்துவ மிருப்பது போல, ஜகத்துப் பிரஹ்ம மிரண்டற்கும், சமாந ரூபத்துவ மின்றி, ஜடசேதநமா யிருத்தலின், ஜகத்துக்குப் பிரஹ்மம் காரணமல்ல, சஜாதீயப் பிரதாந பரமாணுக்களே, காரணமெனவும், தான் அகர்த்தாவாஞல், இந்தக் கருமத்தைப் பண்ணு, இந்தக் கர்மத்தைப் பண்ணுதே, இதைப் பூசி இதைப் பூசியாதே யென விதி விலக்குகளை வேதஞ் சொல்லமாட்டாது; சொல்லுகின்றமையால், தான், கர்த்தா வென்பதிற் சந்தேக மில்லை யெனவும், ஜீவப் பிரஹ்மங்கட்குப் பேதஞ் சத்திய மெனவும், உள்ள நிச்சயாத்மக புத்தியென அறிக. (58)

59. விஞ:- பிரமாணங்களைப் பற்றியும், பிரமேயங் களைப் பற்றியும் எழாநின்ற சம்சய அசம்பவ விபரீத பாவனைகள், எதஞல் நிவிர்த்தி யாகுமெனின்?

விடை:- சிரவண மநந நிதித்தியாசனங்களால், நிவிர்த்தியாகத் தக்கவைகளாகும். ஆயினும், அவைகள், பிரஹ்ம சாக்ஷாத்கார ஞாநம் உதய மாஞல், அத்தியந்த நிவிர்த்தியாகு மென அறிக. (59)

60. விஞ:- சிரவணுதிகளால் நிவிர்த்தி யாகிய பாவநாத்திரயங்கள், சிரவணுதிகட்குப் பின்ன ருதய மாகும் பிரஹ்ம ஞாநத்தால், அத்தியந்த நிவிர்த்தி யாகு மென்பது, புத்திரஞல் மரண மடைந்த பிதா வானவன், புத்திரனுக்குப் பின் புண்டாகும் பௌத் திரஞல், அத்தியந்த மரணமாவா னென்பது போல, அசம்பாவித மெனின்?

விடை:- அரிவாளா லறுக்கப்பட்ட கொடி செடி யாதிகள், கெடினும், அவைகட்குக் காரணமாகிய வேர் கிழங்காதிகள் கெடா திருக்கின்றமையால்,

காரியமாகிய கொடி செடி யாதிகள் பின்னரும் உற்பத்தி யாகின்றன. அவைகளை, மண்வெட்டி யாதிகளால், அடியோடே வெட்டிவிடின், காரண மாகிய வேர் கிழங்காதிகள் கெட்டுப் போகின்றமை யால், அவைகளின் காரியமாகிய கொடி செடியாதி கள், பின்னரும் உற்பத்தியாகாமல், அந்தியந்த நாசத்தை யடைகின்றன. அதுபோல, சிரவண மநந நிதித்தியாசநத்தால், சம்சய மாதிய பாவநாத் திரயங்கள் நிவிர்த்தியாயினும், அவைகட்குக் காரண மாகிய அவித்தை கெடாம லிருக்கின்றமையால், பின்னரும் உற்பத்தியாகும். பிரஹ்ம ஞாந முதய மாகில், காரணமா யிருக்கின்ற அவித்தை கெட்டுப் போகின்றமையால், அதன் காரியமாகிய சம்சய மாதிய பாவநாத் திரயங்கள், பின்னரும் உற்பத்தி யாகாமல், அத்தியந்தம் நாசமாய்விடும். ஆதலின், அங்ஙனங் கூறியது அசம்பாவித மன்றென அறிக. (60)

61. வினா:- பாவநாத் திரயங்கட்கு மூலமாகிய அஞ்ஞாநம், கருமத்தாலும் நாச மாகுமே யெனின்?

விடை:- அஞ்ஞாந நாசம், ஞாநத்தா லன்றிக் கருமத்தால் நாச மாகாதென அறிக. (61)

62. வினா:- பிரமஹத்தி யாதிய மகா பாதகங்களை யும், அத்தியந்தம் நாசஞ் செய்வ தாகிய வல்லப முடைய பிராயச் சித்தாதி ரூப சற் கருமங்கள், அஞ்ஞானத்தை யேன் நாசஞ் செய்யா தெனின்?

விடை:- மேகாவரணம், இருளுக்கு விரோதமாக் இராமல், உறவாகவே யிருப்பது போல, கருமமும், அஞ்ஞானத்துக்கு விரோதமாக இராமல், உறவாகவே யிருத்தலி னென அறிக. (62)

63. வி௵:- கருமங்கள், மநம் வாக்குக் காயங்க ளென்னும் முக் கரணங்களின் காரியங்களாக இருப்பது போல, ஞாநமும் முக் கரணங்களி லொன் ருகிய அந்தக் கரணத்தி லுண்டாகிய விருத்தியே யானமையால், கருமமே யாகும். ஆதலால், அது தானெப்படி அஞ்ஞானத்தை நாசஞ் செய்யு மெனின்?

விடை:- விருத்தியானது, முக் கரணங்களி லொன்ருகிய அந்தக் கரணத்தி லுண்டாகியதா யிருக்கினும், ரூப விஷயங்களை அறிகிற விஷயத்தில், கண்களைப் போல, அஞ்ஞாநத்தை நிவிர்த்தி செய்கிற விஷயத்தில், ஞாநத்துக்குச் சாதநமா யிருக்கிறது. சொரூப ஞாநமல்ல; சொரூப ஞாநமோ, ஆத்மாவின் சொரூபம். சொரூப ஞாநமும், சூரியன் திரணத்தைத் தனியே தகியாதது போல, அஞ்ஞாநத்தைத் தனியே நாசஞ் செய்யாது. விருத்தியும், தருப்பணம் தனியே திரணத்தைத் தகியாதது போலத் தனியே அஞ்ஞாநத்தை நாசஞ் செய்யாது. சூரியன், எதிரிட்ட தருப்பணத்திற் பிரவேசித்து, அத் தருப் பணச் சேர்க்கை விசேடத்தாற் றிரணத்தைத் தகிப்பது போல, ஆத்ம சொரூப ஞானமும், ஆத்மாகாரமான விருத்தியிற் பிரவேசித்து, அவ்விருத்தியின் சேர்க்கை விசேஷத்தால், விருத்திஞான மெனப் படுவதாய் ஆத்மாவிலுள்ள அஞ்ஞாநத்தை நாசஞ் செய்கின்ற மையால், பிரகாசத்தோடு கூடிய மாணிக்கம், சிலா ரூப மாக விருக்கினும், ரத்திந தீபமென்று சொல்லப்படுகிறது போல, விருத்தி, அந்தக் கரணத் தின் காரியமாக இருக்கினும், ஞானமென்று கௌண மாகச் சொல்லப்படுகிறது. ஆதலால், இந்த விருத்தி ஞாநம் அஞ்ஞாநத்தை நாசஞ் செய்யு மென்பதிற் சந்தேக மில்லை யென அறிக. (63)

(கைவல்லிய நவநீதம் - 2-ஆம் படலம் 78-ஆம் கவி தலைப்பு - சொரூப ஞானமும் விருத்தி ஞானமும்)

(நூல் பிரிவு - 45)

இப்படிப் பிரஹ்மமே தாமென்றும், மற்றைய(35) தத்துவங்களும் தமக் கந்நிய மென்றும், பிரித் தறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்தியினாலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக் கின்றோ மென்கின்ற மூடகரம்போல, இந்த இருபத் தெட்டினுடைய தொழில்களையும், தந் தொழில் களென்று மயங்குகின்றமையால், இந்த இருபத் தெட்டினாலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவ மாதிய கன்மங்களிற் கட்டுப்பட்டு, அந்தக் கன்மங் களின் படியே, சநந மரணாதி சம்சாரங்களில் அடிபடுகிறோமென்று மயங்குவர்:

---

(பதம்) இப்படி—

(பொருள்) இப்போது விசாரம் பண்ணிய பிரகாரமே,

(பதம்) பிரஹ்மமே தா மென்றும்—

(பொருள்) 36ஆம் தத்துவமாகிய பிரஹ்மமே கூடத்தராகிய தா மெனவும்,

(பதம்) மற்றைய 35 தத்துவங்களும்—

(பொருள்) ஏனைய 35 தத்துவங்களும்,

(பதம்) தமக் கந்நிய மென்றும்—

(பொருள்) தங்கட்கு வே றெனவும்,

(பதம்) பிரித் தறியாத அவிவேகிகள்—

(பொருள்) வேறுபடுத்தி யறியாத விவேகசூநியர்,

(பதம்) அகங்காரக் கிரந்தியினுலே—

(பொருள்) ஆன்ம அகங்கார அந்நியோந்நிய அத்தியாசமாகிய, அகங்கார முடிச்சினுலே,

(பதம்) புத்திர தாராதிகள்—

(பொருள்) மைந்தர் மனைவி யாதியர்கள்,

(பதம்) தபிக்கின்றதை—

(பொருள்) தாபப்படுகின்றதை,

(பதம்) தாம் தபிக்கிரு மென்கின்ற-

(பொருள்) நாங்கள் தாபப்படுகிரு மென்று புலம்புகின்ற,

(பதம்) மூட கரம் போல—

(பொருள்) மூடக் கழுதைகள் போல,

(பதம்) இந்த இருபத் தெட்டி னுடைய தொழிஃகளையும்—

(பொருள்) இவ் விருபத் தெட்டுத் தத்துவங்களினுடைய காரியங்களையும்,

(பதம்) தம் தொழில்க ளென்று—

(பொருள்) தங்கள் காரியங்க ளென்று,

(பதம்) மயங்குகின்றமையால்—

(பொருள்) பிரமிக்கின்றபடியால்,

64. வினு:- 35 தத்துவங்களையும் அந்நிய மென்று அறியாத அவிவேகிகள் 35 தத்துவங்களின் தொழில்களையும் தம் தொழில்களௌன மயங்காமல், 28 தத்துவங்களின் தொழில்களை மாத்திரம், தம்

தொழில்க ளென மயங்குவ ரென்றது யாதினு லெனின்?

விடை:- 35 தத்துவங்களில், பஞ்ச பூதம், மாயை ஈசுரன் ஆகிய ஏழு தத்துவங்களிலும், ஞாந காலம், அஞ்ஞாந கால மாகிய எந்தக் காலங்களிலும், ஒருவர்க்கேனும் அகம் புத்தி யுண்டாகாமையால், அவைகளின் தொழில்களைத் தம் தொழில்க ளென்னும் மயக்கம் ஒருவருக்கேனும் உண்டாகிற தில்லை, ஆதலால் அவ் வேழு தத்துவங்களையும் விடுத்து, அவிவேக தசையில் அகம் புத்தி செய்யப்படு வதா யுள்ள 28 தத்துவங்களின் தொழில்களில், மயங்குவ ரென்ற தென அறிக. (64)

65. வினு:- 28 தத்துவங்களின் காரியங்களையும் அவிவேகிகள், தங்கள் காரியங்க ளென எங்ஙன மயங்குகின்றன ரெனின்?

விடை:- தமக்கு எதார்த்த சொரூபம் நிருவிகார நிஷ்கிரிய, சுயம்பிரகாச, சைதந்நியமா யிருப்பதை யறியாமல், ஆறு தத்துவங்க ளாகிய தூல சரீரத்தின் பருத்த லிளைத்த லாதிகளை, நான் பருத்தே னிளைத்தே னெனவும்; இரு பது தத்துவங்களா யுள்ள சூட்சும சரீர காரியங்க ளாகிய சங்கற்ப விகற்பம், நிச்சயம், காண்டல், கேட்டல், பலம், பல மின்மை, வசநித்தல் கமநித்த லாதிகளை, நான் சங்கற்பித்தேன், விகற்பித்தேன், நான் கண்டேன், கேட்டேன், நான் பலவான், பலவீனன், நான் வசநித்தேன். கமநித்தே னெனவும்; ஜீவன் அவித்தைகளின், அறி வறியாமை களை, நா னறிவேன் அறியே னெனவும்; மயங்குகின் றன ரென அறிக. (65)

---

(பதம்) இந்த இருபத் தெட்டினுனும்—

(பொருள்) இந்த 28 தத்துவங்களினுனும்,

(பதம்) ஆர்ச்சிக்கப்பட்ட—

(பொருள்) சம்பாதிக்கப்பட்டிருக்கின்ற,

(பதம்) புண்ணிய பாவ மாதிய—

(பொருள்) புண்ணிய பாவ முதலியனவாகிய,

(பதம்) கன்மங்களிற் கட்டுப்பட்டு—

(பொருள்) கன்மங்களிற் பந்திக்கப்பட்டு,

(பதம்) அந்தக் கன்மங்களின்படியே—

(பொருள்) அவ் வினைகளின்படியே,

(பதம்) சநந மரணாதி சம்சாரங்களில்—

(பொருள்) பிறத்த லிறத்த லாதிய சம்சாரங்களிலே,

(பதம்) அடிபடுகிறோ மென்று—

(பொருள்) துன்பப்படுகிறோ மென்று,

(பதம்) மயங்குவர்—

(பொருள்) பிரமிப்பர்.

**66. வினா:- கன்மங்களை, 28 தத்துவங்களும் செய்யத் தக்கனவா யிருக்கச், சில சாத்திரங்களில் மநம் வாக்கு காயங்க ளாகிய முக் கரணங்கள் மாத்திரஞ் செய்யத் தக்கன வெனக் கூறுவது யாதினாலெனின்?**

**விடை:- 28 தத்துவங்களில், மநம், வாக்குக் காய மென்னும் முக் கரணங்களும், கன்ம நிகழ்ச்சிக்குப் பிரதாந கருவிகளாக இருத்தலின், அவைகளில், மற்றைய தத்துவங்களை யடக்கி யங்ஙனங் கூறுகின்றன வென அறிக. (66)**

67. விஞ:- மநம் வாக்குக் காயங்களாற் செய்யப் படுவதாகிய கிரியைகள் யாவும், கன்மங்க ளாகுமோ வெனின்?

விடை:- வேதத்தில் பிரவிருத்தி, அல்லது நிவிர்த்தியின் பொருட்டுச் சொல்லப்படுகிற கிரியை களே, கன்மங்களாகும். இவைக ளன்றியில், வேதத்தில் விதிக்க, அல்லது, நிஷேதிக்கப்படாதன வாயும், இராகத் துவேஷங்களின்றிச் செய்யப்படுவன வாயுமுள்ள உதாசீநக் கிரியைகள் கன்மங்க ளன் றென அறிக. (67)

68. விஞ:- கன்மங்க ளெத்தனை வித மெனின்?

விடை:- புண்ணியம், பாவம், மிசிர மென மூன்று விதமா மென அறிக. (68)

69. விஞ:- அற்றேல், மநதாற் செய்யப்படுகிற மூ வித கன்மங்க ளெவை யெனின்?

விடை:- சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகளைச் சிந்தித்தல், குருவையும், பெரியோர்களையும் விசுவசித்தல் சுருதி ஸ்மிருதி யாதிகளைப் பிரமாண மாகக் கொள்ளுதல், அவைகளிற் கூறிய யாகாதி சற்கருமங்களையும், பரலோகப் பிராப்தி மோக்ஷப் பிராப்திகளையும், பராளுக்கு இதப் பிராப்திகளையும், விரும்புத லாதிகள், மநதாற் செய்யப் படுகிற புண்ணிய கருமங்க ளாம். சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகள், தருமாதரும சுவர்க்க நரகங்கள் இல்லை யெனப் பாவித்தல், குரு பெரியோர் களைத் துவேஷித்தல், சுருதி ஸ்மிருதியாதிகளை அப் பிரமாணங்க ளென வெறுத்தல், பர ஸ்திரீ, பர தநம் பர நில மாதிய விஷயங்களை விரும்புதல், பராளுக்கு அஹிதப் பிராப்திகளைச் சிந்தித்த லாதிகள், மநதாற்

செய்யப்படுகிற பாவ கருமங்க ளாம். புண்ணிய கருமாநுட்டாந காலத்தில், அதற்கு மாறுன விஷயங் களைச் சிந்தித்தல், மநதாற் செய்யப்படுகிற மிசிர கருமங்க ளென அறிக. (69)

70. வினு:- வாக்காற் செய்யப்படுகிற மூ வித கருமங்க ளெவை யெனின்?

விடை:- வேதாத்தியயநம், சாஸ்திர படநம், பிரணவ காயத்திரி பஞ்சாக்ஷர சடாக்ஷர அட்டாக்ஷர மாதிய மந்திர ஜெபம், பகவத்நாம சங்கீர்த்தநம், சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகள், குரு வாதிய பெரியோர்களின் தோத்திரங்களைச் செய்குதல், மெய்ம்மை கூறல், பராள் மகிழ்வுற இதமுரைத்தல், மிருது வார்த்தை, பூர்வ கால புண்ணிய வான்களின் சரித்திர வார்த்தைகள் பேசுத லாதிகள், வாக்காற் செய்யப்படுகிற புண்ணிய கருமங்க ளாம். வேதாத்தியயநம் மந்திர ஜெப மாதியவை களையும், சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகள், குரு பெரியோரா திகளையும் தூடணித்தல், பொய்ம்மை கூறல், கோட் சொல்லுதல், பராள் துன்புறப் பரிகாசம் பேசுதல், அஹித முரைத்தல், கடுஞ் சொற் கூற லாதிகள், வாக்காற் செய்யப்படுகிற பாவ கன்மங்க ளாம், வேதாத்தியயநம், சாஸ்திர படநம், தேவார்ச்சனை, மந்திர ஜெபாதிகள் செய்யும் போது, இடை யிடையே உலக விவகாரம், பராள் நிந்தை, பொய்ம் மை கூறல், தூர்த்தரோ டுரையாட லாதிகள், வாக்காற் செய்யப்படும் மிசிர கன்மங்களா மென அறிக. (70)

71. வினு:- காயத்தாற் செய்யப்படுகிற மூ வித கருமங்க ளெவை யெனின்?

விடை:- சிவ விஷ்ணு வாதிய தேவாலயம், பெரி யோ ராலய மாதிய மடங்கள் அல கிடல், மெழுகல்,

கோலமிடல், தீர்த்தாடநம், பிரதக்ஷணம், நமஸ்காரம், தல யாத்திரை, மூர்த்தி தரிசநம் குரு தரிசநம், பெரியோர், மாதா, பிதாக்களுள மகிழப் பணிவிடையாதிகள் செய்குதல், ஆலயம் மடம் சத்திரம் திரு வாசல் சுமை தாங்கிகள் கட்டுதல், குளம் கூபங்கள் வெட்டுத லாதியவைகள், காயத்தாற் செய்யப்படும் புண்ணிய கருமங் களாம். ஸ்நாந முதலிய ஆசாரங்க ளின்றி, ஆலய மடங்களினுட் செல்லுதல், சிவ விஷ்ணு வாதிய மூர்த்திகளைத் தீண்டுதல், குரு பெரியோர் மாதா பிதாக்களைக் கண் டெழுந்திராதிருத்தல், அவர்களை யடித்தல், கொலை செய்தல், பரஸ்திரீகளைச் சேருதல், திருடுத லாதிகள் காயத்தாற் செய்யப்படுகிற பாவ கருமங்க ளாம். அந்நியர் பொருளை வலுவி லாயினும், மறைவி லாயினும் கவர்ந்து, புகழைக் கருதியும், வேலை செய்பவர்கட்குச் சரி யாகக் கூலி கொடாமலும், தேவாலயம் பிரஹ்மாலயம், பெரியோராலயம், மடம் சத்திரங்கள் கட்டுதலும், குளம் கூபங்கள் வெட்டுதலும், காயத்தாற் செய்யப்படுகிற மிசிர கன்மங்க ளென அறிக. (71)

72. வினா:- புண்ணியம் எத்தனை விதம்? அவை களின் பலம் யா தெனின்?

விடை:- புண்ணியம்; உத்கிருஷ்டம், மத்திமம், சாமாநிய மென மூவித மாகும். இவைகளில், உத்கிருஷ்டமாயின், இரணியகருப்பாதி சரீரப் பிராப்தியும்; மத்திமமாயின், இந்திராதி சரீரப் பிராப்தியும்; சாமாநிய மாயின், யக்ஷ ராக்ஷச கிந்நர கிம்புருடராதிய சரீரப் பிரா்ப்தியும்; பலமா மென அறிக. (72)

73. வினா:- பாவ கன்மம் எத்தனை விதம்? அவை களின் பலம் யா தெனின்?

விடை :- பாவம்; உத்கிருஷ்டம், மத்திமம் சாமா நிய மென மூவித மாகும். இவைகளில், உத்கிருஷ்ட மாயின், தேள், பாம்பு, கொசுகு, மூட்டைப் பூச்சி, கரடி, புலி முதலிய சரீரப் பிராப்தியும்; மத்திம மாயின், புளி, மா, பலா, தென்னை முதலியவும், எருமை, பருந்து முதலியவுமாகிய சரீரப் பிராப்தியும்; சாமாநிய மாயின், பசு, யானை, குதிரை, அரசு, துளசி முதலிய சரீரப் பிராப்தியும்; பலமா மென அறிக. (73)

74. விஞ:- மிசிர கன்ம மெத்தனை விதம்? அவை களின் பலம் யா தெனின்?

விடை:- மிசிரம்; உத்கிருஷ்டம், மத்திமம், சாமாநிய மென மூவித மாகும். இவைகளில், உத்கிருஷ்ட மாயின், நிஷ்காம புண்ணிய வாயிலாகச் சித்த சுத்தி, சாதந சதுட்டயம், சற்குரு லாபம், சிரவண மநந நிதித்தியாசநம், அபரோக்ஷ ஞாநம் ஆகிய இம் மார்க்கங்களால், சீவன் முத்தியடைதற் கான சரீரப் பிராப்தியும்; மத்திம மாயின், வருணச் சிரமத்துக் குசித மான காமிய கன்ம யோக்கிய சரீரப் பிராப்தியும்; சாமாநிய மாயின், சண்டாள, பாண்டு, குன்ம, குஷ்ட மாதிய சரீரப் பிராப்தியும்; பலமா மென அறிக. (74)

75. விஞ:- கன்மங்க ளெங்ஙன மிருந்து பலன்களைக் கொடுக்கின்றன வெனின்?

விடை:- கர்த்திரு கரண சம்பந்த மாகச் சரீராந்தம் வரைப் பலன்களை விரும்பிச் செய்யுங் காரணத்தால், ஆகாமியங்க ளெனப் பெயர் பெற்று; அள வில்லனவாய்ச் சேர்ந்து, பரிபக்குவ காலம் வரை கட்டுப்பட்டிருத்தல் காரணமாக, சஞ்சிதங்க ளெனப் பெயர் பெற்றிருந்து; பின் பரிபக்குவமாய்ப்

பிரிவுற்று, பிராப்பியங்களை யநுபவித்தற்குக் காரண மாக இருத்தல் பற்றி, பிராரப்தங்க ளெனப் பெயர் பெற்றிருந்து; பலன்களைக் கொடுக்கின்றன. இவை களில், ஆகாமியங்கள், வர்த்தமாந சரீரத்திற் செய்யப் படுவன வாகும், சஞ்சிதங்கள், பூர்வ சரீரத்திற் செய்யப்பட்டுப் பலன் கொடுத்தற்குப் பரிபக்குவப் படாமல் கட்டுப்பட்டிருப்பன வாகும். பிராரப்தங்கள் பரிபக்குவப்பட்டு வர்த்தமாந சரீரத்தில், சுக துக்க பலன்களைக் கொடுப்பனவாகு மென அறிக. (75)

76. வினு:– சஞ்சித கன்மங்கட்கு ஆசிரயம் யாது? பிராரப்த கன்மங்கட்கு ஆசிரயம் யாதெனின்?

விடை :– சஞ்சித கன்மங்கட்கு, அந்தக் கரண வுபகித சாட்சியை ஆசிரயித்திருக்கின்ற அஞ்ஞானத் தின் சத்தி யாகிய ஆவரண சத்தி, ஆசிரய மாகும். பிராரப்த கன்மங்கட்கு அஞ்ஞானத்தின் சத்தி யாகிய விக்ஷேப சத்தி, ஆசிரய மாகுமென அறிக. (76)

77. வினு:– பிராரப்த கன்மங்கட்கும், ஆவரண சத்தி ஆசிரய மாகாதோ வெனின்?

விடை :- அற்றேல், ஞாநத்தால் அஞ்ஞாநமும், ஆவரணமும், நட்ட மான வுடனே சஞ்சித கன்மங் களோடு பிராரப்த கன்மங்களும் நட்டமாய் விட வேண்டும். நட்டமாயின், ஞாநிகளாகிய ஜீவன் முத்தர்களும், குரு சிஷ்ய பாரம்பரியக் கிரமங்களு மில்லாமற் போம். அங்ஙன மின்றிச், சுகர் வாம தேவர் முதலிய அநேக ஜீவன் முத்தர்களும், குரு சிஷ்ய பாரம்பரியக் கிரமங்களு மிருக்கின்றமையால், ஆகா தென அறிக. (77)

(நூல் பிரிவு 46)

பிரஹ்ம சைதந்நியமே தானென்றும், மற்றைய (35) தத்துவங்களுந் தானல்ல வென்றும், தெளிந்த விவேகியானவன், அகங்காரக் கிரந்தி யற்றபடியினாலே, இந்த இருபத் தெட்டின் தொழில்களையும், நான் செய்யவில்லை யென்றும், இந்த இருபத் தெட்டும் புசிக்கின்றதை, நான் புசிக்கவில்லை யென்றுந், திடப்படத் தேறி, மயக்க மற்றிருக்கின்றமையால், இந்த இருபத் தெட்டினாலும், ஆர்ச்சிக்கப் பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கன்ம சம்பந்த மில்லாமையால், சநந மரணாதி சம்சார மில்லாமல், முத்தனாகிப் பிரஹ்ம மாத்திரமாகவே யிருப்பன்.

---

(பதம்) பிரஹ்ம சைதந்நியமே—

(பொருள்) பிரஹ்ம மாகிய பூரண அறிவே,

(பதம்) தா னென்றும்—

(பொருள்) கூடத்த ராகிய தா னெனவும்,

(பதம்) மற்றைய (35) தத்துவங்களும்—

(பொருள்) ஏனைய (35) தத்துவங்களும்,

(பதம்) தானல்ல வென்றும்—

(பொருள்) பிரஹ்ம கூடத்த ராகிய ஆத்மா அல்ல வெனவும்,

(பதம்) தெளிந்த—

(பொருள்) திடமாக அறிந்த,

(பதம்) விவேகி யானவன்—

(பொருள்) விசார ஞாநி யானவன்,

78, வினா:- பிரஹ்மமே தானெனவும், மற்றைத் தத்துவங்கள் அந்நிய மெனவும், அறிவ தெதனு லெனின்?

விடை:- சற் குருவா லுபதேசிக்கப்படுவ தாகிய மகா வாக்கிய விசாரத்தா லென அறிக. (78)

79. வினா :- மகா வாக்கிய விசார மாவது யாதெனின்?

விடை:- ஜீவேசுவரர்க் குள்ள ஏகத்துவத்தை விளக்குவிப்ப தாகிய, தத் துவ மசி யென்னும் மகா வாக்கிய சோதனை யென அறிக. (79)

80. வினா:- இவ் வாக்கியம், கிஞ்சிஞ்ஞத்துவாதி யீந குண விசிட்டனுயும், அசுதந்தர னுயும், பரிச்சிந்ந னுயும், பிரத்தியக்ஷ னுயு முள்ள ஜீவனும்; சர்வஞ்ஞ னுயும், கல்யாண குண விசிட்டனுயும், சுதந்தரனுயும், வியாபகனுயும், பரோக்ஷனுயு முள்ள ஈசுவரனும்; ஏக மெனல், கோடீசுவரனும், கோவணுண்டியும் ஏக மெனல் போல், விரோத மாகு மெனின்?

விடை:- மகா வாக்கியம், தன் பதங்களுக்குள்ள, சத்தி விருத்தி யிலக்கணு விருத்தி யாகிய இரண்டில், சத்தி விருத்தியால், ஜீவேசுவரர்களுக்கு ஏகத்துவ முணர்த்தாமல், இலக்கணு விருத்தியா லுணர்த்து கின்றமையால், சுருதிக்கு விரோதமாயுள்ள 1. அருத்த வாதம், 2. உபாசநா பரம், 3. துதிபரம், 4. உபசாரிகம், 5. சுகுண சாதிருசம், 6. ஜாதிவியக்தி, 7. காரிய காரணம், 8. குண குணி, 9. விகாரம், 10. அங்கிசாங்கிசி, 11. விம்பப் பிரதிவிம்ப வாத மென்னும் வாக்கியங்கள் போன்ற தல்லாமல், சுருதிக்கு விரோத மின்றிய, சுபாவ சித்தார்த்த போதக வாக்கியங்கள் போன்றதே யாகும். ஆதலால் விரோதமில்லை யென அறிக. (80)

81. வினு:- அருத்த வாத முதலிய வாக்கியங்களெவை? அவைகள் சுருதிக்கு விரோத மென்றது யாதினு லெனின்?

விடை:– 1. ஒரு மலரை மாத்திரம், சிவலிங்கமாதிய தேவதா சொரூபங்களில், அர்ச்சித்தால், அதற்குப் பலமாக சுவர்க்கம் கிடைக்குமென கூறும் கன்ம காண்ட வாக்கியம் போல, விரும்பிய மாத்திரத்தால் அடையப்படாத ஐக்கிய முத்தியானது வைராக்கியத்தா லுண்டான முமுட்சுத்துவத்தால் மாத்திரம், அடையப்படுவதாக (காலான முதற் பூமி கைவந்தால் முத்தியுங் கை வந்ததாமே; எனக் கைவல்லிய நவநீதம் கூறுவது போல)ச் சாத்திரங்களிற் கூறும் வாக்கியம், முத்தி விருப்பத்தைத் தருவதாகிய அருத்த வாத வாக்கியமாகும். 2. சித்திரப் பாவையைத் தெய்வ மெனக் கூறும் ஆஸ்திகர் வாக்கியம் போல, மிருத்திகை சிலை தாரு தாம்பிராதிகளா லாகிய விக்கிரகங்களை, உருத்திர ராதிய தெய்வங்க ளாக ஆகமங்களிற் கூறும் வாக்கியம், உபாசநாபர வாக்கிய மாகும். 3. அரசனுகிய மநுஷனை, யிந்திரனெனக் கீர்த்திக்கும் பாவலர் வாக்கியம் போலக், கிஞ்சிஞ்ஞ ஜீவ னுகிய பூசகனை, பூச்சிய சர்வஞ்ஞனுகிய ஈசுவர னென ஆஸ்திகர் கூறும் வாக்கியம், துதிபர வாக்கிய மாகும். 4. அடிமை வேலை செய்பவனை, அரசனெனப் புகழும் யாசகர் வாக்கியம் போல, சிவனடியார்களைச் சிவனுகப் புகழ்ந்து, (கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில், அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே) என அப்பர் தேவாரத்திற் கூறும் வாக்கியம் போலக் கூறும் பக்தர் வாக்கியம், உபசாரிக வாக்கியமாகும். 5. நிர்த்தோஷக் கிரியாவா னுகிய நைட்டிகப் பிரமசாரியைக், குண வொப்பினுல் தோஷ ரகிதமா யுள்ள அக்கினி யென்னும் உலகர் வாக்கியம் போல, மநோ நாசம் வாசநா க்ஷயமாய்த் திரிபுடித் தோற்ற மின்றி,

நிருவிகற்ப சமாதியி லிருக்கின்ற ஞாநி யாகிய ஜீவனை, நிர்க்குண வொப்பினால், நின்மல சிவ சொரூப மெனக் கூறும் புராண வாக்கியம், சுகுண சாதிரிச வாக்கிய மாகும். 6. அவயவ ரகிதமாகிய பசு வென்னும் ஜாதிக்கு, அலை தாடி முதலிய உறுப்பு களின் சமுதாய மாகிய உடம்பு உள தெனக் கூறும் உலகர் வாக்கியம் போல, அவயவ ரகிதமா யுள்ள சிவத்துக்குப் பஞ்ச பூதம், மதி, பருதி, ஜீவ னென்னும் அட்ட மங்கல வடிவ உடம்பு உளதெனப் புராணங்களிற் கூறும் வாக்கியம், ஜாதி வியக்தி வாக்கிய மாகும். 7. காரியமாகிய கடம், காரண மாகிய மண்ணுக் கந்நிய மல்ல, ஏகமென்னும் வாக்கியம் போலக், காரியமாகிய பிரபஞ்சம் காரண மாகிய பிரஹ்மத்துக்கு அந்நிய மல்ல, இரண்டும் ஏக மென்று சாத்திரங்களிற் கூறும் வாக்கியம், காரிய காரண வாக்கிய மாகும். 8. நீலோற்பல மென்னும் வாக்கியம் போலக் குண ரகிதமா யுள்ள பிரஹ்மத் துக்குக் குணத்தைக் கற்பித்துக் குணமாகிய மாயை, குணியாகிய பிரஹ்மத்துக்கு வேறல்ல, ஏகமென்று புராணங்களிற் கூறும் வாக்கியம், குண குணி வாக்கியமாகும். 9. தயிர் பாலுக்கு வே றல்ல, ஏக மென்னும் வாக்கியம் போல, நிருவிகார மாகிய பிரஹ்மத்துக்கு விகாரத்துவத்தைக் கற்பித்துப் பிரபஞ்சம் பிரஹ்மத்தின் விகாரமானமையால் பிரஹ் மத்துக்கு வேறல்ல வென்னும் வாக்கியம், விகார வாக்கிய மாகும். 10. சலமும், அலை திவலை யாதி களும்; வேறல்ல, ஏக மென்னும் வாக்கியம் போல, நிரம்சமா யுள்ள பிரஹ்மத்துக்குச் சீவர்களை யம்சங்க ளாகக் கொண்டு, பிரஹ்மமும், ஜீவர்களும், ஏக மென்று விசிஷ்டாத்துவித நூல்கள் கூறும் வாக்கியம், அம்சாம்சிக வாக்கிய மாகும். 11. விம்ப சூரியனும் பிரதிவிம்ப சூரியனும், ஏக மென்னும் வாக்கியம் போல, பிரஹ்ம மும், பிரஹ்மப் பிரதிவிம்பர்க ளாகிய ஜீவேசுரர்களும், ஏகமென்னும் வாக்கியம், விம்பப்

பிரதிவிம்பவாத வாக்கியமாகும். இவ் வாக்கியங்க ளனைத்தும் பேத வஸ்துக்களுக்கு அபேதங் கூறுதலால், தத்துவமசி வாக்கியத்தால் சாத்தியமான பிரஹ்மாத்மைக்கியங் கூறுஞ் சுருதிக்கு விரோத மா மென அறிக. (81)

(வேதாந்த சூடாமணி. 123ஆம் கவி. தலைப்பு: ஒரு மலர்க்கு — 124ஆம் கவி, தலைப்பு: கடத்தொடு)

82. வினு:- சுபாவ சித்தார்த்த போதக வாக்கியங்க ளெவை? அவைகள், சுருதிக்கு விரோத மில்லாதன வென்றது யாதினு லெனின்?

விடை:— 1. கட மட வுபாதிகளை நீக்கிக், கடாகாயமும், மடாகாயமும், ஏக மெனல் போலும்; 2. இராமன் மனித னென்பதை நீக்கித், திரு மா லென்பது போலும்; 3. கர்ணன்† இராதா புத்திர னென்பதை நீக்கிக், குந்தி புத்திர னென்பது போலும்; 4. தசமன் மரித்தா னென்னுந் துயர மகற்றி, நீயே தசம னென்பது போலும்; உள்ள வாக்கியங்கள், இயல் பாகவே சித்தித்திருக்கின்ற வஸ்துக்களுக்கு ஏகத்துவங் கூறுகின்றவைக ளானமையால், தத்துவ மசி வாக்கியத்தால், பிரஹ்மாத்மைக்கியங் கூறும் சுருதிக்கு விரோத மில்லை என்றதென அறிக. (82)

(வேதாந்த சூடாமணி. 122ஆம் கவி. தலைப்பு. தூயதத்வமசி)

83. வினு:- பதத்துக் குள்ள சத்தி விருத்தி யாது? அதனு லுணர்த்தப்படும் பொருள் யாது? இலக்கணு விருத்தி யாது? அதனு லுணர்த்தப்படும் பொருள் யா தெனின்?

---

† இராதா—கர்ணனை வளர்த்த வேடுவத் தாயின் பெயர்.

விடை:- பதத்தில், அருத்த ஞாநத்தை யுண்டு பண்ணத் தக்கதா யுள்ள சாமர்த்தியமே, சக்தி. அப் பதத்துக்கு, அருத்தத்தோ டுள்ள சம்பந்தமே, சக்தி விருத்தி யாம். கட பதத்துக்கு கலச ரூப மாகிய அருத்தத்தோ டுள்ள சம்பந்தம் (பிரவிருத்தி) கட பதத்தின் சக்தி விருத்தியா யிருப்பது போல, பதத்தின் சக்தி விருத்தியா லுணர்த்தப்படும் அருத்தம், சக்கி யார்த்த மாகும். இச் சக்கியார்த்தமே, வாசக போதக மா யுள்ள வாச்சியார்த்தம், அல்லது, முக்கியார்த்த மெனப்படும். சக்கிய சம்பந்தம் இலக்கணையின் சொரூபமாம். அதுவே, பதத்துக் குரிய பொருளை விடுத்து அப்பொருளின் சம்பந்தியை யுணர்த்துவ தாகிய இலக்கணை விருத்தி யாம். யா தோ ரருத்த ஞாநம், சக்தி விருத்தியா லுண்டாகாமல், இலக்கணை விருத்தியா லுண்டாகுமோ, அது, பதத்தி னுடைய இலக்கியார்த்த மாம். தருக்க நூலாரும், ரூடி (இடுகுறி) யினுலுண்டாகும் அருத்தத்துக்குப் பங்க முண்டாகும் போது, உள்ள கருத்துக் கெடாதிருத் தற்கு, வேறு அருத்தத்தைக் கற்பித்துக் கொள்வது, இலக்கணையின் பொது விலக்கண மென்பர். இவ் விலக்கணையும், விட்டது, விடாதது, விட்டு விடாதது என மூன் றும். இவைகளையே, வட நூல் வல்லார், ஜகத் லக்ஷணை, அஜகத் லக்ஷணை, ஜகதஜகத் லக்ஷணை யெனக் கூறுவர். இவைகள், யாண்டு வாச்சியார்த்தம் பொருந்த வில்லையோ, ஆண்டுக் கிரகிக்கத் தக்கவைக ளென அறிக. (83)

84. வினு:- தத்துவமசி யென்னும் வாக்கியம், இம் மூன் றிலக்கணைகளினுனும் பொரு ளுணர்த்துகிறதோ வெனின்?

விடை:- பாகத் தியாக மாகிய விட்டு விடாத இலக்கணையா லன்றி, மற்றைய இலக்கணைகளா லல்ல. வென அறிக. (84)

85. வினு:- அற்றேல், விட்டது, விடாத தென்னு மிரண் டிலக்கணைகளையும் சுருதி கூறியது, வியர்த்த மாமே யெனின்?

விடை:- சுருதிகளி லுள்ள 'மநம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், விட்ட இலக்கணையினுலும், 'சச்சிதாநந்தம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், விடாத இலக்கணையினுலும், பொரு ளுணர்த்துகின்றமையின், வியர்த்த மல்ல வென அறிக. (85)

86. வினு:– விட்ட இலக்கணை யென்பது யாது? அதனுல், 'மநம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், எங்ஙனம் பொருளுணர்த்துகிற தெனின்?

விடை:– வாச்சியார்த்தங்கள் முழுமையும் விடுத்து, அதன் சம்பந்தியை யுணர்த்துவது, விட்ட இலக்கணையாம், 'கங்கையிற் றெரு விருக்கிற' தென்னும் வாக்கியத்திலுள்ள, கங்கை யென்னும் பதம், தன் வாச்சியார்த்த மாகிய தேவ நதிப் பிரவாகத்திற் றெருவின் திதி கூடா தாதலின், விட்ட இலக்கணையினுல், தேவ நதிப் பிரவாக மாகிய வாச்சியார்த்த முழுவதையும் விடுத்து, அதன் சம்பந்தியாயுள்ள தீரத்தை யுணர்த்துவது போல, 'மநம் பிரஹ்ம' மென்னும் வாக்கியத்தி லுள்ள 'மந' மென்னும் பதம், தன் வாச்சியார்த்த மாகிய அந்தக் கரண விருத்தி, சேதந மல்லாமையால், விட்ட இலக்கணையினுல், அந்தக் கரண விருத்தியாகிய வாச்சியார்த்த முழுவதையும் விடுத்து, அதன் சம்பந்தியாயுள்ள சேதந மாகிய பிரஹ்மத்தை யுணர்த்துகிற தென அறிக. (86)

87. வினு:- விடாத இலக்கணை யென்பது யாது? அதனுல், 'சச்சிதாநந்தம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், எங்ஙனம் பொரு ளுணர்த்துகிற தெனின்?

விடை:- வாச்சியார்த்தங்கள் முழுவதையும் விடாமல், அதன் சம்பந்தியை யுணர்த்துவது, விடாத இலக்கணையாம். 'கருப்பு நிற்கிறது, சிவப்பு ஓடுகிற' தென்னும் வாக்கியத்தி லுள்ள, 'கருப்புச் சிவப்' பென்னும் பதங்களின் வாச்சியார்த்தங்கள், கரு நிறஞ் செந் நிற மாகிய குணங்களாம். குணங் கள் குணியை விட்டுத் தனித்து நிற்கவும், ஓடவுங் கூடா வாதலின், அப் பதங்கள், விடாத இலக்கணை யினுல், கரு நிறஞ் செந் நிற மென்னும் குணங்க ளாகிய வாச்சியார்த்தங்கள் முழுவதையும் விடாமல், அவைகளின் சம்பந்திகளா யுள்ள, விசேஷியங்க ளான பசுவையும், அசுவத்தையும், உணர்த்துவது போலச், சச்சிதாநந்தம் பிரஹ்ம மென்னும் வாக்கி யத்தி லுள்ள, 'சச்சிதாநந்த' மென்னும் பதங்களின் வாச்சியார்த்தங்கள், பிரஹ்மத்தின் சுபாவ மா யுள்ள சத்து சித்து ஆநந்த மாகிய குணங்க ளாம். அக் குணங்கள், சுத்தப் பிரஹ்ம மாகிய குணியை விட்டுத் தனியே யிராவாதலின், அப் பதங்கள், விடாத இலக் கணையினுல், சச்சிதாநந்த மாகிய வாச்சியார்த்தங் கள் முழுவதையும் விடாமல், அவைகளின் சம்பந்தி யா யுள்ள பிரஹ்மத்தையும் உணர்த்துகிற தென அறிக. (87)

88. வினு:- விட்டு விடாத இலக்கணை யென்பது யாது? அதனுல், தத்துவமசி மகா வாக்கியம் எங்ங னம் பொருளுணர்த்துகிற தெனின்?

விடை:- வாச்சியார்த்த மாகிய பொருள்களில், ஓர் பாகத்தை விடுத்து, மற் ருேர் பாகத்தை விடாம லுணர்த்துவது, பாகத் தியாக மாகிய விட்டு விடாத இலக்கணையாம். காசியில் அரசன் யானையின் மேல் பவநி வருவதைப் பார்த்துவிட்டு இராமேசுவரத்தில் வந்திருக்கும் யாத்திரை வாசிகளில், தேவதத்த னென்பவன், அக் காசி யரசனை, ஓர் வேற் றரசன்

இராச்சியத்தைக் கவர்ந்துகொண்டு துரத்தி விட, அவன் அரையிற் கோவணமும், அங்கத்தில் விபூதி யுருத்திராக்கமும், தரித்துக், கரத்திற் றிரு வோடு தாங்கிப் பாத சாரி யாகத் தீர்த்த யாத்திரை நிமித்த மாய்ப் புறப்பட்டுத் தலங்க டோறுஞ் சுற்றிக் கொண்டு இராமேசுவரத்துக்கு வரக் கண்டு, தன்னோடு கூட வந்த அந்நிய யாத்திரைவாசி யாகிய எஞ்ஞ தத்தனை நோக்கி, முன்னர் காசியிற் பவநிவர நம்மால் பார்க்கப்பட்ட அரசன் எவனோ, அவன் தா னிவ னென்று கூற; எஞ்ஞ தத்தன், கை கொட்டி நகைத்து, அவன் அரசன், இவன் சந்நியாசி, அவன் ஆர கேயூர மகுட பீதாம்பர தாரி, இவன் விபூதி யுருத்திராக்க கோவண தாரி. அவன் கரத்திற் செங்கோ லேந்திய இராச்சிய பரிபாலநன், இவன் கரத்திற் றிரு வோ டேந்திய பிட்சுகன், அவன் யௌ வநன், இவன் வயோதிகன், விரோதாம்சங்களை யுடைய, அவ னிவ னன்று, இவ னவ னன்று, அவ் னிவனு மென்பது, உனது புத்திப் பிரமையா மென்று மறுக்கத், தேவதத்தன், எஞ்ஞ தத்தனை நோக்கி, எஞ்ஞ தத்தா! அவ னென்னும் பதத்துக்கு வாச்சி யார்த்தம், இளமைப் பருவம் இராஜரீகத்துவம் ஆர கேயூர மகுட பீதாம்பரம் சுதந்தரத்துவம் முதலிய விசேஷணங்களை யுடைய சரீரி யாகிய அரச னும். இவ னென்னும் பதத்துக்கு வாச்சியார்த்தம், வயோ திகப் பருவம் பிட்சுகத்துவம் விபூதி யுருத்திராக்க கோவணம் அசுதந்தரத்துவம் முதலிய விசேஷணங் களையுடைய சரீரி யாகிய சந்நியாசி யாம். ஆதலின், விட்டுவிடா இலக்கணையினாலே, அவ னென்னும் பத வாச்சியார்த்தங்களில், இளமைப் பருவ முதலிய விசேஷணங்க ளாகிய ஓர் பாகத்தையும், இவன் என்னும் பத வாச்சியார்த்தங்களில், முதுமைப் பருவ முதலிய விசேஷணங்க ளாகிய ஓர் பாகத்தையும் விடுத்து, மற்றைப் பாகமா யுள்ள விசேஷிய சரீரங் களி லுள்ள, நிறம் மச்ச மாதிய குறிகளை மாத்திரம்

பார்ப்பா யென்று கூற, எஞ்ஞு தத்தன் அங்ஙனமே விசேஷண பாகங்களை நீக்கி, விசேஷிய பாக மாகிய சரீரத்தி லுள்ள, நிறம் மச்ச மாதிய குறிகளை நோக்கி, அந்தச் சரீரத்தி லிருந்த நிறங் குறி யாதிகளே, இந்தச் சரீரத்தி லிருக்கிற படியால், அந்தச் சரீரமே இந்தச் சரீர மென் றறிந்து, அவன் தா னிவன், இவன் தா னவ னென ஒப்பினுன். இங்ஙனம், எஞ்ஞு தத்தனுக்குத் தேவ தத்தன் உணர்த்தியது போலத், தத்துவமசி மகா வாக்கியத்தி லுள்ள, தத் என்னும் பதத்தின் வாச்சியார்த்தம், காரிய சகித மாயை, மாயையின் கண் ணுள்ள ஆபாசம், அவையின் அதிட் டாந சேதநம் ஆகிய மூன்றுஞ் சேர்ந் துள்ள சர்வஞ் ஞுத்து வாதி தரும சகித னுன ஈசுர னும், துவ மென் னும் பதத்தின் வாச்சியார்த்தம், காரிய சகித அவித் தை, அவித்தையின்கணுள்ள ஆபாசம், இவைகளின் அதிட்டாந சேதநம் ஆகிய மூன்றுஞ் சேர்ந் துள்ள கிஞ்சிக்ஞுத்துவாதி தரும சகித னுன ஜீவ னும், விரோத தருமங்களை யுடைய இவ் விரு வர்க்கும், ஏகத்துவம் பொருந்தாமையின், அவ் வாக்கியம், பாகத்தியாக மாகிய விட்டு விடாத இலக்கணையினுல், தற் பத வாச்சியார்த்தத்தில், காரிய சகித மாயை, மாயையின் கண்ணுள்ள, ஆபாசம், சர்வஞ்ஞுத்துவாதி தருமங்களாகிய ஓர் பாகத்தையும், துவம் பத வாச்சியார்த்தத்தில், காரிய சகித அவித்தை, அவித் தையின் கண்ணுள்ள ஆபாசம், கிஞ்சிஞ்ஞுத்துவாதி தருமங்கள் ஆகிய, ஓர் பாகத்தையும் விடுத்து, அவை களின் சம்பந்தியா யுள்ள, 'பிரஹ்ம கூடத்த ரென்னும் அதிட்டாந சேதநங்களை விடாமல், அசி யென்னும் பதத்தால், பிரஹ்மமே கூடத்தர், கூடத்தரே பிரஹ்ம மென விரோத மின்றி, ஏகத்துவ முணர்த்துகிற தென அறிக. (88)

89. வினு:- இம் மகா வாக்கியத்தி லுள்ள, 'தத்துவ' மென்னு மிரண்டு பதங்களும், 'தத்' என்னும்

பத வாச்சி யார்த்தமே, 'பிரஹ்ம' மெனவும், 'துவ' மென்னும் பத வாச்சியார்த்தமே, கூடத்த ரெனவும், தம் சக்தி விருத்திகளால், நேரே பொரு ளுணர்த்து கின்றன வெனக் கொள்ளாமல், இலக்கணு விருத்தி யெனப், பத சம்பந்த மின்றிய ஓர் விருத்தியை வரு வித்து, அதனால், பிரஹ்ம கூடத்தரை யுணர்த்து கின்றன வெனக் கொள்ளுதல் வீண் பிரயாசமும், அசம்பவமுமா மெனின்?

விடை:- பதத்திற்கு வாச்சியார்த்தத்தோடு சம் பந்த மிருப்பது போல, வாச்சியார்த்தத்துக்கு லக்ஷணையோடு சம்பந்த முண்டு. பதத்துக்கு லக்ஷணை யோடு சாக்ஷாத் சம்பந்த மில்லை. வாச்சிய வாயி லாகச் சம்பந்த முண்டு. அது பரம்பரா சம்பந்தமாகும். இதனை யறியாமல், பதத்திற்கும், லக்ஷணைக்கும், சம் பந்த மில்லை யென்பது விசாரக் குறைவாம். இஃ தன்றி, தத் (அது) என்னும் பதத்தின் சக்தி விருத் தியா லுணர்த்தப்படும் பொருள் பரோக்ஷமாகவும், தூரத் திருப்ப தாகிய கண்டப் பொரு ளாகவும் உள்ள தானமையின், அப் பதம், அபரோக்ஷ மாகவும், சமீபத்தினுஞ் சமீப மாகவும், பூரண மாகவு முள்ள பிரஹ்மத்தையும், துவம் (நீ) யென்னும் பதத்தின் சக்தி விருத்தியா லுணர்த்தப்படும் பொருள், பிரத்தி யக்ஷ மாகவும், முன்னிலை விஷய மாகவும், உள்ள தானமையின், அப் பதம், நிர்விஷய மாகவும், தா னுகவு முள்ள கூடத்தரையும், தம் தம் சக்தி விருத் தியா லுணர்த்துகின்றன வெனக் கொள்ளுதல், வீண், பிரயாசமும், அசம்பவமு மாகும். ஆதலின், இலக்கணு விருத்தியால், பொருளுணர்த்து கின்றன வெனக் கொள்ளுதலே அமை வுடைத் தென அறிக. (89)

90. வினு:- அற்றேல், சக்கியார்த்தமே, வாச்சி யார்த்த மெனவும், வாச்சியார்த்த சம்பந்தமே லக்ஷணை யெனவும், கூறுகின்றபடி, வாச்சியார்த்தத்

துக்கு லக்ஷிய சேதநத்தோடு சம்பந்தம் ஒப்பினால், லக்ஷிய சேதநம் அசங்க மென்னுஞ் சுருதிக்கு விரோத மாம். சம்பந்த மொப்பாவிடில், லக்ஷணை கூடாது, யாதினால் எனின், சக்கிய சம்பந்தம் லக்ஷணையென்று சொல்லப்படுகிறது. அது, அசங்கத்திற் சம்பவிக்காது. ஆதலால், லக்ஷணை விருத்தியால் பொருள் கொள்ளு தலும், சுருதியாதிகட்கு விரோதமா மெனின்?

விடை:- வாச்சியார்த்தத்தில், சேதநம், சட மென இரண்டு பாக முளது. இவ் விரண்டில், வாச்சிய சேதநங்களுக்குச் சொரூபம், லக்ஷிய சேதநமே யாகும். ஆதலால், வாச்சிய சேதநங்களுக்கு, லக்ஷியார்த்தத் தில் தாதாத்மிய சம்பந்த முளது. வாச்சிய மாகிய சடங்களுக்கு, லக்ஷிய சேதநத்தில் அதிட்டாநத்துவ சம்பந்த முளது, கற்பிதமாகிய கானற் சல சம்பந்தத் தால், ஊஷர பூமி நனைத லாதிய விகாரங்களை யடை யாதது போல, கற்பித மாகிய வாச்சிய சடங்களின் சம்பந்தத்தால், அதிட்டாந மாகிய லக்ஷிய சேதநத் தின் சுபாவம் மாறுபடாது. ஆதலால், லக்ஷணை சம்பவிக்கிறது பற்றி, லக்ஷணை விருத்தியால், பொரு ளுணர்த்துகிற தெனக் கொள்ளுதல் சுருதி யாதிகட்கு விரோத மில்லை யென அறிக. (90)

91. வினா:- இந்தத் தத்துவமசி மகா வாக்கியம், எந்த வேதத்தின் வாக்கியம்? இதனைப் பூர்வம் யாருக்கு யார் உபதேசித்திருக்கிறார்க ளெனின்?

விடை:- சாம வேதத்தின் சாந்தோக்கிய வுப நிடதத்தின் ஆறுவது அத்தியாயத்தி லுள்ள வாக்கிய மாம்: இதனைப் பூர்வம் உத்தாலக முநிவர், தன் புத் திர னாகிய சுவேதகேதுவுக்கு உபதேசித்திருக்கிறா ரென அறிக. (91)

92. வினா:- சாம வேதத்தி லிருப்பது போல, மற்றைய மூன்று வேதங்களினுஞ், சீவப் பிரஹ்மங்கட்கு ஏகத்துவம் போதிக்கும் வாக்கியங்க ளுளவோ வெனின்?

விடை:- இருக்கு வேதத்தின் ஐதரேய வுபநிடதத்திற், 'பிரஞ்ஞாநம் பிரஹ்ம' மெனவும், †எசுர் வேதத்தின் தைத்திரியோபநிடதத்தில், 'அஹம் பிரஹ்மாஸ்மி' யெனவும், அதர்வண வேதத்தின் முண்டகோபநிடதத்தில் 'அயமாத்மா பிரஹ்ம' மெனவும், ஜீவப் பிரஹ்மங்கட் கேகத்துவம் போதிக்கும் வாக்கியங்க ளுள்ளன வாகும். இவைகளில், தத் பதத்திற்கு வாச்சியார்த்த மாகிய ஈசுரனும், இலக்ஷியார்த்த மாகிய பிரஹ்மமுமே, மற்றைய மூன்று வாக்கியங்களிலு முள்ள பிரஹ்ம பதத்திற்கு வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்க ளாம். துவம் பதத்திற்கு வாச்சியார்த்த மாகிய ஜீவனும். இலக்ஷியார்த்த மாகிய கூடத்தருமே மற்றைய மூன்று வாக்கியங்களிலு முள்ள பிரஞ் ஞாநம், அஹம், அயம் ஆத்மா வென்னும் மூன்று பதங்களுக்கும் வாச்சியார்த்த இலக்ஷியார்த்தங்க ளாம். ஆதலால், தத்துவமசி மகா வாக்கியத்திற் குள்ள ஜீவப் பிரஹ்ம ஐக்கிய மாகிய அர்த்தமே, மற்றைய மூன்று மகா வாக்கியங்களுக்கு முள்ள அர்த்த மாம். இவ் வாக்கியங்கள், ஒரே வித

† எசுர் வேதத்தின் பிருகதாரண்ணிய உபநிடதத்தில் 'அஹம் பிரஹ்மாஸ்மி' எனவும்; அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிடதத்தில் 'அயமாத்மா பிரஹ்ம' மெனவும்; பாடபேதம் உண்டு, இப்பாடபேதம். பஞ்சதசி, மகாவாக்கிய விவேகம் என்னும் பிரகரணத்திலும் மற்றும் சில நூல்களிலுமுளது.

அர்த்தங்களையுடையன வாக இருக்கினும். * 'பிரஞ் ஞாநம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், இலக்ஷண வாக்கியமும், 'அகம் பிரஹ்மாஸ்மி' யென்னும் வாக்கியம், அப்பியாச வாக்கியமும், 'தத்துவமசி' யென்னும் மகா வாக்கியம், உபதேச வாக்கியமும், 'அய மாத்மா பிரஹ்ம' மென்னும் வாக்கியம், சாக்ஷாத்கார வாக்கியமு மாகும். இவ் வாக்கியங் கட்கு, (1) உற்பத்தி, (2) பேதம், (3) மகிமை (4) பிரகாசம் இவைகளால், (5) அஞ் ஞாந நிவிர்த்தி, (6) அவதி, (7) நிண்ணயம், (8) அடைந்தவர் கதை, (9) தியாநம், (10) உரை யெனத் தச காரியங்க ளுள்ளன. இவைகளை யறிய விரும்பில், ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரிய ஸ்வாமிகள் செய் தருளிய தச காரிய மகா வாக்கிய மென்னும் கிரந்தத்திற் காண்க. (92)

93. வினா:- இவ் வாக்கியங்களை, லக்ஷண—அப்பியாச—உபதேச—சாக்ஷாத்கார வாக்கியங்க ளென்றது யாதினா லெனின்?

விடை:- 'பிரஞ் ஞாநம் பிரஹ்ம' மென்னும் வாக்கியம், அறிவே பிரஹ்ம மெனப் பிரஹ்ம விலக்கணங் கூறும் வாக்கியமும், 'அகம் பிரஹ்மாஸ்மி' யென்னும் வாக்கியம், நான் பிரஹ்ம மென அப்பியாசிக்கும் வாக்கியமும், 'தத்துவமசி' யென்னும் வாக்கியம், அது நீ யாகிறு யெனப் போதிக்கும் வாக்கியமும், 'அயமாத்மா பிரஹ்ம' மென்னும் வாக்கியம், இந்த ஆத்மாவே பிரஹ்ம

* 'பிரஞ்ஞானம் பிரஹ்மம்' என்னும் வாக்கியம் மனன வாக்கிய மெனவும்; 'அகம் பிரஹ்மாஸ்மி' என்னும் வாக்கியம் அநுபூதி வாக்கியமெனவும்; 'அயமாத்மா பிரஹ்மம்' என்னும் வாக்கியம் சம்மத வாக்கிய மெனவும் பாடபேதம் உண்டு. இப்பாட பேதம் ரிபுகீதை 28ஆவது நான்கு மகா வாக்கியார்த்த முரைக்கும் அத்தியாயத்திலும் மற்றுஞ் சில நூல்களிலு முளது.

மெனத் திடாபரோக்ஷ அநுபவங் கூறும் வாக்கியமு மாக இருத்தலி னென அறிக. (93)

94. வினா:- இவ் வாக்கியங்களில், உபதேச வாக்கியம் யாருக்குப் போதிக்கத் தக்க தாகு மெனின்?

விடை:- நிட்காம புண்ணியத்தால், நான்கு சாதநங்களும், அவாந்தர வாக்கிய சிரவணத்தால், பரோக்ஷ ஞாநமு, முள்ளார்க்குப் போதிக்கத் தக்க தாகும். இவ் வாக்கியத்திற்குச், சிலர், 'அது போல நீ யாகிறு' யெனவும், சிலர் 'அதன் தருமமாக நீ யாகிறு' யெனவும், சிலர் 'அது நீ யானு' யெனவும், சிலர் 'அது நீ யாகிறு' யெனவும் பொருள் தோன்றப் போதிக்கின்றனர். இவற்றில், முற் சொல்லிய இரண்டும், சகுண முத்தி விஷய மானமையால், உபேக்ஷிக்கத் தக்கன வாகும். பிற் சொல்லியவை களில், 'அது நீயானு' யென்பது, சென்ற காலத்தைக் காட்டுகின்றமையால், பூர்வம் பிரஹ்ம மாகிய ஜீவனுக்குப் போதிக்கும் உபதேசம் பயனற்ற தாகும். ஆதலால், அவைகளை நீக்கி, 'அது நீ யாகிறு' யெனச் சுருதியின் தாற்பரியப்படி போதித்தலையே சிறந்த தாகக் கொள்ளத் தக்க தென அறிக. (94)

95. வினா:- சீடன் உத்தமாதிகாரி யாக இருக்கினும், குருவினு லுபதேசிக்கப்பட்ட இரண்டா வது க்ஷணத்தில், மநநமும், மூன்றுவது க்ஷணத்தில், நிதித்தியாசநமும் செய்யாமல், அவனுக்குப் பிரஹ்மாநுபவ முண்டாகமாட்டாது. ஆதலால், சுருதி 'அது நீ யாவா' யென வருங் காலந் தோன்றக் கூறுமல், 'அது நீ யாகிறு' யென நிகழ் காலந் தோன்றக் கூறுவது பொருந்தா தெனின்?

விடை:- காட் டாற்றை நீந்திக் கை யயர்ந்து கரையி னருகே வராநின்ற சிநேகனை நோக்கிக் கரையி லிருப்பவன், கரையில் வந்தாயிற்றுப் பயம் வேண்டா மென்று கூறுவது போலப், பிராந்தி நீக்கத்தால் பிரஹ்ம மாகத் தக்கவனைப், பிரஹ்ம மாகிரு யென்பது பொருந்து மென அறிக. (95)

96. வினா:- ஜீவனும், பிரஹ்மமும், பேதப் பொரு ளானால், எந்தக் காலத்தினும் பேதப் பொரு ளாகவே யிருக்கும். அங்ஙன மிருக்கின்ற ஜீவப் பிரஹ்மங் கட்கு, ஏகத்துவங் கூறுதல், கடத்துக்கும், படத்துக் கும், ஏகத்துவம் கூறுதல் போல, அசம்பாவித மாம். அல்லது, ஜீவனும் பிரஹ்மமும் அபேதப் பொரு ளானால், இயற்கையில் அபேதமா யிருக் கின்ற ஜீவப் பிரஹ்மங்கட்கு, இப் போது, 'அதுவே நீ,' யென அபேதங் கூறும் வாக்கியம், புருடனை யுள்ளவனைப் புருடனாகிரு யென்னும் வாக்கியம் போலப், பய னற்ற தாகும். அல்லது, ஜீவனால் தனக்கு முன் னில்லாத பிரஹ்ம சொரூபம், இப் போ தடையப் படுகிறது பற்றிக் கூறிய வாக்கியமானமையால், பய னுள்ளதே யாகு மெனின், அற்றேல், அடையப் படும் சுவர்க்க பலம் போல, மோக்ஷமும் அநித்திய மாகும். ஆதலா, லிவ் வாக்கியம் உபேக்ஷிக்கத் தக்க தெனின்?

விடை:- தோற்றர வாகிய இரச்சு சர்ப்பத்தைத் தீபப் பிரகாசங் கொண்டு பார்க்கும் போது, சர்ப்பம் இரச்சுவுக்கு வே ருகாமல், இரச்சு வாகவே நிலை பெறுகிற படியால், முன்னர்க் கற்பித பேத மாகவும், பின்னர் வாஸ்தவ அபேத மாகவு மிருப்பது போல, ஜீவப் பிரஹ்மங்கள், முன் னுள்ள அஞ்ஞா ந காலத்திற், கற்பித பேத மாகவும், பின்னர் ஞா ந காலத்தில், வாஸ்தவ அபேத மாகவு மிருக்கிறது பற்றி, யங்ஙனங் கூறிய தாகும். அற் றன் றெனின்,

வேதத்தில் ஏகத்துவங் கூறும் வாக்கியமும், அதனை உலகத்தில், அநாதி தொட்டு உபதேசித்தும், சிரவணஞ் செய்தும், வராநின்ற குரு சிஷ்ய சம்பிரதாயமும் இல்லாதிருக்க வேண்டும், அங்ஙன மின்றி, யிருக்கின்றமையால், இவ் வாக்கியம் அசம்பாவிதமும், பய னற்றதும், உபேக்ஷிக்கத் தக்கது மாகா தென அறிக (96)

97. வினா:- தத்துவமசி வாக்கியத்துக்கு, இங்ஙனம் பொருள் கொள்ளாமல், வேறு வித மாகப் பொருள் கொள்வாரு முளரோ வெனின்?

விடை:— வைணவர்க ளாகிய விசிட்டாத்துவிதி களும், மத்துவர்க ளாகிய துவிதிகளும், சுருதிக்கு விரோதமாக, வேறு வித மாய்ப் பொருள் கொண்டிருக்கிறார்க ளென அறிக. (97)

98. வினா:- விசிட்டாத்துவிதிகள் சித்தாந்த மியா தெனின்?

விடை:- விசிட்டம் விசேஷணங்களுடன் கூடியது. அத்துவிதம், இரண் டற்று, ஒன்றா யிருப்பது. ஒரு பதார்த்தம், வருண மாதிய குணங்கள் சேர்ந் துள்ள தாய்ப் பிரிவு படாமல் ஒன்றாகவே யிருப்பது போல, பரமாத்மாவானது, சித்து அசித் துக்க ளாகிய விசேஷணங்கள் சேர்ந்துள்ள தாய்ப், பிரிவு படாமல், ஒன்றாகவே யிருக்கிற தென்னுங் கொள்கை, விசிட்டாத்துவித சித்தாந்த மாகும். இவ் விசிட்டாத்துவித நூல்கள், பரமாத்மா சித்து அசித்து என்னுந் தத்துவத் திரயங்களில், பரமாத்மா வென்பது பிரஹ்ம மாம். அது ஒன்றே சத்தியம். மற்றவைகள் அதை ஆசிரயித்த சத்திய தத்துவங்கள். இந்தத் தத்துவங்களில், சித் தென்பது, சைதந்ய மாகிய ஜீவாத்மா, அசித் தென்பது, அசேதந மாகிய காலம், மூலப் பிரகிருதி, சத்துவ இராஜஸ தாமத

குணங்க ளாகிய இவைக ளாம். இவைகளில், காலம் அநித்தியம். மூலப் பிரகிருதி நித்தியம். மண் கடத்துக்கு உபாதாந காரணமா யிருப்பது போல, மூலப் பிரகிருதியே பிரமாண்ட சிருட்டிக்கு உபாதாந காரணம், சித்து அசித்துக்கள் பரமாத்துமாவுக்குச் சரீரம். பரமாத்மா சரீரி எனவும், தத்துவத் திரயங் களில், (1) யதார்த்த ஞாநம், (2) ஆசாரியர் சரீரத்திற் பிரீதி, (3) வேதங்களிடத்திற் பக்தி, (4) மோக்ஷ இச்சை, (5) வைராக்கியம், (6) கருமத்தில் ஆசக்தி, (7) வேதாந்த அப்பியாசம், ஆகிய இவைகள் மோக்ஷ மடைதற்குரிய அதிகாரிகட் குள்ள சாதநங்க ளெனவும், (1) கர்ம யோகம், (2) ஞாந யோகம், (3) பத்தி யோகம், (4) பிரபத்தி, ஆகிய இவைகள் மோக்ஷ மடைதற் கான வுபாயங்க ளெனவும், மோக்ஷ மானது, கைவல்லிய மோக்ஷம், பிரஹ்மா நந்த மோக்ஷம் என இரண்டாம். இவ் விரண்டில், ஜீவன் தன் வாஸ்தவ மான ஸ்திதியி லிருந்து கொண்டு ஆநந்தத்தை அநுபவிப்பது, கைவல்லிய மோக்ஷ மெனவும், இதையடைந்தவன், பிரகிருதி மண்டலத்துக்கு வெளியில், விரசா நதிக்கு இக் கரையி லிருப்ப தாகச் சிலரும், முத்தர்களடையும் வைகுண்ட லோகத்தை யடைகிறான். அடை யினும், பரமாத்மாவிற்கு சமீபத்திற் செல்லுகிற தில்லை. வைகுண்டத்தில் பறைச் சேரிக்கு ஒப் பான ஒரு மூலையிலிருக்கிறா னெனச் சிலரும் சொல்லுவர். ஜீவன் வைகுண்ட லோகத்திற் பரமாத்மாவிற்குச் சமீப மாய்ச்சென்று, பரமாத்மாவின் தரும மாகிப், பரமாநந்தத்தை யநுபவித்தல், பிரஹ்மாநந்த மோக்ஷ மெனவும், பிரஹ்மத்தில், ஜீவன் லய மாகிற தில்லை, சாலோக சாமீப்ய சாரூப்ய சாயுச்சியங்களை யடைகிறா னெனவும் கூறுகின்றனவென அறிக. (98)

99. வினா:- இவ் விசிட்டாத்துவிதிகள், தத்துவமசி மகாவாக்கியத்துக்கு, எங்ஙனம் பொருள் கொண்டிருக் கிறார்களெனின்?

விடை:— தத் (தஸ்ய) துவம் (பாவ:) அசி யென்பதே தத்துவமசி எனவும், இதன்பொருள், தஸ்ய (பரத்தின்) பாவ: (தருமமாக) அசி, (ஆனாய்) பரத்தின் தருமமாக ஆனா யெனவும், இவ் வாக்கியத்தி லுள்ள துவ மென்னும் பதம் தருமத்தை விளக்கிய தெனவும், பொருள் கொண்டிருக்கிறார்க ளென அறிக. (99)

100. வினா:— துவமென்னும் பதம், தர்மத்தை விளக்கியது, எது போலு மெனக் கொண்டிருக்கிறார்க ளெனின்?

விடை:— பிராமணத்துவம், சூத்திரத்துவம், சந்நியாசத்துவம், அந்தக் கரணத்துவம் என்பவற்றில், துவ மென்னும் பதம், தர்மத்தை விளக்கி நின்றாற் போலு மெனக்கொண்டிருக்கிறார்க ளென அறிக. (100)

101. வினா:- விசிட்டாத்துவிதிகள் பொருள் கொள்வது போல, வேதாந்திகளும் பொருள் கொள்ளில், விரோத மென்னை யெனின்?

விடை:— பிரஹ்மத்தைத் தருமமாதிய விசேடணங்களுடைய தென்பதும், ஆத்மாவைத் தருமியை யன்றி, யோர் பொருளாக நிலைபெறாத தருமமாகக் கொள்ளுதலும்; நிர்க்குண நிரம்ச நிர்விசேட மா யுள்ளது, பிரஹ்மமெனவும், அதுவே, சத் தாகிய ஆத்மா வெனவும் போதிப்பதாகிய, சுருதி யாதிகட்கு விரோத மா மென அறிக. (101)

102. வினா:— துவித சித்தாந்த மாவது யா தெனின்?

விடை:- திவ்விய கல்யாண குண சம்பன்னனான விஷ்ணுவே, பர மாகிய சர்வேசுவரன், இவனே ஜடப் பிரகிருதியி னின்றும் ஜகத்தைச்சிருட்டித்தமையால், ஜகத்துக்கு நிமித்த காரணன், ஜடப் பிரகிருதி யுபா

தாந காரணம், விஷ்ணு, ஜீவன், பிரகிருதி மூன்றும் நித்தியம். நாச மற்றவை. இவைகள், தனித் தனியே சத்தியம், ஒன்றுக் கொன்று வே ருனவை யென்னுங் கொள்கையே துவித சித்தாந்த மாகும். இத் துவித சித்தாந்த நூல்கள், பிரகிருதியுஞ், ஜீவனும், விஷ்ணு வின் ஆள்கைக் குட்பட்டவைகள். பிரகிருதியின் சத் துவ ராஜச தாமச குணங்களால், ஜீவன் பந்திக்கப் பட்டு, அதனால், ஜநந மரணங்கட் குட்படுகிறு னெனவும், முத்திக்குச் சாதநம், விஷ்ணுவின்பா லுள்ள பக்தியே யெனவும், இப் பக்தியால், விஷ்ணுவின் பிர சாதத்தை யடைந்து, அதனால், கர்ம க்ஷய மாகும் போது, பர மாகிய விஷ்ணுவைப் போலிருப்ப தாகிய முத்தியை யடைகிரு னெனவுங் கூறுகின்றன வென அறிக. (102)

103. வினு:- இத் துவித வாதிகள், தத்துவமசி மகா வாக்கியத்திற்கு, எங்ஙனம் பொருள். கொண்டிருக்கி ஞர்க ளெனின்?

விடை:- ததிவ துவம் அசி யென்பது, தத்துவமசி யெனவும், இதன் பொருள் தத் (பரம்) இவ (போல) துவம் (நீ) அசி ஆனுய் (பரம் போல நீ யானு யென வும்) இவ் வாக்கியத்தில், இவ வென்னும் உவம வுருபு தொக்கு நின்றதெனவும், பொருள் கொண்டிருக்கின்றன ரென அறிக. (103)

104. வினு:- இவ வென்னும் உருபு தொக்கு நின்ற தெது போலு மெனின்?

விடை:- 'மதி முகம், பவளவாய்' யென்பவற்றில், போலு மென்னும் உவம வுருபு தொக்கு நிற்பது போலுமென அறிக. (104)

105. வி௵:- துவித வாதிகள் பொருள் கொள்வது போல, வேதாந்திகளும் பொருள் கொள்ளில், விரோத மென்னை யெனின்?

விடை:- பர மாகிய பிரஹ்மத்தைப் போல, ஜீவனாகிய நீ யானு யெனின், ஜீவர்க ளநேக ரான மையால், அநேக ஜீவரும், சமசத்தை யுடைய அநேக பிரஹ்மங்களாகி, ஒன் றிருந்த விடத்து மற் றொன் றிராமல், பரிச்சிந்ந வத்துக்களே யாகும், அங்ஙன மாயின், பிரஹ்மத்தை அத்துவிதம் அகண்ட மெனக் கீர்த்திக்கும் சுருதி யாதிகட்கு விரோத மா மென அறிக. (105)

106. வி௵:- இவ் வாக்கியத்துக்கு அது நீ யாகிறு யென, அவி ரோத மாக நேரே பொருள் கோடற் பாலதா யிருக்க, இம் மதாசாரியர்கள், சுருதிக்கு விரோத மாக வருந்திப் பொருள் கொள்வதற்குக் காரணம் யா தெனின்?

விடை:- பிரஹ்ம நிஷ்ட ராகிய குருவைத் தெ ரிந் தடையாமையும், நிட்காம கன்மக் குறை வால், வேதாதிகளின் உண்மைப் பொருள் விளங்காத புத்தி தோடமும், மதாபிமாநமு மென அறிக. (106)

107. வி௵:- ஜீவர்கள், வேதாந்தாநுசார மாக இம் மகாவாக்கிய விசாரஞ் செய்வதால் உண்டாகும் பலம் யா தெனின்?

விடை:- துக்க மய மாகிய தேகாதிகளினின்றும் விடுபட்டு, நித்தியாநந்த மய மாகிய, முத்தியை யடைதற் குரிய அபரோக்ஷ ஞாந மென அறிக. (107)

108. வி௵:- ஜீவன், தேகாதிகளி லுள்ள அகம் புத்தியாதிகள் நீங்குதற்குத், துவம் பத விசார மாத்

திரஞ் செய்ய வேண்டுமே யன்றித், தற் பத விசார மேன் செய்யவேண்டு மெனின்?

விடை:- துவம் பத விசாரத்தாற் ஜீவன், தேகாதிகளிலுள்ள அகம் புத்தீ நீங்கித், தான் பரமாத்மா வாகச் சேடிக்கினும், ஜகத்துச் சத்தியம், ஈசுர னொருவ னுள னென்னும் புத்தி நீங்காமல், அடங்கி நிற்றலால், ஜீவன் பாகியப்படும் போது, பிரகிருதியும், சகத்திற் பிரியாப்பிரியங்களை யுதிப் பித்து, நல்வினை தீவினைகளிற் பிரவிர்த்திப்பிக்கும். ஈசுரனும், அவ் வினைகட்குத் தக்க தாகப் பின்னும் சம்சாரங் களிற் சேர்ப்பிப்பன். ஆதலின், சகத்தும், ஈசுரனும், உண் டென்னும் புத்தி நீங்கும் நிமித்தம், தற் பத விசாரமுஞ் செய்ய வேண்டு மென அறிக. (108)

109. வினா:- தற் பத விசாரம் யாது? அதனுல், சகத்துச் சத்தியம், ஈசுர னுள னென்னும் புத்தியும், சம்சாரமும், நீங்கு மென்பது யாங்ஙன மெனின்?

விடை:- விராட்டு இரணியகருப்பம் அவ்வியாகிருதம் என்னும் சரீரத் திரயங்களும், வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி யென்னும் அபிமாநித் திரயங்களும், இவைகளுக் கதிட்டாந மாகிய பிரஹ்மமும், தற் பதத்துக்கு வாச்சியார்த்தங்க ளாம். இவைகள். நாமம், ரூபம், அஸ்தி பாதிப் பிரிய மென்னும் ஐந்தம்சங்களாக வுள்ளனவாகும். இவைகளில், நாமமும், ரூபமும், தோன்றல், திரிதல், கெடுதலாகிய விகாரங்களை யுடையனவா யிருத்தலின் மித்தை யெனவும், சத்து (இருப்பு) சித்து (விளக்கம்) ஆநந்தம் (இன்பம்) என்னும் மூன் றம்சங்களும் நிர் விகாரமாயிருத்தலால், பிரஹ்மத்தின் சொரூப மெனவும், சத்திய மெனவும், பிறித் தறிவதே தற் பத விசார மாகும். இவ் விசாரத்தால், சச்சிதாநந்த மயப் பிரஹ்மமே, துவம் பத விசாரத்தாற் ரூ னகச்

சேடித் துள்ள கூடத்த ரெனவும், கூடத்தரே பிரஹ்ம மெனவும், அறிந்து சாக்ஷாத்கரிக்கில், ஜகத்துச் சத்தியம், ஈசுர னுள னென்னும் புத்தி நீங்கும். நீங்கவே, சகல சம்சாரங்களும் நீங்கும், இஃ தன்றி, தற் பத வாச்சியார்த் தங்களி லுள்ள காரியங் களை, யத னதன் காரணங்க ளாக, அபவாதித்துப் பார்ப்ப தாகிய லய சிந்தனையினாலும், சகத்துச் சத்தி யம், ஈசுர னுள னென்னும் புத்தியும் நீங்கு மென அறிக. (109)

110. வினா:– லய சிந்தனைக் கிரமம் யாது? அதனால், ஜகத்துச் சத்தியம், ஈசுர னுள னென்னும் புத்தியும், சம்சாரமும், எங்ஙனம் நீங்கு மெனின்?

விடை:- காரியங் காரணத்தை யன்றி, யோர் பொருளாக நிலைபெறு தென்னும் நியாய வாயி லாக, இரச்சுவிற்றோற்ற மாகிய சர்ப்பத்தை யப வாதித்துப் பார்க்குமிடத்துக், காரண மாகிய இரச் சுவைத் தவிர, காரிய மாகிய சர்ப்பம், ஓர் பொரு ளாக நிலைபெறாமல் இரச்சு மாத்திர மாகவே ஒடுங் கும். அப் போது, அபவாதித்துப் பார்த்த புருட னுக்கு சர்ப்பஞ் சத்திய மென்னும் புத்தியோடு அப் புத்தியா லுண்டாகிய பய கம்ப மாதிகளும் நிவிர்த்தி யாவது போல, பிரஹ்மத்திற் றோற்ற மாகிய தற் பத வாச்சியார்த்தங்களில், விராட்டு சரீர மாக வுள்ள சமட்டி தூல சரீர தத்துவங்களை, யவைகளின் காரணங்களாக அபவாதிக்கில், அவைக ளனைத்தும், தமக்குக் காரண மாகிய தூல பஞ்ச பூதங்கட்கும், அவைகளும், தமக்குக் காரணமாகிய சூட்சும பஞ்ச பூதங்கட்கும் அந்நியமாகவோர் பொருளாக நிலை பெறாமல், சூட்சும பஞ்ச பூத மாகவே ஒடுங்கும். அப் போது, விராட்டு சரீரம், இரணியகருப்ப சரீரத்துக்

கும், விராட்டனாகிய வைசுவாநரன், இரணியகருப்ப னாகிய சூத்திராத்மாவுக்கும் அந்நிய மாக இல்லை. அவ் விரணியகருப்ப சரீரத்தை, அதன் காரண மாக அபவாதிக்கில், சமடடி சூட்சும சரீரங்க ளனைத்தும், தமக்குக் காரண மாகிய சூட்சும பஞ்ச பூதங்கட்கும், அவைகளும், ஒன்றற் கொன்று காரணமா யிருத்த லின், பிருதிவி, அப்புவுக்கும், அப்பு அக்கிநிக்கும் அக்கிநி வாயுவுக்கும், வாயுவு ஆகாயத்துக்கும், ஆகாயம், விக்ஷேப சத்திக்கும், விக்ஷேப சத்தியும், ஆவரண சத்தியும், சமட்டி அவித்தை யாகிய அவ் வியா கிருத சரீரத்துக்கும், அந்நிய மாக நிலைபெறுமல் அவ்வியா கிருத சரீரமாகவே ஒடுங்கும். அப் போது இரணியகருப்ப சரீரம் அவ்வியாகிருத சரீரத்துக்கும், இரணியகருப்ப னாகிய சூத்திராத்மா, அந்தரியாமி யென்னும் ஈசுவரனுக்கும், அந்நிய மாக இல்லை, அவ்வியாகிருத சரீரத்தை, யதன் காரண மாக அபவாதிக்கில், பிரகிருதிக்கும் பிரகிருதி பிரம்மத் துக்கும், அந்நிய மாக ஓர் பொரு ளாக நிலை பெறுமல் பிரஹ்ம மாத்திர மாகவே ஒடுங்கும். அப் போது தூல சூட்சுமப் பிரபஞ்சங்கள் தமக்குக் காரண மாகிய அவித்தை மாயைகளோடு சூநிய மாய் விட்ட மையால், ஜகத்துச் சத்திய மென்னும் புத்தியும், சலப் பிரதிவிம்பாகாயம், சலம் நீங்கிய போது தனக் கதிட் டாந மான மகாகாய மாத்திர மாக ஒடுங்கியது போல, அவ்வியாகிருத சரீரி யாகிய அந்தரியாமி ஈசுவரன், அவ்வியாகிருத சரீரம் நீங்கியபோது, தனக் கதிட்டாந மா யுள்ள பிரஹ்ம மாத்திர மாகவே ஒடுங்கி விடுவன். அப்போது ஈசுர னுளனென்னும் புத்தியும் நீங்கும். நீங்கவே, துவம் பத விசாரத்தாற் கூடத்தராக விளங்கிய தான் அத்துவித பரிபூரணப் பிரஹ்ம சொரூபமாகச் சேடித்து நிற்றலின், தனக்குப் பூர்வம் சம்சாரமிருந்த தென்பதும் பொய்யாய்ப் போ மென அறிக. (110)

111. வினா:- வேதம் ஜீவேசுர ரிருவருக்கும் ஏகத்துவம் கூறுகின்றமையால், ஜீவனைப் போல, ஈசுரனும் மகா வாக்கிய விசாரஞ் செய்ய வேண்டுமே யெனின்?

விடை:- வேதம் நீ யது வாகிரு யெனப் பிரத்தியக்ஷனாகிய ஜீவனை மாத்திரம் நோக்கிக் கூறியதே யன்றிப், பரோக்ஷனாகிய ஈசுவரனை நோக்கிக் கூறிய தன்று. அற்றன்று, ஈசுவரனையும் நோக்கி அங்ஙனம் கூறியதாகு மெனின்? அது வென்னும் பதத்திற்கு ஜீவர்களும், நீ யென்னும் பதத்திற்கு ஈசுவரனும், வாச்சியார்த்த மாகும். ஆயின், ஈசுவரன் பிரத்தியக்ஷனும், ஜீவர்கள் பரோக்ஷர்களு மாவார்கள். ஆகவே, பிரத்தியக்ஷனாகிய ஈசுவரனைச் சகல ஜீவர்களும் அடைந்து, முன்னமே முத்தர்களா யிருக்க வேண்டும். அங்ஙன மில்லாமையினானும், ஈசுவரன் தனக்குப் பரோக்ஷர்களா யிருக்கின்ற ஜீவர்களின் புத்தி வாசனைகளை யறிந்து, அவைகட்குத் தக்க தாக பிரேரிப்பிக்கிற பிரேரக கர்த்தா வென்பதும், சருவஞ்ஞ னென்பதும், இல்லாமற் போகின்றமையினாலும், பிரத்தியக்ஷத் தைப் பரோக்ஷ மாகவும், பரோக்ஷத்தைப் பிரத்தியக்ஷ மாகவும், சந்நிபாத நோயினாற் புலம்பாநின்ற பிராந்தர்கள் வாக்கியம் போல, வேத வாக்கியமும், அப்பிரமாண மாம். ஆதலினானும், வேதம் அங்ஙனங் கூறிய தெனல் புத்திப் பிரமையும், அசங்கதமு மாகும். ஆதலினானும், ஈசுரன் ஜீவனைப் போலப் பந்த சகித னாக இராமல், பந்த ரகித னாக இருத்தலி னானும், அவன் மகா வாக்கிய விசாரஞ் செய்ய வேண்டுவ தின்றென அறிக. *(111)*

112. வினா:- வியட்டி சரீரங்களை யுடைய ஜீவன், பந்த சகித னாக இருப்பது போல, சமட்டி காரண சரீரங்க ளாகிய அவ்வியாகிருதம், சமட்டி காரிய

சரீரங்க ளாகிய இரணியகருப்பம், விராட் டாகிய சரீரங்களை யுடைய ஈசுரனும், பந்த சகித ணுகவே யிருக்க வேண்டும். ஆதலால், ஈசுரன் துவம் பத விசாரஞ் செய்யாவிடினும், தற் பத விசாரமேனுஞ் செய்யவேண்டு மெனின்?

விடை:— ஈசுவரன் சமட்டி யாகிய மூன்று சரீரங்களையுடையவ ஞகை இருக்கினும், அவைகளில், அபிமாந மின்மையனைமையால், பந்த சகித னன்று. ஆதலின், அவன் தற் பத விசாரமும், செய்ய வேண்டுவதின் றெ அறிக. (112)

113. வினு:- ஈசுரன் தன் அவ்வியாகிருத மாகிய சமட்டி காரண சரீரங்களில், அபிமாந மின்மைய னென்றது யாதினு லெனின்?

விடை:— ஈசுரன் காரண சரீர மாத்திர மாக இருக்குங் காலம், மகா சுழுத்தி யாகிய மகாப் பிரளய மாகும். அக்காலத்தில், அபிமாநஞ் செய்வ தாகிய அ க ங் க ா ர ம் காரணத்தில் லய மாய் விட்டமையி னென அறிக. (113)

114. வினு:— அற்றேல், அகங்கார முள்ள தாகிய இரணியகருப்ப சரீரத்தில், ஈசுரன் அ பி ம ா ந மின்மைய னென்றது யாதினு லெனின்?

விடை:- இரணியகருப்ப சரீரத்தை ஈசுரன் பொருந்தியிருக்கிற காலம், மகா சொப்பநாவத்தை யாகும். அச் சொப்பநாவத்தையில், அபிமாநஞ் செய்வதாகிய அகங்கார மிருக்கினும், அபிமாநத்துக் காசிரய மாகிய தூல சரீரப் பிரவேச மின்றியவ ஞக இருத்தலி னென அறிக. (114)

115. வினு:- அற்றேல், ஈசுரன் சமட்டி தூல தேக மாகிய விராட்டு சரீரத்தில், அபிமாந மின்மைய னென்றது யாதினு லெனின்?

விடை:- விராட்டு சரீரத்துக்கு அந்நியமாக ஒரு சரீரம் இருக்குமாயின், அதுபற்றி ஈசுரன் விராட்டு சரீரத்தில் அபிமாநமுள்ளவன் ஆவன். எண்பத்து நான்கு லக்ஷ பேதமாயுள்ள சகல தூல சரீரங்களும், தூல பஞ்ச பூதங்களும் சேர்ந்துள்ளது விராட்டு சரீரமானமையினுலும், ஈசுரன் தன் அட்டமங்கல சொருபத்திற்கு அந்நியமாக, நானெனத் தோன்றற்கு ஒருவரேனும் இல்லாமையினுலும், விராட்டு சரீரத்திலும் அபிமாநம் இன்மையன் என்ற தென அறிக. (115)

116. வினு:- ஈசுரனுனவன் பிரம விஷ்ணு உருத்திர இராம கிருஷ்ண மத்ஸ்ய கூர்மம் ஆதிய வியட்டி சரீரியாய் இருந்து, சிருட்டி திதி சம்மாராதியவை களைச் செய்கிறதாகக் கூறுகின்ற புராண இதிகாசங் களை ஆராயுமிடத்து, சரீர அபிமாநமின்றிக் கிருத்தியங்கள் நிகழுதற்குக் காரணமில்லை என்பது பெறப்படுகின்றமையால், வியட்டி சரீரியாய் இருந்து சிருட்டியாதிகள் செய்யும் ஈசுரனுக்குச் சரீர அபிமாநமும் அதனுல் பந்தமும் உள்ளதேயாகும். ஆதலால், பந்த நிவிர்த்திக்காக ஈசுரன் மகா வாக்கிய விசாரம் செய்யத்தான் வேண்டும் எனின்?

விடை:- ஈசுரன் அடைந்துள்ள பிரம விஷ்ணு வாதிய வியட்டி ரூபங்களில் அபிமாநங்கள் இருக்கிறதாகக் காணப்படினும், அது ஜீவாபிமாநம் போல பந்தம் தருவது அன்ரும். யாதினு லெனின்? ஜீவர்களுக்குச் சரீரத்தில் அபிமாநம் வாஸ்தவமாக இருக்கிறது. ஈசுரனுக்கு உலக ரக்ஷகார்த்தமாகக் கிருபையினுல், அவசியம் நேர்ந்த போது கூத்தாடி

வேடத்தில் அபிமாநத்தைக் கற்பித்துக் கொள்வது போல, கற்பித்துக் கொள்ளப் படுகிறதே யன்றி வாஸ்தவத்தில் இல்லாமையினுலும், ஈசுரன் பிரஹ்மத்தைத் தான் என அறிந்துள்ளவன் ஆனமையினுலும் மகாவாக்கிய விசாரம் செய்ய வேண்டியதில்லை என அறிக. (116)

**117.** விஞ:- ஈசுரன் தற்பத விசாரம் பண்ணுமல், எங்ஙனம் மாயா மயக்கம் நீங்கிப் பிரஹ்மத்தைத் தானுக அறிந்தான் எனின்?

விடை:- ஈசுரன் இயற்கை ஞாநபரன் ஆனமையால், அவனுக்கு மாயை மயக்கத்தைச் செய்கிறதில்லை. ஆதலால், பிரஹ்மத்தை விசாரம் செய்யாமலே அறிந்தவன் ஆவன் என அறிக. (117)

**118.** விஞ:- மதுபாநம் பண்ணியவனுக்கு, மது மயக்கத்தைச் செய்யாது என்பது போல, மாயையோடு கூடியிருக்கின்ற ஈசுரனுக்கு, மாயை மயக்கமாகிய மறைப்பைச் செய்யாதென்பது பொருந்தாது எனின்?

விடை:- தருப்பணப் * பித்திகையால் ஆகிய கிரகத்திற்குள் இருக்கின்ற புருடனுக்கும், அக்கிரகத்துக்கு வெளியில் இருக்கின்ற விஷயங்கட்கும், மத்தியில் தருப்பணப் பித்திகையிருக்கினும், அது களங்கரகிதம் ஆனமையால், விஷயங்களைப் புருடன் அறிதற்குத் தடை செய்யாதது போல, மாயையோடு கூடி இருக்கின்ற ஈசுரனுக்கு மாயை நின்மல உபாதி ஆனமையால் பிரஹ்மத்தை அறிதற்குத் தடை செய்யாது என்பது பொருந்தும் என அறிக. (118)

* பித்திகை — சுவர்.

119. வினா:- தருப்பணப் பித்திகையானது விஷயங்களை அறிதற்குத் தடையின்றியதாக இருக்கினும், அடைந்து அநுபவித்தற்குத் தடையாகவே இருப்பது போல, மாயையும் பிரஹ்மத்தை அறிதற்குத் தடையின்றியதாய் இருக்கினும் அடைந்து அநுபவித்தற்குத் தடையாகவே உள்ளதாகும். ஆதலின், அதன் நிவர்த்திக்கு, ஈசுரன் தற்பத விசாரம் செய்ய வேண்டும் எனின்?

விடை:- அநுபவம் அறிவிற்கேயன்றிச் சடமாகிய சரீரங்கட்கில்லாமையினாலும், புருடனிடத்திராமல் அந்நியமாக மற்றோரிடத்திருக்கின்ற கண்டப் பொருளாகிய கடம்போல் இன்றி, புருடனிடத்திலும் மற்றெல்லா இடங்களிலும் வியாபகமாக இருக்கின்ற ஆகாயம் போல, பிரஹ்மம் ஈசுர சொரூபத்திலும் மற்றெல்லாவற்றிலும் வியாபகமாக நிறைந்து நிற்கின்ற பூரணப் பொருள் ஆனமையினாலும் ஈசுரன் எப்போதும் பிரஹ்மாநுபவியாகவே இருப்பவன் ஆகும். ஆதலின் அவன் தற்பத விசாரம் செய்ய வேண்டுவதின்று என அறிக. (119)

120. வினா:- மகாவாக்கியங்களை ஜநகாதியர்க்குப் பூர்வம் உபதேசித்தருளிய ஈசுரன், அவ்வாக்கியார்த்தங்களை விசாரித்து அறியாமல் எங்ஙனம் உபதேசித்தனர் எனின்?

விடை:- பிணிகளை அடையாதவர்களும், ஔடதங்களைப் புசியாதவர்களுமாகிய அகத்தியர் தந்வந்திரி அச்சுவிநி தேவர்களும், இகலோக பண்டிதர்களும், பிணியாளர்களின் பிணி நிதாநங்களை அறிந்து, அதனை நிவிர்த்திப்பதாகிய ஔடதங்களை வெளிப்படக் கூறியது போலப் பந்தமுறாதவரும் பந்த நிவிர்த்திக்காக விசாரம் செய்யாதவருமாகிய ஈசுரன், பந்தத் திசையில் இருந்த ஜநகாதியர்கள் முத்தி

யடையும் நிமித்தம், மகாவாக்கியங்களை உபதேசித்தவராவார்; இங்ஙனமே, வியாதிகளையும், ஔடதங்களையும் கூறுவதாகிய ஆயுள் வேதத்தையும் வெளிப்படுத்தியவராவார்; என அறிக. (120)

121. வினு:- காசி நகர்க்குச் செல்லாதவன் மற்ருெருவனுக்குக் காசி நகர்க்கு மார்க்கம் கூறுதல் பயன்படாதது போல, மகாவாக்கிய விசாரம் செய்யாத ஈசுரன் ஜீவர்கட்கு மகாவாக்கிய விசாரங் கூறுதல் பயன்படாதெனின்?

விடை:-அஞ்சந மைக்காரன் புதையல் இருக்கும் இடத்தைச் சென்று அறியாதவனுய் இருக்கினும், அவன் பிறர்க்குப் பூமியில் மறைபட்டிருக்கின்ற நிக்ஷேபத்தை அடைந்தெடுக்கும் மார்க்கம் கூறுதல் பயன்படுவது போல, ஈசுரன் மகாவாக்கிய விசாரம் செய்யாதவனுக இருக்கினும், சர்வஞ்ஞனமையால், அவன் ஜீவர்கட்கு மகாவாக்கிய விசாரம் கூறுவது பயன்படும் என அறிக. (121)

122. வினு:- ஜீவனுடைய அந்தக்கரண விருத்திரூப ஞாநத்துக்கு, ஆவரணபங்கம் விஷயப் பிரகாசங்கள் பிரயோசநங்களாக இருப்பன போல, ஈசுரனுடைய மாயா விருத்திரூப ஞாநத்துக்கும் உளவோ எனின்?

விடை:- ஈசுரனுடைய எதார்த்த சொரூபம் ஆவரண ரகிதமாயும் சுயம் பிரகாசமாயும் இருத்தலால், ஆவரண பங்கம் விஷயப் பிரகாசங்களாகிய பிரயோசநங்கள் இல்லை என அறிக. (122)

123. வினு:- அற்றேல், ஈசுரனுக்குள்ள ஞாநம், பிரயோசநங்கள் அன்றியில் எங்ஙனம் உண்டாகிறது எனின்?

விடை:- ஜீவன் முத்தனுக்கு ஆவரண ரகித மாயுள்ள ஆத்மாவை விஷயமாக்குகிற 'அகம் பிரஹ்மம்' என்கிற அந்தக் கரண விருத்திரூப ஞாநம், ஆவரண பங்கமாதிய பிரயோசநம் அன்றியில் உண்டாகிறது போல, ஈசுரனுக்கு 'அகம் பிரஹ்மம்' என்கிற மாயா விருத்திரூப ஞாநம் ஆவரண பங்க மாதிப் பிரயோசநங்கள் அன்றியில் உண்டாகிறது என அறிக. (விசாரசாகரம் 4 ஆம் தரங்கம் 207 ஆம் பிரசங்கம்; 5 ஆம் தரங்கம் 240 ஆம் பிரசங்கம்)
(123)

124. வினு:- மாந்திரீகன், பிறர்க்குச் செபிப்பவர் களைக் கெடுத்து விடுவதாகிய ஓர் மந்திரத்தையும், எவர்கள் செபிக்கினும் மாந்திரீகனுகிய தன்னைக் கெடுத்து விடுவதாகிய ஓர் மந்திரத்தையும் உபதேசித்தது போல, ஈசுரன் ஜீவர்களுக்கு விசாரம் செய்பவர்களைக் கெடுத்து விடுவதாகிய துவம்பத விசாரத்தையும், எவர்கள் விசாரம் செய்யினும், ஈசுரனுகிய தன்னைக் கெடுத்து விடுவதாகிய தற்பத விசாரத்தையும் சுருதியாதிகளில் வெளிப்படக் கூறியது ஜீவர்கட்கும் தனக்கும் பாதகமல்லவோ எனின்?

விடை:- தேவத்துவத்தை அடைய வேண்டும் என்னும் இச்சையுடையார்க்கு, கிரிபதநம், கங்காப் பிரவேசம், அக்கிநிப் பிரவேசங்களைக் கூறும் சுருதி வாக்கியம் பாதகம் ஆகாதது போல, அதிட்டாநம் ஆரோபம் இரண்டும் சொரூபமாயுள்ள ஜீவர்களில், மெய்யாகிய அதிட்டாந சொரூபத்தை அடைய இச்சித்தவர்கட்கு, அதனை மறைத்திருக்கின்ற பொய்யாகிய ஆரோப ஜீவத்துவாதிகளைப் பாதிப்ப தாகிய துவம்பத விசாரத்தையும், மாறு வேடத்தனாய் நகரி சோதனை செய்யும் அரசனை, அரசன் என்று அறியாமல் சோரன் என மயங்கிக் கலக்க முறுகின்ற

நகரவாசிகட்கு அரசனுனவன் தன் மெய்வடிவத்தை அறிந்து கலக்கம் நீங்கும்படி, தன்னை மறைத்திருக்கும் பொய் வடிவமாகிய மாறுவேடத்தை நீக்கிப் பார்க்கும் உபாயத்தைத் தெரிவித்தது போல, அதிட்டாநம் ஆரோபம் இரண்டுமே சொரூபமாயுள்ள ஈசுரன், தன் அதிட்டான சொரூபத்தை அறியாமல் ஆரோப சொரூபத்தைச் சத்தியம் எனவும் அந்நியமெனவும் மயங்கிக் கலக்க முறுகின்ற ஜீவர்கள் அதிட்டாந மாகிய தன் நிச சொரூபத்தை அறிந்து கலக்கம் நீங்கும்படி, அதனை மறைத்திருக்கும் ஆரோப சொரூபமாகிய மாயா வடிவங்களை பாதிப்பதாகிய தற்பத விசாரத்தையும் சுருதியாதிகளில் வெளிப்படக் கூறியது ஜீவர்கட்கும் தனக்கும் பாதகம் ஆகாது என அறிக. (124)

(பதம்) அகங்காரக் கிரந்தி அற்றபடியினுலே இந்த (28)ன் தொழில்களையும் நான் செய்யவில்லை என்றும், இந்த (28)ம் புசிக்கின்றதை. நான் புசிக்க வில்லை என்றும், திடப்படத்தேறி, மயக்க மற்றிருக் கின்றமையால், இந்த இருபத்தெட்டினுலும், ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டு, கன்மசம்பந்தமில்லாமையால், சநந மரணுதி சம்சாரம் இல்லாமல், முத்தனுகிப் பிரஹ்ம மாத்திரமாகவே யிருப்பன்.

(பொருள்) வெளி.

125. வினு:- இப்படிப் பிரஹ்ம மாத்திரமாகவே நிலைபெறுவதாகிய முத்தி மார்க்கம் ஒன்ருே இரண்டோ எனின்?

விடை:— வாமதேவ மார்க்கம் எனவும், சுகர் மார்க்கம் எனவும் இரண்டுண்டு. இவ்விரண்டில், வாமதேவரால் அடையப்பட்ட கிரம முத்திமார்க்கம்

வாமதேவ மார்க்கம். சுகரால் அடையப்பட்ட சத்தியோ முத்தி மார்க்கம் சுகர் மார்க்கம் என அறிக. (125)

126. வினா:- கிரம முத்திமார்க்கமாகிய வாமதேவ மார்க்கம் யாது? சத்தியோ முத்தி மார்க்கமாகிய சுகர் மார்க்கம் யாது? இம்மார்க்கங்கள் உள்ளன என எங்கே சொல்லியிருக்கிறது எனின்?

விடை:- குறித்த இடத்திற்குக் கிரமம் கிரமமாக ஊர்ந்து செல்லுவதாகிய பிபீலிகா (எறும்பு) மார்க்கம்போல, இவ்வுலகத்தில் இந்தத் தேகத்தில் இருந்து அக்கிநியாதிய தேவதைகளை அந்தந்தத் தேவதைகளாக உபாசியாமல் பிரஹ்மமாகவே உபாசித்து உபாசிய தேவதையாகிய அவ்வுலகத்தை அடைந்து, இந்தப் பிரகாரம் கிரமம் கிரமமாக மேலும் மேலும் உயர்வாகிய தேவதைகளை உபாசித்து, அந்தந்தத் தேவதைகளாகிய அந்தந்த லோகங்களை அடைந்து, முடிவில் சர்வ தேவதா சொரூபியாயும், பிரபஞ்சத்துக்கு ஆதியாயும், சத்திய லோக வாசியாயும் இருக்கின்ற இரணிய கருப்பருடைய லோகத்தை அடைந்து, இரணியகருப்பர் பிரஹ்மத்தில் ஐக்கியமாகும் போது, கூடவே பிரஹ்மத்தில் ஐக்கியமாகிறது, கிரம முத்தி மார்க்க மாகிய வாமதேவ மார்க்கமாம். இந்த இடத்தை விட்டுப் பறந்து சென்று குறித்த இடத்தையே அடைவதாகிய பட்சி மார்க்கம் போல, தன்னால் உபாசிக்கப் பட்ட தேவதா சொரூபம் எதுவோ, அதற்குள்ள மாயா உபாதியையும், தனக்குள்ள அவித்தியா உபாதியையும் நீக்கித் தானே அது, அதுவேதான் ஆகிய பிரஹ்மம் என உபாசித்துச் சீவன் முத்த னாகி, இந்தப் பிராரப்த தேகம் நீங்கின வுடனே, விதேக முத்தியாகிய பிரஹ்ம கைவல்யத்தை அடைகிறது, சத்தியோ முத்தி மார்க்கமாகிய சுகர்

மார்க்கமாம். இம்மார்க்கங்கள் உண்டென வராகோபநிஷத்து 4ஆவது அத்தியாயத்திலும், மைத்திராயண்ணியோபநிஷத்து 4ஆவது பிரபாடகத்திலும், 6ஆவது பிரபாடகத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது என அறிக. (126)

5 தத்துவ விவேசந நிருபகம் முற்றிற்று.

சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.

---

உ

சிவமயம்

ஓம் பரப் பிரஹ்மணே நம:

சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க

நாநாசீவ வாதக் கட்டளை வியாக்கியாநம்.

## 6. சீவன் முத்தி நிருபகம்.

*அவதாரிகை*

சீவன்முத்தனுடைய பெருமை வாசகங்கள், வாசிட்டம் முதலிய சாத்திரங்களில் கூறியுள்ளவை-களை எடுத்துக் கூறுதல் வாயிலாக, யாவரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோக்ஷம் அடைய உரியவர், என்பதை நிரூபிக்கின்றார்.

(நூல் பிரிவு-47)

இவனைச் சீவன் முத்தன் என்றும், திடப்பிரஞ்ஞன் என்றும், பகவற் பக்தன் என்றும், குணாதீதன் என்றும், பிராமணன் என்றும், அதிவருணாச்சிரமி என்றும், வாசிட்டம் முதலிய சாத்திரங்கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோக்ஷம் அடையக் கடவர்.

நாநாசீவ வாதக்கட்டளை மூலம் முற்றிற்று.

(பதம்) இவனை—

(பொருள்) பிரஹ்ம மாத்திரமாக இருக்கின்ற இப் பிரஹ்ம ஞாநியை,

(பதம்) சீவன் முத்தன் என்றும்—

(பொருள்) சீவன் முத்தியை உடையவன் எனவும்,

1. வினா:- சீவன் முத்தன் இலக்கணம் எங்கே சொல்லப் பட்டிருக்கிற தெனின்?

விடை:- வராகோபநிஷத்து (4) ஆவது அத்தியாயத்தில் (10) விதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது என அறிக. (1)

2. வினா:- ஜீவன் முத்தர்களை (10) விதமாக எங்ஙனம் சொல்லப் பட்டிருக்கிறதெனின்?

விடை:- 1) பிரபஞ்ச வியாபாரம் உள்ளவன் ஆனாலும், இந்தப் பிரபஞ்சம் காணப்படாத ஆகாயம் போல, எவனுக்குக் காணப் படுகிறதோ, அவன் சீவன் முத்தன். 2) சுகதுக்கங்களிலே எவனுடைய மநப்பிரகாசமானது உதயத்தையும் (சுகத்தில் பொங்குதலையும்), அஸ்தமநத்தையும் (துக்கத்தில் மயங்கு தலையும்), அடைகிறதில்லையோ; அடையப் பட்டதை (சுகதுக்கங்களில் எது தனக்கு நேரிட்டதோ அதை). அதிக்கிரமிக்காமல் இருக்கும் இருப்பையுடையதோ (நேரிட்ட ஸ்திதியிலேயே விட்டு விடுகிறதே யன்றிச் சுகத்தை விருத்தி செய்யவாவது துக்கத்தைப் போக்கவாவது முயற்சி செய்யாமலிருக்கும் இருப்பை உடையதோ), அவன் சீவன் முத்தன். 3) சுழுத்தியில் இருக்கிற எவன் விழித்துக் கொண்டவனாக இருக்கிறானோ, எவனுக்கு, விழித்துக் கொண்டிருப்பதில்லையோ, எவனுடைய ஞானமானது, விஷய வாசனை அற்றதாக இருக்கிறதோ அவன் சீவன் முத்தன் 4) ஆசை, துவேஷம். பயம் முதலியவைகட்கு அநுகுணமாக நடந்தாலும் எவனுடைய உள்ளம், ஆகாயத்தைப் போலச் சுத்தமாயிருக்கிறதோ, அவன். சீவன் முத்தன். 5) ஒரு காரியத்தைச் செய்தாலும், செய்யாவிட்டாலும், எவனுக்குத், தான் கருத்தா வென்கிற எண்ணமில்லையோ, எவனுடைய புத்தி, விஷயங்களிற்

பற்றுகிற தில்லையோ அவன் சீவன் முத்தன் 6) எவனிடத்தி லிருந்து சநங்கள் பயமடைகிற தில்லையோ, சநங்களிடத்திலிருந்து, எவன் பயமடைகிற தில்லையோ, சந்தோஷம், கோபம், பயம் இவைகளை விட்டிருக்கிறவ னெவனோ. அவன்சீவன் முத்தன். 7) சகலமான விஷயங்களிலும் விவகரித்துக் கொண்டிருந்தாலும், பிற ருடையவைகளிற் போலப் (பிறர் வஸ்துக்களிற் றனக்குப் பற்றில்லாதது போற்) பற்றின்றி, சீதள னயும் (சாந்தனயும்), பூரண மான ஆத்மா வாயும் (ஒரு விதக்குறைவு மில்லாதவ னயும்), இருக்கிறவ னெவனோ, அவன் சீவன் முத்தன். 8) ஓ முநியே! எப்போது சித்தத்தி லுள்ள சகல கர்மங்களையும் தள்ளிவிட்டுச் சகலத்துக்கும் ஆத்மாவாயிருக்கப்பட்ட என்னிடத்தில், எவன் திருப்தி யுள்ளவனக இருக்கிறனே, அப்போ தவன் சீவன் முத்தன், 9) சித்தத்தி னுடைய சகல வியாபாரமு மற்ற சிந் மாத்திரமே யாகிய பரம பாவந மான (மகா சுத்த மான), பதத்தில் (ஸ்தாநத்தி ), எவன் கலங்காத மந துடையவ னக இளைப்பா றுகிறனே, அவன் சீவன் முத்தன். 10) எவ னுடைய சித்தத்தில், இது ஜகத்து, நான், அவன், இவன், வாஸ்தவ மல்லாத தாய்க் காணப்படுகிற வஸ்துக்கள், என்கிற பேதம் உதய மாகிற தில்லையோ, அவன் சீவன் முத்த னெனப் பத்து வித மாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதையே, வசிஷ்டர் இராகவருக்கு விஸ்தார மாக வுப தேசித்திருக்கிறார். இதனையே, வாசிட்டத்தினின் று மெடுத்து வித்தியாரண்ணியர் உலோகோபகார நிமித்தம் தம்மாற் செய் தருளிய சீவன் முத்தி விவேக மென்னுங் கிரந்தத்தில் விரி வாகச் சொல்லியிருக்கிற ரென அறிக. (2)

3. வின:— இவ் வுபநிடதத்துக்கு, வராகோபநிடத மெனப் பெயர் வந்தது யாதின லெனின்?

விடை:— ரிபு முநிவருக்கு, விஷ்ணு, வராக ரூபியாக இருந்து உபதேசிக்கப்பட்ட தானமையி னென அறிக. (3)

4. வினா:— சீவன் முத்தர்கள் பல பிரிவினர்க ளானால், இவர்கள், மே லடையத் தக்க முத்தி, சம முத்தியோ? விஷம முத்தியோ? வெனின்?

விடை:- மார்க்க பேதத்தால் நே ராகவும், கோணலாகவும் செல்லுதலை யுடைய நதிப் பிரவாகங்கள், சாகரத்தை யடைந்து, சம மாகச் சாகரமே யாவது போல, பிராரப்த வலியால் சீவன் முத்தர்கள் பல ஒழுக்கங்களை யுடையவர்க ளாக இருக்கினும், அகம் பிரஹ்ம மென்னுஞ் சம்ஸ்காரங்கள் சம மாக வுள்ளவர்க ளானமையால், விதேக முத்தியில், அதீதப் பிரஹ்மமே யாகின்றனர்கள். ஆதலின், சம முத்தியே யென அறிக. (4)

5. வினா - சீவன் முத்தர்க ளடையு முத்தி சம மாக இருக்கினும், ஒழுக்க பேதங்க ளுடையராதல் பற்றி, யவர்களுக்கு, நாம பேதங்க ளுளவோ வெனின்?

விடை:—† யோகியர் * சாங்கிய ரென வுபய நாம பேதங்களை யுடைய ராவர். இவர்களே, பிரஹ்ம வித்து, பிரஹ்ம வித்து வரன், பிரஹ்ம வித்து வரியான், பிரஹ்ம வித்து வரிட்ட னென்னும் நாம பேதங்களையு முடைய ராவ ரென அறிக. (5)

6. வினா:- இவர்களில், யோகியர்கள் யாவர்களெனின்?

விடை:- தத்துவ ஞாநத்தால் நாம ரூபப் பிரபஞ்சங்களனைத்தும், சித்த விருத்தி லய மானமையால், உள்ளி

† யோகியர் = சித்தவிருத்திலயமான பிரஹ்ம ஞான யோகியர்.

* சாங்கியர் = சாங்கியம் என்பது இங்கு விசாரமாம். ஆகவே சாங்கியர் எனப்படுவோர். மகாவாக்கிய விசாரந்தால் பிரஹ்ம ஞானமுற்றவர்.

னும், புறப்பினும், தோற்றர வின்றிச் சுழுத்தியிற் சாக்கிர சொப்பநங்க ளடங்குவன போற், றன்னி லடங்கிச் சொப் பிரகாச மான சிதாகாச மாகப் பிரகாசிப்பவர்க ளென அறிக. (6)

7. விஞ:- சாங்கியர்கள் யாவர்க ளெனின்?

விடை:- தத்துவ ஞாநத்தால், புட்ப சந்தந வநிதை வெகுமாநாதிகளாற் சுகம் வரினும், தந தாநிய மனைவி புத்திர நாச அவமாநாதிகளாற் றுக்கம் வரினும், நமக்குச் சுகம் வந்த தெனச் சந்தோஷித்து, அதனை விருத்தி செய்யவாவது, துக்கம் வந்த தெனக் கிலேசித்து, அதனை நிவிர்த்தி செய்ய வாவது, முயற்சி செய்யாமல், அதது நேரிட்ட ஸ்திதியிலேயே விட்டுவிடுபவர்க ளென அறிக. (7)

8. விஞ:- இவர்களில், பிரஹ்ம வித்துக்கள் யாவர்க ளெனின்?

விடை:- பிரஹ்ம சாக்ஷாத்கார ஞாந மடைந்த வர்களாயும்; ஞாநப் பேற்றிற்குப் பூர்வ மிருந்த, தங்கள் வருணச்சிரமங்கட் கேற்கக் கன்மாதிகளை உலோகோபகார நிமித்தம், மந்திர லோபம், கிரியா லோபம், திரவிய லோபமின்றிச் செய்பவர்க ளாயும்; பிராரப்த கன்ம பேதங்கட்குத் தக்க தாகத், தவம், வாணிபம், இர்ராசாங்கம், யுத்தம், ஐய மேற் றுண்ணு லாகிய வியவகாரங்களைப் பற்றின்றி, மிகுதி, அல்லது, குறை வாகச் செய்பவர்க ளாயும்; பிர விர்த்தி, நிவர்த்திகளில், நியம மில்லாதவர்க ளாயும்; போகா நுபவ காலத்தில், போக வஸ்துக்களைச் சொப்பன வஸ்துக்கள் போல, மித்தை யாகப் பார்ப்பவர்க ளாயும்; விருத்தி, சொரூபாகார மாகும் போது, க்ஷணே க்ஷணே நிருவிகற்ப சமாதியை யுடையவர்க ளாயும்; ஞாந பூமிகளில், மூன்று பூமிகட்கு மேற்பட்ட நான் காம் பூமியையுடையவர்க ளாயு மிருப்பவர்க ளென அறிக. (8)

9. வி:- பிரஹ்ம வித்துவரர்கள், யாவர்களெனின்?

விடை:- பிரஹ்ம ஞாநாநந்தரம் தேக, லோக, சாஸ்திர வாசனைகளைச் சிந் மாத்திர வாசநாப்பியாச பலத்தாற் கெடுத்துச், சீவன் முத்திச் சுகத்தை யநுபவிப்பவர்களாயும்; சுழுத்தியிற் போல, சாக்கிரப் பிரபஞ்சத் தோற்றமில்லாதவர்களாயும்; சுழுத்தியிற் சகல விருத்திகளும் நித்திரா சத்தியிலடங்கி யிருப்பன போல, சாக்கிரத்தில், சகல விருத்திகளும், ஆத்ம சொரூப மாகிய தன்னில் நிருவிகற்பமாய்ச் சாந்தப்பட்டிருப்பன வாக வுள்ளவர்களாயும்; சாக்கிரத்தி லிந்திரியங்களிருக்கினும், அவைகளால், விஷயக் கிரகணஞ் செய்யாத சுழுத்தி யவஸ்தர்களாயும்; ஓரோர் காலத்தில் உபதேச நிமித்தம், அல்லது, தேக தாரணத்துக் கின்றியமையாத பிக்ஷை யாதிகளேற்றற் கான சஞ்சார நிமித்தம், தானாக வெளிப் படுபவர்களாயும்; ஞாந பூமியில், ஐந் தாம் பூமியை யுடையவர்களாயுமிருப்பவர்களென அறிக. (9)

10. வி:- பிரஹ்ம வித்து வரியார்கள், யாவர்களெனின்?

விடை:- வாசநா க்ஷய மநோ நாச சம்பன்னர்களாயும்; சாக்கிரப் பிரபஞ்சத்தைக் காட சுழுத்திக்குச் சமமாக வுடையவர்களாயும்; காட சுழுத்தியன், தானே வெளிப்படாமல், அந்நியர் பிரயத்தநத்தால் வெளிப்படுவது போல, சதா பிரஹ்மத்தி லுபசாந்தமாகிய நிருவிகற்ப சமாதியர்களாய், தாங்களே வெளிப்படாமல், சீடராதிய அந்நியர் பிரயத்தநத்தால் ஓரோர் காலத்து வெளிப்படுவர்களாயும்; ஞாந பூமியில் ஆரும் பூமியை யுடையவர்களாயுமிருப்பவர்களென அறிக. (10)

11. வி:- பிரஹ்ம வித்து வரிட்டர்கள், யாவர்களெனின்?

விடை. - பிரஹ்மாத்மைக்கிய, ஞாநாநந்தரம் மநதும், வாசனையும், அத்தியந்தம் நாச மாயினவர்க ளாயும்; அகண்டைக ரசப் பிரஹ்மத்திற் கலந்து, தொய்தப் பிரதீதி யின்றிப், பிரஹ்ம மாகவே சேடித் திருப்ப தாகிய நிருவிகற்ப சமாதியர்க ளாயும்; தங்களாலும், அந்நியர் பிரயத்தநங்களாலும், ஓர் காலத்தினும் வெளிப்படாதவர்க ளாயும்; சலத்தாற் பூரிக்கப்பட்டு சலத்துள் வைக்கப்பட்ட பூரண கும் பத்துக்கு, உள்ளினும் வெளியினும் சலமே வியாபித் திருப்பது போல, பிரஹ்மத்தால் உள்ளினும் வெளி யினும், வியாபிக்கப்பட்டுப் பிரஹ்ம மாகவே யிருப்பவர்க ளாயும்; ஞாந பூமிகளில், மே லான ஏழாம் பூமியை யுடையவர்க ளாயு மிருப்பவர்க ளென அறிக. (11)

12. வினா:- ஞாந பூமிக ளெவை யெனின்?

விடை:- சுபேச்சை, விசாரணை, தநுமாநசி, சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தா பாவனை, துரிய மாகிய ஏழு மென அறிக. (12)

13. வினா:- சுபேச்சை யென்னும் முதற் பூமி யா தெனின்?

விடை:- பூமி யென்பது, சித்தத்தின் அவஸ்தா விசேடங்களின் நாமம், சுப மென்பது, பிரஹ்ம ஞாந பல மாகிய மோக்ஷம். இச்சை என்பது விருப்பம், அதாவது, சர்வ கன்ம ரகித விவேக, வைராக, சமாதி சட்க சம் த்திக ளாகிய மூன்று சாதநங்களின் பலத்தால், அதிகாரிகள், நாம் சித்தத்தில், துர்ச் சங்கத்தைக் கூடி, யளவில் காலம் மூடமா யிருந்து விட்டோம். இனித் தாமதிக்காமல், எவ்விதத்தேனும் துர்ச்சங்கத்தைத் துறந்து, சற் குருவையடைந்து, அவராலும், சற் சாஸ்திரங்களாலும், பிரஹ்ம ஞாந பலமாகிய மோக்ஷத்தை யடையக் கடவே மெனத் தீவிர மாக வுதய மாகின்ற இச்சை யென அறிக.

பிரமாணம்

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 46 ஆம் கவி)

"நவையுறுமோ கத்தொடுநா மடைவதென்னே நல்லோரரா னன்னூலா னன்று ஞாநச், சுவை பெறுதும் நிராசையினு லென்று நாடல் சுபம் விரும்பு லாகுமிந்தச் சுபேச்சை முற்றி."

(வேதாந்த சூடாமணி 143 ஆம் கவி)

"தோற்றிடுநான் மூடனு யிருந்தகா ரணமென் சுருதி குரு வாலறிவ லெனநினைதல் சுபேச்சை."

(கைவல்லிய நவநீதம் 2ஆம் படலம் 150 ஆம் கவி)

"துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞாநம் விரும்புவது சுபேச்சை யாகும்." (13)

14. வினு.- விசாரணை யென்னு மிரண்டாம் பூமி யாதெனின்?

விடை:- சர்வ கர்ம சந்நியாச பாலந, சாதந சதுட்டய சகித மாய்க், குரு முக மாகச் சிரவணஞ் செய்து, அவ் வாக்கியார்த்தங்களைச் சத்துக்க ளாசாரப்படி, சுருதிகளுக்கு விரோத மின்றிய, தருக்க யுத்தி அநுமாநாதிகளோடு மநதிற் பதிவுறும் பொருட்டு மநநஞ் செய்குத லென அறிக.

பிரமாணம்

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 46 ஆம் கவி)

"கவையறுநல் லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும்."

(வேதாந்த சூடாமணி 143 ஆம் கவி)

"மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன்றும் வைராகத் துறுதல்சதா சாரம்விசா ரணையே."

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம்—150 ஆம் கவி)

"நற்சங்க மொழிவினவி ஞாநநூல் பழகல்விசா ரணையாம்."

15. வினா:- தநுமாநசி யென்னும் மூன்றும் பூமி யா தெனின்? (14)

விடை:- தநு வென்பது சுருங்கல். சுருங்குத லாகிய தன்மையை, மந தடைகுதல், தநுமாநசி யாம். அதாவது, சுபேச்சை விசாரணை யென்னு முபய பூமிகளின் சகாயத்தால், மநது அநேகார்த்தக் கிரகணங்களை விடுத்து, ஏகார்த்த மாகிய சத்தே அக மெனும் பிரஹ்மாகார விருத்திப் பிரவாக மாக நிரந்தரம் தியாநிப்ப தாகிய நிதித்தியாச நத்தால், மலிந வாசனைக ளொழிந்து, சவிகற்ப சமாதியையுற்று, சூட்சுமத் தன்மையை யடைகுத லாம். இத் தநுமாநசியும், சாமாநிய சம்சர்க்கம், சிரேஷ்டா சம்சர்க்க மென்றிரண்டு வித மாகு மென அக்ஷி யுபநிடதத்திற் சொல்லப்படுகிற தென அறிக. (15)

16. வினா:- அவ் விரண்டில், சாமாந்ய சம்சர்க்கத் தநு மாநசி யா தெனின்?

விடை:- நான், கர்த்தா போக்தா, சம்பாத்தியம் சம்பாதகமல்ல வென் றிங்ஙனம் சகல விஷயங்களினுஞ் சேர்க்கை யற்றிருக்கிறதும்; சுக துக்காதிகள் சகலமும் செந்மாந்தர கன்மங்க ளாக இருக்கட்டும், அல்லது, ஈசுராதீந மாக இருக்கட்டும், இதனால் தமக் கென்ன கர்த்தத்துவ மிருக்கிறது, இல்லை யென் றிருக்கிறது மென அறிக. (16)

17. வினா:- சிரேஷ்டா சம்சர்க்கத் தநுமாநசியா தெனின்?

விடை:— நானுங் கர்த்தா வல்ல, ஈசுரனுங் கர்த்தா வல்ல, எனக்குச் செந்மாந்தர கன்மங்களு மில்லை யென நன்ருய் விடுத்து, மகா வாக்கிய விசா ரத்தை யுள்ளே பண்ணிக்கொண்டு, பரிபூரண மாயும் உபசாந்த மாயு மிருக்கின்ற மே லான மௌந மென அறிக.

பிரமாணம்.

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 47 ஆம் கவி)

"இனையசுபம் விரும்பலொடு விசார மென்ற விரண்டு நிறை தலும்விடயத் திச்சை மாற்றி, நினைவு குவி வதுசித்தஞ் சிறுக லாகும்."

(வேதாந்த சூடாமணி 144 ஆம் கவி)

"மருவலுறு சுபேச்சைவிசா ரணைவலியால் விடய வலியறுத ருன்றநு மாநசி."

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம் 150 ஆம் கவி)

"முற்சங்க வேடணைகள் விடறநுமா நசி." (17)

18. வினா:- இம் மூன்று பூமிகளையு முடையார்கள் யாவர்க ளெனின்?

விடை:— பிக்ஷாந்ந போசநம், குரு பணிவிடை, சௌசமாதிய யதி தரும சகித சாதந சதுட்டய சம்பன்னர்களாய்க், குரு முக மாகச் சிரவணஞ் செய்யு மப்பியாசிக ளென அறிக. (18)

19. வினா:— சத்துவாபத்தி யாகிய நான்காம் பூமி யாதெனின்?

விடை:- மநது பரமார்த்த சத்து ரூப மாகச் சேடித்திருப்பது. சத்துவாபத்தி. அது, பூமிகாத் திரயாப்பியாச வலியால், மநது சாக்கிரப் பிரபஞ் சங்க ளனைத்தும் சொப்பநப் பிரபஞ்ச † துல்லிய மாகவும், சர்வாதிட்டாந சத்து ரூபப் பிரஹ்மமே தா னாகவும், அறிந்து சாக்ஷாத்கரித்து க்ஷணே க்ஷணே பிரஹ்மத்தில் க்ஷீரோதகம் போற், கலந்து திரி புடி ரகித மாய் நிருவிகற்ப சமாதியை யுறுவ தாகிய ஸ்திதி யென அறிக.

பிரமாணம்

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம். இதோபதேசம் 47 ஆம் கவி)

"நிகழ்த்தியவிம் மூன்றுலு நெஞ்சந் தன்னில், வனைதருமவ் விரத்தியினு லுண்மைப் போத மன்னு தலே யுண்மைநிலை மருவ லாகும்."

(வேதாந்த சூடாமணி 144 ஆம் கவி)

"விரவுநன் வாயவுல கினைக்கனவென் றெண்ணி மெய்த்தவாந் மாவுண்மை கருதல்சத்வா பத்தி."

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம் 150 ஆம் கவி)

"சற்சங்க மநதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி தானே." (19)

20. வினு:- அசம்சத்தி யாகிய ஐந்தாம் பூமி யா தெனின்?

விடை:- சம்சத்தி யென்பது, விடய சம்பந்தம்; அஃ தில்லாமை அசம்சத்தி யாம். அஃது சத்துவா பத்தி யென்னும் நா லாம் பூமியி லுதய மாகிய பிரஹ்ம சாக்ஷாத்கார வலியால். சொப்பந துல்லிய மாகக் கண்ட பிரபஞ்சங்களையும், அறிவு மாத்திர

† துல்லியம் = சமானம்.

மாகக் கண்டு சுழுத்தியன் போலப் பாஹி யாந்தர வாகாரங்களோடும், அவைகளின் சம்ஸ்காரங்க ளோடுஞ், சம்பந்த மின்றி, நித்தியாபரோக்ஷப் பிரஹ்ம மத்தில், நிருவிகற்ப மா யழுந்தியிருப்ப தென அறிக.

பிரமாணம்.

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம். இதோபதேசம் 47 ஆம் கவி)

"அனையனவிந் நான்காலு முண்மைப் போதத் தழுந்தியயற் சங்கமற லசங்க மாகும்."

(வேதாந்த சூடாமணி 144 ஆம் கவி)

"பரவலுறு முலகுதோன் ருதுசுழுத் தியன்போற் பகரறிவு மாத்திரையாய் நிற்றலசஞ் சத்தி."

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம் 151 ஆம் கவி)

"தத்துவத்தின் மறமுறைத்து மித்தையெலா மறத்தலசஞ் சத்தி யாகும்." (20)

21. வினா:- பதார்த்தாபாவனை யாகிய ஆறும் பூமி யா தெனின்?

விடை:— பாஹியாந்தர பதார்த்தங்களின் அபா வப் பிரதீதியே பதார்த்தாபாவனை யாகும். அஃது, அசம்சத்தி யென்னும் ஐந்தாம் பூமியின் வலியால், பிறரா லேவுத லன்றிக் காரியப் பிரவிருத்தி யின்றிய, காட சுழுத்தியன் போல் திட, நிருவிகற்ப சமாதியிற் பாஹியாந்தரத் திரிபுடிகள் அபாவ மாகி, யத்துவிதா நந்த மய மாக நிற்ற லென அறிக.

பிரமாணம்.

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம். இதோபதேசம் 48 ஆம் கவி)

"அறைந்தபத மைந்தாலுந் தானும் போதத் தழுந்தியவின் பத்தமைவாற் புறனு முள்ளு, முறைந்த பதார்த் தங்கண்மறைந் தயலோர் வன்பா லுணர்வ— துவே பதார்த்தநினை வொழித லாகும்."

(வேதாந்த சூடாமணி 144 ஆம் கவி)

"ஒருவிவா சனையனைத்து மிகுதுயிலோன் போல வுயிராநந் தத்தொடுங்கல் பதார்த்தாபா வனையாம்"

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம் 151 ஆம் கவி)

"அத்துவிதா னந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த் தாபா வனைய தாகும்." (21)

22. வினு:— துரிய மென்னும் ஏழாம் பூமி யா தெனின்?

விடை:— சாக்கிராதி மூன் றவத்தைக்கு மப்பாற் பட்ட நான்கா மவத்தை துரிய மாம். அது, பதார்த் தாபாவனை யென்னும் ஆரும் பூமியின் வலியால், திரி புடித் தோற்ற மான நான் காம் பூமி, ஐந் தாம் பூமி களிற் போல, † பாவ ரூபப் பிரதீதியும்; ஆரும் பூமி யிற் போல, * அபாவ ரூபப் பிரதீதியும்; தன் னு லாவது, பிறரா லாவது, பஹிர்முக மாதலு மின்றி; அதீதாநந்த மய மாகி, ஆகாயத்திலுள்ள வெறுங் குடம் போ, லுள்ளினும், வெளியினுஞ் சூநிய மாய் வஸ்து நிலை யெப்படியோ, அப்படி யிருப்ப தென அறிக.

---

†பாவம் = இருப்பு

*அபாவம் = இன்மை.

பிரமாணம்.

(வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம் இதோபதேசம் 48 ஆம் கவி)

"நிறைந்தவிவை யாருலும் பேதம் போக்கி நிலை பெறுதற் சுபாவத்தே நிற்ற ருனே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகும்.''

(வேதாந்த சூடாமணி 145 ஆம் கவி)

''உண்டிலையென் ருமலகங் கிருதிநிர கங்கிருதி யுருமலறி வுருவாய அத்துவித பதத்திற், கண்ட தொரு வறுங்குடம்போ லுட்புறஞ்சூ நியமாங் கதி துரிய காமியாம்.'' (22)

(கைவல்லிய நவநீதம் 2 ஆம் படலம் 151 ஆம் கவி)

''வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவு நசுபாவந் துரியமாகும்.'' (22)

(பதம்) திடப் பிரஞ்ஞ னென்றும்—

(பொருள்.) நழுவுத லின்றிய சொரூபப் பிரஞ் ஞையுள்ளா னெனவும்,

23. வினா:- இவனைத் திடப் பிரஞ்ஞ னென்றது யாதினா லெனின்?

விடை:- இவன் அதிடப்பிரஞ்ஞை யுடைய பிரதி பந்த ஞாநி யல்ல னென்பது தோன்றற் கெ ன அறிக. (23)

24. வினா:- அதிடப் பிரஞ்ஞை யாவது யா தெனின்?

விடை:- வைராக்கிய தியா நாப்பியாச பல மின் றிய புருடனுக்கு, ஏ தாகினு மோர் புண்ணிய விசேடத் தாற், றத்துவ ஞாந முதய மாயினும், அவன் புத்தி, சுய புருட காரியத்திலிருக்கின்ற நாரி யானவள், சோர நாயக நாட்டத்தாற் சுய புருட காரியத்தை யடிக் கடி மறந்து விடுவது போல, விடய நாட்டத் தாற் றத்துவ சொரூபத்தை யடிக் கடி மறந்துவிடுவ தென அறிக. (24)

25. வினா:- திடப் பிரஞ்ஞை யாவது யா தெனின்?

விடை:- வைராக்கிய தியா நாப்பியாச வலியால் சுவாதீந மான சித்த விருத்தியை யுடைய புருடனுக் குத் தத்துவ ஞாந முதய மாயின், அவன் புத்தி, சோர நாரி யானவள், சுய புருட காரியங்கள் செய் யுங் காலத்தினும் அவள் புத்தி, சோர நாயகனையே சிந் தித்து அவ னாகார மாகவே யிருப்பது போல், பிரா ரப்த வலியால், உலக வியவகாரங்கள் செய்யுங் காலத்தினும், தத்துவ சொரூபத்தையே சிந்தித்துத் தத்துவாகார மாகவே யிருப்ப தாம். இப் பிரஞ் ஞையை யுடையார்கள், சமாஹிதத் திடப் பிரஞ் ஞர்கள், உத்திதத் திடப் பிரஞ்ஞர்க ளென இரு விதமாக இருப்பார்க ளென அறிக. (25)

26 வினா:- சமாஹிதத் திடப் பிரஞ்ஞர்கள் யாவர்க ளெனின்?

விடை:- சோர நாரி யானவள், வீட்டி னுள் ளிருக்கின்ற மணாளன், மக்கள், மாமி, மாமனையும்; வெளியி லிருக்கின்ற, தாய், தந்தை, சகோதரர், பந்து சநங்களையும்; வெறுத்துச் சோர நாயகனையே நாடிச் செல்வது போல, உள்ளினும் வெளியினு மிருக் கின்ற சகல விஷயங்களையும் கைவிட்டு, ஆத்மா வாகிய தன்னிடத்திற் றன்னுற் ருனே யாத்மாநந்தத்தை யநுபவிக்கிறவர்க ளாயும்; கூர்மந் தன் னவயவங்களைத் தன்னி லடக்கிக் கொள்வது போல, சகல இந்திரியங்களையும் விஷயங்களி னின்றுந் திருப்பித் தம்மி லடக்கிக் கொள்பவர்க ளாயு மிருப்பவர்க ளென அறிக. (26)

27. வினா:- ஆத்மா, ஆநந்த ரூப மானால், எப்போதும் ஆநந்த ரூப மாக இருக்கவேண்டும். அங்ஙனமின்மையினாலும், விஷய சம்பந்தத்தால், ஆநந்தந் தோன்றுகின்ற தநுபவ மானமையினாலும், ஆநந்த ரூபம் விஷயமே யன்றி ஆத்மா வன்றாம். ஆதலின், சமாஹிதத் திடப் பிரஞ்ஞன் ஆத்மாநந்தத்தை யநுபவிக்கிறா னெனல் கூடா தெனின்?

விடை:- அஞ்ஞாநத்தால் விஷயத்தி லிச்சையுற்றுச் சஞ்சலிக்கின்ற புத்தி விருத்தியில், அலைதலுள்ள சலத்தில் முகச் சாயை தோன்றாதது போல, ஆத்மாநந்தப் பிரதிபலநந் தோற்றுகிற தில்லை. இச்சித்த விஷயம் லபித்த காலத்தில் சற்றுப் போது சலநம் நீங்கி யகமுகப்படும். அப்போது அவ் விருத்தியில் ஆத்மாநந்தப் பிரதிபலநந் தோன்றும். அவ் வாநந்தத்தை யநுபவிக்கும் புருடன் தன்மயமாகிய ஆத்மாநந்த மென் றறியாமல், வெற் றெலும்பைக் கடிக்கும் 1சுவாநம், அவ் வெலும்பு தன் கடை வாயிற் குத்தி, யதனாற் பெருகி வருகின்ற உதிரத்தைத் தன் னுதிர மென அறியாமல், எலும் பினின்றும் வருகின்ற உதிர மென நினைப்பது போல, விஷயத்தினின்றும் ஆநந்தஞ் சநிக்கிற தென நினைக்கிறான். அங்ஙனம் நினைப்பது பிராந்தியே யானமையால், விஷயம் ஆனந்த ரூப மன்று. அத்மாவே, அநந்த ரூப மாகும். ஆதலின் சமாஹிதத் திடப் பிரஞ்ஞன், ஆத்மாநந்தத்தை யநுபவிக்கிறா னெனல் கூடுமென அறிக. (27)

28. வினா:- விஷயம் ஆநந்த ரூப மல்லவாயின், ஒருவராயினும் விஷயங்களைச் சம்பாதிக்க முயலாதிருக்க வேண்டும். அங்ஙன மின்றி, யாவரும் முயற்சிக்கின்றமையால், விஷயங்களே ஆநந்த ரூப மாகு மெனின்?

விடை:- அற்றேல் 1 ஆவது விஷய முள்ள பரியந்தம் விஷய சகித புருடனுக்கு, ஆநந்த மிருக்க

1. சுவாநம் = நாய்

வேண்டும். 2 ஆவது ஆநந்தம் நீங்கித் துக்க முதியா திருக்க வேண்டும். 3 ஆவது விஷயம் வெறுப்புக் கிடமாகிக் கைவிடப்படாம லிருக்க வேண்டும். 4. ஆவது விஷய மில்லாதிருக்குங் காலத்தில், ஆநந்த முதியா திருக்கவேண்டும். அங்ஙன மின்றி, முறையே 1. ஆவது புருடனுக்கு யாதானு மோர் காரியத்தைப் பற்றி மநது சலிக்கும் போது, முக்கிய விஷய மாகிய மனைவி சமீபத்திருந்தும், ஆநந்த மில்லை. 2 ஆவது மிகுந்த ஆபத்து நேரிட்ட போது, மனைவியைக் கட்டிக் கொண்டழுகிருன்; அதற்கு, ஆநந்தம் நீங்கித் துக்க முதயமா யிருக்கிறதே காரணம். 3, ஆவது கோப முண்டாகிய போது மனைவியை நிந்தை கூறி, அடித்துத் துரத்தி விடுகிருன்; அப் போது முக்கிய விஷயம் வெறுப்புக் கிட மாகிக் கைவிடப்படுகிறது. 4. ஆவது மனைவி முதலிய விஷய சம்பந்த மின்றிய, சுழுத்தி சமாதி யவத்தைகளில், ஆநந்த மநுபவிக்கப்படுகிறது. ஆதலின், விஷயம் ஆநந்த ரூப மன் றென்பதே சித்தாந்த மென அறிக. (28)

29. வினு:- விஷயம் ஆநந்த மல்லவாயினும், விஷய லாபத்தால், புத்தி விருத்தியில் சலந நீக்கமும், அதனுல், ஆநந்தமும் உதய மாகின்றமையால், அவ்வாநந்தத்துக்கு விஷய லாபமும், காரண மாகு மெனின்?

விடை:- சமாஹிதத் திடப் பிரஞ்ஞ னநுபவிக்கு மாநந்தம், அவ னுடைய புத்தி விருத்தி யகமுகப் பட்டு நிருவிகற்ப சமாதியில், திரி புடித் தோற்ற மின்றிப் பிரஹ்மத்திற், கரைந்து லயமா யிருக்கும்

போது. ஜநித்த தாக இருக்கின்றமையால், அதற்கு, விஷய லாபமும், காரண மாகுமென்பது ஆராய்வுக் குறைவே யாகு மென அறிக. (29)

30. வி௵:- அவ் வாநந்தம் விளங்குவது, புத்தி விருத்தியினுலோ? அல்லது, ஆத்மாவினுலோ வெனின்?

விடை:- நிருவிகற்ப சமாதியி லுள்ள ஆநந்தம் புத்தி விருத்தி ரூப மாக இராமல், அதன் சம்ஸ்கார ரூப மாக இருக்கின்றமையால், சவிகற்ப சமாதியி லுள்ள ஆநந்தம் போல, புத்தி விருத்தியால், விளங்கத் தக்க தன்று; ஆத்மாவினுல், விளங்கத் தக்க தென அறிக. (30)

31. வி௵:- சமாஹிதத் திடப் பிரஞ்ஞன், ஆநந்தா நுபவியாக இருக்கின்ரு னென்பதை யாதினு லறியலா மெனின்?

விடை:- விருத்திகளின் உபசாந்தத்தால் முக மலர்ச்சியுற்றிருக்கின்ற முகப் *பிரசாத மாகிய அடையாளத்தா லறியலா மென அறிக. (31)

32. வி௵:- உத்திதத் திடப் பிரஞ்ஞர்கள் யாவர்க ளெனின்?

விடை:- மூடர்கள், உரோகாதிகளாற் றுக்கம் வரின், நான் பாவி யென்னைச் சுட வேண்டு மென விசந முறுவது போல, விசந முருறவர்க ளாயும்; இராச்சிய தந புத்திர லாபாதிகளாற் சுகம் வரின், சுக சாதநங்க ளான புண்ணியத்தை யநுட்டிக்காமல்,

* பிரசாதம் - தெளிவு.

முன் வந்த சுகத்திற்குச் சமாநமான சுகத்தை யபேக்ஷிக்கிறது போல, அபேக்ஷியாதவர் களாயும்; விவகார காலத்தில், இராகத் துவேஷங்க ளில்லாத வர்களாயும்; தனக்குச் சுவாதீந மாக இருக்கின்ற இந்திரியங்களோடு கூடினவர்க ளாயும்; அந்நியர் லாப நட்டங்களைத் தன் னுடைய தாகத் தோற்று விக்குஞ் சித்த விருத்திச் சிநேக மில்லாதவர்க ளாயு மிருப்பார்க ளென அறிக. (32)

(பதம்) பகவற் பக்த னென்றும்—

(பொருள்) பகவற் சொரூபத்திற் றிட பத்தி யுடையவ னென்றும்,

33. வினா:- திட பக்தியை யுடைய பகவற் பத்தன் யாவ னெனின்?

விடை:- சர்வப் பிராணிகளிடத்தினும் துவேஷ மில்லாதவ னுயும்; மைத்திரி, கருணை, முதிதை, உபே க்ஷைகளுடையவ னுயும்; அகங்கார மமகார மில்லா தவ னுயும்; சொரூபத் தியாந பர னுயும்; சத்துரு, மித்துரு, மாநாவமாநம், சீதோஷ்ணம், துதி நிந் தை, சுக துக்க முதலிய துவந் துவங்களிற் சம திருஷ் டியும், சதா சந்தோஷ்டி யுள்ளவ னுயும்; மௌநி யா யும்; நியம மாக ஓரிடத்தில் வாசம்பண்ணுதவ னுயும்; சகல சகத்தும் தன்னிடத்தில் வாசம்பண்ணுதலினு னும், தான் அவைக ளனைத்தினும், சர்வாத்மக மாக வ்யாபித்து வாசம்பண்ணுதலினுனும், சுருதிகள் வாசு தேவ னெனக் கீர்த்திக்கும் பிரஹ்மத்தில் சதா வாசு

தேவோக மென்னும் அபேத பத்தியை யுடையவனாயு மிருப்பவ னென அறிக. (33)

34. வினா:- ஜீவன் முத்தர்பா லுள்ள மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை யாகிய குணங்க ளெவை யெனின்?

விடை:- சுகிப் பிராணிகள்பால் வைத்திருக்கின்ற சிநேகமே மைத்திரி யாம். பவக் கடலி லமிழ்ந்தி வருந் துந்துக்கிப் பிராணிகளை நோக்கி, யிவர்க ளேனோ குருவி னுபதேச மாகிய புணையினா லிப் பவ சாகரத் தைக் கடவாது துக்கிக்கின்றனர், இவர்களுக் கெந்தக் காலம் இப் பவத் துன் பொழியு மென்னு மிரக்கமே கருணை யாம். சகல சற்கருமங்களையும் ஈசுரார்ப்பண மாகச் செய்யும் புண்ணியர்பா லுள்ள விருப்பமே முதிதை யாம். தீவினையாளர்களாகிய பாவிகளை வீதித் திரண துல்லிய மாக விருப்பு வெறுப் பின்றி விட்டு விடுதலே யுபேக்ஷையா மென அறிக. (34)

(பதம்) குணாதீத னென்றும்:-

(பொருள்) குணத் திரயங்கட் கப்பாற்பட்டவ னென்றும்,

35. வினா:- பிறரா லறியத் தக்க தாகக் குணாதீதனுக் குள்ள இலக்கணங்க ளெவை யெனின்?

விடை:- சுகம் துக்கம் அவைகட்குச் சாதநங்களா கிய பிரியாப்பிரிய விஷயங்கள், துதி நிந்தை, மித்துரு சத்துரு, மாநாவமாநம், சுவர்ணம் ஓடு முதலியவை களை, விருப்பு வெறுப் பின்றிப் பார்க்கும் சம சித்தமும், யாதொரு முயற்சியு மின்றிய தீரமும், ஆத்ம நிட்டையு மென அறிக. (35)

36. வினா.-குணாதீத னுடைய மநதின் சஞ்சாரப் பிரகாரமாகிய அமைதி யா தெனின்?

விடை:- சாக்கிர சொப்பனங்களி லுதித்து சுழுத்தி சமாதி சூநியாவத்தைகளில் நீங்கி விடுவ தாகிய, சத்துவாதி குணத் திரய விகாரங்க ளான, பிரகாசம், பிரவிருத்தி, மோக மென்னும் ஞா நம், முயற்சி, அவிவேகங்கள் சாக்கிர சொப்பனங்களி லுண்டாகிச் சுழுத்தி சமாதி சூநியாவத்தைகளில் நீங்கிவிடுகின்றன. மூடனானவன் சா க் கி ர த் திற் றனக்குப் பிரதிகூலமா யு ண் டா கி ன் ற பிரகாசாதிகளைக் கண்டு துவேஷிப்பன், சூநிய சித்தாவத்தையில் அநுகூல மான பிரகாசாதிகள் நீங்கும் போது அவைகளை யிச்சிப்பன். அங்ஙன மின்றிச் சண்டையைப் பார்க்கும் புருடன், சண்டை செய்பவர்களுக்கு உண்டாகுஞ் ஜெயாபஜெய சுக துக்கங்கள் நமக் கில்லை யென உதாசீநமா யிருப்பது போலப், பிரதிகூல மான பிரகாசாதிக ளுதய மாகும் போதும், அநுகூல மான பிரகாசாதிகள் நீங்கும் போதும், மயங்காமல், குண விகாரங்க ளான சட்சு வாதி இந்திரியங்கள், குண விகாரங்களான ரூபாதி களில் பிரவிர்த்தித்தலினாலும், அவைகளை நிவிர்த்தித் தலினாலும், சாக்ஷி மாத்திரமாக அறிந்து கொண்டு, அசங்க சித்து ரூப மாக இருக்கின்ற நமக்கு, யா தொரு லாபமும் நட்டமு மில்லை யென்று உதாசீநமா யிருப்ப தென அறிக. (36)

37. வினா:- குணாதீதன் எ ந் த ச் சாதநத்தாற் குணங்களைக் கடந்தன னெனின்?

விடை:- வியபிசார மின்றிய பத்தியோடு கூடிய தியாநாப்பியாச பலத்தால், சர்வப் பிரத்தியக் கபிந்ந பரமார்த்த சொரூபமா யுள்ள தன்னையே சேவை செய்வ தாகிய சாதநத்தா லென அறிக. (37)

(பதம்) பிராஹ்மண னென்றும்—

(பொருள்) பிரஹ்மஞ் ஞாந பர னென்றும்,

38. வினா:- சீவன் முத்தர்களிற் பிராஹ்மண னென்பவன் யாவ னெனின்?

விடை:- அரையிற் சோமனும், மேலில் உத்தரீயமு மின்றியவ னுயும்; குப்பைகளி லுள்ள கந்தைகளால் கௌபீநாதிகள் தரித்துக் கொள்பவ னுயும்; பாய் முதலிய சாதநங்க ளின்றி, வெறுந் தரையிற் கையைத் தலை யணையாக வைத்து சயநஞ் செய்பவ னுயும்; பிராரப்த கன்மங் களுக்குத் தக்க தாக வரப்பட்ட பிக்ஷாந்நத்தாற் றேகதாரணஞ் செய்பவ னுயும்; தண்ட தாரியாயும்; ஆத்மத் தியாநபர னுயும்; ஏகாங்கியாயும்; பிரஹ்மமே தானெனத்திடமா யறிந்தவ னுயும்; சாந்திகளை யுடையவ னுயு மிருப்பவ னென அறிக. (38)

39. வினா:- சாந்திக ளெத்தனை விதம்? அவைக ளெவை யெனின்?

விடை:- உத்தமம், மத்திமம், அதம மென மூ விதமாகும். இவைகளில், மநது தன் விகாரத்தை விடுத்து இலக்ஷிய வஸ்து மாத்திர மாய் நிலைத்திருப்பது, பிரஹ்ம நிருவாண லக்ஷண மாகிய உத்தம சாந்தி யாம், பிரத்திய காத்ம இலக்கணங்களைச் சதா அநுசந்தாநஞ் செய்கிறதே, சுத்த சத்துவ லக்ஷண மான மத்திம சாந்தி யாம். மனது விஷய வியாபாரத்தை விடுத்துச் சிரவண மநநாதிகளைச் செய்து கொண்டிருக்கிறது, மலிந சத்துவ லக்ஷண மான அதம சாந்தியா மென அறிக. (39)

(பதம்) அதிவருணாச்சிரமி யென்றும்—

(பொருள்) வ ரு ணா ச் சி ர ம ங் க ளுக் கப்பாற் பட்டவ னென்றும்,

40. வினா:- வருணங்க ளெவை ஆச்சிரமங்க ளெவை யெனின்?

விடை:— பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதி நான்கும் வருணங்க ளாம். பிரஹ்மசரியம், கிரகஸ்தம், வாநப் பிரஸ்தம், சந்நியாச மென்னும் நான்கும் ஆச்சிரமங்க ளென அறிக. (40)

41. வினா:- நான்கு வருணங்களில், பிராஹ்மண வருணத்தர்கள் யாவர்க ளெனின்?

விடை:- பிராஹ்மண வருண உத்தம ஸ்திரீயி னிடத்துப் பிறந்தவர்க ளாயும்; பிரஹ்ம தேஜஸை விரும்பி 5-ஆவது வயதி லாவ்து. அல்லது 8-ஆவது அல்லது 6-ஆவது வயதி லாவது, உபநயந சம்ஸ்காரஞ் செய்து கொள்பவர்க ளாயும்; திநந் தோறும் அட்ட வித பூஜாக் கிரியைக ளுடையவர்க ளாயும்; பிரஹ்ம ஞாந நிட்டர்க ளாயும்; 1. வேதம் ஓதல் 2. ஓதுவித்தல் 3. யாகஞ் செய்தல், 4. செய்வித் தல் 5. தாநங் கொடுத்தல், 6. வாங்குத லாகிய ஆறு தொழில்களில், ஓதல், யாகஞ் செய்தல், தாநங் கொடுத்தலாகிய முத் தொழில்களைப் புண்ணியத்தை யுத்தேசித்தும், ஓதுவித்தல். யாகஞ் செய்வித்தல் தாநம் வாங்குத லாகிய முத் தொழில்களைச் சீவநோபாயத்தை யுத்தேசித்தும் செய்பவர்களாயு முள்ளவர்க ளாம். இவர்களிற், சிலர்; 1. ருதம், 2. அமிர்தம் 3. மிர்தம் 4. பிரமிர்தம் 5. சத்தியா நிர்தம் 6. குசீதங்களினாலும், அல்லது 7. சுநக விருத்தியினாலும், ஆபத் கால விசேஷங்கட்குத் தக்க தாகச் சீவநஞ் செய்பவர்களு மாக இருப்பவர்க ளென அறிக. (41)

42. வினா:- பிராமணர்கள் திநந் தோறுஞ் செய்வதாகிய அஷ்ட வித பூஜைக ளெவை யெனின்?

விடை:- 1. ஆத்மா 2, சூரியன் 3. சந்திரன், 4. ஆகாயம், 5. வாயு 6. அக்கிநி 7. அப்பு, 8. பிருதிவி ஆகிய எட்டையும் பூசித்த லென அறிக. (சித்போ—சித்போதம்?) (42)

43. வினா:- இவ் வெட்டு வித பூசாக் கிரமங்க ளெவை யெனின்?

விடை:- 1. பிறருக்கு சத் கிரியைகளால் திருப்தி செய்வது, ஆத்ம பூசாக் கிரம மாம். 2-3. பிராத, மத்தி யான, சந்தியா கால கர்மங்கள் செய்வது, சூரிய சந்திர பூசாக் கிரம மாம், 4, பீச வாசநா ரூபமாயிருந் தெழுகின்ற மநதை ஏகாக்கிரஞ் செய்வது, ஆகாய பூசாக் கிரம மாம் 5. பிராணாகுதி கர்மஞ் செய்வது, வாயு பூசாக் கிரம மாம், 6. பிராத சாயம் (காலை மாலை) † சிரௌதம் § ஸ்மார்த்தாக்கிநி கர்மஞ் செய்வது, அக்கிநி பூசாக் கிரம மாம். 7. ஸ்நாந பாநக் கிரியைகள் செய்வது, அப்புவின் பூசாக் கிரம மாம், 8. நிவேதநாந்த போசந கர்மஞ் செய்வது, பிருதிவி பூசாக் கிரம மாமென அறிக. (43)

44. வினா:- 1. ருதம், 2. அமிர்தம், 3. மிர்தம், 4. பிரமிர்தம், 5. சத்தியாநிர்தம், 6 குசீதம், 7. சுநக விருத்தி யென்பவை யெவை யெனின்?

விடை:- 1. ருத மென்பது ஆபத் கால சீவநோபாய நிமித்தம் கழனிகளினும், மற்ற இடங்களினும் சிந்தின நெற்களை இரண்டு விரல்களால் பொறுக்குதலும், நெற் கதிர்களைப்

† சிரௌதம் - சுருதியுக்தமாகச் செய்யப்பட்ட, தக்ஷிணாக்கிநீயம், காருக பத்தியம், ஆகவநீயம் என்னும் யாகாக்கிநி.
§ ஸ்மார்த்தம் - ஸ்மிருதியுக்த மாகச் செய்யப்பட்ட ஔபாசநாக்கிநி.

பொறுக்குதலு மாம். இவ் விரண்டில், தனி நெல்லைப் பொறுக்குதற்கு உஞ்ச மெனவும், நெற் கதிர்களைப் பொறுக்குதற்குச் சில மெனவுங் கூறப்படும். 2. அமிர்த மென்பது யாசிக்காமற் றானே வருபவைகளாம். 3. மிர்த மென்பது யாசித்து வருபவைகளாம். 4. பிரமிர்த மென்பது பயிரிடுத லாம். 5. சத்தியா நிர்தமென்பது, வியாபாரம் செய்குதலாம். 6. குசீத மென்பது, வட்டி வாங்குத லாம், 7. சுநக விருத்தி யென்பது, நாயின் பிழைப்புக்குச் சரி யாகத் தீநமநதோடு எசமாநன் கண்டளைக் குட்பட்டு ஈநவேலை செய்குவ தாகிய சேவகா விருத்தி யாம். இவைகளில், பிராமணர்கட்குச் சிறந்த தொழில் ஓதுவித்தலா மென அறிக. (44)

45. வினா:- க்ஷத்திரிய வருணத்தவர்கள் யாவர்களெனின்?

விடை:- க்ஷத்திரிய வருண உத்தம ஸ்திரீயினிடத்துப் பிறந்தவர்களாயும்; பலத்தை விரும்பி 6-ஆவது வயதி லாவது, அல்லது 11-ஆவது வயதி லாவது, அல்லது 22-ஆவது வயதிலாவது உபநயந சமஸ்காரஞ் செய்து கொள்பவர்க ளாயும்; பிராமணர்களுக் குரிய தொழில்களில், ஓதுவித்தல், யாகஞ் செய்வித்தல், தாநம் வாங்குத லாகிய மூன்றும் நீங்க லாக, வேத மோதல், யாகஞ் செய்தல், தாநங் கொடுத்தலோடு உலகை யிரக்ஷித்தல், ஆயுத வித்தை பயிறல், பயிற்றுதல், போர் செய்தல் ஆகிய தொழில்களை யுடையவர்க ளாயும்; சீவநோபாய நிமித்தம் பிரஜைகளிடத்தில், ஆறி லொரு பங்கு, அல்லது, நாலிலொரு பங்கு, தீர்வை வாங்குபவர்க ளாயும், 1. இந்திரன், 2. சூரியன், 3. வாயு, 4. யமன், 5. வருணன், 6. சந்திரன், 7. அக்கிநி, 8. பிருதிவி ஆகிய இவர்களின் நடையை அநுசரித்து, இராச்சிய விவகாரஞ் செய்யும் விரத முடையவர்களாயும் இருப்பவர்களாகும். இவர்களுக்கு உலகாள்வது சிறந்த தொழி லென அறிக.

பிரமாணம்
(நிகண்டு)

"ஓதலே வேட்ட லீத லுலகோம்பல் படைப யிற்றல், மேதகு போர்செய் தீட்டல் வேந்தர்செய் தொழில்களாறே." (45)

46. வினா:- க்ஷத்திரிய னைவன், இந்திர னாதியர் நடையை யநுசரித்து நடக்கும் விரதங்க ளெவை யெனின்?

விடை:- 1 இந்திரன், ஆவணி மாத முதல் (6) மாதம் வரை மழைகளை வருஷிப்பித்துச் சநங்களைச் சந்தோஷிப்பிக்கச் செய்வது போல, அரசனும் தன் இராச்சியங்களிலிருக்கும் பிரஜைகளுக்கு அபீஷ்டத்தை உண்டுபண்ணிக் கொடுக்கிறது, இந்திர விரத மாம். 2 சூரியன் மார்கழி மாத முதல் (8) மாதம் வரையில் தன் னுடைய கிரணங்களால் மிகவும் தாபப்படுத்தாமல் சலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கிரகிப்பது போல, அரசனும் சநங்களை உபத்திரவப் படுத்தாமல் மாதந் தோறும் சிறிது சிறி தாகத் தீர்வையை வாங்குவது, சூரிய விரத மாம். 3 வாயு வானது, சகல செந்துக்களிடத்திலும் பிராண ரூப மாக, உள்ளே பிரவேசித்துச் சஞ்சரிப்பது போல, அரசன் எதிரி பட்டணங்களில் வேவுகாரர் களைப் பிரவேசிக்கச் செய்து, அங் குள்ள பலா பலங்களை யறிந்து, தனக்குத் தெரிவிக்கும்படி சஞ்சரிக்கச் செய்வதும், தன் பட்டணத்தில் வேவுகாரர்கள் போலத் தானும் பிரவேசித்து, இராச்சிய தந்திர நியாயாநியாயங்களை யறியும் நிமித்தம் சஞ்சரிப்பதும், வாயு விரத மாம். 4 யமன் தண்டனை செய்யும் போது சத்துரு வென்றும், மித்துரு வென்றும், பேத மாக நோக்காது, யாவரையும் சரி யாகத் தண்டிப்பது போல, அரசன்

குற்றஞ் செய்த பிரஜைகளை பக்ஷபாத மின்றிச் சரி யாகத் தண்டிப்பது யம விரத மாம். 5 வருணன் தன்னுற் றண்டிக்கத் தக்க பாவஞ் செய்தவர்களைப் பாசங்களாற் கட்டுகிறது போல, அரசன் துட்டர் களைத் தயை யில்லாமல், சிறைச் சாலையில் பந்திப்பது வருண விரத மாம். 6 பூரண சந்திரன், மனிதர்கள் தன்னைப் பார்த்துச் சந்தோஷிக்கும்படி சீதள மாயும், பிரகாச மாயு மிருப்பது போல, அரச னானவன் மந்திரி முதலிய பரிசநங்கள், தன்னைப் பார்த்துச் சந்தோஷிக்கும்படி தயை யுள்ளவனாயும், பூடனாலங்கிர்த னாயு மிருப்பது, சந்திர விரத மாம். 7. அக்கிநி உஷ்ண சொரூப மாய் ஈர மின்றிய திரண காஷ்டாதிகளைத் தகித்துக் கொண்டிருப்பது போல, அரசன் சோம்பலின்றிப் பிரதாப முள்ளவ னாய்த், துஷ்டர்களையும், தனக் கபகாரஞ் செய்யும் மந்திரி முதலியவர்களையும், சிக்ஷித்துக் கொண்டிருப்பது, அக்கிநி விரத மாம். 8 பிருதிவியானது சராசரரூப மான சகல பிராணிகளையும் உயர்வு தாழ் வின்றிச் சரி யாகத் தாங்கிக் கொண்டிருப்பது போல, அரசன் பண்டிதர் பாமர ரான சகல பேர்களையும் பேத மின்றிச் சரி யாக இரக்ஷித்துக் கொண் டிருப்பது, பிருதிவி விரத மா மென அறிக. (46)

47. வினு:— வைசிய வருணத்தவர்கள் யாவர்க ளெனின்?

விடை:— வைசிய வருண உத்தம ஸ்திரீயினிடத் துப் பிறந்தவர்க ளாயும், பொருளை விரும்பி 8 ஆவது வயதிலாவது, அல்லது, 12ஆவது வயதிலாவது, அல்லது, 24ஆவது வயதிலாவது, உபநயநஞ் செய்து கொள்பவர்க ளாயும், வேத மோதல், யாகஞ் செய்தல், தாநங் கொடுத்தல், வியாபாரஞ் செய்தல், பசுவை யிரக்ஷித்தல், பூமியை யுழுது பயிரிடல், வட்டி வாங்குத லாகிய தொழில்களையுடையவர்க ளாயு

யிருப்பவர்களாகும். இவர்களில், வியாபாரஞ் செய்பவர்கள், தந வைசிய ரெனவும்; பசுக்களை இரக்ஷிப்பவர்கள், கோ வைசியர்களெனவும்; பூமியை யுழுது பயிரிடுபவர்கள், பூ வைசிய ரெனவும்; சொல்லப்படுவார்களென அறிக. (47)

48. வினா:— க்ஷத்திரியர் வைசியராகிய உபய வருணத்தவர்கட்கும், வேதம் ஓதுவித்தலாகிய தொழில் எப்போது மில்லையோ வெனின்?

விடை:—மோக்ஷ விச்சை யுடைய பிரமசாரியானவன், பிராமணன் அகப்படாவிடின், க்ஷத்திரியரிடத்திலாவது, வைசியர்களிடத்திலாவது, அநுட்டானமில்லாத பிராமணனிடத்திலாவது, வேதம் ஓதவேண்டியதெனவும்; வேதம் ஓதி முடிவுபெறுகிற பரியந்தம், அக் குருவுக்குப் பணிவிடை செய்துவர வேண்டுமெனவும்; மநு ஸ்மிருதி யிரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருத்தலால், க்ஷத்திரியர், வைசியர்களுக்கும் வேதம் ஓதுவித்தலாகிய தொழில் ஒரோர் காலத் துளதெனக் கொள்ளற்பாலதென அறிக. (48)

49 வினா:— சூத்திர வருணத்தவர்கள் யாவர்களெனின்?

விடை:— மூ வகை வைசியர்க் குரிய பொருளீட்டல், பசு வோம்பல், பயிரிடலோடு பிராமணர் முதலிய மூன்று வருணத்தவர்கட்கும் பொருமையின்றிப் பணிவிடை செய்து கொண்டிருப்பவர்களாகும். இவர்களுக்குப் பிராமணர்களுக் குரிய அறு வகைத் தொழில்களில் தாநங் கொடுத்தலாகிய தொழி லுண்டென அறிக. (49)

50. வினா:— நான்காச்சிரமங்களில், பிரஹ்மசரியாச்சிரமத்தர்கள் யாவர்களெனின்?

விடை:- பிராமண, க்ஷத்திரிய, வைசிய வருணத்திற் பிறந்தவர்களாயும்; உபநயந முதலிய (40) வித சம்ஸ்காரங்களுள்ளவர்களாயும்; குருவை யடைந்து குரு பணி விடை செய்துகொண்டு (12) வருடம் குரு குல வாசமாயிருந்து வித்தை யப்பியாசஞ் செய்பவர்களாயும்; பிராமண க்ஷத்திரிய வைசிய வருணங்கட்குத் தக்க தாக முறையே சணப்ப ஞர், பட்டு நூல், செம் மறியாட்டின் மயிர் இவைகளால் நெய்யப்பட்டதை அரை உத்தரீய மாகவும்; கறுப்பு மான் தோல், புள்ளி மான் தோல், வெள்ளாட்டின் தோல்களை மே லுத்தரீய மாகவும்; பஞ்சி னூலாலும், சணப்ப னூலினாலும், வெள் ளாட்டின் மயிரினாலும், திரிக்கப் பட்டுள்ள வடத்தை, மூன்று வடமாகச் சேர்த்து தோளில் எக்ஞோபவீத மாகவும்; வில்வம், அல்லது, பலாசத்தில், நில முதல் சிரசி னள வாகவும்; ஆல், அல்லது, கருங்காலியில் நில முதல் நெற்றி யளவாகவும், அரளி அல்லது, அத்தியில், நில முதல் நாசி யள வாகவும்; நறுக்கித் தண்டமாகத் தரிப்பவர்களாயும்; சந்தியா வந்தந (திரிகால) கருமங்களையும், அக்கிநியில் சமிதாந மாகிய (சமித்தினால் செய்யப்பட்ட) ஓமங்களையும்; கிரம மாகச் செய்பவர்க ளாயும்; கமண்டல தாரிக ளாயும்; பிராமண வருணத்த ராகில், † பவதி பிக்ஷாந் தேகி (அம்மா பிக்ஷை கொடு) என்றும், க்ஷத்திரிய வருணத்த ராகில், பிக்ஷாம் பவதி தேகி (பிக்ஷை அம்மா கொடு) என்றும், வைசிய வருணத்த ராகில், தேகி பிக்ஷாம் பவதி (கொடு பிக்ஷை அம்மா) என்றும், கூறிப் பிச்சை கேட்பவர்க ளாயும்; வாங்கிய பிச்சையைக் குருவுக்கு நிவேதநஞ் செய்து, அவ ரநுமதி பெற்றுப், பின் கிழக்கு முக மாக இருந்து

† பவதி என்னுஞ் சொல், ஸ்ரீயை மரியாதையுடன் அழைப்பதைக் குறிப்பது.

ஆசமநஞ் செய்து போசநஞ் செய்பவர்க ளாயும்; போசநஞ் செய்யுங் கவளங்கள் கிரகஸ்தனுக்கு (32). வாநப் பிரஸ்தனுக்கு (16), முநிக்கு (8), உரியவைக ளென்னும் நியம மிருப்பது போல, இவ் வளவென்னும் நியம மில்லாதவர்க ளாயும்; சரீர முள்ளவரைக்கும் குரு பணிவிடை செய்து வருபவர்க ளாயும்; குரு வில்லாவிட்டால், குரு புத்திர னிடத்தும், புத்திரனு மில்லாவிடில், குரு பத்தினியிடத்தும், சுவதந்திர ளாக இராமல், அவர்க ளாதீநரா யிருந்து வருபவர்க ளாயும்; அட்ட வித மைதுநங்களு மில்லாத இந்திரிய நிக்கிரகர்க ளாயு மிருப்பவர்க ளென அறிக. (50)

51. வினா:- பிரமசாரியர்களுக்கு விலக் காகிய அட்ட வித மைதுநங்க ளெவை யெனின்?

விடை:– 1 தரிசநம், 2 பரிசநம், 3 கேளி, 4 கீர்த்தநம், 5 சங்கற்பம், 6 குய்ய பாஷணம், 7 அத்தியவசாயம், 8 கிரியா நிர்விருத்தி ஆகிய எட்டுமாம். இவைகளில், 1 காம விச்சையால் ஸ்திரீகளைப் பார்ப்பது தரிசநம். 2 அவர்கள் சரீரத்தைத் தீண்டுவது பரிசநம். 3 ஸ்திரீகளோடு விளையாடுதல் கேளி. 4 அவர்களைப் புகழ்வது கீர்த்தநம். 5 அவர்களை யடிக் கடி நினைப்பது சங்கற்பம். 6 அவர்களோடு ரகசிய மாகப் பேசுதல் குய்ய பாஷணம். 7 அவர்களை ஆலிங்கநம் பண்ணுதல் அத்தியவசாயம். 8 அவர்களை புணர்ந்து இந்திரிய விசர்ச்சநஞ் செய்குதல், கிரியா நிர்விருத்தி யென அறிக. (51)

52. வினா:- கிரகாச்சிரமத்தவர்கள் யாவர்க ளெனின்?

விடை:- பிரஹ்மசாரியா யிருந்து, ஆசாரியன் அநுஞ்ஞை பெற்று, தன் ஜாதியி லுள்ள

கந்நிகையை 1 பிராமியம், 2 தெய்வம், 3 ஆருஷம், 4 பிராஜாபத்தியம், 5 ஆசுரம், 6 காந்தருவம், 7 இராக்ஷசம், 8 பைசாசம், என்னும் நன்மை தீமைகளை விளைவிப்ப தாகிய (8) வித விவாகங்களி னுள், எந்த வருணத்தவருக்கு எது சிறந்ததோ, அதைச் செய்பவர்க ளாயும்; நித்திய கரு மாநுட்டா நர்க ளாயும்; இல்லற தருமங்களை வழுவாமல் நடத்துபவர்க ளாயும்; மனைவி மாதவிடா யானது முதல் நீக்கத் தக்க நான்கு திநங்களையும், அட்டமி, தசமி, ஏகாதசி, திரயோதசி, அமாவாசை, பௌர்ணமி, பாநு வாரங்களையும்நீக்கி, மற்றைத் திநங்களினிரவில், தன்னால் நடத்தி வரும் இல்லற தருமங்களைத், தனக்குப் பின்னரும் நடத்திவரும் நிமித்தமாகப்' புத்திரனை யபேக்ஷித்து, மனைவியைப் புணர்பவர்க ளாயும்; வழிபடு தெய்வங்கள், அதிதிகள், தாய் தந்தைய ராதிய பிதிர்க்கள், வேலைக்காரர்கள், தன்னாத்துமா வாகிய இவர்கட்கு, அந்நத்தால் திருப்தி செய்பவர்க ளாயும்; பிரஹ்ம மாதி பஞ்ச எஞ்ஞங்களைச் செய்து வருபவர்களாயும்; பிரஹ்மசாரியர், வாநப் பிரஸ்தர், சந்நியாசிக ளாகிய மூன் றாச்சிரமத்தர்களையும், பாதுகாப்பவர்க ளாயும்; ஓதுவித்த லாகிய கிருத்தியங்களைச் சீவநோபாய நிமித்தஞ் செய்பவர்களாயும்; வேத மோதுதலால், இருடி கடனையும், ஓமம் செய்தலால், தேவர் கடனை யும், பிள்ளை பெறுதலால், பிதிர்க் கடனையும், தீர்த்து விட்டுச் சந்நியாசிகள் போல், ஒன்றிலும் பற் றின்றி யிருந்து, ஆத்மத் தியாநஞ் செய்பவர்க ளாயு மிருப் பவர்க ளென அறிக. (52)

53, வினா:- பிராமிய மாதிய எட்டு விவாகங்க ளெவை யெனின்?

விடை:- 1. வேத மோதினவ னாயும், நல் லொ ழுக்க முள்ளவ னாயு மிருக்கின்ற பிரஹ்மசாரியைத் தா

ஞகவே யழைத்து, அவனை நூதந வஸ்திரங்களால் அலங்கரித்து, அவனுக்குத் தன் கந்நிகையை வஸ்திராபரண அலங்காரத்தோடு தாநஞ் செய்வது, பிராமிய விவாக மாம். 2, சோதிஷ் டோமாதி எஞ்ஞத்தில், தனக்குப் புரோகித ஞக இருப்பவ னுக்குத் தன் பெண்ணை அலங்கரித்துக் கொடுப்பது, தெய்வ விவாக மாம். 3. தான் செய்யவேண்டிய யாகாதி தர்மத்துக் காக, ஓ ரிடபம், ஓர் பசு, அல்லது, இரண்டு ரிஷபம், இரண்டு பசு வாங்கிக் கொண்டு, தன் கந்நிகையைக் கொடுப்பது, ஆருஷ விவாக மாம். 4. பிரஹ்மசாரியை யழைப்பித்துப் பூசித்துத் தன் கந்நிகையைத் தாநம் பண்ணும் போது, நீங்க ளிருவரும் கருமங்களைச் செய் யுங்களென்று சொல்லிக் கொடுப்பது, பிராஜாபத்திய விவாகமாம். 5. பெண்ணின் தகப்பனுக்குக் கேட்கும் பணத்தைக் கொடுத்துப் பெண்ணுக்கு வேண்டிய பூடணங்களும் போட்டுப் பெண்ணை வாங்கிவி வாகஞ் செய்து கொள்ளுவது, ஆசுர விவாக மாம். 6 கந்நிகை-யும், புருடனும், ஒருவருக் கொருவர் புணர்ச்சியி ஞசையால், மந மொத்துச் சேருதல், காந்தருவ விவாக மாம். 7. கந்நிகையும், சுற்றத்தார்களும், உடன்படாவிடின், அவர்கள் சுற்றத்தாரை அடித்துக் கொன்றுவிட்டுக், கந்நிகை யழுதாலும், அவளைப் பலத்தினுல் கொண்டு போய் விடுகிறது, இராக்ஷச விவாக மாம். 8 கந்நிகை துயிலும் போதும், மது வுண்டு மயங்கிக் கிடக்கும் போதும், பித்துக்கொண் டிருக்கும் போதும், அவளைப் புணர்வது, முற் சொல்-லிய ஏழு விவாகங்களுக்கும் கீழாகிய பைசாச விவாக மா மென அறிக. (53)

54. வினு:- கிரகாச்சிரமத்தர்கள் செய்யும் பஞ்ச எக்கியங்க ளெவை யெனின்?

விடை:- 1. பிரஹ்ம எக்கியம், 2. பிதிர் எக்கியம், 3. தேவ எக்கியம், 4. பூத எக்கியம் 5. மாநுட எக்கி-யம் ஆகிய இவ்வைகளாம், இவைகளில் 1. வேதாத்திய

யநஞ் செய்குதல், பிரஹ்ம எக்கிய மாம். 2. பிதிர்க்கள் திருப்தி யடையும்படி அந்நத்தினு லாவது, சல தருப்பணத்தினு லாவது, சிரார்த்தங்கள் செய்வது, பிதிரெக்கிய மாம். 3. தேவதைகளைக் குறித்து அக்கிநியில் ஓமஞ் செய்வது, தேவ எக்கிய மாம். 4. வாயச (காக) பலி முதலானது வைப்பது, பூதஎக்கியமாம். 5, அதிதிகட்கு அந்ந மிடுவது, மாநுட எக்கிய மா மென அறிக. (54)

55. வினு:— வாநப் பிரஸ்தாச்சிரமத்தர்கள் யாவர்களெனின்?

விடை:— தன் தேகத்தில் நரையையும், தன் பிள்ளைக்குப் பிள்ளையையும், பார்க்கும் வயது வந்த போது, சகல ஆகார மாதி போகங்களையும் விடுத்து, மனைவியைப் பிள்ளை வசம் ஒப்புவித் தாவது; அல்லது மனைவிக்குக் கூட வர இஷ்ட மிருந்தால், அழைத்துக் கொண் டாவது; அக்கிநி கோத்திரத்தையும், சுருக்கு சுருவ முதலிய பாத்திரங்களையும், எடுத்துக் கொண்டு வநத்திற் சென்று வசிப்பவர்களாயும்; சாலி யந்நம், பல காய் கிழங்கு பழ மாதியவைகளாற், கிரகாச்சிரமத்துக்குச் சொல்லிய பஞ்ச எக்கியங்களைச் செய்பவர்களாயும்; ஜிதேந்திரியர்க ளாயும்; மான்றேல் மர வுரியாதிகளைத் தரித்துக் கொள்பவர்க ளாயும்; சடை மீசை தாடி நகங்களை வளர்ப்பவர்களாயும்; வேதமோதுதலிற் சோம்ப லில்லாதவர்களாயும்; திரி காலஸ்நாநஞ் செய்பவர்க ளாயும்; காட்டி லுதிர்ந்த பரிசுத்த மான சம்பா கார் நெற்களைப் பொறுக்கி, அவைகளின் அரிசிகளால், *புரோடாசம்‡ சருக்கள்

---

(நாரத பரிவிராஜக உபநிஷத்து 4 ஆம் உபதேசம்.)

* புரோடாசம் — ஓமஞ் செய்வதற்காக, மாவினுல் உப்பில்லாமல் தட்டிச் சுடப்பட்ட அடை.

‡ சரு — வறுத்த அரிசியினுல் உப்பின்றிச் சமைத்த அந்நம்.

உண்டு பண்ணி, அவைகளைத் தேவர்கட்கு அக்கி நியில் ஓமஞ் செய்து, சேடித்து நின்றவைகளையும், பாகஞ் செய்த காய் கிழங்காதிகளையும், தானே பழுத்த கனிகளையும் புசிப்பவர்க ளாயும்; தபசு விருத் தியாகும் பொருட்டு, வெயிற் காலத்தில் பஞ்சாக்கிநி மத்தியினும், மழைக் காலத்தில், சல மத்தியினும், பனிக் காலத்தில், ஈரத் துணியைப் போர்த்துக் கொண்டு மிருந்து, தபஞ் செய்பவர்க ளாயும்; வயது முதிர்ந்த பின்னர்ப் பிரஹ்ம லோகத்தை விரும்பித் தேக நாச பரியந்தம் சலத்தையுங் காற்றையும், புசிப் பவர்க ளாயும்; அல்லது, தன் ஆயுளில் மூன்று பாகத் தைக் காட்டிற் கழித்து விட்டு, நாலாவது பாகத்திற், சந்நியாசஞ் செய்துகொள்பவர்களாயு மிருப்பவர்க ளென அறிக. (மனு தர்ம சாஸ்திரம் 6 ஆம் அத்தி யாயம்) (55)

56. வினா:- சந்நியாச ஆச்சிரமத்தர்கள் யாவர்க ளெனின்?

விடை:- மந்தம், தீவிரம், தீவிரதர மென்னும் வைராகங்களில், துன்ப நேரிட்ட போது குடும்பத்தை வெறுப்ப தாகிய மந்த வைராகத்தால், சந்நியாசஞ் சித்தியா, தீவிரம் தீவிரதர மென்னும் வைராகங்க ளால், எசுர் வேதத்திற் சொல்லிய பிரகாரம், சகல பொருள்களையும், தக்ஷிணை யாக வுடைய பிரஜாபதி ஷ்டியை (யாகத்தை) ச்செய்து, அக்கிநியை ஆத்ம சமாரோபணஞ் செய்து கொண்டு, கிரகத்தினின்றும் நீங்கி, † சந்நியஸ்தம் மயா, § சந்நியஸ்தோகம், என் னும் பிரேஷை மந்திரோச்சாரண பூர்வக மாகச் சந்நி யாசஞ் செய்து கொண்டவர்க ளாயும்; பரிசுத்த மான கமண்டலம், தண்டம், தருப்பை, காஷாயங்களைத்

† சந்நியஸ்தம்மயா — என்றால் (சகல மாயாப் பிரபஞ்ச மும்) விடப்பட்டது.
§ சந்நியஸ்தோகம் — யான் (சகலத்தையும்) விட்டேன்.

தரிப்பவர்க ளாயும்; தேங்காய்ப் பாத்திரம், சுரைக் காய்ப் பாத்திரம், மரப் பாத்திரம், தொன்னை, மண் பாத்திரம், மூங்கிற் படி, இவைகளைச் சுவாயம்பு மநு சந்நியாசிகளுக்குப் பாத்திர மாகச் சொல்லி யிருத்த லால், சுவர்ணம் வெள்ளி, தாம்பிராதிய, லோக பாத் திரங்களை விடுத்து, மண் ணாதிய வோர் பாத்தி ரத்தில் ஏக காலத்தில் பிக்ஷை வாங்கிப் புசிப்பவர்க ளாயும்; ஜிதேந்திரியர்க ளாயும்; ஏகாங்கியர்க ளாயு மிருப்பவர்க ளென அறிக. (56)

57. வினா:- யதிகள், ஏகாங்கியர்க ளாக இருப்பது யாது நிமித்த மெனின்?

விடை:- ஏகாங்கியர்க ளாக இருக்கில், பிக்ஷு; இரண்டு பேர்கள் சேர்ந்தால் மிதுநம்; மூன்று பேர்கள் சேர்ந்தால் கிராமம்; அதற்கு மேற்பட்டால், நகர மென்று சொல்லப்படும். இவைகளில் பிக்ஷு வாக இருத்த லன்றி, மிதுநம், கிராமம், நகர மாகச் சேர்ந்தி ருக்கில், ராஜ (அரசர்) சம்பந்தம் முதலான வார்த்தை களும், பிக்ஷை சம்பந்த மான வார்த்தைகளும், சிநே கம், கோட் சொல்லுதல், மாச்சரிய மாதிகளுமுண் டாகும். அதனால் யதி யானவன், தன் தருமத்தினின் றும் நழுவி விடுவன். ஆதலின், யதி தன் தருமத் தினின்றும் நழுவாதிருக்கும் நிமித்த மாகும். இங்ங னம் பிக்ஷு வாக இருக்கின்ற யதிகளிற் சிலர் சீக்கி ரத்திற் சம்சாரத்தைக் கடத்தற்கு, 1 மூகர் (ஊமை யர்) களாயும் 2. நபுஞ்சகர் (பேடியர்)க ளாயும், 3. முடவர்க ளாயும், 4. அந்தகர் (குருடர்)க ளாயும் 5. செவிடர்க ளாயும், 6. ஜடர்க ளாயு மிருப்பர்க ளென அறிக.

(நாரதபரிவிராஜக உபநிஷத்து 3ஆம் உபதேசம்.
ஜீவன் முக்திவிவேகம் பிரமாணப் பிரகரணம் (57)

58. வினு:- உலகில் அநேகர்கள் ஊமையர்க ளாயும், நபுஞ்சகர்க ளாயும், முடவர்க ளாயும், குருடர்க ளாயும் செவிடர்க ளாயும், ஜடர்க ளாயும், மரண பரியந்த மிருந்தும், அவர்களி லொருவராயினும் சம்சாரத் தைக் கடந்ததாகக் காணப்படவில்லை. ஆதலின், ஊமைய ராதிரியர் சம்சாரத்தைக் கடப்பர்க ளென் பது அசம்பாவித மெனின்?

விடை:- (1) வாக்கிந்திரிய லோபத்தி லாவது, அல்லது, பிரியாப்பிரிய காரியங்களை மநதில் வைத் துக் கொண்டு, அவைகளை வாக்காற் றெரிவிக்காமல், பூமியாதிகளிலெழுதியும், கைச்சைக்கினை செய்தும், பிறருக்குத் தெரிவித்துக் கொண்டு. தன்னை யாவரும் மௌநி யென மதிக்க வேண்டு மென்னும் எண்ணத் தா லாவது, ஆடு மாடுகள் போல, வாய் பேசாதிருப் பவர்களை, யிங்கு ஊமையர்க ளென்று சொல்லிய தன்று. அந்நாதிகளைப்புசிக்கிறவர்களாக இருக்கினும் இது நன்ரு யிருக்கிறது, இது நன்ரு யில்லை யென்று சொல்லத் தக்க தாகிய விஷயங்களில், எவர்கள் அபி மாநம் வைக்கிற தில்லையோ, எவர்கள் இத மாயும், சத்திய மாயும், மித மாயும், சங்கிரக மாயும் பேசுகிருர்களோ, அவர்களை ஊமையர்க ளென்ற தா கும். (2) வீரியமில்லாமையினுலும், அலித் தன்மையி ணுலும், ஸ்திரீக ளிடத்தில் மோக மில்லாதிருப்பவர் களையிங்கு நபுஞ்சகர்க ளென்று சொல்லிய தன்று, இப் போது பிறந்த பெண் குழந்தையையும், நூறு வய துள்ள கிழவியையும் பார்த்து. எதனுல்விகார மடைகிற தில்லையோ, அதனுல் ரதி போன்ற அழகினை யுடைய பதினறு வயதுப் பெண்ணைப் பார்க்கினும், விகார மடையா திருப்பவர்களை நபுஞ்சகர்க ளென்ற தாகும். (3) காலொடிவு, கால் முடக்கு, பாதேந்திரியக் குறை

வினுல் நடக்குங் கிரியை யில்லாதவர்களை யிங்கு முடவர்க ளென்று சொல்லிய தன்று. பிக்ஷைக் காகவும், மல விசர்ச்சநத்துக்காகவு மாத்திரம் எவர்கள் ஒரு யோசனை தூரத்துக் கதிகப் படாமற் சஞ்சரிக்கிறார்களோ, அவர்களை முடவர்க ளென்ற தாகும் (4) நேத்திரேந்திரிய லோபத்தா லாவது, காச படலாதி வியாதிகளா லாவது, ஒன்றையும் பார்க்கா திருப்பவர்களை யிங்கு குருடர்க ளென்று சொல்லிய தன்று. நின்றாலும், நடந்தாலும், எவர்க ளுடைய பார்வை நாலுநுகத் தடி தூரத்துக் கப்பால் பூமியை விட்டு போகிற தில்லையோ, அவர்களைக் குருடர்க ளென்ற தாகும் (5) சுரோத்திரேந்திரிய லோபத்தால்சப்தங்களைக் கிரகியா திருப்பவர்களை, யிங்குச் செவிடர்க ளென்று சொல்லிய தன்று. மநதுக்குச் சந்தோஷ விசந மாதிகளை யுண்டுபண்ணாத் தக்க வார்த்தைகளைக் கேட்டாலும், கேட்காதவர்கள் போலிருப்பவர்களைச் செவிடர்க ளென்ற தாகும். (6) உன்மத்த மாதிய சித்த மயக்கங்களால், விஷயங்களைப் பற்றிக் கலங்காதிருப்பவர்களை யிங்கு ஜடர்க ளென்று சொல்லிய தன்று. பிரியாப்பிரியத்துக்கு ஏது வாகிய விஷயங்கள் சமீபத் திருக்கினும், அவைகளால் கலங்காத இந்திரியங்களை யுடையவர்க ளாய்த் தூங்குகிறவர்கள் போலெப் போது மிருப்பவர்களை ஜடர்க ளென்று சொல்லிய தாகும். ஆதலின், இங்ஙனம் ஆறு வித மாக இருப்பவர்கள் சம்சாரத்தைச் சீக்கிரத்திற் கடப்பவர்கள் என்பதற் கைய மின்று. இங்ஙனம் பல வித மாக இருக்கின்ற சந்நியாச ஆச்சிரமத்தர்களில், தீவிர வைராகிகள் குடீசகம், வெகூதக மென்னும் உபய சந்நியாசங்களையும், தீவிரதர வைராகிகள் அம்சம், பரமாம்ச மென்னும் உபய சந்நியாசங்களையும் உடையவர்களாவ ரென அறிக. (58)

59. வினு:- குடீசகாதி நால் வகைச் சந்நியாசிகள் யாவர்க ளெனின்?

விடை:- குடீசு என்பது சிறு வீடு. அக மென்பது இடம். தேச யாத்திரை செய்தற்குச் சத்தி யின்றி, ஊர்ப் பொதுவி லிருக்கின்ற குடிசை யாகிய பன்ன சாலையை யிடமாகக் கொண்டு வசிப்பவர்களாயும்; ஒரே யிடத்தில் அந்நம் புசிக்கிறவர்க ளாயு மிருப்பவர் கள், குடீசகர்க ளாகும். வெகு என்பது பல; உதக மென்பது (பூமி, அல்லது,) சலமாம். இருப்பது இன்ன வூர், இன்ன இட மென்னும் நியமமின்றிக் கிராமத்தி லொரு நாள், புரத்தி லிரண்டு நாள், பட்டணத்தில் மூன்று நாள், நகரத்தில் ஐந்து நாள்களுக்கு அதிகப் படாமல் வசிப்பவர்க ளாயும்; வருஷா காலங்களில் கிராமம், அல்லது நகரங்களில் நான்கு மாதம் வசிப்பவர்களாயும்; மற்றைக் காலங்களில், காடு, மலை, வந முதலிய இடங்களில் வசிப்பவர்க ளாயும்; பல பல பூமிகளி லுள்ள பல பல சல மாதிகளைப் புசித்துக் கொண்டு, பயத்தினு லோரிடத்தினும் தங்காது திரிகின்ற மானைப்போற், சஞ்சரிப்பவர்க ளாயு மிருப்பவர்கள், வெகூதகர்களாகும். பிரமலோக இச்சையால் முமுட்சுத்துவ மின்றி யிருப்பவர்கள், அம்சர்க ளாகும். நிட்காம புண்ணிய பரிபாக பல மாகிய சித்த சுத்தியால் முமுட்சுத்துவத்தை யடைந் திருப்பவர்கள் பரமாம்சர்க ளாகும். இவர்களில், குடீசகரும், வெகூதகரும், மறுமைப் பயனைக் குறித்த கரும சந்நியாசியர்க ளானமையால் மறுமைப் பய னாகிய சுவர்க்க லோகங்களை யடைபவர்களாகும். இவர்கட்கு வேருக ஆதுர சந்நியாசி, கரும சந்நியாசி, கிரம சந்நியாசி யென மூவ ருண்டு. இம் மூவரில், ஆதுர மென்பது நோய்; தேக வியாதி யதிகரித்து தேகம் இருக்குமோ மரிக்குமோ என்ற சந்தேக முண்டாகுங் காலத்திலாவது மரண சமீப காலத்தி லாவது பிரேஷை மந்திரோச்சாரண பூர்வக மாகச் சந்நியாசம் வாங்கிக்கொள்பவர்க ளாயும், விதியாகச் சொல்லப்பட்ட சந்நியாச கருமக் குறை வுள்ளவர்க ளாயு மிருப்பவர்கள், ஆதுர சந்நியாசிக ளாவர்.

இவர்களே, நிமித்த சந்நியாசிகளு மாவர்கள். பிரமசரிய ஆச்சிரமத்தி லிருந்து, அதன் விரதத்தை முடித்துக் கிரகாச்சிரமத்தர்க ளாகிப், பின் வாநப் பிரஸ்தாச்சிரமத்தை யடைந்து, வைராக மில்லாவிடி னும் ஆச்சிரமக் கிரமாநுசாரமாய் மந்திரோச்சாரண பூர்வக மாகச் சந்நியாசம் வாங்கிக் கொள்பவர்கள் கரும சந்நியாசிக ளாவர். எங்குமா யுள்ள பிரஹ்மத்தைத் தவிர மற்றவைகள் யாவும் அநித்த மென நிச்சயித்துக் கிரமமாகச் சந்நியாசம் வாங்கிக் கொள் பவர்கள், கிரம சந்நியாசிக ளாவர். இவர்களே, அநிமித்த சந்நியாசிகளு மாவர்கள். அம்ஸர்கள் பிரஹ்ம லோகத்தை யடைந்து பிரஹ்மன் முன்னிலை யில் ஞாநம் பெற்றுப், பின் முத்தி யடைபவர்க ளாவர். பரமாம்ஸர்கள் இந்த லோகத்திற் றனே ஞாநம் பெற்றுச் சீக்கிரத்தில் முத்தி யடைபவர்க ளாவர். இந்தப் பரமாம்ஸர்களும், விவிதிஷா சந்நியாசிக ளெனவும், வித்துவத் சந்நியாசிக ளெனவும், இரண்டு விதமா யிருப்பர்க ளென அறிக. (59)

60. விஞ.- விவிதிஷா சந்நியாச மாவது யா தெனின்?

விடை:- ஞாந பூமிகளுள் சுபேச்சை, விசாரணை, தநுமாநசி யென்னும் மூன்று பூமிகளை யுடையராய், "வேதிதும் இச்சயா" (அறியத் தக்கதை யறிய வேண்டுமென்னும் ஞாந இச்சையாற்) செய்து கொள்ளும் சந்நியாசம் விவிதிஷா சந்நியாச மாம். இதனை, ஜிஞ்ஞாசு சந்நியாச மெனவும் கூறுவர். இச் சந்நியாசம் மேற் சநநத்தைத் தரத் தக்க சகல கன்மங்களையும் மநதினல் விடுவ தாகிய மாநச ரூப மாகவும்; மந்திரோச்சாரண பூர்வக மாகிய தண்ட கமண்டலாதி தாரண ஆச்சிரம ரூப மாகவு மிருக்கும். இவ் விரண்டில் முந்திய மாநச சந்நியாசத்தில், அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரோடு ஸ்திரீ

களுக்கு மதிகார முண்டு. இதற்கு மைத்திரி முதலிய ஸ்திரீகள் ஞாந மடைந்திருக்கிறார்க ளென்கிற சுருதியே பிரமாண மாகும். பிரமசாரி, கிரகஸ்தர், வாநப்பிரஸ்தர்கட்குப் பிரசித்த மான வாகிய சந்நியாசஞ் செய்து கொள்வதில் யா தானு மோர் நிமித்தத்தாற் பிரதிபந்த மிருந்தால், அவர்கள் தன் னாச்சிரம தருமங்களை விடாமல் ஞாந சாதந மான மாநச சந்நியாசஞ் செய்துகொள்வதற்கு அதிகார முண்டு; விரோத மில்லை யென அறிக. (60)

61. வினா:- ஸ்திரீகளுக்கு மாநச சந்நியாசமே யன்றிப் பிரேஷை மந்திரோச்சாரண பூர்வக மா யுள்ள தண்ட கமண்டலாதி தாரண ஆச்சிரம ரூப மாகிய சந்நியாச மில்லையோ வெனின்?

விடை:- மைத்திரியைப் போல், விவாகம் பண்ணிக் கொண்டு நாயகனிடத்திருக்கின்ற ஸ்திரீ களுக்கு மாநச சந்நியாச மாத்திர முண்டு. விவாக மின்றிய கந்நிகைகளுக்கும் நாயக னிழந்த விதந்துக் களுக்கும், சுருதிகளில் பிக்ஷுகி யென்னும் வாக்கிய மிருத்தலால். மந்திரோச்சாரண பூர்வக தண்ட கமண்டலாதி தாரண ஆச்சிரம ரூப மாகிய விவிதிஷா சந்நியாசமு முண் டென அறிக. (61)

62. வினா:- ஸ்திரீகளுக்கு ஆச்சிரம ரூப மாகிய சந்நியாசம் உண் டென எங்கே சொல்லியிருக்கிற தெனின்?

விடை:- மோக்ஷ தரும மென்னுங் கிரந்தத்தில் நாலாவது டீகா, சநகர் சம்வாதத்தில், திரிதண்டாதி தாரண ஆச்சிரமிக ளாய், ஈடணாத்திரயத் தியாகம், பிக்ஷாந்ந போசநம், வேதாந்த சிரவணம், ஏகாந்தத் திருந்து பிரஹ்மத் தியாநஞ் செய்குத லாகிய சந்நியாசம் சுலப மாக ஸ்திரீகளுக்கு உண்டெனச்

சொல்லியிருக்கிறது. இங்ஙனமே, சாரீரக பாஷியத்திலுஞ் சொல்லியிருக்கிற தெனப் பிரமாண மாக எடுத்து வித்தியாரண்ணிய சுவாமிகள் சீவந் முத்தி விவேக மென்னுங் கிரந்தத்தில் விவிதிஷா சந்நியாசஞ் சொல்லுமிடத்தில், ஸ்பஷ்ட மாகச் சொல்லியிருக்கிருர்கள். இஃதன்றிப் போதாயநர் ஸ்திரீகளுக்கும் சந்நியாசங் கூறியிருக்கிரு ரெனவும், அதை விஞ்ஞா நேசுரர் ஒப்பியும் வருகிரு ரெனவும், வயித்திநாத தீக்ஷிதீயம் வருணுச்சிரம காண்டத்திற் சொல்லியிருக்கிறது. மநு தர்ம சாத்திரம் எட்டாவது அத்தியாயம் ஸ்திரீ சங்கிரகணத்தில், சந்நியாசம் பண்ணிக் கொண்ட ஸ்திரீக ளுண் டெனவும் கூறுகிறது. ஆதலின், மாநச சந்நியாசம் சகல மான ஸ்திரீகளுக்கும் உண் டெனவும், ஆச்சிரம ரூப மாகிய சந்நியாசம் கந்நிகை, விதந்துக்களுக்கு மாத்திரம் உண் டெனவுங் கொள்ளற்பால தென அறிக. (62)

63. விஞ:- வித்துவத் சந்நியாச மாவது யா தெனின்?

விடை:- சிரவண மநந நிதித்தியாசந வலியால், பிரஹ்மத்தைத் தன் சொரூப மாக அறிந் துள்ள ஞாநாநந்தரம் வாசநா க்ஷய, மநோ நாச, தத்துவ ஞாநங்களின் அப்பியாச வாயி லாக சீவன் முத்திச் சுகத்தை யபேக்ஷித்துச் செய்து கொள்வ தாகிய பரமாம்ச சந்நியாசமே, வித்துவத் சந்நியாசமாகும். இதனை ஞாநவான் சந்நியாச மெனவுங் கூறுவ ரென அறிக (63

64. விஞ:- விவிதிஷா சந்நியாசத்துக்கும், வித்துவத் சந்நியாசத்துக்கும், ஏதுக்க ளெவை யெனின்?

விடை:- மிகுந்த பசியுளானுக்கு மற்றொன்றிலும் விருப்பமின்றி, அந்நத்தில் மாத்திரம் விருப்ப

முண்டாவது போல, சந்மந் துக்கமென் றறிந்த வனுக்குச் சந்ம ஏதுக்களாகிய கருமங்களி லிச்சை யின்றிச் சந்ம நிவிர்த்தியை யபேக்ஷித்துத் தீவிரமாக வுதய மாகின்ற சிரவணுதி சாதந சகித ஞாந இச்சை யாகிய விவிதிஷையே, விவிதிஷா சந்நியாசத்துக் கேதுவாகும். அவதிபரியந்த முள்ள ஞாநமாகிய வித்துவத்துவமே, வித்துவத் சந்நியாசத்துக் கேது வாகுமென அறிக. (64)

65. வினு:— விவிதிஷா சந்நியாச பலமாகிய அவதி பரியந்தமான தத்துவ ஞானத்தால், சஞ்சிதத்தோடு ஆகாமிய கன்மமும் பற்றுது நீங்கிவிடுகின்றமை யினுனும்; யாதொரு பிரயத்தநமு மின்றிச் சும்மா விருக்கினும், தேகாந்தத்தில் முத்தி தானே சித்திக் கின்றமையினுனும், வர்த்தமான சந்ம சேஷமான பிராரப்த போகங்களை யநுபவித்தே தீரவேண்டி யிருத்தலினுலும், இந்த வித்துவத் சந்நியாசப் பிரயாசம் பயனற்ற தாகும். ஆதலால், கைவிடத் தக்க தெனின்?

விடை:- வித்துவத் சந்நியாசம் சீவன் முத்தி சுகத்துக் கேது வானமையால், பயனுள்ளதே யாகும். இஃதன்றி, அச் சுகமும், பிராரப்த கன்ம பல போகங்களி லொன்ருனமையினுனும், அதனைக் கொடுப்பிக்கும் நிமித்தம் பிராரப்த கன்மத்தாற் செலுத்தப்பட்டுச் செய்துகொள்ளப் படுவது வித்துவத் சந்நியாச மானமையினுனும், கைவிடத் தக்க தன் றென அறிக. (65)

66. வினு:- வித்துவத் சந்நியாசம் எந்தத் தத்துவ ஞாநியா லடையப்பட்டிருக்கிறது. இஃ துண் டென்பதற்குப் பிரமாணங்க ளெவை யெனின்?

விடை:- தத்துவ ஞாநியாகிய யாக்ஞ வல்கியரா லடையப்பட்டிருக்கிறது. இங்ஙனஞ் சொல்லுகிற பிருக் தாரணியமும், வித்துவத் சந்நியாசிகளின்

ஆசாரங்களைக் கூறுவதாகிய பரமஹம்ஸ வுபநிடதம், சாபால வுபநிடத முதலிய சுருதி, ஸ்மிருதிகளும், வித்துவத் சந்நியாச முண்டென்பதற்குப் பிரமாணங்க ளென அறிக, (66)

67. வினு:- வித்துவத் சந்நியாசிகளின் ஆசாரங்க ளெவை யெனின்?

விடை:- விவிதிஷா சந்நியாசத்தி லங்கீகரிக்கப் பட்டிருக்கின்ற கௌபீந, தண்ட, கமண்டலாதிகளை விடுத்து, உலக வியகாரங்க ளொன்று மின்றித் திகம் பரனுய்ச், சீதோஷ்ண மாநாவமாந மாதி துவந் துவங்க ளின்றி, ஒருவரிடத்தினு மொனறும் வாங்காமல், சுத்த சத்துவ மான மநதோடு பிராண தாரண நிமித்தமாகப் பிக்ஷாகார மாத்திரஞ் செய்வதும்; ''சலாசல நிகேதச்ச'' என்னுஞ் சுருதி வாக்கியப்படி, சலமாயும் (சரீரமாயும்) அசலமாயும் (ஆத்மாவாயும்), உள்ள வாச ஸ்தலத்தை யுடையவ னுயும்; லாபாலாபங்களிற் சமனுயும்; விசநப் பிரதேச (சனங்களில்லாத இட) மாயுள்ள, வீடு, மடம், கோவில், புற்றரை, புற்றடி, மரத்தடி, அக்கிநி கோத்திர சாலை, நதி தீரம், மணல்மேடு, பருப்பத குகை, பருப்பத சிகரம், மலையருவி வீழுமிடம், வெறுந்தரை முதலிய இடங்களில், ஒன்றை இதுவே நமது தியாந ஸ்தல மென்னும் நியமமின்றி யிருந்து தியாநஞ் செய்வதும்; சதா பிரஹ்மமே நாமென்ப தாகிய ஞாநாக்கிநியினுல், சகல கருமங்களையுந் தகிப்பதும்; பாலர், பேயர், பித்தர், கூலியாள்கள் போலிருப்பதும்; வர்த்தமான தேகம் நிவிர்த்தியாகும் போது, நிருபாதிகப் பிரஹ்ம சொரூபமாகச் சேடிக் கிறதும் ஆசாரங்க ளென அறிக. (67)

68. வினு:- ஞாநியானவன் எங்ஙனம் சலமாயும் அசலமாயுமுள்ள வாச ஸ்தலத்தை யுடையவனு யிருக்கிருனெனின்?

விடை:- சலமாயுள்ளது அடிக்கடி மாறுதலுடைய சரீரம். அசலமாயுள்ளது, எந்தக் காலத்தினும் மாறுத லின்றிய ஸ்திர சுபாவத்தை யுடைய ஆத்மா. ஞாநியானவன், பிக்ஷை வாங்குதல் புசித்தலாகிய விவகாரங்கட்குச் சொற்ப காலம் ஆத்ம திருஷ்டியை மறந்து, சலமான சரீரத்திலும், மற்ற நிஷ்டா காலத்தில், தேகாதிப் பிரபஞ்சத்தை மறந்து அசல மான ஆத்மாவிலும் வாசம் பண்ணுகிறவனு யிருத்தலி னென அறிக. (68)

69. வினு:- முன் 67-ஆவது விடையில் வித்துவத் சந்நியாசிகளாகிய ஞாநிகள், பாலர், பேயர், பித்தர், கூலியாள்கள் போலிருப்ப ரென்றது யாதினு லெனின்?

விடை:- பாலர், இது வேண்டும் இது வேண்டா மென ஒன்றினும் இராகத் துவேஷங்களை யடையா திருப்பது போல, ஞாநிகள் தேகாதிப் பிரபஞ்சங்களை மித்தையாக அறிந்த திடத்தால், அவைகளில் இராகத் துவேஷங்க ளில்லாதிருப்பவ ரானமையால் பாலர் போலும்; பேயர், வீரன், காட்டேரி முதலிய பேய் களால் பீடிக்கப்பட்டுப் பீடித்த பேயாகார மாக இருப்பது போல, ஞாநிகள் பிரஹ்மத்தைத் தன்மய மாக அறிந்து பிரஹ்மாகார மாக இருப்பவ ரானமையால், பேயர் போலும்; பித்தர், தேகாதி யபிமாந மின்றி இருப்பது போல, ஞாநிகளும் தேகாதிப் பிரபஞ்சங்களில் யானென தென்னும் அபிமாந மின்றி யிருப்பவ ரானமையால், பித்தர் போலும் கூலியாட்கள், சூரியன் அஸ்தமந மடைதலை யெதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல, ஞாநிகளும் பிராரப்த க்ஷயத்தை யெதிர்பார்த்துக் கொண் டிருப்பவ ரானமையால் கூலியாட்கள் போலு மிருப்ப ரென்ற தென அறிக. (69)

70. வினு:- அதிவருணுச்சிரமி யென்பவன் வருணுச்சிரமங்களுக் கப்பாற்பட்டவ னென்றது யாதினு லெனின்?

விடை:- ஈசுவரனைப் போல, சகல மான வருணிகர்களுக்கும், ஆச்சிரமிகளுக்கும், அதிகாரி களுக்கும் குருவாயிருப்பதே யன்றிச், சீடனுக இராதவ ஞயும்; வருணுச்சிரமங்களையும், அவைகட் குரிய ஆசா ரங்களையும், மாயா கற்பிதமென்றறிந்து நழுவவிட்ட வனுயும்; மக தத்துவாதி சகத் தனைத்தும் பொன்னிற் பூடணமும், இப்பியில் வெள்ளியும் போல், தன்னிற் கற்பித மெனவும், சூரிய சந்நிதாநத்தில் உலகங்கள் சேட்டிக்கிறது போல, சகல உலகங்களும் நமது சந்நிதாநத்திற் சேட்டிக்கிற தெனவும், சொப்பநப் பிரபஞ்சம், சொப்பந திருஷ்டாவுக் கந்நியமாக இல்லாதது போலச், சாக்கிரப் பிரபஞ்சமும் சாக்ஷி யாகிய தனக்கு அந்நிய மாக இலலை யெனவும், திக்குப் பிரமம் விவேகத்தால் நீங்கிய பின்னரும், ஒரு திக்கு மற்றொரு திக்காகத் தோற்றுவது போலத், தத்துவ ஞாநத்தால் நாசமாகிய சகத்துப், பின்பு தோற்றினும் எதார்த்த மல்ல வெனவும், சகல சகத்தும் மித்தை யானமையால், கிரகிக்கத் தக்கனவும், விடத் தக்கனவு மாகிய விதி நிடேதங்கள் தனக்கில்லை யெனவும், சரீரேந்திரிய அவத்தாத் திரயங்கட்குச் சாட்சியாய், மிருக சண்டாளன் சரீர முதல் பிரமன் சரீர மீருகிய சகல சரீரங்களினும் நிறைந்திருந்தும், அவைகளிற் சம்பந்த மின்றிய அசங்க சச்சிதாநந்த நித்த சுத்த பரிபூரண மகா தேவ சொரூபமே பிரத்திய காத்ம சொரூப மாகிய நாமெனவும், நாமே மகா தேவ சொரூப மெனவும், மகா வாக்கிய சிரவண மநநாதிகளால் அப்பிரதியந்த அபரோக்ஷ மாக அறிந்தவனுயு மிருப்பவ னுதலின், அப்பாற் பட்டவ னென்ற தென அறிக. (70

71. வினு:- தன்னைப் பிரத்தியகாத்மா வென்றது யாதினு லெனின்?

விடை:- தூல சூக்கும காரண மென்னும் சரீரத் திரயம், சாக்கிர சொப்பந சுழுத்தி யென்னும் அவத் தாத் திரயம், விசுவ தைசத பிராஞ்ஞ னென்னும் அபிமாநித்திரயம்ஆகிய (9) ம் தோற்ற வொடுக்கங் களை யடைவது போல, தான் ஓர் காலத்தினும் தோற்ற வொடுக்கங்களையடையாமல், அவைகளின், தோற்ற வொடுக்கங்களைச் சாக்ஷி மாத்திர மாக அறிந்துகொண்டு, அவைகளின், சம்பந்த மின்றிப் பிரத்தியேகமா யந்தராத்மாவா யிருத்தலி னென அறிக. (71)

72. வினு:- பிராரப்த நாச மாகிய தேகாந்தத்தில் அநாயாசமாகவே விதேக முத்தி யடையத் தக்கவர்க ளாகிய பிரஹ்ம ஞாநிகளுக்கு, மத்தியி லடையத் தக்க தாகிய சீவந் முத்தி யொன் றுளதென்பதற்குப் பிரமாணங்க ளெவை யெனின்?

விடை:-கட வல்லி, பிருகதாரணியம், தாபநீயம், வராகம் முதலிய சுருதிகளும், சீவந் மூத்தன் முதல், அதிவருணாச்சிரமி யீருகச் சொல்லப்பட்ட நாமப் பிரசங்கங்களால், சீவந் முத்தி யுண் டென்பதையும், அதற்குச் சொரூப சாதநப் பிரயோசநங்களையுந் தெரிவிப்ப தாகிய வாசிட்ட முதலிய ஸ்மிருதிகளு மென அறிக. (72)

73. வினு:- சீவந் முத்திக்குச் சொரூபம் யா தெனின்?

விடை:- சரீர மிருக்கும் போது, கர்த்திருத்துவ, போத்திருத்துவ, சுக துக்காதி ரூப மாகிய பந்தப் பிராந்தி நிவிர்த்தி யென அறிக. (73)

74. வினா — கர்த்திருத்துவாதி பந்த மானது, சாக்ஷியினிடத்தினின்றும் நீக்கப்படுகிறதா? அல்லது, சித்தத்தினின்றும் நீக்கப்படுகிறதா வெனின்?

விடை:- சாக்ஷி சைதந்நியம், எப்போதும் அகர்த்தாவாயும், நிருவிகார மாயும், சாக்ஷி மாத்திர மாயும், தொய்த மின்றிய தாயும், அசங்க மாயு முள்ள தெனச் சுருதிகள் கூறுகின்றமையினானும்; விளக்கப்படுவ தாகிய உலக விவகாரம், உலகத்தி னிட மாக இருக்கிறதே யன்றி, அதனை விளக்குவிப்ப தாகிய சூரியனிடத்திராதது போல, அறியப் படுவ தாகிய சித்த விகார மான கர்த்திருத்துவாதி ரூப பந்த மானது, சித்தத்தினிட மாக இருக்கிறதே யன்றி, அதனை யறிந்து கொண்டு நிருவிகார மாக இருக்கின்ற சாக்ஷியினிடத்தி லின்ருதலினாலும்; சாக்ஷியினிடத்தினின்றும் நீக்கப்படுகிற தன்றாம்; சித்தத்தினின்றும் நீக்கப்படுகிற தென அறிக. (74)

75. வினா:- சலத்தில் நெகிழ்ச்சி, அக்கிநியிற் சூடு போல், சித்தத்தி லுள்ள கருத்துருத்துவாதி விகார ரூப பந்த மானது, சித்தத்தின் சுபாவ மானமையால், சித்தத்தினின்றும் பந்த நீக்கங் கூடாது. ஆதலின், சீவன் முத்தி எங்ஙனஞ் சித்திக்கு மெனின்?

விடை:- சித்தத்தினின்றும் பந்த நீக்கம் அத்தியந்தங் கூடாவிடினும், சலத்தி னெகிழ்ச்சிக்கு மண் சம்பந்தத்தினானும், அக்கிநிப் பிரிவினானும்; அக்கிநியின் சூட்டுக்கு, மணி மந்திரங் களினானும்; அடக்கங் கூடுவது போலத், தியாநாப்பியாசத்தால், கருத்துருத்துவாதி விகார ரூப பந்தம் அடக்கமாம். இவ் வடக்கமே, சீவந் முத்திக்குச் சொரூப மானமை யின், சித்திக்கு மென அறிக. (75)

76. வினு:- அஞ்ஞாநம், அஞ்ஞாந காரியங்களை நாசஞ் செய்வதில், சாமர்த்திய முடைய தத்துவ ஞாநத்தையும், பிரதிபந்தித்துக் கொண்டு தேகாதி களைத் தோற்றுவித்துச் சுக துக்க மாகிய பலத்தைக் கொடுக்குஞ் சாமர்த்தியமுடையது பிராரப்த கன்ம மானமையால், அஃ துள்ள போது, சுக துக்க போகாநுபவங்கட் கேது வாகிய சித்த விருத்திகளின் அடக்கங் கூடு மெனல் பொருந்தா தெனின்?

விடை:- சித்த விருத்திகளின் அடக்கத்தாற் சித்திப்பதாகிய சீவந் முத்தி யானது, சுகாதிசய ரூப மானமையால், அதுவும் பிராரப்த கரும காரியங் களிற் சேர்ந்ததே யாகும். ஆதலால், பொருந்து மென அறிக. (76)

77. வினு:- சீவந் முத்திக்குச் சாதநங்க ளெவை யெனின்?

விடை:- தத்துவ ஞாநம், வாசநா க்ஷயம், மநோ நாச மாகிய மூன்று மென அறிக. (77)

78. வினு:- தத்துவ ஞாந மாவது யா தெனின்?

விடை:-கானற் சலம். கானலுக்கு அந்நிய மாக ஓர் பொரு ளாக இல்லை யெனவும், மித்தை யாகத் தோற்றுகிற தெனவும், இருக்கிறது கானலே யெனவும், அதன் உண்மையை யறிவது போல; நாம ரூபப் பிரபஞ்சம் பிரஹ்மத்துக் கந்நிய மாக, ஓர் பொரு ளாக இல்லை யெனவும் மித்தை யாகத் தோற்றுகிற தெனவும், இருக்கிறது பிரஹ்மமே யெனவும், அதுவே, பிரத்திய காத்ம சொரூப மாகிய தா னெனவும், எதார்த்தத்தை யறிவ தாகிய ஞான மென அறிக. (78

79. வினு:- வாசனை யாவது யாது? அஃ தெதனுல் நிவிர்த்தி யாகு மெனின்?

விடை:- பூருவாபர மொன்றையும் விசாரியாமற், சீக்கிரத்தி லுதய மாகுங் குரோதாதி விருத்திகளுக் கேது வாகிய சித்தத்தின் சூட்சுமாவஸ்தை யாகிய சம்ஸ்காரமே வாசனை யாகும் இது, மாநசிக வாசனை, விடய வாசனை யென இரண்டா யிருக்கும். இவ் வரண்டில், சத்த முதலிய விடயங்களை இச்சிக்குங் காலத் துண்டாகிற சம்ஸ்காரம், மாநசிக வாசனை யாகும். அவ் விடயங்களை யநுபவிக்குங் காலத் துண்டாகிற சம்ஸ்காரம், விடய வாசனை யாகும். தேக வாசனை, லோக வாசனை, சாஸ்திர வாசனை, அசுர வாசனை யாகிய நான்கும் மாநசிகம், விடயமென்னுமிரண்டு வாசனைகளி லடங்கும். இவ் விரண்டும், மலிந மாகிய அசுப வாசனைக ளாம். இவைகள், புருடப் பிரயத்தநத்தா லுதிப்ப தாகிய விஷய தோஷ விவேகத்தினாலும், மைத்திரியாதி வாசனை, சின்மாத்திர வாசனை யாகிய சுபவாசனை களாலும். நிவிர்த்தி யாகு மென அறிக. (79)

80. வினா:- விஷய தோஷ விவேக மாவது யா தெனின்?

விடை:- சத்த மாதிய விடயங்களி லுள்ள தோஷங்களையும், அவ் விடய இச்சையாற் பொருந்திய சநந மரணாதிகளால் வருந் துக்கங்களை யும், சாத்திரங்களினாலும், தன்னநுபவத்தாலும், ஆராய்த லாகும். இவ் விவேகத்தை விரி வஞ்சி விரித்திலேம் அறிய விரும்பில், வாசிட்டம் வைராக் கியப் பிரகரணத்தினும், விசார சாகரம் ஐந் தாவது தரங்கத்தினும், சீவந் முத்தி விவேக மென்னுங் கிரந்தத்தினும் காண்க. (80)

81. வினா:- சிந் மாத்திர வாசனை யாவது யா தெனின்?

விடை:- சர்வாதிட்டாநசின் மாத்திர பரிபூரண மாகிய பிரஹ்மத்திற், பாஹியாந்தர மான சகல சகத்தும் கற்பிதம்; பிரஹ்மத்துக் கந்நிய மாக இல்லை; எப்போது மிருப்பது அகண்டைகரசப் பிரஹ்மம்; அதுவே தான்; தானே அது வென அறிந்து பாவிப்பதா லுண்டாகும் சம்ஸ்கார மென அறிக. (81)

82. வினு:- மலிந வாசனைக ளாகிய அசுபவாசனை களைச் சிந் மாத்திர வாசனை யொன்றுமே நிவிர்த்திக் கத் தக்க தானமையால், அதனை மாத்திரம் அப்பியா சிக்க லாம். மைத்திரியாதி வாசனைகளை யப்பியாசிக்க வேண்டா மெனின்?

விடை:- சுவர் திடப்படாவிடில் வீ டெங்ஙனம் திடப்படாதோ, விரேசந மாத்திரை புசித்துத் துர் மலங்களை நிவிர்த்தி செய்யாமல், புசிக்கப்பட்ட ஔடதம் எங்ஙனம் வியாதியை நிவிர்த்திசெய்ய மாட்டாதோ; அங்ஙனம், ராகத், துவேஷ, குரோத, அசூயை யாதிகளை நிவிர்த்திப்ப தாகிய மைத்திரி யாதி பாவனை திடப்படாவிடில், சிந் மாத்திர வாசனை திடப்படாது. திடப்படாத சிந் மாத்திர வாச னையால், மலிந வாசனைகள் அத்தியந்தம் நிவிர்த்தி யாகாவாம். ஆதலின், சிந் மாத்திர வாசனை திடப் படும் நிமித்தம் மைத்திரி யாதிய வாசனைகளையும், அப்பியாசிக்க வேண்டுமென அறிக. (82)

83. வினு:- அசுபவாசனையை நிவிர்த்திசெய்வ தாகிய சுபவாசனையை யுண்டுபண்ணுவதற்குக் கர்த் திரு கரணநு சந்தாந ரூப மான புருடப் பிரயத்திநம் வேண்டுமானுல், சுபவாசனையை நிவிர்த்தித்தற்கு, மற் ரொரு பிரயத்திநமும், அதனை நிவிர்த்தித்தற்கு, மற் ரொரு பிரயத்திநமு மாக, மேலு மேலும் வேண் டப்பட்டு முடிவு பெரு வாம், ஆதலின், மநதுக்கு ஒரு

வாசனையு மின்றிச் சாந்த மடையுங் காலஞ் சித்திக்க மாட்டா தெனின்?

விடை:- பிணஞ் சுடு தடி, தன்னைச் சுடுவதற்கு வேறு தடி வேண்டுவ தின்றிப் பிணத்தோடு தானுந் தகந மாய் விடுவது போலும், கலங்கற் சலத்திற் போடப்பட்ட கதக ரேணு, சலத்தி லுள்ள மலிநங்களை நிவிர்த்தி செய்து கொண்டு, தானு மோர் பிரயத்தி நமு மின்றி நிவிர்த்தியாய் விடுவது போலும், சுப வாசனையும், அசுபவாசனையை நிவிர்த்தி செய்து விட்டுத், தானும் ஓர் பிரயத்திநமு மின்றி நிவிர்த்தி யாய் விடும். அப் போது மநது ஓர் வாசனையு மின்றிச் சாந்த மாய் விடுமென அறிக. (83)

84. வி:- வாசநா க்ஷய மெதனு லிரக்ஷிக்கப்படு மெனின்?

விடை:- இந்திரிய நிக்கிரகத்தா லென அறிக (84)

85. வி:- இந்திரிய நிக்கிரக மாவது யாதெனின்?

விடை:- சுரோத்திராதி யிந்திரியங்களைச் சத்த மாதிய விடயங்களிற் செல்லவிடாமற் றத் தங் கோளகங்களிற் கிரமமாக நிறுத்துத லென அறிக. (85)

86. வி:- மந தென்பது யாது? அஃதெதனுல் நாசமாகு மெனின்?

விடை:- சாவயவ மாய், அரக்கு, சுவர்ணம், மெழுகு முதலியன போல, வெகு வித பரிணும யோக்கியத் திரவிய மாய், பிரகாசம், பிரவிருத்தி, மோகமே சொரூப மாகிய, சத்துவ இராஜத தாமத குணுத்மக மாய், தமோ குண விகசிதத்தால், அசுரசம்பத்தையும் ரஜோ குண விகசிதத்தால், தேக வாசனை, லோக

வாசனை, சாஸ்திர வாசனைகளையும், சத்துவ குண விகசிதத்தால், ஞாந முதலிய தெய்வ சம்பத்தையும், உண்டுபண்ணுவ தாய், தியாநாப்பியாச வலியால், தாமத, மிராசத மாகிய இரண்டு குணங்களும் நிவிர்த்தி யாகத் தக்க செயற்கைக் குணங்க ளாகவும். சத்துவ குணம் ஒன்றினலும நிவிர்த்தியாகாத இயற்கைக் குணமாகவும், உள்ளதா யிருப்பதால், இம் மநது அட நிக்கிரகத்தால் நாச மாகாது. கிரமநிக்கிரக மாகிய அத்தியாத்மவித்தை, சாது சங்கம், வாசநாக்ஷயம், பிராண சலந நிரோத மாகிய உபாயங்களால் நாச மாகு மென அறிக.

(ஞானவாசிட்டம், உபசாந்திப்பிரகரணம், 56 ஆம் கவி. தலைப்பு ஊகநன்மையால் (86)

87. வினு:– ஹட நிக்கிரக மாவது யா தெனின்?

விடை:– ஞாநேந்திரிய, கன்மேந்திரியங்களை அதனதன் கோளகங்களைத் தகைந்து நிக்கிரகஞ் செய்வதாம். இது போல, மநதையும் நிக்கிரகிக்கக் கூடா தென அறிக,

(பகவத்கீதை 6 ஆம் அத்தியாயம், 35 ஆம் சுலோகம் தலைப்பு, அஸம்ஸயம்) (87)

88. வினு:– மநதை அட நிக்கிரகத்தால் நிக்கிரகிக்கக் கூடா தென்றது யாதினு லெனின்?

விடை:– இந்திரிய கோளகங்கள் பாஹியத்திலுள்ளன வானமையால், அவைகளைத் தகைதற்குக் கூடும். மநதின் கோளகை யாகிய இருதய கமலம், ஆந்தரத் திருப்பது பற்றி, அதனைத் தகைதற்குக் கூடாமையி னென அறிக. (88)

89. வினா:- கிரம நிக்கிரக மாகிய நான்குபாயங்களில், அத்தியாத்ம வித்தை யாவது யாது? அதனால், மநது எங்ஙனம் நாச மாகு மெனின்?

விடை:- உள்ள தாகிய ஆத்மாவை யறியச் செய்வதாகிய விசார ஞாந தியாநங்கள், அத்தியாத்ம வித்தைகளாகும். இவைகளில், விசார ஞாநமானது, திருசியமா யுள்ள அனைத்தும் மித்தை; திருக்கா யுள்ள பிரத்திய காத்மா சத்திய மாகிய சொப்பிரகாச மென அறிவிக்கின்றமையால், மநது மித்தை யாகிய திருசியத்திற் பிரயோசந மில்லை யெனவும், சத்திய மாயும், சொப்பிரகாச மாயு முள்ள பிரத்திய காத்மாவை விஷய மாகப் பண்ணிக் கொள்ளும் யோக்கியதை தனக் கில்லை யெனவும், விவேகத்தால் அறிந்து விற கில்லாத அக்கிநி போலத், தன் காரணத்திற்றனே சாந்தி யடைந்து விடும் தியாந மானது, மநதின் இராஜத, தாமத குணங்களை நிவிர்த்தி செய்து, சத்துவ குண மாத்திர மாகச் சேடிக்கச் செய்கின்றமையால், மநது ஏகாக்கிர முற்று, சூட்சும மாகி ஆத்மாநுபவத்துக் குரிய யோக்கியதை யுடைய தாய் ஆத்மப் பிரகாசத்திற்றனே சாந்த மாய் விடு மென அறிக. (89)

90. வினா:- இராசத, தாமத குண நிவிர்த்தியால் மநதுக்கு ஏகாக்கிரமும், சூட்சுமத் தன்மையும், ஆத்மாநுபவத்துக் குரிய யோக்கியதையும், உண்டாகு மென்றது யாதினா லெனின்?

விடை:- சஞ்சல விருத்திக் கேது வாயது ரஜோ குணமானமையால், அத னிவிர்த்தியால் ஏகாக்கிரமும், அநாத்ம ரூப மான தூல பதார்த்தாகாரத்துக் கேது வானது, தமோ குண மானமையால், அதனிவிர்த்தியால் சூட்சுமத் தன்மையும், ஞாநத்துக் கேது

வானது சத்துவ குண மானமையால், சத்துவ குண மாத்திர மாகச் சேடித்தலால், ஆத்ம ஞாநத்துக் குரிய யோக்கியதையும், மநதுக் குண்டாகு மென அறிக. (90)

91. வினு:- சாது சங்க வுபாய மாவது யா தெனின்?

விடை:- குரு முக மாகச் செய்யப்பட்ட சாஸ்திர சிரவணுதிகளால், பிரஹ்மாத்மைக்கிய ஞாநாநு பூதியையடைந் துள்ள சித்த சாந்தர்களோடு கூடி யிருத்த லென அறிக. (91)

92. வினு:- சாது சங்க வுபாயத்தால், மநது நாச மாகு மென்றது யாதினு லெனின்?

விடை:- குரு முக மாகச் சிரவணுதிகள் செய் திருக்கினும், பிரஹ்மத்தை நன்ரு யறியாதவனும், அறிந்த போதிலும், ம ற ந் து விடுகிறவனும், சாதுக்களை யெப் போதுஞ் சேர்ந்திருக்கில், அவர்கள் அடிக்கடி யொருவர்க் கொருவர் தத்துவ விசாரஞ் செய்வதைக் கேட்பதினுலும், அல்லது அவர்கள் கருணையினுல் நேரே சுருதி யுத்தி யநுபவங்களுக் கேற்பப் போதித்தலினுலும், நன்ரு யறியப்படா திருந்த பிரஹ்மத்தை நன்ரு யறிதலும், மறந்த சொரூபப் பிரஞ்ஞை ஸ்திரமா யுதயமாதலும் சித்திக்கும். அப்போது, மநது பிரஹ்ம சொரூபத் தையே நாடிப் பிரஹ்மப் பிரகாசத்திற் கரைந்து லயமாய் விடும். ஆதலின் சாது சங்க வுபாயத்தால் மநது நாசமாகு மென்றதாம். வித்தியா மத முதலிய துர்வாசனையால், சாதுசங்கங்களை யநுசரிக்கச் சம்மத மில்லாதவன், விஷய தோட விவேகத்தால் வாசநா க்ஷயஞ்செய்து அதனுல் மநதை நிக்கிரகிக்கவேண்டும். மிகவும் துர்வாசனைகளால் மநம் நாசமாகா விடிற், பிராண சலந நிரோத மாகிய வுபாயத்தால் மநோ நாசஞ் செய்ய வேண்டுமென அறிக. (92)

93. வினு :- பிராண சலந மாவது யாதெனின்?

விடை :- பிராண னுனது, இருதய முதல் நாசி பரியந்தஞ் சலித்துக் கொண்டிருந்த லென அறிக. (93)

94. வினு :- பிராண சலந நிரோத மாவது யாதெனின்?

விடை: ரேசக, பூரக, கும்பக, ரூபப் பிராணு யாமப் பழக்கத்தால், பிராண வாயு பாஹியத்தி லாவது, ஆந்தரத்திலாவது, அல்லது, பாஹியாந்தரங் களில் ஒரே காலத்தில் சமமாக வாவது, தன் கதி யோய்ந்து நின்று விடுதலென அறிக. (94)

95. வினு :- பிராண சலந நிரோதத்தால், மநது நாசமாகு மென்றது யாதினு லெனின்?

விடை :- மநது சலித்தற்கு மலிந வாசனை காரணமா யிருப்பது போலப் பிராண சலநமுங் காரண மெனவும், மநமும், பிராணனும் ஒரே பூதத்தின் அம்ச மெனவும், மநமடங்க, வாசியும்; வாசி யடங்க மநமும்; அடங்கு மெனவும், சாத்திரங் கள் கூறுகின்றமையினுனும், வித்தியாமதம் முதலிய அசுர சம்பத் தின்றிய யோகிக்குப் பிரஹ்ம தியாநத் தால், மநது நிக்கிரக மாகும்போது அவாந்தர பல மாகப் பிராண நிரோதஞ் சித்திப்பதும், அவ்வசுர சம்பத்துடைய யோகிக்குப் பிராணுயாமப் பழக்கத் தால், பிராண சலந நிரோத மாகும் போது, அவாந்தர பலமாக மநோ நிக்கிரகஞ் சித்திப்பதும், யுத்த மாதிய யாதானுமோர் காரணத்தால், அடிபட்டு மூர்ச்சித்தவர்க்குப் பிராண சலநம் அடங்கியிருக்கும் போது, மநதுஞ் சலந மில்லா தடங்கியிருத்தல் சித்திப்பதும், அநுபவ மானமையினென அறிக. (95)

96. வினா :- இந்திரிய நிக்கிரகத்தால், வாசநா க்ஷய மிரக்ஷிக்கப்பட்டு, எப்போது திடப்படுகிறதோ, அப்போது மநது தானே நாசமாய் விடும். ஆதலால், இந்திரிய நிக்கிரகமும், வாசநா க்ஷயமும் வந்தவன், மநோ நாசஞ் செய்வதற்கு வே றுபாயங்களைத் தேடுவது மிகைய ா மெனின்?

விடை :- வாசநா க்ஷய, மிந்திரிய நிக்கிரகத்தா லிரக்ஷிக்கப்படுவது போல, இந்திரிய நிக்கிரகமும், மநோ நாசத்தா லிரக்ஷிக்கப்படுவதினால், மநோ நாச மின்றி, இந்திரிய நிக்கிரகமும், இந்திரிய நிக்கிரக மின்றி, வாசநா க்ஷயமும், திடப்படாவாம், ஆதலின் அவைகள், திடப்படும் நிமித்தம் மநோ நாசத்துக் கான வுபாயங்களை யநுட்டிப்பது மிகையன் றென அறிக. (96)

97. வினா :- தனக்கு வாசநா க்ஷயம் மநோ நாசஞ் சித்தித்திருப்பதை யாதினா லறியலா மெனின்?

விடை :- விவேகத்தா லுண்டாகிய சாந்தியாதிய வாசனைகளின் திடம் பற்றி, பாஹிய நிமித்தங்களால் குரோதாதி விருத்திக ளுதய மாகாதிருப்பதினால், வாசநா க்ஷயமும்; மநது விருத்தி ரூப பரிணாமத்தை விடுத்து, நிரோதாகாரமாகப் பரிணமிப்பதினால், மநோ நாசமும்; சித்தித்துள வென்பதை யறியலா மென அறிக. (97)

98. வினா :- சீவந் முத்திக்குப் பிரயோசநங்க ளெவை யெனின்?.

விடை :- ஞாந ரக்ஷை, தப சித்தி, சர்வ சம்வாதம், துக்க நாசம், சுகாவிற் பாவமாகிய ஐந்து மென அறிக.

(ஜீவன்முக்தி விவேகம் 4-ஆவது பிரயோஜனப் பிரகரணம்) (98)

99. வினு - சீவந் முக்திக்கு முதற் பிரயோசந மாகிய ஞாந ரக்ஷை யாவது யாதெனின்?

விடை :- தத்துவ ஞாநத்துக்கு, ஒன்றினும் கெடுதி நேரிடாம லிருக்கும்படி, அதனை யிரக்ஷிப்ப தென அறிக. (99)

100. வினு:- ஞாந ரக்ஷை சீவந் முத்திக்குப் பிரயோசந மென்றது யாதினு லெனின்?

விடை :- சீவந் முத்தி யானது ஞாநத்தை யிரக்ஷிக்குந் தன்மை யுடையதா யிருத்தலி னென அறிக. (100)

101. வினு :- பிராந்தி ஞாநம் கெடுதியடைவது போலத் தத்துவ ஞாநம் கெடுதி யடையத் தக்க தாயின், அதனைச் சீவந் முத்தியா லிரக்ஷிக்கக் கூடும். தத்துவ ஞாநம் ஒன்றினுலுங் கெடத்தக்க தல்லாமை யால், அது சீவந் முத்தியா லிரக்ஷிக்கப்படுகிற தென்பதும், சீவந் முத்திக்குப் பிரயோசந மென்பதும் கூடா தெனின்?

விடை:— தத்துவ ஞாந முதய மாயினும், சீவந் முத்தியில்லாதவனுக்கு, மநோ நாசம் வாசநா க்ஷய மாகிய சித்த விசிராம மில்லாமையால், பின்னும் சம்சயாதிக ளுதய மாகி, ஞாநத்தைப் பிரதி பந்திக்கும். மணி மந்திரங்களாற் பந்திக்கப்பட்ட அக்கினிக்குக் காஷ்டாதிகளைத் தகிக்கும் சாமர்த்திய மில்லாதது போலச், சம்சயாதிகளாற் பந்திக்கப் பட்ட ஞாநத்துக்குக், கருத்துருத்துவாதி சீவத்துவங் களைக் கெடுத்தற்கு சாமர்த்திய மின்ரும். இதனுல்,

ஞாந பல மாகிய மோக்ஷம் சித்தியாது. மநோ நாசம் வாசநா க்ஷய மாகிய சீவந் முத்தி யுளதேல், மத்திய பாநம் பண்ணினவனுக்குத் தேகாதிகள் மறக்கப் படுவன போலச், சகம் மறக்கப்பட்டுத் தோற்ற மில்லாமற் போகின்றமையால், ஐய மாதிக ளுதய மாகா. அதனால் ஞாநமும் பந்திக்கப்பட மாட்டாது. அதனால் ஞாந பல மாகிய மோக்ஷமுஞ் சித்திக்கும். ஆதலின், சீவந் முத்தியால், ஞாந மிரக்ஷிக்கப்படு மென்பதும், சீவந் முத்திக்கு ஞாந ரக்ஷை பிரயோசந மென்பதுங் கூடு மென அறிக. (101)

102. வினா:- சீவந் முத்திக்கு இரண்டாம் பிரயோசந மாகிய தப சித்தி யாவது யா தெனின்?

விடை:- மநோ நிக்கிரக, இந்திரிய நிக்கிரக ரூப மான ஏகாக்கிர மென அறிக. (102)

103. வினா:- ஞாந மடைதற்குப் பூர்வம், ஞாநத்துக்குப் பரம்பரா சாதநங்க ளாக அதிகாரி யிடத் துள்ள, சமம் தம மென்னும் மநோ நிக்கிரக, இந்திரிய நிக்கிரகங்களை, ஞாந மடைந்த ஆரூட னிடத் துள்ள தத்துவ ஞாநத்தையு மிரக்ஷிப்ப தாகிய சீவந் முத்திக்குப் பிரயோசந மாகக் கூறுதல், அடிமைத் தொழில் அரசனுக்குச் சிறந்த தொழி லென்பது போல, அசங்கதமா மெனின்?

விடை:- ஞாந மடைதற்குப் பூர்வம் அதிகாரியி டத்துள்ள மநோ நிக்கிரக இந்திரிய நிக்கிரகங்கள், வெலத்தினால் வளைத்துப் பிடித்திருக்கின்ற மரத்தின் கிளையைப் போலப், புருடப் பிரயத்தநத்தால் சம்பாதிக்கப்படுவன வாகிய சாதநங்க ளாக இருந்தன. ஞாந மடைந்த பின்னர் அங்ஙன மின்றித், தானே வளைந் துள்ள மரத்தின் கிளையைப் போல், சீவந் முத்தர்கட்குப் பிரயத்தந மின்றித் தாமே

யிலக்கணங்க ளாக அமைந்திருப்பன வாம். ஆதலின், அவைகள் சீவந் முத்திக்குப் பிரயோசநந மெனல் அசங்கத மாகா தென அறிக. (103)

104. வினா:- சிறந்த பிரயோசநத்தைத் தரத் தக்கது தப சாகும். அடையத் தக்கவை யனைத்தையு மடைந் திருக்கின்ற சீவந் முத்தர்பா லுள்ள மநோ நிக்கிரக, இந்திரிய நிக்கிரகங்கள், அவர்கட்கு மேல் யா தொரு பிரயோசநத்தையுந் தரத்தக்கன வல்லாமையால், அவைகளைத் தப செனல் பொருந்தா தெனின்?

விடை:- மநோ நிக்கிரக இந்திரிய நிக்கிரகங் கள் சீவந் முத்தர்கட்குப் பிரயோசநத்தைத் தரத் தக்கனவா யிராவிடினும், உலோகாநுக்கிரக ஏது வா யிருத்தலின், அவைகளைத் தப செனல் பொருந்து மென அறிக. (104)

105. வினா:- உலக மென்பது யா தெனின்?

விடை:- சிஷ்யர்கள், பக்தர்கள், தடஸ்தர்க ளென்னும் மூன்று வித மநுடர்க ளாகப் பார்க்கப்படு பவர்களென அறிக. (105)

106. வினா:- சீவந் முத்தர்பா லிருக்கின்ற தபசு உலகாநுக் கிரகத்துக்கு ஏது வா யுள்ள தென்றது யாதினா லெனின்?

விடை — சிஷ்யர்க ளாகிய சநங்கள், அந்தர் முகர் ளாயிருக்கப்பட்ட சீவந் முத்தர்க ளுபதேசிக்கும் வாக்கியங்களில், நம்புத லுற்றுச் சீக்கிரத்தில் விசிராம மடைகிறார்கள். பக்தர்க ளாகிய சநங்கள், முத்தர்கட்கு ஆகாராதிகள் கொடுப்பதினானும், மடம் முதலியன உண்டு பண்ணிக் கொடுக்கின்றமை யினானும், ஆத்த மாதிய பணிவிடைகள் செய்கின்ற

மையினாலும், அவர்களுடைய தபசுக்குச் சமாநமான புண்ணிய விசேஷங்களை யடைந்து கிருதார்த்தர்களாகிறார்கள். தடஸ்தர்க ளென்பவர்கள், ஆஸ்திகர் நாஸ்திக ரென இருவகுப்பின ராவர். இவர்களில், சாஸ்திரங்கள் கூறுவது சத்திய மென நம்புபவர்கள், ஆஸ்திகர்களாவர். இவர்கள், சீவந்முத்தர்களுடைய ஆசாரங்களைப் பார்த்து மகான்களாகிய இவர்களே ஆசாரங்களை யநுட்டிப்பார்களானால், அஞ்ஞாநிகளாகிய நாமநுட்டியாதிருப்பது பெருங் குறை வென நினைந்து, அநாசாரங்களை விடுத்து, ஆசாரங்களை யநுட்டித்து, அதன் வழி யாகக் கிருதார்த்தர்களாகிறார்கள். சாஸ்திரங்கள் நரக மோக்ஷ சுவர்க்க முண்டென்பது சத்திய மன்று. இவைகளில், ஒன்றையேனுமறிந்தவன் ஒருவனாயினு மில்லாமையால், பின் யாது சத்திய மெனின், பிரத்தியக்ஷ மாகக் காணப்படுகிற தநு கரண புவந போகங்களே சத்திய மாகு மென்னுந் *குதர்க்க புத்தி யுள்ளார்களே நாஸ்திக ராவர். இந் நாஸ்திகர்கள், அந்தர்முகர்களா யிருக்கிற சீவந்முத்தர்களைத் தோட திருஷ்டி யின்றி, நோக்குபவர்களானமையால், இவர்களும், சீவந்முத்தர்கள் திருஷ்டிபட்டு வெகு வித பாவ விமோசநர்க ளாகிறார்கள். ஆதலி னென அறிக. (106)

107. வினா:- சீவந் முத்திக்கு மூன்றும் பிரயோசநமாகிய சர்வ சம்வாத மாவது யா தெனின்?

விடை:- சீவந் முத்தர்கட்கு, லௌகீகர்களாலும், சாஸ்திரஞ்ஞர்களாலும், வரப்பட்ட கலகம், நிந்தை யென்னும் உபய வித விஷம வாத மில்லாமை யென அறிக. (107)

* குதர்க்கம்-சுருதி யுத்தி யநுபவ விரோத மாகிய தர்க்கம்.

108. வினா:- சீவந் முத்தர்கட்கு லௌகீகர்களால் வரப்பட்ட கலக ரூப, நிந்தா ரூப விஷம வாத மில்லை யென்றது யாதினா லெனின்?

விடை:- சீவந் முத்தர்கள் கலக ஏது வான குரோத மாதிய சித்த விகாரங்க ளில்லாதவர்க ளாயும், சதா அந்தர்முகர்க ளாயு மிருப்பவர்க ளானமையாலு, லௌகீகர்களால் கலகஞ் செய்தற் கான ஏதுவும், இன்ன நடையை யுடையவர்க ளென நிச்சயிக்கக் கூடாமையினால், நிந்தித்தற் கான ஏதுவு மில்லாமையி னென அறிக. (108)

109. வினா:- சீவந் முத்தர்கட்குச் சாத்திரஞ்ஞர் களால் வரப்பட்ட கலக ரூப, நிந்தா ரூப விஷம வாத மில்லை யென்றது யாதினா லெனின்?

விடை:- சீவந் முத்தர்கள், சதா ஆத்மத் தியாநம் பண்ண வேண்டு மெனவும், வார்த்தைகள் வசநிக்கப் படா தெனவும், வசநிப்பதால் வாக்குக்கு வருத்தமும், மநதுக்குச் சலநமுமே யன்றி, யா தொரு பிரயோசநமு மில்லை யெனவும், சொல்லுகின்ற வுபநிடத வாக்கியார்த்தங்களை யுட் கொண் டிருப்பவர்க ளானமையால், மற்றைச் சாஸ்திரஞ்ஞர்கள் முன்பு, அவர்கள் சாஸ்திரங்களைத் தூஷித்தற்கும்; தாநியங் கிடைத்த பின்னர் வைக் கோலைத் தள்ளி விடுவது போலப், பிரஹ்மத்தை யறிந்து பிரஹ்மாகார நிட்டை கூடிய பின்னர்ச் சாஸ்திரத்தையும் விட்டுவிட வேண்டு மென்னும் உபநிடத தாற்பரியங்களையும் உட்கொண்டிருப்பவர்க ளாதலால் எந்தச் சாஸ்திரஞ் ஞர்களையும், தமது சொரூப மாகப் பார்க்கும் தன்மய திருஷ்டி யுடையவர்க ளானமையால், மற்றைச் சாஸ் திரஞ்ஞர்கள் முன்பு, தங்கள் சாஸ்திரார்த்தங்களைச் சாதித்தற்கும்; போகாதவர்க ளாய் மௌந மாகவே யிருப்பார்கள். ஆதலின், ''மௌநம் கலக நாஸ்தி''

யென்னும் வாக்கியப்படி மற்றைச் சாஸ்திரஞ்ஞர்கள் சாஸ்திரார்த்தங்களாற் கலகஞ் செய்தற் கான ஏதுவும்; அருக, புத்த, தார்க்கீக, சாத்த, சாங்கிய, சைவ, வைணவ, யோக மாதிய மத சாஸ்திரங்களிற் கூறப்பட்ட பொரு ணிச்சயங்கள் நாநா வித பேத மாக இருக்கினும், அச் சாத்திரங்களில், மோக்ஷ சாதந மான இயமாதி அட்டாங்கங்கள் ஹட யோகச் சார்பாகவே சொல்லப் பட்டிருக்கின்றன. அவ் வட்டாங்க சகித் ஹட யோகத்தின் பல மாகச் சிறந் துள்ள இராஜ யோகமும், சீவந் முத்தர்கள்பால் பிரயத்தந மின்றித் தானே யமைந்திருக்கின்றமை யால், எந்த மதஸ்தர்களாலும் நிந்தை செய்தற்கான ஏதுவு மில்லாமைமி னென அறிக. (109)

110. வினா :- ஹட யோக மாவது யா தெனின்?

விடை :- ஹ-சூரியன்; ட-சந்திரன்; யோகம்-சேர்க்கை; சந்திர சூரியர்களின் ஐக்கிய மென அறிக. (110)

111. வினா :- ஹட யோகச் சார்பாகிய அட்டாங் கங்க ளெவை யெனின்?

விடை :- இமயம், நியமம், ஆசநம் (இருப்பு) பிராணாயாமம் (உயிர்நிலை). பிரத்தியாகாரம் (இந்திரிய மநநிரோதம்), தாரணை, தியாநம், சமாதி ஆகிய எட்டு மென அறிக. (111)

112. வினா :- இவைகளில், இயமமாவது யா தெனின்?

விடை :- 1. அஹிம்சை (கொல்லாமை), 2. சத்தியம், 3. அஸ்தேயம் (திருடாமை), 4. பிரம, சரியம், 5. க்ஷமை (பொறை), 6. திருதி (தைரியம்),

7. தயை, 8. ஆர்ச்சவம் (நேர்மை), 9. மிதாகாரம், 10. சௌசம் (சுத்தம்) ஆகிய பத்து மென அறிக. (112)

113. வினா :- (1) அஹிம்சை யாவது யா தெனின்?

விடை :- எல்லா விதத்தானும் உயிர்களை ஹிம்சியாம லிருத்தலாம். நானே தேக மந இந்திரியங்கள், ஆத்மா இல்லை யென்னும் ஆத்ம ஹத்தியை மநதில் நினையாதிருத்தலையும், ஆத்மா சர்வாத்மகம் நித்தியம் நிருவிகார மென்னும் புத்தியை விடாதிருத்தலையும், மே லோர் அஹிம்சை யென்ப ரென அறிக. (113)

114. வினா :- (2) சத்திய மாவது யா தெனின்?

விடை :- நேத்திர முதலிய இந்திரியங்களால், கண்டவை கேட்டவை செய்தவை அநுபவித்தவைகளை யுள்ளபடி சொல்லிவிடுத லாம். பிரஹ்மம் சத்தியம் மற்றவை அசத்தியமென்னும் புத்தியையும் மேலோர் சத்திய மென்ப ரென அறிக. (114)

115. வினா :- (3) அஸ்தேயமாவது யா தெனின்?

விடை :- அந்நியர்களின் திரண ரத்திந சுவர்ண மாதிய எந்தப் பொருள்களையும் கவர எண்ணாதிருத்த லாம். ஆத்மாவினிடத்து அநாத்மத் தன்மையை வியவகரியா திருத்தலை மேலோர் அஸ்தேய மென்ப ரென அறிக. (115)

116. வினா :- (4) பிரஹ்மசரிய மென்பது யா தெனின்?

விடை:- சாத்திரங்களில் விதித்துள்ள காலத்தில் மாத்திரம் தன் மனைவியைப் புணர்தலும், அந்திய

மாதரை மந வாக்குக் காயங்களால் விலக்கி யிருத்தலு மாம். விலக்கி யிருத்த வாவது - அட்ட வித மைதுநங்களு மில்லாதிருத்தலாம். பிரஹ்ம பாவனை யில் மநஞ் சரித்தலே, மேலோர் பிரமசரிய மென்ப ரென அறிக. (116)

117. வினு :- (5) க்ஷமை யாவது யா தெனின்?

விடை :- சத்துருவாதிகளால் தனக்குத் துன்பம் வரினும், கலங்கா திருத்தலாம். சரீர வியோக காலஞ் சமீபிக்கினும் கலங்கா திருத்தலே, மேலோர் க்ஷமை யென்ப ரென அறிக. (117)

118. வினு :- (6) திருதி யாவது யா தெனின்?

விடை:- வேதாந்த விசாரமே சம்சார நிவிர்த்திக் கேது வென்னுந் திடமாம் யான் ஆத்மா, அந்நிய மல்லன் என்னும் உறுதியை, மேலோர் திருதி யென்ப ரென அறிக. (118)

119. வினு :- (7) தயை யாவது யா தெனின்?

விடை :- சகல வுயிர்களையுந் தன்னைப் போற் காணுதலென அறிக. (119)

120. வினு :- (8) ஆர்ச்சவ மாவது யா தெனின்?

விடை :- புத்திர மித்திர களத்திரர்க ளிடத்தும், பகைவர்க ளிடத்தும். தன்னிடத்தும், சதா சம பாவனை வைத்தலென அறிக. (120)

121. வினு :- (9) மிதாகார மாவது யா தெனின்?

விடை :- லோகத்தில் அநுகூலமான போசநம் தேவாமிர்தமாக இருக்கினும், வாயு சஞ்சரிக்கிறதற்கு

கால் வயிறு வறிதிருக்கும்படி, அரைவயிறு மாத்திரம் ஆகாரமும், கால் வயிறு சலமாகவும் கொள்ளுத லென அறிக. (121)

122. வின :- (10) சௌச மாவது யா தெனின்?

விடை :- பாஹியம் ஆந்தர மென சௌச மிரு வகையாம். அவற்றுள், தன்னுடம்பில் மண் முதலியவைகளிட்டு நீரினுற் கழுவுதல் பாஹிய சௌசம். நான் அமலன் சுத்த னென்னும் ஞாநம் ஆந்தர சௌசம். இவ்விரு வகைச் சௌசமு முடையோன் பரிசுத்த னும். ஆந்தர சௌச மின்றிப் பாஹிய சௌச மாத்திர முடையவன், தோட ரகித னுகான், பாஹிய சௌச மின்றி, ஆந்தர சௌச முடையவன், தோட சகித னுகானென அறிக. (122)

123. வின :- நியம மாவது யா தெனின்?

விடை :- 1. தவம், 2. சந்தோஷம், 3. ஆஸ்திக்கியம் (விசுவாசம்). 4. தாநம், 5. ஈசுரபூசை, 6. வேதாந்த சித்தாந்த சிரவணம், 7. இலஜ்ஜை (நாணம்), 8. மதி, 9. ஜெபம், 10. விரத மென்னும் பத்துமென அறிக. (123)

124. வின :- (1) இவைகளில், தவமாவது யா தெனின்?

விடை :- வேதத்திற் சொல்லியபடி கிரிச்சிர சாந்திராயண முதலியவற்ருல், சரீரத்தை யுலர்த்துத லாம். பந்த மென்பது யாது? முத்தி யென்பது யாது? பந்த மெப்படி வந்தது? அஃதெதனுல் நிவிர்த்தி யாகும்? பிறவி யறும்படியான சீவந்முத்த னுவ தெப்போ தெனச் சுத்த மநத்த னய் விசாரித்தலே, மேலோர் தவ மென்ப ரென அறிக. (124)

125. விஞ :- (2) சந்தோட மாவது யா தெனின்?

விடை :- கிடைத்ததிற் றிருப்தி யடைத லாம். பிரஹ்ம லோக பரியந்தமாக வுண்டாகின்ற அவாக்களை யொழித்து, ஆத்ம ஞாந விருப்ப மாத்திர மாக இருத்தலை, மேலோர் சந்தோட மென்ப ரென அறிக. (125)

126. விஞ:- (3) ஆஸ்திக்கிய மாவது யா தெனின்?

விடை :- சுருதி ஸ்மிருதிகளில் சொல்லியவற்றை விசுவசித்த லென அறிக. (126)

127. விஞ :- (4) தாந மாவது யா தெனின்?

விடை :- நியாய மாகச் சம்பாதித்த பொருளைச் சாதுக்களுக்கு அன்பினோடு அளித்த லாம். உடல் பொரு ளாவி மூன்றையுங் குருவுக்குத் தத்தஞ் செய்தலை, மேலோர் தாந மென்ப ரென அறிக. (127)

128. விஞ :- (5) ஈசுர பூசையாவது யா தெனின்?

விடை :- பிரம ணாதிய மூர்த்திகளைத் தன் சக்தி யநுசார மாகப் பூசித்த லாம். இராகாதி குணங்களை யொழிந்து உண்மை வசநம், நல் லொழுக்க முடையனாய், ஹிம்சை யாதிக ளின்றிக் கர்மங்களைச் செய்தலும், ஈசுர பூசை யெனப்படு மென அறிக. (128)

129. விஞ:— (6) வேதாந்த சித்தாந்த சிரவண மாவது யா தெனின்?

விடை:— பிரஹ்ம விஷ்ணு வுருத்திரர்களா லறிதற் கரியவன்; சச்சிதாநந்த சொரூபன்;

நித்தியன்; முக்தன்; ஒப்பிலாதவன்; பிரத்தியக்கு (அந்தராத்மா); என்றுணர்த்தும் வேத சித்தாந்தத்தை யறிவதென அறிக. (129)

130. வினா:- (7) இலஜ்ஜை யாவது யாதெனின்?

விடை:- வைதிக லௌகிக கருமங்கட்கு விரோதமாகிய கருமங்களிற் பிரவிர்த்தித்தற்கு நாணுதலென அறிக. (130)

131. வினா:- (8) மதி யாவது யாதெனின்?

விடை - வைதிக கருமங்களனைத்தினு முண்டாகின்ற சிரத்தையென அறிக. (131)

132. வினா:- (9) ஜெப மாவது யாதெனின்?

விடை:- ஆசாரியன் உபதேசித்த மந்திரத்தை வேத விதிப்படி யப்பியாசித்த லாம். கற்ப சூத்திர வேத தரும சாஸ்திர புராணேதிகாசங்களை யப்பியசித்தலும் ஜெப மெனப்படும். ஜெபமாவது, வாசிகம், மாநச மென இரு வகையாம். அவற்றுள், வாசிகமாவது, உபாம்சு, உச்ச மென இரண்டாம். பிறர் காதுக்குக் கேட்காமல் ஜபித்தல் உபாம்சு வாம். உரத்து ஜபித்தல் உச்ச மாம். மாநசமாவது மநநம், தியாநம் என இரண்டாம். மனதின் தூல விருத்தியினால் ஜபித்தல் மனனமாம். மனதின் சூக்குமவிருத்தியினால் ஜபித்தல் தியாநமாம். வாசிகமாகிய உச்சத்தை விட உபாம்சு, 100 மடங்கும்; உபாம்சுவை விட, மாநச மாகிய மநநம் தியாநங்கள் கோடி மடங்கும்; அதிக பலனைத் தருவன வாம். இஜ் ஜெபங்களும், வேத விரோத மாகிய நூலை யநுசரித்துச் செய்யப்படு மாயினும் நிஷ்பல மா மென அறிக. (132)

133. வினா:- (10) விரத மாவது யா தெனின்?

விடை:- வேதத்திற் கூறிய விதி நிடேதங்களை யநுட்டித்த லாகிய நித்திய கருமங்க ளாம். இதனை, மக மென்றுங் கூறுவர். ஆசாரிய னுரைத்தபடி யுபவாசாதிகள் செய்து வருதலும், விபூதி யுருத்தி ராக்க மணிகள் பூண்டு சிவ பூசை செய்து வருதலும், விரத மென்று சொல்லப்படு மென அறிக. (133)

134. வினா:- இயமம் பத்து, நியமம் பத் தெனச் சகல சாஸ்திரங்களிலுஞ் சொல்லப்படுகிறதோ வெனின்?

விடை:- வ ரா கோ ப நி ஷ த் து (5) ஆவது அத்தியாயத்திலும், தரிசநோபநிஷத்திலும், சாண்டில் லியோ பநிஷத்திலும், ஞாந சமுத்திரம் திரிதி யோல்லாசத்தினும், சூத சம்மிதை ஞாந யோக காண்டத்திலும், ஹட யோகப் பிரதீபிகையிலும், இயமம் பத்து, நியமம் பத் தெனச் சொல்லப்படு கிறது. வேதாந்த பதார்த்த மஞ்சூஷா, சீவன் முத்திப் பிரகரணம், விசார சாகர மாதிய கிரந்தங்களில், இயமம் பத்தையும், அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக்கிரக மென ஐந் தாகவும்; நியமம் பத்தையும், சௌசம், சந்தோடம், தவம், ஸ்வாத்தியாயம், ஈசுரப் பிரணிதாநம் என ஐந் தாகவும்; அடக்கிச் சொல்லியிருக்கிறது. இவைகளில், இயமம் பத்து, நியமம் பத்து வித மெனல், புராண ரீதியாகவும்; இயமம் ஐந்து, நியமம் ஐந்து வித மெனல், வேதாந்த ரீதியாகவும்; பண்டிதர்கள் கொள்ளற்பால தென்ப ரென அறிக. (134)

135. வினா:- ஆசந மாவது யா தெனின்?

விடை:- சுவத்திகம், கோமுகம், வீரம், கூர்மம், பதுமம், குக்குடம், உத்தாநம், மத்ஸ்யம், பச்சிம

தாநம், மயூரம், சவம், சிம்மம், பத்ரம், சித்த முதலிய ஆசநங்கள் பல வுள வாம். இவைகளை யோக நூல் களிற் காணலா மென அறிக. (135)

136. விளு:- பிராணுயாம மாவது யா தெனின்?

விடை:- விஜநப் பிரதேசத்தில், ஆகார, ஆசந, நியமங்களோ டிருந்து, நாசி நுனி நாட்டம் வைத்துக் கொண்டு, பிராண வாயுவை இடைகலை யென்னும் நாடியால், தன் சக்தி யுள்ள மட்டுக்கும் வெளியில் விடுவ தாகிய இரேசகமும், பிங்கலை யென்னும் நாடி யால், தன் சக்தி யுள்ள மட்டுக்கும் உள்ளே பூரிப்ப தாகிய பூரகமும், சுழு முனையில் சலிக்கவிடாமல் தம்பிக்குத லாகிய கும்பகமும் சேர்ந்து பிராணுயாம மாம். இது பிரணவோச்சாரண சகித மாய்ச் செய்வது, சகர்ப்ப மென்றும்; பிரணவோச்சாரண மின்றிச் செய்வது, அகர்ப்ப மென்றும்; இரு வித மாகும். இப் பிராணுயாமத்தைச் சிலர் ஆப்பியந்தரம், பாஹியம், ஸ்தம்ப விருத்தி யென மூன்று வித மென்பர். இவை களில், பிராணன் உள்ளி லிழுக்கப்பட்டு, அதன் கதி நின்று போதல் ஆப்பியந்தரம். வெளியில் விடப்பட்டு அதன் கதி நின்று போதல் பாஹியம், உள்ளிலும், வெளியிலும், ஒரே காலத்தில் அதன் கதி நின்று போதல், ஸ்தம்ப விருத்தி யென அறிக. (136)

137. விளு.- பிரத்தியாகார மாவது யா தெனின்?

விடை:- சத்தாதி விஷயங்களினின்றும், சுரோத்தி ராதி யிந்திரியங்களோடு மநதை அந்தர் முக மாகத் திருப்பிக் கொள்ளுத லென அறிக. (137)

138. விளு:- தாரணை யாவது யா தெனின்?

விடை:- அந்தர் முக மாகத் திருப்பப்பட்ட மநதைப் பிரத்தியகாத்ம சொரூபத்தில் நிறுத்துத லென அறிக. (138)

139. வினா:- தியாந மாவது யா தெனின்?

விடை:- இலக்கிய வஸ்துவின்பாற் செல்கிற அந்தக் கரணத்தின் ஸஜாதீய விருத்திப் பிரவாக மென அறிக. (139)

140. வினா:- சமாதி யாவது யா தெனின்?

விடை:- வெளிப்படும் சம்ஸ்காரங்களின் திரஸ்காரங்களும், அடங்கும் சம்ஸ்காரங்களின் பிரகடமும், உடைய அந்தக் கரண விருத்தியின் ஏகாக்கிர பரிணாம மாம். இஃதன்றித் தியாநி, தியாந பிரமாணையும் விடுத்து, நிவாத தீபம் போலச் சித்தம் தியாநிக்கப்படும் பொரு ளொன்றை மாத்திரம் விஷயஞ் செய்வதும் சமாதி யாம். நானே பிரஹ்மம்; பிரஹ்மமே நா னென் றுள்ள சர்வ விருத்தி நிரோத மாகிய நிலைமையும் சமாதி யாம் சலத்திற் சைந்தவங் கலந் தெப்படி ஐக்கியத்தை யடைகிறதோ, அப்படி ஆத்மாவிற்கும், மநதிற்கு முண்டாகும் ஐக்கியமும், சமாதி யாம். பிராணன் தேய்ந்து மநது மொடுங்கும் போ துண்டாகும் ஐக்கியமும் சமாதி யாம். சீவாத்ம பரமாத்ம ஐக்கிய மாகிய சமத்தன்மை யுண்டாகிச் சகல சங்கற்பங்களும் நஷ்ட மாதலும் சமாதி யாம். கருவி கரணங்க ளனைத்தும் தன் னிலையில் ஒத்து நிற்றலுஞ் சமாதி யா மென அறிக (140)

141. வினா:- அட்டாங்கங்கள் வேறு வித மாக எங்கேனுஞ் சொல்லப்பட்டிருக்கிறதோ வெனின்?

விடை:- திரிசிகி யுபநிஷத்தில், 1. தேகேந்திரியங் களிலுண்டாகும் வைராகம், இயம மென்றும், 2. பரதத்துவத்தி லிடைவிடா துண்டாகும் விருப்பம், நியம மென்றும்; 3. சகல வஸ்துக்களிடத்தினும் உதாசீந மாக இருத்தல், ஆசந மென்றும்; 4. சகல சகத்தும் மித்தை யாகத் தோற்றுதல், பிராணாயாம மென்றும்; 5. சித்தத்தின் அந்தர் முகத் தன்மை, பிரத்தியாகார மென்றும்; 6. சித்தத்தின் நிச்சலத் தன்மை, தாரணை யென்றும்; 7. அந்தச் சிந் மாத்திரமே நா னென்று சிந்தித்தல், தியாந மென்றும்; 8. தியாநத்தையும் நன்ருய் மறத்தல் சமாதி யென்றுஞ் சொல்லப்படுகிற தென அறிக. (141)

142. வினு:- ஹட யோக பல மாகிய ராஜயோகம் எங்கே சொல்லப்படுகிற தெனின்?

விடை:- தேஜோபிந்து உபநிஷத்திலும், அபரோக்ஷாநுபூதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அது 15 அங்கங்களை யுடைய தென அறிக. (142)

143. வினு:- இராஜ யோகத்திற் குள்ள (15) அங்கங்க ளெவை யெனின்?

விடை:- 1. இயமம், 2. நியமம், 3. தியாகம், 4. மௌநம், 5. தேசம், 6. காலம், 7. ஆசநம், 8. மூல பந்தம், 9. தேக சமத்துவம் 10. லக்ஷிய திருஷ்டி, 11. பிராணாயாமம், 12. பிரத்தியாகாரம், 13. தாரணை, 14. தியாநம், 15. சமாதி ஆகிய இவைக ளென அறிக. (143)

144. வினு:- (1) இவைகளில் இயம மாவது யா தெனின்?

விடை:- எல்லாம் பிரஹ்ம மென்னும் விசாரத் தால், இந்திரிய சமூக நிரோதத்தை யடிக்கடி பழகுவ தென அறிக. (144)

145. வி௵:- (2) நியம மாவது யா தெனின்?

விடை:- அந்தக் கரண விருத்தியை விஜாதீயப் பிரபஞ்சத்திற் செல்லவிடாமற், சஜாதீய மாகப் பிரஹ்மத்திற் செல்லும்படி நி மித்த லென அறிக. (145)

146. வி௵:- (3) தியாக மாவது யா தெனின்?

விடை:- பொன்னிற் கற்பித மாகிய பூடணங்கள் யாவும் பொன்னுக் கந்நிய மாக இல்லாதன போல், பிரஹ்மத்திற் கற்பித மாகிய பிரபஞ்சங்கள் யாவும் அதிட்டாந மாகிய பிரஹ்மத்துக் கந்நிய மாக இல்லை யென அறிந்து அவைகளிலுள்ள சத்திய புத்தியை விட்டுவிடுகிற தென அறிக. (146)

147. வி௵:- (4) மௌந மாவது யா தெனின்?

விடை:- சகல வாக்குகளினாலும், மநதினாலும், விஷயீகரிக்கப்படாத தாயும், யோகீசுரர்களா லடை யத்தக்கதாயு மிருக்கின்ற நித்திய மௌந சொரூ பத்தைச் சதா நினைத்துக் கொண்டிருத்த லாகும். வாக்கு மாத்திரம் மௌநமா யிருப்பவர்கள், அவிவேகிகளே யன்றி விவேகிக ளல்ல ரென அறிக. (147)

148. வி௵:- (5) தேச மாவது யா தெனின்?

விடை:- யா தொரு வஸ்துவின் சொரூபம, மேல் கீழ் மத்தி யாகிய முழுமையும் சதா சந சமூகங்க ளின்றிய இட மாக இருக்கிறதோ; ஆகாயம் போல, சகல வஸ்துக்களினும் வியாபித்திருப்பதாய் தன் மயம் விடாமற் றுய் விளங்குகிறதோ; அதுவே இராஜ யோகிகள் வசிக்கத் தக்க புநித தேச மென அறிக. (148)

149. வினா:- (6) கால மாவது யா தெனின்?

விடை:- காலத்திற்கு ஆதாரமான அகண்டாத் வைதப் பிரஹ்மத்தில், கற்பிதமாகிய பிரஹ்மாதி ஸ்தம்ப மீருகிய சகல பிரபஞ்சங்களும் நிமிடகால மேனும் பிறிவுற்று வேருகத் தோற்ருமல், ஐக்கிய முற்றிருக்கிற தென அறிக. (149)

150. வினா:- (7) ஆசந மாவது யா தெனின்?

விடை:- எந்த நிலைமையில் தேகாவயவங்களை வைத்துக் கொண்டிருந்தால், மநதுக்கு வருத்தந் தோணுமல் எப்போதும் பிரஹ்மா நுசந்தாநஞ் சுக மாய் நடக்குமோ, அந்த நிலைமை யாம் அல்லது, சமஸ்த பூதங்கட்கு மாதியாய், விசுவத்துக் கிருப்பிட மாய், நாச ரகிதமா யுள்ள வஸ்துவே, யோகீசுரர் வகிக்கத் தக்க ஆசந மென அறிக. (150)

151. வினா:- (8) மூல பந்த மாவது யா தெனின்?

விடை:- யா தொரு சொரூப மானது சகல பிரபஞ் சங்கட்கும், அவைகளைத் தோற்றுவிப்ப தாகிய சித்தத்திற்கும், மூலமா யிருக்கிறதோ, அந்தச் சொரூ பத்தில் சர்வ காலமும் சித்தத்தைப் பந்திப்பிக்கிறதே, ராஜ யோகிகட்கு யோக்கிய மான மூல பந்த மென அறிக. (151)

152. வினா:- (9) தேக சமத்துவ மாவது யா தெனின்?

விடை:- சலந மின்றிய பருவதத்தி லுண்டாயிருக் கின்ற பதுமைகள், சலந மின்றிப் பருவதாகார மாக நிலை பெற்றிருப்பது போல, சம மாகிய பிரஹ்ம சொரூபத்தில், சித்தத்தைச் சலந மின்றிச் சம மாக நிலைத்திருக்கும்படி நிறுத்துகிறதே, அங்க சாமிய

மென்னும் தேக சமத்துவ மாகும். இஃதன்றிக், காய்ந்த காட்டம் போல, ஒழுங்காகத் தேகத்தை வைத்துக் கொள்ளுத லன் றென அறிக. (152)

153. வினு:- (10) லக்ஷிய திருஷ்டி யாவது யா தெனின்?

விடை:- விவேக ஞாந மாகிய பார்வையால் சகல சகத்தையும் பிரஹ்ம மய மாகப் பார்க்குத லாகும். அல்லது, திரிபுடி ரூப மாகிய சகத்து, யா தொரு சொரூபத்திலுண்டா யடங்குகிறதோ, அச் சொரூ பத்தில், திருஷ்டியை வைப்ப தாகும். அல்லது ஞா துரு, ஞாநம், ஞேயம் மூன்று மெவ் விடத்தி லில்லை யோ, அவ் விடத்தில் திருஷ்டியை வைப்ப தாகும். இஃதன்றி மூக்கு நுனி முதலியவைகளில், திருஷ்டியை வைப்பது லக்ஷிய திருஷ்டி யன் றென அறிக. (153)

154. வினு:- (11) பிராணாயாம மாவது யா தெனின்?

விடை:- சித்த முதலிய சகல கற்பித வஸ்துக்களை யும், அதிட்டாநப் பிரஹ்ம சொரூப மாகப் பார்த்து, சகல விருத்திகளையும் நிரோதிப்பது, பிராணாயாம மாகும். இதில், அஞ்ஞாந தற் காரிய மாகிய சகல பிரபஞ்சங்களையும் நா மன்றென நியதிபண்ணித் தள்ளுவது ரேசக மாகும், நிருபாதிகமான பிரஹ்மமே நா மென்னுஞ் சித்த விருத்தியைச் சம்பாதிப்பது பூரக மாகும். அந்தச் சித்த விருத்தியைச் சலிக்க விடாமல் நிறுத்திக் கொள்வது கும்பக மாகும். இந்தப் பிரா ணயாமம் விவேகிக ளான ராஜ யோகிகளுக்குச் சொல்லப்பட்டது. அவிவேகிக ளான ஹட யோகி களுக்குப், பிராண சலந நிரோத ரூப மான பிராணா யாமஞ் சொல்லப்பட்டிருக்கிற தென அறிக. (154)

155. வினு:- (12) பிரத்தியாகார மாவது யா தெனின்?

விடை:- திருசியங்களனைத்தையும் ஆத்ம சொரூபமாகப் பார்த்து, மநதைத் திருக்கு ரூப மான பிரத்தியகாத்மாவினிட மாகத் திருப்பிக் கொள்ளுதலாம். எவை பார்க்கப்படுகின்றனவோ, அவை முழுவதும் பிரஹ்ம மெனக் காண்டல் பிரத்தியாகாரம். நித்திய கர்மத்தின் பலத்தை விட்டுவிடுதல், பிரத்தியாகாரம். சகல விஷயங்களிலும் பரா முகமாக இருத்தல், பிரத்தியாகார மெனத் தரிசநாபநிஷத்து, சாண்டில்லியோபநிஷத்து, சூத சம்மிதைகளிற் சொல்லப்படுகிற தென அறிக. (155)

156. வினா:- (13) தாரணை யாவது யா தெனின்?

விடை:- மநதாற் பற்றப்படும் விஷயங்களனைத்தையும், பிரஹ்ம சொரூப மாகப் பார்த்து, அச் சொரூபத்தை மநதிற் றிட மாய்த் தரித்துக் கொள்ளுத லென அறிக. (156)

157. வினா:- (14) தியாந மாவது யா தெனின்?

விடை:- எங்கும் நிறைந்துள்ள பிரஹ்மமே, அறிவு சொரூப மாகிய நான், நானே பூரண மாகிய பிரஹ்ம மென விஜாதீய விருத்தி யின்றித், தயிலதாரை போல, மேலு மேலு முதயமாகா நின்ற சஜாதீய அகண்டாகார விருத்திப் பிரவாக மென அறிக. (157)

158. வினா:- (15) சமாதி யாவது யா தெனின்?

விடை:- அந்தக் கரண விருத்தி பஹிர்முகப்படாமல், அகண்டைகரசப் பிரஹ்மாகார மாக இருப்பது, அல்லது, திடாதிரு, தியேயாகார விருத்திக ளின்றி யிருப்பது. அல்லது, நிருவிகார மாயும், பிரஹ்மாகார மாயும் உண்டாகின்ற விருத்தியைத், திரும்பத் திரும்பப் பழகி, அந்த விருத்தியையும் மறந் திருப்ப தென அறிக. (158)

159. வினா:- சமாதி யெத்தனை வித மெனின்?

விடை:- சவிகற்பம், நிருவிகற்ப மென இரண்டு வகையாம், இவைகளில், பஹிர்முக நாட்ட மின்றித் திரிபுடி விளக்கத்துடன் அத்விதீயப் பிரஹ்மத்தினிடமாக இருக்கின்ற அந்தக் கரண விருத்தியின் நிலைமை, சவிகற்ப சமாதியாம். அவ் வந்தக்கரண விருத்தி பிரஹ்மத்திற் கரைந்து தியாநமும், தியாநிக்கின்ற புருடனு மிழந்து, தியாந வஸ்து மாத்திர மாகச் சேடித்துத் திரி புடித் தோற்ற மின்றி யிருப்பது, நிருவிகற்ப சமாதி யென அறிக. (159)

160. வினா:- புத்தி விருத்தி பஹிர்முக நாட்ட மின்றி, அக முக நாட்டத்தை யடைந்திருக்கின்ற இரண்டு சமாதியையும், ஒருசமாதியாகக் கூருமல், பேத மாகக் கூறிய தென்னை யெனின்?

விடை:- இரண்டு சமாதிகளும் சொரூபத்தினா-னும், சாதநங்களினானும், பேத முடையன வாக விருத்தலி னென அறிக. (160)

161. வினா:- இரண்டு சமாதிகளும், சொரூபத்தினா-னும், சாதநங்களினானும், பேத முடையன வென்றது யாதினா லெனின்?

விடை:- இவ் விரண்டு சமாதிகளில், சவிகற்ப சமாதி சாதநமா யிருக்கிறது; நிருவிகற்ப சமாதி பலமா யிருக்கிறது. சவிகற்ப சமாதியில். திரி புடித் துவைதம் பிரதீதியாகிறது. நிருவிகற்ப சமாதியில், திரி புடி ரூபத் துவைத மிருக்கினும், சலத்திற் கரைந்த லவணஞ் சலத்தி லிருந்தும் நேத்திரத்துக்குப் பிரதீதியாகாதது போலப், பிரதீதியாகிற தில்லை. அதலால், சொரூபத்தினானும்; சவிகற்ப சமாதியில் விருத்தி யிருக்கின்றமையால். விருத்தியோடு கூடிய தாரணை, தியாநம், சமாதி

மூன்றுஞ் சேர்ந்து சஜாதீயமா யிருக்கின்றன. ஆதலால், அவைகள், சவிகற்ப சமாதிக்கு அந்தரங்க சாதநங்க ளாகின்றன. நிருவிகற்ப சமாதியில், திரி புடி ரூபத்துவைத விருத்தி யில்லாமையால், விருத்தியோடு கூடிய தாரணை தியாந சமாதிகள், நிருவிகற்ப சமாதக்குப் பகிரங்க சாதநங்க ளாகின்றன. ஆதலின், சாதநங்களினும்; இரண்டு சமாதிகட்கும், பேத முண் டென அறிக. (161)

162. வினா:- நிருவிகற்ப சமாதிக்குத் தாரணை, தியாந, சமாதிகள், அந்தரங்க சாதநங்க ளாகாவோ வெனின்?

விடை:- சவிகற்ப சமாதியின் பரிபாகத்தா லுதய மாகின்ற ரிதம்பரப் பிரஞ்ஞை யாகிய ஞாநம், விகற்பத் தோடு கூடிய த'னமையால், நிருவிகற்ப சமாதிக்குப் பிரதி பந்த மாக' பஹிரங்க சாதநங்களிற் சேர்ந் துள்ளதேயன்றி, யந்தரங்க சாதந மன்றும். ஆதலின், அதுவே பஹிரங்க சாதந மாக இருக்கும் போது, அதற்குக் கீழ்ப்பட்ட தாரணை தியாந சமாதிகள், எங்ஙனம் அந்தரங்க சாதநங்க ளாகும்? ஆகா தென அறிக (162)

163. வினா:- ரிதம்பரப் பிரஞ்ஞை யாவது யா தெனின்?

விடை:- சவிகற்ப சமாதி யப்பியாச பலத்தால் சித்தம் நிருமல மாகிச், சூட்சும மாயும், தூரத் திருப்பவைகளாயும், சமீபத்தி லிந்திரிய கோசர மின்றியில் குட்டிய மாதிகளால் மறைக்கப்பட்டவைக, ளாயு மிருக்கின்ற சகல வஸ்துக்களையும், அறிவ தாகிய பிரஞ்ஞை யென அறிக. (163)

164. வினா:- நிருவிகற்ப சமாதிக்கு அந்தரங்க சாதந மெவை யெனின்?

விடை:- சிதம்பரப் பிரஞ்ஞை யாதிய சகல விஷயாகார விருத்திகளின் நிரோத மாகிய அப்பியாச மென அறிக. (164)

165 வினு:- மந்திர ஜெப, தேவதாத் தியாநமுதிலியவை கிரியா ரூப மானமையால், அவைகளை மேலு மேலும் ஆவிர்த்தி பண்ணுவ தாகிய அப்பியாசங் கூடும். சர்வ வியாபார சூநிய ரூப மான சமாதிக்கு எங்ஙனம் அப்பியாசங் கூடு மெனின்?

விடை:- பஹிர்முக மாகிய சித்த விருத்திப் பிரவாகத்தைத் தகைத லாகிய † உற்சாகத்தை, மேலு மேலும் ஆவிர்த்திபண்ணுவதே, அப்பியாச மானமையால், கூடு மென அறிக, (165)

166. வினு:- விருத்திகளை நிரோதிப்ப தாகிய அப்பியாசம் யா தெனின்?

விடை:- வேக மாய்ச் செல்லுகின்ற நதிப் பிரவாகத்தைத் அணையினுற் றகைந்து, கழனியை யடைய வாய்க் காலிற் றிருப்பி மற் றொரு பிரவாகத்தை யுண்டு பண்ணுவது போலப், பஹிர் விஷயத்தில் செல்லுகின்ற சித்த விருத்திப் பிரவாகத்தை, நிராசை யாகிய வைராக்கியங்களாற் றகைந்து, ஆத்மாபிமுக மாக்குவ தாகிய, விருத்தி நிரோத மென்னும் சாந்திப் பிரவாகத்தைச் சம்பாதிக்கிற தென அறிக. (166)

167. வினு:- வைராக மெத்தனை விதம்? அவைகளெதற்குச் சாதநங்க ளாகு மெனின்?

விடை:- அபரவைராகம், பரவைராக மென, வைராக மிரண்டு வித மாம் இவ் விரண்டில்,

† உற்சாகம் - முயற்சி.

அபரவைராகம், அட்டாங்க யோகத்துக்குக் காரணமா யிருப்பது மன்றி, சவிகற்ப (சம்பிரஞ்ஞாத) சமாதிக்கு அந்தரங்க சாதநமும். நிருவிகற்ப (அசம்பிரஞ்ஞாத) சமாதிக்கு விருத்தியோடு கூடிய தாரணை தியாந, சமாதிகள் போலப், பஹிரங்க சாத நமு மாகும். பரவைராகம், நிருவிகற்ப (அசம்பிரஞ்ஞாத) சமாதிக்கு அந்தரங்க சாதந மாகும். இவ் வைராகங்களுள், அபரவைராகம், யதமாநம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசீகார மென நான்கு வித மாக இருக்கும். இந் நான்கில், சவிகற்ப சமாதிக்கு முன் னுள்ள, யதமாநாதிகள் மூன்றும் பஹிரங்க சாதநங்க ளெனவும், பின் னுள்ள, வசீகார வைராக மொன்று மாத்திரம், அந்தரங்க சாதந மெனவும் கொள்ளற்பால தென அறிக. (167)

168. வினா:- யதமாந வைராக மாவது யா தெனின்?

விடை:- புட்ப, சந்தந, வஸ்திராபண, சுக போஜந, ஸ்திரீ, புத்திர, கிரக, க்ஷேத்திர, தந, தாநி யாதிய பிரத்தியக்ஷ விஷயங்களினும். சுவர்க்க லோக மாதிய பரோக்ஷ விஷயங்களினும், இச்சை யிருக்கினும், விவேக தார தம்மியங்களால், யதமாநம், வியதிரேகம், ஏகேந்திரிய மாகிய மூன்று வைராகங்களும் உதய மாம். இவைகளில், இந்தச் சகத்தினது சார மெது? அசார மெது? எனக் குரு சாஸ்திரங்களா லறியவேண்டு மென்னும் முயற்சியே யதமாந வைராக மென அறிக. (168)

169. வினா: வியதிரேக வைராக மாவது யா தெனின்?

விடை:- கீரிப் பிள்ளை நகுலக் கொடியை யாசிரயித்துக் கொண்டு, பாம்புடன் சண்டை செய்வது போலச், சற் சங்கப் பழக்கத்தால் துர்க்குணங்களை விடுதலும், தன் சித்தத்திற் பூகுவ

யிருந்த இராகாதி தோடங்களினுள், இப்போ தப்பியாசிக்கப்பட்ட விவேகத்தா லிவ் வளவு தோடங்கள் சாந்தமா யிருக்கின்றன. இவ் வளவு தோடங்கள் சாந்த மின்றிச் சேடித் திருக்கின்றன வென்று பகுத்தறிதலு மென அறிக. (169)

170. வினு:- ஏகேந்திரிய வைராக மாவது யா தெனின்?

விடை:- பிரத்தியக்ஷ பரோக்ஷ விஷயங்களைப் பற்றியுண்டாகிற பிரவிருத்திகள், துக்க காரண மென் றறிந்து, அவைகளை விடுத்து, மநதிற் றூல ரூப மான இச்சையோடு மாத்திர மிருத்த லென அறிக. (170)

171. வினு:— வசீகார வைராக மாவது யா தெனின்?

விடை:- சித்தத்தி லிச்சை தூல மாக எழாமற், சூட்சும சம்ஸ்கார மாத்திர மாக இருத்த லென அறிக. (171)

172. வினு:- விருத்தி சகித அபரவைராகமும், தாரணை, தியாந, சமாதிகளும், விருத்தி யின்றிய நிருவிகற்ப சமாதிக்குப். பஹிரங்க சாதநமாக வேணும் எங்ஙன மாகு மெனின்?

விடை:- சமாதிக்கு விரோதமாகிய அநேக வித அநாத்மாகார விருத்தியை நிரோதிப்ப தாகிய உபகாரங்களைச் செய்கின்றமையி னென அறிக. (172)

173. வினு:— பரவைராக மாவது யாது? அஃ தெத்தனை விதமா மெனின்?

விடை:- சவிகற்ப சமாதி யப்பியாச பலத்தால், சரீரத் திரய விலக்ஷண மாகிய பிரத்தியகாத்ம சாக்ஷாத்கார முண்டாகி, அதனால், குணத் திரயாத்மக மான சகல விவகாரங்களினும், சூட்சும ரூப மான இச்சையு மில்லாதிருப்பதாகும். இது, நிருவிகற்ப சமாதியை யடையுங்கால், அளவின் ருரதம்மிய பேதத்தால், மிருது, மத்திமம், தீவிர மென மூன்று வித மாம். இவைகளிற். றீவிரமும், மிருது தீவிரம், மத்திம தீவிரம், அதிதீவிர மென மூன்று வித மாகும். இவைகள், ஒன்றற் கொன்று முன்னுள்ளதற்குப் பின்னுள்ளது. மிகவுஞ் சீக்கிரத்தில் நிருவிகற்ப சமாதியை யடைதற் கேதுவாகும். ஆதலின், பரவைராகம் ஆறு வித மா மென அறிக. (173)

174. வினா - அபரவைராகங்களைச் சாதந மாக வுடைய சவிகற்ப சமாதி யெத்தனை வித மெனின்?

விடை:- சப்தாநுவித்தம், சப்தாநநுவித்தம் என இரண்டு வித மாம். இவ் விரண்டில், அகம் பிரஹ்மாஸ்மி யென்னுஞ் சப்தத்துடன் கூடியது சப்தாநுவித்த மாம். சப்தரகிதமா யுள்ளது சப்தாநநுவித்த மாம். இச் சப்தாநநுவித்த சவிகற்ப சமாதியும், பாஹிய திருசியாநுவித்தம், பாஹிய சத்தாநுவித்தம், ஆந்தர திருசியாநுவித்தம், ஆந்தர சத்தாநுவித்த மென நான்கு வித மாம், இந் நான்கில், கடாதி விடயங்களி லொன்றற் குள்ள நாமம், ரூபம், அஸ்தி, பாதி, பிரியம் என்னும் ஐந் தம்ஸங்களில், நாம ரூப மிரண்டும் மாயையின் அம்ஸங்க ளென நீக்கி, அஸ்தி பாதி பிரிய மாகிய மூன்றும் பிரஹ்மத்தின் அம்சங்க ளெனச் சதா சிந்தித்தல், பாஹிய திருசியாநுவித்த சவிகற்ப சமாதியாம். அஸ்தி பாதி பிரிய சொரூப மாகிய பிரஹ்மமே, தா னெனச் சிந்தித்தல், பாஹிய சத்தா

னுவித்த சவிகற்ப சமாதியாம். மநதி லுள்ள இராகாதிகளுக்கு, நாமே சாக்ஷி சொரூப மெனச் சிந்தித்தல், ஆந்தர திருசியானுவித்த சவிகற்ப சமாதியாம். சாக்ஷி யாகிய நாமே சச்சிதாநந்தப் பிரஹ்ம சொரூப மெனச் சிந்தித்தல், ஆந்தர சத்தானுவித்த சவிகற்ப சமாதியா மென அறிக. (174)

175. வினா:- இச் சமாதிகளுக்கு, சவிகற்ப சமாதி யெனப் பெயர் வந்தது யாதினா லெனின்?

விடை:- திரி புடி யாகிய விகற்ப சகித மாக இருத்தலி னென அறிக. (175)

176. வினா:- சாக்கிர சொப்பநங்களில், திரி புடி ரூபத்துவைதம் பிரதீதியாவது போலச், சவிகற்ப சமாதியினும் பிரதீதி யாகுமாயின், சாக்கிர சொப்பநங்கட்கும், சவிகற்ப சமாதிக்கும், பேத மில்லையே யெனின்?

விடை:- சாக்கிர சொப்பநங்களில், திரி புடி ரூபத்துவைதம் மாயா மய மாகப் பிரதீதியாகிறது. அங்ஙன மின்றி, மண் விகார மாகிய கடாதிகள், பிரதீதியாயினும், விவேகிகளுக்கு மண்ணாகவே பிரதீதியாவது போலச், சவிகற்ப சமாதியில், பிரதீதி யாகின்ற திரிபுடி ரூபத் துவைதம், பிரஹ்ம மய மாகவே பிரதீதியாகின்றமையால், சாக்கிர சொப்ப நங்கட்கும், சவிகற்ப சமாதிக்கும், பேத முண்டென அறிக. (176)

177. வினா:- நிருவிகற்ப சமாதி யெத்தனை வித மெனின்?

விடை:- பாஹிய நிருவிகற்பம், ஆந்தர நிருவி கற்பமென இரண்டாம். இவ் விரண்டில் பாஹிய திருசியாநுவித்த, பாஹியசத்தாநுவித்த சவிகற்ப சமாதிகளின் அப்பியாச பலத்தால், பிரஹ்ம சொரூபத்தில், மநம் கரைந்து திரிபுடி லய மாய் நிஸ்தரங்க சமுத்திரம் போலச், சலந மின்றியிருப்பது, பாஹிய நிருவிகற்ப சமாதியாம். ஆந்தர திருசியாநுவித்த, ஆந்தர சத்தாநுவித்த சவிகற்ப சமாதிகளின் அப்பியாச பலத்தால், திரிபுடி லய மாய்ப் பிரஹ்மாத்மைக்கியாநுபூதிச் சுகாவேசத்தில், மநம் கரைந்து சித்திர தீபம போற், சலந மின்றியிருப்பது, ஆந்தர நிருவிகற்ப சமாதியாம். இச் சமாதியும், அத்வைத பாவநா ரூபம், அத்வைத அவஸ்தாந ரூப மென இரண்டு வித மாம். இவ் விரண்டில், அத்வைதப் பிரஹ்மாகார மாகிப் பிரஹ்மத்தை ஞாதம் பண்ணுமல், பாவநா மாத்திர மாக இருக்கின்ற அந்தக் கரணத்தின் அஞ்ஞாத விருத்தி சகித நிருவிகற்ப சமாதி, அத்வைத பாவநா ரூப நிருவி கற்ப சமாதி யாம். இச் சமாதியினப்பியாச மிகுதி யால், பிரஹ்மாகார விருத்தியும், தப்தாய பிண்டத்தில் தெரிக்கப்பட்ட சலத் திவலை தப் தாய பிண்டத்திற்குனே லயமாய் விடுவது போல, அத்தியந்தப் பிரகாச மய மான பிரஹ்மத்திற் குனே லயமாகி விடுகிறது. ஆதலால் விருத்தி லயமா யுள்ள நிருவிகற்ப சமாதி. அத்வைத அவஸ்தாந ரூப நிருவிகற்பசமாதியாம். இவ் விரண்டிலும், அத்வைத பாவநா ரூப நிருவிகற்ப சமாதி சாதநமாம். அத்வைத அவஸ்தாந ரூப நிருவிகற்ப சமாதி பலமா மென அறிக. (177)

178. வினு:- அத்வைத அவஸ்தாந ரூப நிருவிகற்ப சமாதியில், விருத்தி, பிரஹ்மப் பிரகாசத்தில் லய மாகு மென்பது சித்தாந்தமோ வெனின்?

விடை:— விருத்திக் குபாதாந காரணம் அந்தக் கரணமானமையால், விருத்தி தன் காரணத்தை விடுத்து, மற்றொன்றில் லய மாகாது. சுழுத்தியில், அந்தக் கரணம் அஞ்ஞா நத்தில் லய மாகும் போது, விருத்தியும் அதனோடு லயமாவது போலப், பிராரப்த க்ஷயத்தில், பிரஹ்மத்தி லந்தக் கரணம் லய மாகும் போது, அதனோடு லய மாகு மென்பதே சித்தாந்த மாகும். நிருவிகற்ப சமாதியில், அந்தக் கரணம் லயமாகாம லிருக்கின்றமையால், அதன் காரிய மாகிய விருத்தி, தன் காரண மிருக்க, அதனை விடுத்துப் பிரஹ்மத்திற் றனியே லய மாகு மென்பது உபசாரிக மாகும்; சித்தாந்த மன் றென அறிக. (178)

179. வினு:— விருத்தி, பிரஹ்மப் பிரகாசத்தில் லய மாகு மென்ற, தெது போலு முபசாரிக மென்ற தெனின்?

விடை:-தப்தமா யிருக்கின்ற அயப் பிண்டத்திற், றெரிக்கப்பட்ட சலத் திவலை, தனக்குக் காரண மாகிய அக்கிநியில், லய மாகிறதே யன்றி, அயப் பிண்டத்தில் லய மாகிற தில்லை. ஆயினும், அயப் பிண்டத்தில், அக்கிநி கலந்திருக்கும் ஒற்றுமை பற்றி, அயப் பிண்டத்தில் லய மாகிற தெனக் கூறப் படுகிறது. ஆதலின், உபசாரிக மாவது போல, அத்வைத அவஸ்தாந ரூப நிருவிகற்ப சமாதியில், விருத்தி அந்தக் கரணத்தில் லயமாகிறதே யன்றி, பிரஹ்மப் பிரகாசத்தில் லயமாகிற தில்லை. ஆயினும், அந்தக் கரணத்தில், பிரஹ்மம் வியாபித்துப் பிரகாசிக்கின்ற ஒற்றுமை பற்றியும், பிரஹ்மப் பிரகாசம் விளங்கு நிமித்தத்தால் விருத்தி லயமாகின் றது பற்றியும், பிரஹ்மப் பிரகாசத்தில் விருத்தி லய மாகிற தெனக் கூறப்படுகிறது. ஆதலின்; அது உபசாரிக மென்ற தென அறிக. (179)

180. விஞ:- சுழுத்தியும், நிருவிகற்ப சமாதியும், விஷயத்தோற்ற மில்லன வாயும், சுகாநுபவ ஏதுக்களாயு மிருக் கின்றபடியால், இரண்டுக்கும் பேத மில்லையே யெனின்?

விடை:- சுழுத்தியில், அந்தக் கரண விருத்தி பிரஹ்மாகார மாகிற தில்லை: நிருவிகற்ப சமாதியில், பிரஹ்மாகார மாகிறது. சுழுத்தியில், விருத்தி சகித அந்தக் கரணம் அத்தியந்தம் அபாவமாய் விடுகிறது. ஆதலின், வாயு அத்தியந்த மில்லையாயின், விளக்கு நிற்காமல், அணைந்துவிடுகிறது போலச் சரீரம் நிற்காமல், வீழ்ந்துவிடுகிறது. நிருவிகற்ப சமாதியில், விருத்தி சகித அந்தக் கரணம் பிரதீதியாகாமல், சூட்சும மாக இருக்கிறது. ஆதலின், வாயு மிகுதி யின்றிச் சொற்பமா யுள்ளவிடத்திற், றீபம் சலிக்காம லெரிவது போலச், சரீரம் வீழ்ந்து விடாமல் நிற்கிறது. இஃதன்றிச், சமாதியில் விருத்தி யில்லையாயின், சமாதியின் ஸ்மரணை, சமாதியினின்றும் வெளிப்பட்ட போது, உண்டாகமாட்டாது. உண்டாகின்றமையால், சமாதியில் விருத்தி யிருக்கிறது சுழுத்தியில், பிரஹ்மாநந்தம் அஞ்ஞாநாவிருத மாக இருக்கிறது. நிருவிகற்ப சமாதியில், பிரஹ்மாநந்தம் ஆவரண மின்றியில் விளங்குகிறது. இங்ஙனம், சுழுத்திக்கும், நிருவிகற்ப சமாதிக்கும், பல பேதங்க ளுள வென அறிக. (180)

181. விஞ:- நிருவிகற்ப சமாதிக்குப் பிரதிபந்தங்களுளவோ வெனின்?

விடை:- ஏகாந்தத்தி லிருந்து தியானிக்கும் போது, 1. சொரூபாநுசந்தாநம் மறந்து போதல் 2. பின்பு தியாநம் பண்ணிக் கொள்ளுவோ மென்னும் படி சோம்ப லுண்டாதல், 3. போகங்களி லிச்சை

யுண்டாதல், 4. நித்திரை வருதல், 5. அந்தகாரந் தோன்றுதல், 6. விஷயங்களைப் பற்றி மநது மேலு மேலும் சலித்த லாகிய விக்ஷேப முண்டாதல், 7. பிர காசந் தோன்றுதல், 8. வேர்வை யுண்டாதல், 9. திரு சியங்களை நீக்கினுல், அவைகட்கு வேருக ஒன்றுங் காணப்பட வில்லை யென்னுஞ் சூநிய புத்தி யுண்டா தல், ஆகிய (9)ம் சமாதிக்குப் பிரதிபந்தங்க ளாக வுள்ளன வாகும். இவ் வொன்பதும். லயம், விக்ஷே பம், கஷாயம், ரஸாஸ்வாத மென்னும் நான்கு பிரதி பந்தங்களினு ளடங்கு மென அறிக. (181)

182. வினு:- இந் நான்கு பிரதிபந்தங்களினுள், லய மாவது யா தெனின்?

விடை:- தியாந நிமித்தம் விடயங்களினின்றுந் திருப்பப்பட்ட அந்தக் கரண விருத்தி, அகண்ட வஸ் துவை யவலம்பிக்காமல் நித்திரை யாலஸ்யாதி களால், தன் உபாதாந காரண மாகிய அந்தக் கரணத்திற், சங்கோச மாகிச் சுழுத்தி யவஸ்தைக்குச் சமாநாவத்தையை யுறுவ தென அறிக. (182)

183. வினு:- இதனை யெதனுல் நிவிர்த்தி செய்ய லாகு மெனின்?

விடை:- லயத்துக்குக் காரண மாகிய நித்திரா சேட ஆலஸ்யாதிகளை நிரோதஞ் செய்து, விருத் தியை யெழுப்புவ தாகிய சித்த சம்போதநத்தா லென அறிக. (183)

184. வினு:- நித்திரா சேட ஆலஸ்யாதிகளை எங்ங னம் நிவிர்த்தி செய்ய லாகு மெனின்?

விடை:- அற்ப நித்திரையில், நித்திரை சேடப் படுகிறது. ஆதலின், குறை வற நித்திரை செய்வ தால் நித்திரா சேடத்தையும்; அசீரணம், அதிக போச

நம் சரீர சிரமங்களால், ஆலஸ்யாதிக ளுண்டாகின் றன. ஆதலின், முன் புசித்த அந்நம் சீரணிக்கும் பரியந்தம், அந்நம் புசியாதிருத்தல், அற்ப போசநஞ் செய்குதல், அலேதல் முதலிய தொழில்க ளின்றி யிருத்தலால், முறையே அசீரணம், அதிக போசநம், சரீர சிரமங்களை நீககுதலாலேனும். அல்லது, பிராணுயாமத்தாலேனும் ஆலஸ்யாதிகளையும்; திரோதஞ் செய்ய லாகு மென அறிக. (184)

185. விஞ:- விக்ஷேப மாவது யா தெனின்?

விடை:- பூனை யாதிகளுக் கஞ்சி வீட்டினுள் பிரவேசித்த சிட்டுக் குருவி, பய வியா கூலத்தால், வீட்டினுள் ளிருத்தற்குத் தக்க இடம் இன்ன இட மென் றறியாமல், பின்னரும் வெளிப்பட்டுப் பயம், அல்லது, மரண ரூப துக்கங்களை யடைவது போல, அநாத்ம ஏதுக்களைத் துக்க ஏதுக்களாக அறிந்து, அத்வைதாநந்தத்தை விஷய மாக்கும் நிமித்தம் அந்தர்முக மாகிய விருத்தியானது, திநந் தோறும் பழகிய சாக்கிர சம்ஸ்கார பலத்தால், அற்ப காலமேனும் ஏகாக்கிரமா யிருத்தற்குக் கூடாமை யினுைம்; சேதந ரூபம் அதிசூட்சும மானமை யினுைம்; அச் சொரூபத்தை யவலம்பித்துப் பிரஹ்மாநந்தத்தை யநுபவியாமல், விடயங்களையும், விடய போகங்களையும், கருதிப் பஹிர் முக மாகச் சலிக்குத லென அறிக. (185)

186. விஞ:- இதனை எதனுல் நிவிர்த்தி செய்ய லாகு மெனின்?

விடை:- சத்த மாதிய போக்கிய விஷயங்களின் அசுத்த மாதிய இலக்கணங்களையும், அவைகளை யடைதலால் வருந்துக்கங்களையும், பிரஹ்மத்தின் சச்சிதாநந்த மாதிய இலக்கணங்களையும், அதனை யடைதலால் வரும் பரம சுகத்தையும், சிந்தித்துப்

பார்க்குதலாலேனும்; அல்லது, சாக்கிர சொப்பனங் கள் சுழுத்தியி லில்லாதன போல, அசத்து ரூப மாகிய போக்கிய விடயங்க ளியாவும் சத்து ரூப மாகிய பிரஹ்மத்தி லில்லை யெனப் பார்ப்ப தாகிய வாத திருஷ்டியினுலேனும்; அல்லது, விடயங்கள் தோன்றி னும், கானற்சலம், சொப்பன பதார்த்தம் போலப் பொய் யெனப் பார்ப்ப தாகிய மித்தியா திருஷ்டியினு லேனும்; அல்லது, நாநா வித † பேந, தரங்க, புற்புத, திவலைக ளனைத்தையும், சமுத்திரமாகப் பார்ப்பது போல அன்னியம் போல் காணப்படும் பிரபஞ்சம் அனைத்தையும் தனது சொரூப மாகப் பார்ப்ப தாகிய தன்மய திருஷ்டியினுலேனும்; நிவிர்த்தி செய்ய லாகு மென அறிக். (186)

(விவேக சூடாமணி, திருஷ்டித் திரயம்)

187. வினு:- கஷாய மாவது யா தெனின்?

விடை:- மநதை லய விக்ஷேபங்களிற் செல்லவிடா மல், நிரோதித்துத் தியாநஞ் செய்து கொண்டு வரும் போது, அம்மனதானது பாஹியாந்தர மென்னு மிரு வகையா யுள்ள தீவிர ராகத் துவேஷாதிகளால், துக்கங்களில் மூழ்கிச் சமாதியி லிருப்பது போல, ஏகாக்கிரமா யிருப்ப தென அறிக. (187)

188. வினு:- அந்தக் கரணங்கள் க்ஷிப்தம் (உழல் நிலை), மூடம் (உறக்க நிலை), விக்ஷிப்தம் (இருமை நிலை), ஏகாக்கிரம் (ஒரு வழி நிலை), நிருத்தம் (தன் னிலை), என்னும் ஐந்து பூமிகளை யுடையன வெனவும், இவ் வைந்தில், அநாத்ம வாசனைக ளாகிய, உலக, தேக, சாஸ்திர வாசனைகளைப் பொருந்தியதும், இரு வினைக் காற்றினு லநுபவிக்கப்படும் பல பொருள் களினும், ஆசை யுடைய தாய்ச் சுழலும்படி செலுத்தப்

† பேநம்-நுரை, தரங்கம்-அலை, புற்புதம்-குமிழி, திவலை- துளி.

பட்ட இராசத குண பரிணாமமு மாகிய மநதின் நிலைமை, க்ஷிப்த மெனவும்; நித்திரை (உறக்கம்), ஆலஸ்யம் (சோம்பல்), பிரமோகம் (மயக்கம்), நெடு நீர் (வறிது காலந் தாழ்த்தல்) முதலியவற்றோடு கூடிய தமோ குண பரிணாம மாகிய மநதின் நிலைமை, மூட மெனவும்; எப் போதாயினு மோர் போது தியாநப் பிரவிருத்தியின் வலியால், சமாதி நிலையை யடைந்தும், அந் நிலை, வேக மாகிய காற்றினால் சலிக்கப்படுந் தீபம் போல, விக்ஷேபப் பிரதர்நத்தால் ஸ்திரப்படாமல், பஹிர்முகப்பட்டு விஷயங்களிற் சுழலுகின்ற நிலைமை, விக்ஷிப்த மெனவும்; சமாதியில் அந்தக் கரணத்தின் அதீத பரிணாமமும், வர்த்தமான பரிணாமமும், பிரஹ்மத்தை யடைந்து சமாநாகார மாகிறது. அல்லது, இயமாதி யட்டாங்க யோகப் பயிற்சியின் வலியால் ஒரே வஸ்துவில் இடைவிடாது தொடர்ந்து செல்லும் வெள்ளம் போலச், செல்லும் அந்தக் கரணத்தின் சஜாதீய விருத்திப் பிரவாகம், ஏகாக்கிர மெனவும்; மநம் தன்னை மறந்து சோர்ந்து போகாமல், விழித்திருந்தும், அந்நிய மான ஓர் விடயத்திலும் உணர்ச்சி பிறவாதிருத்தலும், அவ் வுணர்ச்சி யொருகால் வேண்டும் போது, பிறப்பதற்கு ஏதுவாகிய அதன் காரியம் பீஜம் போல, வாசநா மாத்திரையில் சேடப்பட்டுக் கெடாது நிற்றலு மாகிய அந் நிலை, நிருத்த மெனவும்; முன்னர்க் கூறிய க்ஷிப்தம் மூட மிரண்டற்கும், சமாதியி லதிகார மில்லை யெனவும்; மத்தியிற் கூறிய விக்ஷிப்தத்துக், கதிகார முண்டெனவும்; ஈற்றிற் கூறிய ஏகாக்கிரமும், நிருத்தமும், சமாதியைச் சார்ந் துள்ளன வெனவும்; யோக சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவைகளை உய்த்து நோக்கு மிடத்துச், சமாதியில் அதிகார மில்லாததாகச் சொல்லப்பட்ட இராகாதி தோடத் தோடு கூடிய க்ஷிப்தமே, இங்கே சமாதிக்கு விக்கிந மாக இருக்கிற தெனச் சொல்லப்பட்ட தீவிர இராகத் துவேஷங்களால் துக்கத்தில் மூழ்கியிருக்கின்ற கஷாய

மாகும். ஆகையால், சமாதியில் அதிகார மில்லாத க்ஷிப்தம் போலக் கஷாயமும், அதிகார மில்லாததே யாகும். இங்ஙனம் சமாதியில் அதிகார மில்லாத கஷாயம், சமாதிக்கு விக்கிந மாக இருக்கிற தெனல், அரசன் நித்திரை செய்யும் அந்தப் புரத்துக்குச் செல்லும் அதிகார மின்றிய வெட்டியான் அரசன் நித்திரைக்கு விக்கிந மாக இருக்கிறு னெனல் போல் விருத்த மா மெனின்?

விடை:- இராகாதிகள் பாஹியம், ஆந்தரம், வாசனை, யென மூ வகைப்படும். வர்த்த மான காலத்தி லுள்ள ஸ்திரீ, புத்திர, தநாதிகளைப் பற்றி வருவன வாகிய இராகத்துவேஷாதிகள், பாஹிய மாகும். சென்ற கால, வருங் காலங்களைப் பற்றிச் சிந்தநா ரூப மாக வருகின்ற மநோ ராச்சியம் ஆந்தர மாகும். அநேக சந்மங்களில் அநுபவிக்கப்பட்டிருந்த, பாஹிய ஆந்திர, இராகத் துவேஷாதிகளின் சம்ஸ் காரம், வாசனை யாகும். இவைகளில் பாஹிய, ஆந்தர, இராகாதிகள், க்ஷிப்தாந்தக் கரணத்தி லுண்டாகின்றமையால், க்ஷிப்தாந்தக் கரணத்துக்குச் சமாதியில் அதிகார மில்லை சந்மாந்திரங்களி லநுபவித்த இராகாதிகளின் சூட்சும சம்ஸ்கார மாகிய வாசனை, விக்ஷிப்த அந்தக் கரணத்தினு மிருக்கக் கூடும். இந்த இராகத் துவேஷாதிகளின் சம்ஸ் காரங்களுக்குக் கஷாய மென்று பெயரே யன்றி, இராகத் துவேஷங்களுக்குக் கஷாய மென்று பெய ரில்லை. இந்தச் சம்ஸ்காரம் அந்தக் கரணம் நீங்குகிற வரையில் நீங்குகிற தில்லை; சமாதி காலத்தினு மிருக்கும். இருக்கினும், இது அநுத்பூதம், உத்பூத மென இரண்டா யிருக்கும். அநுத்பூத மென்பது அடக்கமா யிருப்பது உத்பூத மென்பது வெளிப் படுவது. சமாதிக்கு, அநுத்பூத சம்ஸ்காரம் விரோத மன்றும். இராகாதிகளின் உத்பூத சம்ஸ்காரம், விரோத மாம். என்னை யெனின், யோகியின்

பிரயத்திநத்தால் விருத்தி அந்தர்முக மாகியும், பிரஹ்மத்தை விஷயீகரிக்க வொட்டாமல் உத்பூத சம்ஸ்காரத்தால் தகையப்படுகிறது. ஆதலால், உத்பூத சம்ஸ்கார மாகிய கஷாயம் சமாதிக்குப் பிரதிபந்த மென்பது விருத்த மன்றென அறிக. (188)

189. வினா:- *ரசாஸ்வாத மாவது யா தெனின்?

விடை:- லய, விக்ஷேப, கஷாயங்க ளின்றிச் செய்யுந் தியாந வலியால், அடையத் தக்க சவிகற்ப சமாதியி லுதய மாகின்ற ஆநந்தாநுபவம். அல்லது; விக்ஷேப துக்க நிவிர்த்தியா லுதய மாகிய ஆநந்தாநுபவ மென அறிக. (189)

190. வினா:- இவ் விரு வித ஆநந்தாநுபவ மாகிய ரசாஸ் வாதத்தையும், நிருவிகற்ப சமாதிக்கு விக்கிந மென்றது யாதினா லெனின்?

விடை:- ரசாஸ்வாத மென்னுந் திரி புடி, விகற்ப சகித சோபாதிக மாகிய, ஆநந்தாநுபவத்தைத் தியாகம் பண்ணுமல், இதுவே நிருபாதிக மான பிரஹ்மாநந்த மெனக் கருதி, அவ் வாநந்தாநுபவத்திற் ருனே யோகி யானவன் திருப்தி யடைந்துவிடில் அவனுக்கு விருக்தி பிரஹ்மத்தில் லய மாய்த் திரி புடிவிகற்ப மின்றிய நிருவிகற்ப சமாதியும் அதனுல் உண்டாவதாகிய நிருபாதிகப் பிரஹ்மாநந்தா நுபவமும் சித்தியாமற் போய் விடும். ஆதலின் என அறிக. (190)

191. வினா:- விக்ஷேப துக்க நிவர்த்தியில் ஆநந்தாநுபவம் உண்டென்-றும், அவ்வாநந்தாநுபவத்திற்ருனே திருப்தி அடைந்து கொண்டிருப்ப-

* ரசம்-சுகம்; ஆஸ்வாதம்-அநுபவம்.

வனுக்கு, நிருபாதிகமாகிய பிரஹ்மாநந்தம் சித்தியா தென்பதும் எங்ஙன மெனின்?

விடை:- சுமை சுமப்பவனுக்குச் சுமையை இறக்கி விடுதலால் ஆநந்த முண்டாகிறது. அவ்வாநந்தத்துக்குச் சுமையால் உண்டாகிய துக்க நிவர்த்தியே காரணமாகும். இஃதன்றிச் சர்ப்பத்தால் காக்கப்பட்டுப் பூமிக்குள் இருக்கின்ற புதையலை எடுக்க முயன்றவனுக்கு, நெடுநாளாகத் தடையாக இருந்த சர்ப்பம் நீங்கி விட்டபோது ஆநந்த முண்டாகிறது. அப்போது அவன் சர்ப்ப நிவர்த்தியால் உண்டாகிய ஆநந்தத்திற்றானே திருப்தி அடைந்து கொண்டு, புதையலை எடுக்கும் முயற்சியை விட்டுவிடில், புதையல் கிடைத்தலால் உண்டாகும் ஆநந்தம் அவனுக்குண்டாகாது. அதுபோல, அத்வைதப் பிரஹ்மரூபமாகிற புதையலை அடைதற்குத் தடையாய் உள்ள, தேகாதி அநாத்ம பதார்த்தப் பிரதீதிரூப விக்ஷேபமாகிற சர்ப்பநிவர்த்தியால் உண்டாகும் அவாந்தராநந்த அநுபவமாகிய ரசாஸ்வாதத் திற்றானே திருப்தியடைந்து கொண்டு, அத்வைதப் பிரஹ்ம ரூபமாகிய புதையலை அடைதற்கு முயலாது விட்டுவிடில், அத்வைதப் பிரஹ்மப் பிராப்தியால் உதயமாகும் நிருபாதிகமாகிய பிரஹ்மாநந்தம் சித்தியாது என அறிக. (191)

192. வினா:- ரசாஸ்வாதத்தை எதனால் நிவர்த்தி செய்யலாகும் எனின்?

விடை:- அதி சூக்குமமாகச் சித்த சலநமின்றி யூகிக்கின்ற விவேகத்தினாலும், ஈசுவர கிருபையினாலும் என அறிக. (192)

193. வி௲:- நான்காம் பிரயோசந மாகிய துக்க நாசமாவது யாதெனின்?

விடை:- இகலோக துக்க, பரலோக துக்கங் களாகிய இருவகை துக்கங்களும் இல்லாமற் போவதென அறிக. (193)

194. வி௲:- இகலோக பரலோக துக்கங்கள் எவை? அவைகள் சீவன் முத்தர்களுக்கு இல்லாமல் போனது யாதினுல் எனின்?

விடை:- தூல தேகத்தைப் பற்றிய கப வாத பித்த வித்தியாசத்தாலாகிய வியாதிகளினுலும், சூக்கும தேகத்தைப் பற்றிய காமக், குரோத, லோப, மோக, மத, லச்சை, பயமாதிகளினுலும், காரண தேகத்தைப் பற்றிய அறியாமையினுலும் வரப்பட்ட தாபங்களே இகலோக துக்கங்களாகும். அஞ்ஞாந சந்தேக விபரீதங்களின்றி அசங்க சித்து ரூபமாகிய பரமாத்ம சொரூபமே நாம் எனத் திடமாய் அறிந்து, சாக்ஷாத்கரித்துச் சித்த சாந்த முற்றுப் பிரஹ்ம மாத்திரமாக இருக்கின்ற சீவன் முத்தர்களுக்குச் சீவேசுர சகங்கள் பொய்யாய்ப் போயினமையால், புசிக்கின்றவனுகிய போத்துருவும், புசிக்கப் படுவன வாகிய போக்கியங்களும் நட்டமாய் விட்டன. ஆதலின் சரீரத் திரயங்களைப் பற்றி வருகின்ற இகலோக துக்கங்கள், தைலமில்லாத தீபம் போல நாசமாயின. புண்ணியம் என்று வரும், பாவம் என்று போம் என்னும் சிந்தநா ரூபமான தாபமே பரலோக துக்கமாகும். ஞாநாக்கிநியினுல் சஞ்சித கன்மம் நெருப்புப் பற்றிய பஞ்சு போல, வெந்து போயினமை யினுலும், சீவன் முத்தர்கள் கமல பத்திரோதகம்

போல புண்ணிய பாவகன்மங்களைப் பொருந்தினும் பொருந்ாதவர்களாயும், காஷ்டத்தில் நெருப்பிருக்கினும் நெருப்பில் காஷ்டமிராதது போல, ஓரேகாலத்தில் கன்ம விவகாரங்களில் தாங்களிருக்கினும், தங்களில் கன்ம விவகாரங்கள் இல்லாதவர்களாயும் இருத்தலால் நெருப்புப் பற்றிய பருப்பதத்தை மிருக பட்சிகள் சேராதன போல, சீவன் முத்தர்களை ஆகாமிய கன்மங்கள் சேராமையினாலும், அவர்கட்குப் புண்ணிய பாவ சிந்தநா ரூபமான பரலோக துக்கங்கள் நாசமாயின. ஆதலின், இவ்விருவகைத்துக்கங்களும் இல்லாமல் போனதே, நான்காம் பிரயோசநமாகிய துக்க நாசம் என அறிக. (194)

195. வினா:- ஐந்தாம் பிரயோசநமாகிய சுகாவிற்பாவமாவது யாதெனின்?

விடை:- சீவன்முத்தர்கள் ஞாந சாக்ஷாத்கார பலத்தால், ஆவரண விக்ஷேபம் நீங்கியுள்ளார்களானமையால், அளவின்றிய போகங்களை அளவின்றிய பேர்களாயிருந்து நாம் ஒருவனே அனுபவிக்கிறோம் என்னும் பூரண பாவனையினால், அவர்கள் மநது ஆநந்த சொரூபமாகிய பிரஹ்மத்தில் க்ஷீரோதகம் (பாலும் தண்ணீரும்) போல் ஏக ரசமாகக் கலந்து சூக்குமமாகச் சேடித்திருக்கும். இங்ஙனம் சேடித்திருக்கின்ற மநதில், மநுடா நந்தம் முதல் இரணிய கருப்பாநந்தம் வரை ஒன்றற்கொன்று நூறு பங்கு உத்தரோத்தரமாக உள்ள பதினொருவகை ஆநந்தங்களும் ஓர் சிறிய திவலை என்னும்படியான அபாரமாகிய மகோததி போன்ற பிரஹ்மாநந்தம் ஆவிர்ப்பவிக்கிறது. இதுவே சீவன் முத்திக்குப் பிரயோசநமாகிய சுகாவிற்பாவம் என அறிக. (195)

196. வினா:-துக்க நாசமும், சுகாவிற்பாவமும் தத்துவ ஞாநத்தால் சித்தித்துள்ளன வாதலின், தத்துவ ஞானத்துக்குப் பிரயோசநமாகுமே யன்றிச் சீவன் முத்திக்குப் பிரயோசனம் ஆகாதெனின்?

விடை:- தத்துவ ஞானத்தால் துக்க நாசம், சுகாவிற் பாவம் உண்டாயிருக்கினும் எப்படித் தத்துவ ஞாநம், ஐய விபரீதங்களால் கெடுதியுருமல் சீவன் முத்தியால் இரக்ஷிக்கப் படுகிறதோ, அப்படித்துக்க நாசம் சுகாவிற்பாவங்களும் விக்ஷேபத்தாற் கெடுதியுருமல் இரக்ஷிக்கப் படுகின்றன. ஆதலால் ஞாந ரக்ஷையைப் போல, துக்க நாச சுகாவிற்பாவங்களும் சீவன் முத்திக்குப் பிரயோசநமாகும் என அறிக. (196)

197. வினா:-சீவன் முத்தர்களுக்கு ஆகாமிய சஞ்சித கன்மங்கள் நீங்கினும், பிராரப்த கன்மங்கள் நீங்காதிருக்கின்றமையால், மேலும் சந்மத்தை உதிப்பித்தற்குக் காரணம் ஆகாதோ எனின்?

விடை:- வறுபட்ட வித்து தீனிக்கு மாத்திரம் உபயோகம் ஆகுமேயன்றி, அங்குரத்தை உதிப்பித்தற்குக் காரணமாகாதது போல, சீவன் முத்தர் பால் இருக்கின்ற பிராரப்த கன்மம் ஞா நாக்கிநியால் தகிக்கப்பட்டுப் போயினமையால் போகாநுபவத்துக்கு மாத்திரம் காரணமாகுமேயன்றி மேலும் சந்மத்தை உதிப்பித்தற்குக் காரணமாகாதென அறிக. (197)

198. வினா:- சீவன் முத்தர்கள் பிராரப்த க்ஷயத்தில் அடையத் தக்கது யாதெனின்?

விடை:- சரீரோபாதிகள் விடுபட்டு, அதீதாநந்த மயப் பிரஹ்ம சொரூபமாகி, அகம் புறம் பெயர் சாதி குறிகள் இன்றிப் பொருள் எப்படியோ, அப்படியே இருப்பதாகிய விதேக முத்தி என அறிக. (198)

(பதம்) வாசிட்டம் முதலிய சாத்திரங்கள் முறையிடு கின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோக்ஷம் அடையக் கடவர்.

(பொருள்) வெளி.

6. சீவன் முத்தி நிரூபகம் முற்றிற்று.

நாநா சீவவாதக் கட்டளை வியாக்கியாநம் முற்றிற்று.

சிதம்பர தேசிகன் திருவடி வாழ்க.



நா நா சீவ வாதக்கட்டளை மூலமும், திருவாரூர் ஸ்ரீ, குரு. தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடம் நான்காம் குருமூர்த்தியாகிய ஸ்ரீ. சித. சிவானந்த சுவாமிகள் இயற்றிய வியாக்கியானமும் (விரிவுரையும்). மூன்ரும் பதிப்பு.

இந்நூலில் உள்ள, பிரமாண நூல்களின் பெயர் அகராதி வரிசை.

| வரிசை எண் | பிரமாண நூல்களின் பெயர் அகர ஆதி வரிசை | நூலின் பக்கங்கள் | நிருபக எண்ணும் பெயரும் | நூலின் வசனம் (மற்றும்) பதப் பொருள் (மற்றும்) வினு விடை எண் (மற்றும்) விளக்கவுரை |
|---|---|---|---|---|
| 1 | அக்ஷி உபநிடதம் (கிருஷ்ண எசுர்வேதம்). | 469 | 6. சீவன் | 15 |
| 2 | அடயோகப் பிரதீபிகை | 528 | ” | 134 |
| 3 | அதர்வண வேதத்தின் முண்டக உபநிடதம். | 439 | 5. தத்துவ | 92 |
| 4 | அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிடதம். | ” | ” | விளக்கவுரை |
| 5 | அத்துவிதானுபவம், 2 ஆவது அத்தியாரோப, அபவாதலக்ஷணம் | 268 | 2. அத்தி | 323 |
| 6 | அபரோக்ஷாநுபூதி | 531 | 6. சீவன் | 142 |
| 7 | அப்பர் தேவாரம். | 429 | 5. தத்துவ | 81 |
| 8 | அறிவானந்த சித்தி. | 299 | 3. திதி | 14 |
| 9 | ஆத்மபுராணம். | 197 | 2. அத்தி | 195 |
| 10 | இராமாயணம். | 174 | ” | 123 |
| 11 | இருக்கு வேதத்தின் ஐதரேய உபநிடதம். | 127 | ” | 16 |
| 12 | இருக்கு வேதத்தின் ஐதரேய உபநிடதம், | 439 | 5. தத்துவ | 92 |

